உ

# பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்.

இரண்டாம் பாகம்.

ஆசிரியர்

ஜெகவீரபாண்டியனார்

இரண்டாம் பதிப்பு

மதுரை,
சி. வி. என். பிரசில் பதிப்பிக்கப் பெற்றது.
விகாரி ௵ ஆனி ௴
1959



விலை ரூ. 6.

உ

# முகவுரை.

இந் நூல் பாஞ்சாலங்குறிச்சி மன்னன் ஆகிய ஊமைத்துரையின் வாழ்க்கை வரலாறுகளை விளக்கியுள்ளது. ஒரு குறுநில மன்னனுடைய சரிதம் ஆயினும் பெரு நில வேந்தர்களும் வியந்து காணத்தக்க அரிய பல வீரக்காட்சிகள் இதில் மருவியிருக்கின்றன. ஆட்சி முறை, நாட்டு நிலை, சுதந்திர வுணர்ச்சி, மானத் துடிப்பு, வீரத்திறல் முதலிய மாட்சிகள் இதன்கண் யாண்டும் காட்சி தருகின்றன. சீமைத் துரைகளோடு ஊமைத்துரை போராடியுள்ள போராட்டங்களும் வீரபராக்கிரமங்களும் இடங்கள் தோறும் நிறைந்துள்ளமையால் இது வீர சரித்திரம் என வந்தது. இவருடைய தமையனார் ஆகிய வீர பாண்டியக் கட்டபொம்முவின் சரிதம் முன்னர் வெளி வந்துள்ளது; அதன் இரண்டாம் பாகமாய் இது இப்பொழுது வெளி வருகின்றது.

பாஞ்சாலங்குறிச்சியின் பான்மை, வீரமாபுரி என அது விளங்கி நின்ற மேன்மை, கட்டபொம்மு மாண்டபின்பு கும்பினியார் அரசைக் கவர்ந்து கொண்டு ஊமைத்துரையைப் பாளையங்கோட்டையில் சிறைவைத்திருந்த குறை, பதினாறு மாதங்களாக அங்கே இவர் பரிந்திருந்த முறை, இறுதியில் சிறையைத் தகர்த்து வெளியேறிப் பதியை அடைந்து கோட்டைகள் அமைத்து அதிபதியாய் அடலாண்மை மண்டி ஆண்டு மூண்டு நின்ற நிலை, கும்பினிப் படைகள் தொடர்ந்து வந்தது, இடை முரிந்து உடைந்து போனது, எதிரிகளை வென்று தொலைக்க இவர் விரைந்து முயன்றது, தூத்துக்குடியைக் கைப்பற்றிச் சேனைத் தலைவனைப் பிடித்து வந்து சிறையில் வைத்தது, அவன் மனைவி வந்து மறுகி வேண்ட அந்த வெள்ளையனை இவர் உள்ளம் இரங்கி விட்டது, இந்த அருந்திறலாளர் அரசராய் இருந்துவரின் ஆங்கில ஆட்சி ஈங்கு நிலையாது என்று நெஞ்சம் கலங்கிக் கும்பினியார் கொடுப்படை திரட்டி அடுத்து அடுத்து வந்து அடும்போர் புரிந்தது, அழிவுகள் அடைந்தது, முடிவில் கொடிய பீரங்கிகளோடு நெடிய சதிகள் செய்து அடுதுயர் ஆற்றியது, அதனால் படைகள் பல இழந்து பதியினைக் கைவிட்டு அதிசயமாய் வெளிப்பட்டு மருதுசேர்வையை மருவி இவர் கறுவுகொண்டு நின்றது, தம்பி

முதலிய உரிமையாளர் கும்பினியாரால் அழிந்து போனமையால் இவர் உள்ளம் வெறுத்து உலகைத் துறந்து மறைந்து போனது முதலிய சரித வரலாறுகளை இதில் முறையே காணலாம்.

பாண்டி நாட்டின் தென் பகுதியில் நடந்த இச் சரிதம் யாண்டும் பரவி இசைபெற்று நிற்கின்றது. ஆங்கிலேயர் ஈங்கு வந்து ஆட்சி முறை கோலியபோது யாரும் அவரை எதிர்க்க வில்லை. வங்காளம், மகதம், மராடம், பாஞ்சாலம், கூர்ச்சரம் முதலிய எல்லா நாடுகளும் எளிதே அவர் கைவசமாயின இத் தென்னாட்டில் வந்தபோதுதான் பாஞ்சாலங்குறிச்சியார் அவரைக் கடுத்து எதிர்த்தார். "இந்தியாவில் யாரும் தடைசெய்ய வில்லை; யாண்டும் எதிர் பேச வில்லை; ஈண்டு இத் தென்னாட்டு மூலையில் ஒரு சிற்றரசன் இப்படி மூண்டு எதிர்க்கின்றானே!" என்று கும்பினியார் நீண்டு திகைத்தனர். நெஞ்சம் கலங்கினர்; பல வகையிலும் வஞ்சம் புரிந்து பார்த்தனர்; யாதும் பலிக்க வில்லை; ஆறு ஆண்டுகளாய் மறுகி மயங்கி வந்தவர் இறுதியில் இந் நாட்டுச் சதிகாரர் சிலரால் உறுதியடைந்து ஊக்கிப் போராட நேர்ந்தார்; போரில் பல பேர் மாண்டு போயினர். கி. பி. 1799 முதல் 1801 வரை பாஞ்சாலங்குறிச்சியாரோடு அவர் பட்ட பாடுகளை அங்கே இறந்து பட்டுள்ள பட்டாளங்களின் சவக் குழிகளும் சேனாதிபதிகளுடைய சமாதிகளும் இன்றும் வெட்ட வெளிச்சமாய் விளக்கி இவரது வீரத்திறலைத் துலக்கி நிற்கின்றன.

நெடிய படைவலியுடைய பெரிய ஆங்கில ஆட்சியைத் தன்னந் தனியே நின்று மூன்று ஆண்டுகளாக மூண்டு பொருதுள்ளது அதிசய மாட்சியாய்த் துதிசெய்ய வந்தது. பீரங்கிகளும் வெடித்திரள்களும் கருமருந்துகளும் பொருவரு நிலையில் பெருகி வந்தன. வந்து பொழிந்த தீக்குண்டுகளை யெல்லாம் மேலே வாங்கிக் கொண்டு பல முறையும் கும்பினியார் சிந்தி ஓடும்படி பாஞ்சை வீரர் வீறுடு நேரே போராடி யுள்ளனர்.

இந்த நிலைமையைச் சிறிது சிந்தித்து நோக்கினால் எந்த இந்தியன் உள்ளமும் உந்தி உருகும்; உணர்ச்சி பெருகும்; உறுதி பொங்கி உரிமை ஓங்கும். இந் நாட்டின் சுதந்திரத்தை நிரந்தரமாக நிலைநாட்ட வேண்டும் என்றே அந்நிய நாட்டார் ஆளுகையைத் தலை நீட்ட ஒட்டாமல் இவர் தகர்த்து வந்தார்.

கொடிய வஞ்சகமாய் எதிரிகள் சதி புரிந்தமையால் முடிவு நேருவது. சகாய சூரனை இவர் வீறுடு மூண்டு போராடிய போதெல்லாம் வெள்ளையர் மாறுடி மாண்டு மறுகி மீண்டு வெருவி ஓடி யிருப்பது பெரிய அதிசயமாய்ப் பெருகி யுள்ளது.

கும்பினிப் படைகள் வந்து கொடுஞ்சமர் புரியுந் தோறும்
வெம்புலி மடங்கல் என்ன ஊமையன் வெகுண்டு சீற
அம்புலி வரவும் சூழ்ந்த அடரிருள் அழிந்த தேபோல்
வம்பியல் படைகள் மாண்டு மண்ணிடை மடிந்ததம்மா!

இந்தவாறு எதிரிகள் முதலில் அழிந்து வந்தும் இறுதியில் இவர் நிலை பரிதாபமாயது. உறவினரும் மரபினரும் படைவீரர் முதலிய நாலாயிரம் பேர்கள் இறந்து பட்டனர். கோட்டை உடைந்து போயது. புகைகள் எங்கும் பொங்கி அடர்ந்தன; அதனாலே இவர் வேகமாய் வெளியேற நேர்ந்தார். பதியிழந்து அயலடைந்து அயருழந்திருந்தும் மீண்டும் அடலாண்மையுடன் மூண்டு பொருது மிடலோடு இவர் நீண்டு நின்றுள்ளார்.

சுதந்திரவுரிமையில் நிரந்தரமாய் நிலைத்து நின்று தேசத்தின் மானத்தை இவர் புரந்து வந்துள்ளமையை நினைந்து சிந்திக்கும் தோறும் நெஞ்சம் வியந்து பரிந்து விழைந்து மகிழ்கின்றது.

அறிவு செல்வம் ஆண்மை வீரம் முதலிய மேன்மைகளாலேதான் ஒருநாடு மதிப்பும் மாண்பும் பெற்று யாண்டும் மகிமையுடன் எவ்வழியும் செவ்வையாய் உயர்ந்து விளங்குகின்றது.

நாட்டுக்கு வீரரே நல்ல அணி; நாடிவரு
தேட்டுக்குச் சேயரே செய்ய அணி,---பாட்டுக்குப்
பண்ணே இனிய அணி; பண்ணு உடம்புக்குக்
கண்ணே அரிய அணி காண்.

என்னும் இது இங்கே எண்ணி உணர வுரியது. பேரின்ப வீட்டுக்குச் சாதனமான ஞானமும் வீரத்தோடு கூடிய போது தான் விரத்தி வைராக்கியம் எனச் சிறப்பு மிகுந்து சீர்பெற்றுள்ளது. தான வீரன், தயா வீரன், ஞான வீரன், கல்வி வீரன் என மேலான நீர்மைகள் எல்லாம் வீரப்பேரால் விளங்கி நிற்றலால் வீரத்தின் வியனிலையை யாரும் உணர்ந்து கொள்ளலாம்.

இத்தகைய சுத்த வீரத்தில் சிறந்து எத்தகைய நிலையிலும் தளராமல் நின்று வலிய பெரிய பகைவர்களோடு அரிய போர்

களை யாண்டும் மூண்டு நீண்டு ஆற்றி இந்நாட்டிற்கு உரிமையாகப் பெரிய சீர்த்திகளை இவர் பரிவு கூர்ந்து போற்றியிருக்கிறார்.

இவருடைய உள்ளத்திண்மையும் உறுதி நிலையும் வீரபராக்கிரமங்களும் அதிசய புதுமைகளாய் ஒளி செய்துள்ளன. எதிரிகளும் இவருடைய நிலைமையைத் தலைமையாகப் புகழ்ந்திருக்கின்றனர். அரிய வீரப்பாடுகள் பெரிய அதிசயங்களாயின.

வீரம் பெருக; வெற்றி வருக.

என்ற வேத மந்திரத்தையே இவர் யாண்டும் ஓதி வந்துள்ளார்.

வீரப் புகழை நிலைநாட்டி இந் நாட்டுக்கு நன்மதிப்பை நட்டியுள்ள இவரது சரிதம் எவருக்கும் உவகை நிலையமாய் உறுதி நலங்களை ஊட்டி வருதலால் என்றும் எங்கும் யாவரும் இவரை உரிமையோடு கருதி உவந்து போற்றி வருகின்றார்.

தெய்வ பத்தி, தேச நேசம், அருந்திறலாண்மை, பெரும் போர் வீரம், சுதந்திரவுரிமை, தலைமை நோக்கம் முதலிய உத்தம நீர்மைகள் பல நிறைந்திருத்தலால் இந்த வீர சரித்திரத்தைக் கல்லூரி மாணவர்கள் பல்லோரும் பயின்றுவரின் வருங்கால வாழ்க்கையில் எல்லோருக்கும் நலங்கள் மிக விளைந்து பலன்கள் பல சுரந்து வரும். படித்து வருகிற நூல்களின் படியே அறிவு நலங்கள் யாண்டும் அடுத்து வருகின்றன.

நல்ல நூல்களைத் தேர்ந்து தெரிவதும், ஓர்ந்து கற்பதும், உறுதியுண்மைகளை உணர்ந்து கொள்வதும் அரிய செயல்களாய் இந்நாட்டில் வறுமை கூர்ந்திருக்கின்றன. அந்தச் சிறுமைகள் நீங்கிப் பெருமைகள் ஓங்கி உரிமையோடு உயர்ந்து வரவேண்டும்.

தருமம் சத்தியம் கருணை நீதி வீரம் என்பன உயிரினங்களுக்கு உறுதி புரிந்து வருதலால் இவை சீவ அமுதங்கள் ஆய் மேவி நிற்கின்றன. வீரம் அரசர்க்கு எவ்வழியும் தலைசிறந்தது; அந்த நிலைமையைத் தனியுரிமையாக இந் நூல் விளக்கியுள்ளது.

அரிய பல ஆதாரங்களையும் உரிய உயர் சாசனங்களையும் கொண்டு நுணுகி ஆராய்ந்து புனிதமான இனிய தமிழ்நடையில் எழுதியுள்ள இந்த வீரசரிதத்தை மனித சமுதாயம் உரிமையுடன் உவந்து போற்றி உயர்ந்து வரும் என்று நம்புகின்றேன்.

நாட்டின் உரிமையை உணர்த்தி நலங்கள் பல சுரந்துள்ள இந் நூல் எல்லாருக்கும் நல்ல பலன்களை நல்கி என்றும் இதம் புரிந்து வர இறைவனை உரிமையுடன் இறைஞ்சி நிற்கின்றேன்.

16--2--1950 ஜெகவீரபாண்டியன்.

---

## இரண்டாம் பதிப்பின் குறிப்பு

இந் நூல் முதல்பதிப்பு 1950ல் வெளி வந்தது. விரைந்து செலவாகி விட்டது. வேறு பல நூல்கள் அச்சாக வேண்டி யிருந்தமையால் இதனை உடனே வெளியிட முடியவில்லை. ஒன்பது ஆண்டுகளுக்குப் பின்பு மீண்டும் இது வெளி வருகிறது.

பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம் முதல் பாகமும், இந்த இரண்டாம் பாகமும் அரிய பெரிய சரித்திரத்தின் இனிய ஆராய்ச்சி நூல்கள். தென்பாண்டி நாட்டின் சிறந்த வீரநீர்மைகளை இவை விரைந்து காட்டியுள்ளன. இந்நூல்கள் வெளி வருமுன் கட்ட பொம்மு நாடகம் எனத் தெருக் கூத்தாகச் சிலர்நடித்து வந்தனர். சரித்திரத் தொடர்பு யாதும் இல்லாமல் வெறும் வீரக்களி யாட்டமாய்த் தாழ்ந்த நிலையில் அது வீழ்ந்திருந்தது. இப்பொழுது சினிமாவில் மிகவும சீரழிந்துள்ளது உரியசாசனச் சான்றுகளோடு அரிய மேன்மையில் இந்நூல்கள் தெளிவாய் வெளி வந்திருந்தும் ஊன்றி உணராமல், உணர்ச்சியில்லாமல், உரிமையை ஓராமல் சிறுமையை விளைத்துள்ளனர். வீர பாண்டியன் என்ற பேரே யாருக்கும் தெரியாது. பெயர் முதலிய இயல்களைக் களவாய்க் கவர்ந்து உரிமையைக் கடந்து சிறுமைபுரிந்திருப்பது நன்றி கொன்ற செயலே. நூல்களின் உரிமைகளை எல்லா நாடுகளும் மரியாதையோடு போற்றி வருகின்றன. ஈண்டு இப்படிச் செப்பம் இழந்து வெப்பம் அடைந்துள்ளது. நீதியுணர்வும் நெறி முறையும நேர்மையும் எங்கே ஒழிய நேர்கின்றனவோ அங்கே இழிவுகள் நேர்கின்றன. மனச் சாட்சி குன்றிய அளவு மனிதன் பொன்றி ஒழிகின்றான். All Rights Reserved என்று அச்சுறுத்தி யிருந்தும் அச்சம் இல்லாமல் கொச்சையாய்க் கவர்ந்துள்ளனர்.

படக்காட்சி பாமர மக்களுடைய பார்வைக்கே ஆதலால் அதில் இல்லாதனவும் பொல்லாதனவும் இடையே நுழைக்க

லாம் எனின், உண்மையான சரித்திர வரலாற்றில் அவ்வாறு செய்வது எவ்வழியும் இழிவான கொடிய பிழைகளேயாம்.

பொல்லாத புன்மைக் கூட்டம் புகுந்து நல்ல சரித்திர வரம்பை நிலைகுலைத்துப் புலைப்படுத்தி யிருக்கிறது. இவ் வீர சரித்திர நூல்களை நன்கு படித்தறிந்த பலர் படத்தைப் போய்ப் பார்த்துச் சலித்து வெறுத்து அரிய சரித நிலை வறிதே சிதைந்து போயுள்ளதே என்று என்பால் வந்து வருந்தியுள்ளனர். படிப்புக்கும் நடிப்புக்கும் வெகு தூரம் என்பதை இந்தப் படப்பிடிப்பு நேரே தெளிவாய் விளக்கி நிற்கிறது என விளம்பிச் செல்கின்றனர். உண்மையான சிறந்த நிகழ்ச்சிகள் நம் மக்கள் உள்ளங்களில் நன்கு பதியாமல் வழுவாய் நழுவி யிருப்பது பெரிய குறையே என்று அறிவாளிகள் யாவரும் பரிவாய் மறுகுகின்றனர். மறுக்கம் எல்லாம் நாட்டின் நலம் கருதியே.

தக்கவர்கள் பார்வையில் சீர்மையாய்த் தகவு தோய்ந்து வந்திருந்தால் இந்நாட்டுக்கு இது மிக்க நலமா யிருந்திருக்குமே!

உண்மையை உசாவி அறிந்து, நன்மையை நாடி உணர்ந்து, தன்மையைத் தகவாய்த் தெரிந்து ஆட்சியாளர் யாண்டும் காட்சியாய் மாட்சி புரியவேண்டும். தருமமும் நீதியும் உரிமையும் உண்மையும் எவ்வழியும் செவ்வையாய்ப் பெருகிவரப் பேணி வருவதே அரசின் கடமையாம். வடபால் இருந்த எவரையும் தலை அடக்கி நீண்ட செருக்கோடு நிமிர்ந்து வந்த ஆங்கிலேயரை நிலைகுலைத்து மூன்று ஆண்டுகளாக மூண்டு பொருத வீர அரசின் விழுமிய மேன்மைச் சரிதம் இத் தேசத்துக்குத் தேசு நிறைந்த சிறந்த சீதனச் செல்வமாம்.

இந் நூல்கள் மக்கள் பக்கமும், மாணவர்களிடையும் தக்க வாறு பரவிப் பயன்படும்படி அரசாங்கமும், சருவகலாசாலைக் குழுவும் உரிமையோடு கருதிப் புரியின் நாட்டுக்குப் பெரிய நன்மை செய்த படியாம். செயல் நலமாய் வரும் அளவே உயர்வு நிலையாய் வருகிறது. உரிமை யுணர்வு பெருமை தருகிறது.

திருவள்ளுவர் நிலையம், ஜெகவீரபாண்டியன்.

மதுரை.

3--7--1959

# பொருள் அடக்கம்.

**"The most disinterested and purest patriotism"**

(பக்கம், 349)

**"தன்னலம் கருதாத தியாகமும், பரிசுத்தமான தேச விசுவாசமும்"**

பாஞ்சாலங்குறிச்சி மன்னரது நிலைமையைக் குறித்து வெள்ளைத் தளபதிகள் இப்படி உள்ளம் கரைந்து சொல்லியுள்ளனர் ஆங்கிலேயர் மிகவும் நிதானம் உடையவர். யாண்டும் வரம்பாகப் பேசுபவர். எதையும் வியந்து கூருதவர். அத்தகைய இயல்பினர் ஈண்டு இங்ஙனம் உச்சநிலையில் உரைத்திருக்கின்ருர்.

1. The most disinterested.
2. The purest patriotism.

இந்த இரண்டு தொடர்களையும் தொடர்ந்து சிந்திக்க வேண்டும். தன்னலம் யாதும் கருதாமல் உண்மையான தூய சுதேசாபிமானத்தால் பாஞ்சை வீரர் போராடியிருப்பதை இவை நேரே தெளிவா விளக்கியுள்ளன. எதிரிகளாய் மூண்டு பொருத வெள்ளையர்கள் இவ்வாறு உள்ளம் திறந்து உரைத்திருக்கின்றனர்.

எதிரிகள் வாய்மொழி ஏற்றம் மிக வுடையது.

அருந்திறலோடு போராடி அரச திருவையும் ஆருயிர்களையும் இழந்து போன பெருந்தகையாளர்க்கு ஒரு வீரப் பரிசாய் இது விளைந்து வந்துள்ளது. உயர்ந்த தியாகிகள், சிறந்த தேசாபிமானிகள் எனத் தங்களை எண்ணிக் கொள்ளுவோர் இந்த உண்மை நிலைமைகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

---

## ஆங்கில சாசனக் குறிப்பு விளக்கம்

**R. G.** :—Records of Government.

**M. R.** :—Military Reminiscences.

**G. W.** :—General Welsh.

**S. P. W.** :—Second Polegar War.

**H. O. T.** :—History of Tinnevelly.

**L. P. W.** :—Last Polegar War.

**N. L. O.** :—Narrative of the Last Outbreak.

பரமபதி துணை.

# பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்.

## இரண்டாம் பாகம்.

## முதல் அதிகாரம்.

### வீரர் நிலை.

உலகில் உயர்ந்த புகழ் உடையராய் நிலவி நிற்பது அரிய பெரிய இனிய பேறு ஆம். சிறந்த பாக்கியமான அந்தப் பேற்றை எவரும் எளிதில் அடைந்துகொள்ள முடியாது. இம்மை மறுமை என்னும் இரண்டும் மனித வாழ்வின் புனித நிலையங்களாய் இனிது அமைந்துள்ளன. முன்னது புகழால் ஒளிபெறுகின்றது; பின்னது புண்ணியத்தால் எழில் உறுகின்றது. புகழும் புண்ணியமும் மணியும் ஒளியும்போல் மருவி மிளிர்கின்றன. மணம் கமழ்வதால் மலரின் நிலையை அறிந்துகொள்கிறோம். புகழ் திகழ்வதால் ஒருவனுடைய புண்ணியத்தை உணர்ந்து கொள்கின்றோம். எவனிடமிருந்து புகழ் மணம் வீசுகின்றதோ அவன் பெரிய ஒரு புண்ணிய சீலனாய் உயர்ந்து எண்ணிய நலங்கள் யாவும் எய்த அரிய இன்ப மூர்த்தி ஆகின்றான். பிறந்த பிறப்பைப் புனிதம் ஆக்கிப் பேரின்ப நலனை அருளி வருதலால் புகழ் பிறவிப்பயனாக் கருத வந்தது. ஒளி, இசை, புகழ், கீர்த்தி, சீர்த்தி, என்னும் மொழிகள் விழுமிய பொருள்களை இனிது விளக்கி உயர்ந்தகுறிக் கோள்களோடு தோய்ந்து உறுதிநலங்கள்வாய்ந்து நிற்கின்றன.

தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. (குறள்--236)

என்று தோற்றத்தின் ஏற்றத்தை வள்ளுவப் பெருந்தகை இங்ஙனம் துலக்கியுள்ளார். தோன்றாமை நன்று என்றது ஈண்டு ஊன்றி உணர வுரியது. அரிய பிறவியை மருவியும் உரிய பயனை அடையாமல் ஒழிவது பெரிய பரிதாபம் ஆதலால் மேலோர் இவ்வாறு பரிவோடு கூறியுள்ளனர். தன்மை குன்றிய பொழுது நன்மைகள் குன்றுகின்றன; புன்மைகள் பொங்கி எழுகின்றன.

புல்லிய புலையில் இழிந்து போகாமல் நல்ல நிலையில் உயர்ந்து வருபவர் நரர்களுள் தேவராய்ச் சிறந்து திகழ்கின்றார். சிறப் பெல்லாம் இருதய பரிபாகங்களால் இனிது மிளிர்கின்றன. இனிய நீர்மைகள் தனியான சீர்மைகளாய்த் தழைத்து வருத லால் அவை யாண்டும் எவராலும் புனிதமாகப் போற்றப்படு கின்றன. சத்தியம் தருமம் கருணை வீரம் என்பன தெய்வ மணம் கமழ்கின்ற திவ்விய குணங்களாம். இந்தப் பண்புகள் தோய்ந்த அளவு மாந்தர் மகான்களாய் மகிமை பெறுகின்றனர். ஒத்த பிறப்பினர் ஆயினும் சித்தம் உயர்ந்தவர் மக்களுள் சிறந்து விளங்குகின்றார். மேன்மைகள் யாவும் பான்மைகளால் மேவுகின்றன. அரிய தகைமைகளில் பெரிய மகிமைகள் பெருகி விளைகின்றன. குணநலங்கள் உயர்நிலைகளை அருளுகின்றன.

கல்வி தறுகண் இசைமை கொடைஎனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே. (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் பெருமித நீர்மைகளை வரையறை செய்து ஒருமுகமாய் இவ்வாறு உரைத்துள்ளார். பெருமிதம்=வீரம். சிறந்த ஆண்மையாய் இது உயர்ந்து திகழ் கிறது. வீரம் உடையவன் விழுமியனாய் விளங்கி வருகின்றான்.

## வீரப் புகழ்.

எவ்வழியும் செவ்வையாய் மேலான நிலைமையில் தலைமை எய்தி நிற்றலால் வீரம் பெருமிதம் என வந்தது. யாண்டும் நிலை குலையாது நிற்கும் திவ்விய நீர்மையே வீரமாம். உள்ளத் திண் மையால் உறுவது ஆதலின் அது தறுகண்மை என நேர்ந்தது. அஞ்சாமை உறுதி ஊக்கம் தைரியம் என்பன உயர்குல நீர்மை களாய் ஒளிமிகுந்து நிற்கின்றன. போரில் நேரும் இடையூறு களுக்கு யாதும் அஞ்சாமல் யாண்டும் நேரில் ஏறி மூண்டு பொரும் ஆண்டகைமையே வீரம் என்னும் சீரிய பேரால் விளங்கி நிற்கின்றது. போராண்மையில் மனிதனது பேராண்மை பெருகியுளது. போர் வீரன் என்னும் பேர் அரசனுக்குச் சிறந்த புகழ் ஆகின்றது. கல்வி கொடை ஞானம் சீலம் முதலியவற்றால் அடையும் புகழினும் வீரத்தால் எய்தும் புகழ் எத்துணை அரியது! என்பது போர் என்னும் குறிப்பால் உய்த்துணர்ந்து கொள்ள லாம். பொருந்திறம் அமைந்த அவ் அருந்திறல் என்றும் பெருக்

தகவுடையது. பலவகை நிலைகளினும் கீர்த்தி வரும் ஆயினும் வீரத்தால் வருவது வியனாய் உயர்ந்து வீறு கொண்டுள்ளது.

"மாதிரம் பனிக்கும் மறம்வீங்கு பல்புகழ்
கேட்டற்கு இனிது." (பதிற்றுப்பத்து, 12)

திசைகள் தோறும் இசைபரந்து நிற்கும் வீரப் புகழே அரசர்க்கு எவற்றினும் சிறந்தது எனக் குமட்டூர்க் கண்ணனார் என்னும் புலவர் பெருமான் இவ்வாறு நலமாப் பாடியுள்ளார். மறம்=வீரம். வீரத்தை இந்நாட்டவர்எவ்வாறு கருதிப்போற்றியிருக்கிறார் என்பதைச் சங்க நூல்களில் எங்கணும் காணலாம்.

எந்நாட்டிலும் எக்காலத்திலும் எவராலும் வீரர்கள் மிகவும் புகழ்ந்து போற்றப்படுகின்றனர். அதற்குக் காரணம் அவ்வீரப் பாட்டின் அருமையேயாம். அரியன செய்பவர் பெரியவர் ஆகின்றனர். உயர்ந்த உயிருணர்ச்சியே சிறந்த வீரமாய் ஒளி பெற்று வெளிவருகிறது. தலைமையால் அதன் நிலைமை தெரிகிறது.

மலர்தலை உலகினுக்கு உயிர் என அமைந்துள்ள அரசர்க்கு எயிரினும் சிறந்த ஒண்குணமாய் வீரம் நன்கு அமைந்துள்ளது. மணிக்கு ஒளியும் மலர்க்கு மணமும் போல் மன்னர்க்கு வீரம் மாட்சிமை தருகின்றது. வீரம் இலனேல்அவன் சாரம் இலனாம்.

அரசன் கவிஞன் வள்ளல் நீதிமான் மதிமான் என்னும் இன்னவாறான மேலான நிலைகள் எவற்றினும் வீரன் என்பதில் வியனான ஒரு பெரு மதிப்பை ஞாலம் யாண்டும் நயந்து நிற்கின்றது. வீரம் தெய்வீகமானது; யாரும் வியந்து மதித்து எவ்வழியும் யாண்டும் உவந்து போற்றும் உயர் நிலையுடையது.

## வீர மூர்த்தி.

முருகக்கடவுளுக்கு வீர மூர்த்தி என்று ஒரு பெயர். அழகு இளமை வீரம் அப்பெருமானுக்குத் தனி உரிமைகளாய்இனிது மருவியுள்ளன. "இளையாய்! அழகியாய்! ஏறு ஊர்ந்தான் ஏறே!" என இந்த மூன்று நீர்மைகளும் தோன்ற அந்த மூர்த்தியை முன்னோர் போற்றியிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது. ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஏகபோகமாய் ஆண்டு அதிசய பராக்கிரம வீரனாய் யாண்டும் வீறுகொண்டு நின்றசூரபன்மனை அசுர குலத்தோடு வேர் அறுத்த வெற்றி வீரன் ஆதலால் கொற்றக் குரிசில் என வானும் வையமும் இந்த ஐயனை வாழ்த்தி வழிபட்டு

வருகின்றன. சிறந்த போர் வீரர்களையும் உயர்ந்த அரச குமாரர்களையும் வியந்து பேச நேர்ந்தபோதெல்லாம் காவியக் கவிகள் யாவரும் இவ்வீரப்பெருமானையே உவந்துஉவமைகூறியுள்ளனர்.

"முக்கண் நோக்கினன் முதன்மகன் அறுவகை முகனும்
திக்கு நோக்கிய புயங்களும் சிலகரந் தனையான்."

(இராமா, சுந்தர, ஊர்' 140)

என உக்கிரவீரனை இந்திரசித்தை வியந்து குறிக்கும் பொழுது கம்பர் இவ்வாறு கூறியிருக்கிறார். போர் வீரங்களின் சீர்மைகளைக் குறித்தே இப் பெருமானைப் பலரும் நன்கு பாராட்டியுள்ளனர்.

சூர்மருங்கு அறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன். (அகம், 59)

பொருநர்க்கு இருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய். (புறம், 14)

சூர்மருங்கு அறுத்த சுடர்ப்படையோயே! (பரிபாடல், 14)

சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல் வேள். (பதிற்றுப்பத்து, 11)

சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேல் அன்றே
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே. (சிலப்பதிகாரம், 24)

குருகு பெயர்க் குன்றம் கொன்றோன். (மணிமேகலை,5)

வீரா! முதுசூர்பட வேல் எறியும்
சூரா! சுரலோக துரந்தரனே. (கந்தரனுபூதி)

சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன். (கந்தரலங்காரம்)

வீரத் திறல்களை வியந்து புகழ்ந்து முருகக் கடவுளை நூலோர் இவ்வாறு போற்றி யிருக்கின்றனர். தீயோரைத் தேய்த்து நல்லோர்களைக் காத்தருளும் தெய்வ நீர்மையே வீரம் ஆய் வருதலால் அதன் திவ்விய நேர்மையும் செவ்விய சீர்மையும் தெரியலாகும். கரும வீரம் யாண்டும் தரும தாரகமா யுள்ளது.

வீரம் தீரமாய் நின்று காரியங்களைச் சாதித்து அருளுகின்றது; உற்ற அல்லல்களை நீக்கி உறுதி நலங்களை உதவி வரு

பெற்றது; ஆகவே அந்த அரிய வன்மை எல்லாம்வல்ல இறைவன் நன்மையுள் முதன்மை எய்தித் தலைமையாய் மிளிர்கின்றது.

பூதத்தால் தமக்கு நேர்ந்த இடையூற்றை நீக்கியருளும்படி கல்வி வீரராகிய நக்கீரர் இவ் வேல் வீரனை நினைந்து உருகி ஒரு நூல் பாடியிருக்கிறார். திருமுருகாற்றுப்படை என அதனை வழங்கி வருகின்றனர். முருகக்கடவுளுடைய வெற்றித் திறங்களையே அப்புலவர் திலகர் அதில் தலைமையாகப் போற்றித் தகுதியா ஏத்தியுள்ளார். சில அடிகளை அயலே காண வருகின்றோம்.

"வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூட் சேஎய்!
மண்டமர் கடந்தநின் வென்றாடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள்!
சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி!
போர்மிகு பொருந!" (திருமுருகாற்றுப்படை)

முருகப்பெருமானுடைய உக்கிர வீர நிலைகளை நக்கீரர் இவ்வாறு துதித்திருக்கிறார். இந்த வீர மூர்த்தி சூர்பன்மனோடு போராடிய வீர ஆடல்களைக் கந்த புராணத்துள் விரிவாகக் காணலாம். வெற்றி வீரனது கொற்றம் வியத்தகு நிலையது.

## வீர வள்ளல்.

இராமபிரானுடைய அவதாரம் முழுவதும் வீரநீர்மை சுரந்துள்ளது. அழகு திரு அறிவு அமைதி முதலிய குணகணங்கள் ஒருங்கே நிறைந்திருந்தாலும் வீரமே சீரும் சிறப்பும் நல்கி அக் கோமகனை மாநிலம் வியந்து புகழச் செய்திருக்கிறது. செயராமன், விசயரகுபதி, வீர ராகவன், கோதண்டராமன் என்னும் பெயர்கள் அக் குலமகனுடைய உயர் வீர நிலைகளை ஒளிசெய்து நிற்கின்றன. தனது அருமைத் திருமனைவியைக் கவர்ந்து போன இலங்கை வேந்தனை இவனுடைய குண நலங்கள் எதுவும்போய் யாதும் செய்து காரியத்தைச் சாதிக்கவில்லை. வீரமே சென்று நேர்நின்று போராடி அவனை வென்று வந்தது. அந்த அதிசய

நலங்களை உலகம் இன்றும் துதிசெய்து தொழுகின்றது. முதல் நாள்போரில் இவ் வீரனுடைய போர்த் திறங்களைக் கண்டதும் உலக கண்டகனாய் யாண்டும் அஞ்சாது நின்ற இலங்கை மன்னனும் அஞ்சி நாணினான். வாய்விட்டு வியந்து புகழ்ந்தான்.

போயினித் தெரிவது என்னே பொறையினால் உலகம்போலும்
வேய்எனத் தகைய தோளி இராகவன் மேனி நோக்கித்
தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்
நாய்எனத் தகும் அன்றே காமனும் நாமும் எல்லாம்.

(இராமா, கும்ப, 30)

இராமனோடு பொருது தோல்வியடைந்து மீண்டு போன இராவணன் தன் பாட்டனாகிய மாலியவானிடம் இவ்வாறு கூறியிருக்கிறான். உரைகள் அவனுடைய உள்ளத்தைத் திறந்து காட்டியுள்ளன. மூன்று உலகங்களையும் ஆளுகின்ற பெரிய ஒரு சக்கரவர்த்தியாய் அரிய நிலையில் தான் உயர்ந்திருந்தும் தன்னைச் சீதை சிறிதும் விரும்பவில்லை; யாதும் மதிக்கவில்லை; எவ் வகையிலும் வெறுத்தே நிற்கின்றாள்; என்னே இது? என அவன் எண்ணி ஏங்கியிருந்தான். அந்த உண்மையை அன்று உணர்ந்து கொண்டான். இராமனைப் பார்த்த கண்ணுக்குக் காமனும் நாய் ஆகத் தோன்றுவன்; அவனுடைய வீரத்தை அறிந்த நெஞ்சுக்கு மகா வீரர்கள் என்று செருக்கியுள்ள நாம் எல்லாம் மிகவும் ஈனமான இழிநாய்களாகவே காணப்படுவோம் என்றுஉண்மை தெளிந்து வெளியே இங்ஙனம் ஒளியாமல் பேச நேர்ந்தான்.

கொடிய பகைவனும் தன்னை மறந்து வியந்து புகழும்படியான பெரிய சுத்தவீரன் என இராமனை இங்கே நாம் உணர்ந்து மகிழ்கின்றோம். பொல்லாத பகைகளை வென்று தொலைத்து நல்லவர்களுக்கு அரசுரிமைகளை நல்கி அருளினான் ஆதலால் வீர வள்ளல் என இப்பேராளன் பெருமகிமை கொண்டுள்ளான்.

வீரம் என்பது அதிசயமான மகிமையுடையது. யாண்டும் பெருந்தன்மைகள் நிறைந்தது; தருமநீதிகள் தோய்ந்தது; அருள் ஆண்மைகள் அமைந்தது. போரில் மூண்டு பொருது படைகள் யாவும் இழந்து தனியே தளர்ந்துநின்ற இராவணனைக் கொன்று வீழ்த்தாமல் இன்று போய் நாளை வா என்று இனிது மொழிந்து விடுத்த இராமனது பெருந்தகைமையை நினைந்த போது எவர்

நெஞ்சம்தான் வியந்து புகழாது? இது இவ்வளவு மேன்மை! எவ்வளவு நீர்மை! எவ்வளவு சீர்மை! எத்தனை அமைதி! உய்த்துணர வேண்டும். சுத்த வீரம் எவ்வழியும் உத்தம நிலையில் ஒளி புரிந்து வருகின்றது. சத்திய நீதிகளோடு தழுவி மிளிர்கின்றது.

முன்னும் பின்னும் எண்ணிப்பாராமல் எதையும் துணிந்து செய்யும் துடுக்கரையும் துட்டரையும் மூர்க்கரையும் முரடரையும் வீரர் என்று சிலர் சொல்லி விடுகின்றனர். வீரத்தின் நிலைமையை யாதும் உணராத மடமையே அவ்வாறு சொல்ல நேர்கின்றது.

### வீர சுவர்க்கம்.

தரும ஒளியும் நீதி மணமும் மருவிவருகின்ற தீரமே உண்மையான வீரம் ஆம். தவசிகள், ஞானிகள், பத்திமான்கள், புண்ணிய சீலர்கள் மறுமையில் பேரின்ப நிலையை அடைதல் போல் போரில் இறந்த வீரரும் மேலான தெய்வீக நிலையை அடைகின்றனர். வீர சுவர்க்கம் என்பது வீரர்களுடைய தனி மகிமையைத் துலக்கி வீரத்தின் தகைமையை விளக்கி நிற்கிறது.

மனிதசாதியுள் வீரர் தனியான மேன்மையாளராய் இனிது நிலவியுள்ளனர். அவருடைய போக்கும் நோக்கும் வாழ்வும் சூழ்வும் அதிசய நிலையின. பெரிய போர் வீரரது சீவியம் அரிய ஒரு காவியமாய்க் கனிந்து திகழ்கின்றது. எண்ணமும் எற்றமும் யாண்டும் ஆண்மையாய் எவ்வழியும் இசை தழுவி எழுகின்றன.

மானம் அல்லது மன்னுயிர் பெரிதுஎன மதியார்;
வானம் எய்துவ தாயினும் வரிசையும் மரபும்
ஈனம் எய்திட இசைந்திடார்; இசையையே விரும்பி
ஊனம் ஒன்றிலா வாழ்வையே உவந்துநாட் கழிப்பார்.

வீரருடைய வாழ்க்கைகள் இவ்வாறு நீர்மை நிறைந்து சீர்மை சுரந்திருக்கின்றன. குறித்துள்ள நிலைகளைக் கூர்ந்து சிந்தித்து வீரர் இயல்புகளை ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

உலகமக்கள் எல்லாரும் உயிரை அருமையாக எண்ணி யாண்டும் உரிமையாய்ப் பேணி வருகின்றனர். சுத்த வீரர் மானமே பெரிதா மதித்து நிற்கின்றனர். கண்ணன் ஒருமுறை அருச்சுனனை நோக்கி "உன்னுடைய அந்தரங்கமான உள்ளக்

யாக்கையின் உண்மை என்ன?'' என்று உசாவினன். அதற்கு உடனே அவ்வீரன் பதில் சொன்னது அயலே வருகின்றது.

ஊனமே யான ஊனிடை இருக்கும்
உயிரினைத் துறந்தும் ஒண்பூணும்
மானமே புரப்பது அவனிமேல் எவர்க்கும்
வரிசையும் தோற்றமும் மரபும்
ஞானமே யான திருவடி யுடையாய்!
ஞாலம் உள்ளளவும் நிற்றலினால்
ஈனமே உயிருக்கு இயற்கை ஆதலினால்
என்றனன் வீமனுக்கு இளையோன். (பாரதம் பழம் ,18)

விசயனுடைய மன நிலையை இதனால் இனிது காண்கின்றோம். சுத்த வீரர்களுடைய இயல்புகள் எவ்வழியும் உத்தமநிலைகளில் ஒளி செய்து மிளிர்கின்றன. உணர்ச்சி உண்மை உறுதி என்னும் இவை அவரிடம் அரிய சோதி வீசிப் பெரிய நீதிகளை யுணர்த்தி யாண்டும் புதுமைகளாய்ப் பொலிந்து நிற்கின்றன.

## வீரவாழ்க்கை.

அஞ்சாமையும் நெஞ்சு நேர்மையும் ஆண்மையும் நிலைத்து நிற்றலால் வீரர் யாண்டும் இழிந்து படாமல் எவ்வகையிலும் தலைமையாய் உயர்ந்து திகழ்கின்றார். அவருடைய மன நிலையும் மாண்பும் மனித சமுதாயத்திற்கு இனிய உணர்ச்சிகளை உதவி வருகின்றன. என்ன இன்னல் நேர்ந்தாலும் யாதும் பின்னம் உறாமல் மன்னி வருவது மகிமை தருகின்றது. உயர்ந்த நிலைகள் எல்லாம் உள்ளம் தளராத ஊக்கத்தால் சிறந்து திகழ்கின்றன.

சிறுமை நேராது நிற்பதே பெருமித நீர்மையாம். வறுமை முதலிய துயர நிலைகள் மருவினும் குல வீ ர ர் க ள் நிலைதிரிய நேரார். எவ்வகையிலும் செவ்வியராய் இனிய சீர்மையே பேணி நிற்பர். அவருடைய தரும நெறியும் கருமமுறையும் அதிசய நிலைகளில் ஒளிசெய்து எவரும் துதி செய்ய நிற்கின்றன.

"The heroic soul does not sell its justice and its nobleness"
(Emerson)

"தம்முடைய பெருந் தன்மையையும் நீதியையும் உத்தம வீரர் ஒரு போதும் இழந்து நில்லார்'' என எமர்சன் என்னும் அமெரிக்கப் பெரியார் இவ்வாறு உறுதியோடு கூறியுள்ளார்.

...ண்ணியமும் நேர்மையும் நெறியும் வீர நீர்மைகளாய் நண்ணி ...ள்ளன. தருமத்தையும் நீதியையும் உரிமையையும் நிலை நிறுத் ...வ வீரம் கரும தேவதையாய் அரசுக்கு மருவி நிற்கின்றது.

அறம் கெடாமல் நின்று அடலமர் புரிவதே வீரம்;
மறந்தும் புன்மையும் வஞ்சமும் மருவிடாதது தான்;
சிறந்த போரிடை இறந்தவர் தேவராய்ச் சிறந்து
பிறந்த பேறெலாம் பெற்றவ ராய்நலம் பெறுவார். (1)

வீரம் உள்ளவர் தருமமும் மெய்ம்மையும் மேவி
ஈரம் உள்ளவ ராயிதம் செய்குவர்; வீரம்
கோர வன்குணம் அன்று; அது தெய்வவான் குணமே
ஸ்ரீ ராமனை விசயனை நினைந்துண்மை தெளிமின். (2)

உலகில் உள்ளநல் லுயிர்த்தொகை எவற்றினும் உயர்ந்து
திலக மாய்நின்று தேசொடு தெவ்வரை அடக்கி
அலகில் சீருடன் ஆளுறும் அரசனுக்கு உயிராய்
நிலவி யுள்ளநன் னீர்மையே வீரம் என்று அறிக. (3)
(வீரபாண்டியம்.)

வீரத்தின் பான்மைகளும் மேன்மைகளும் இங்ஙனம் ...மை நிறைந்திருக்கின்றன. உயர்ந்த ஆண் தகைமையிலிருந்து ...விளைந்துவருதலால் ஆண்மை ஆற்றல் வீரம் என்னும்மொழிகள் ...ண்மை தழுவி மேன்மை கெழுமிப் பான்மை மருவியுள்ளன.

கோழை, பேடி என்னும் பெயர்களை எவரும் வெறுத்து ...கின்றார். ஆனை உச்சநிலையில் உயர்த்திக் காட்டுவது வீரமே ...கொச்சைமக்கள் எனக்கோழைகள் இழிக்கப்படுகின்றனர்

"...ச்சையாம் எனும் பயம்மனத் துண்டு ...வாழும்
கொச்சை மாந்தரைக் கோல்வளை மகளிரும் கூசார்,"

எனத் தூடணன் என்னும்போர்வீரன் பேடிகளை இவ்வாறு ...ந்துபேசி ஏசியிருக்கிறான். ஆண்மகனாய்ப் பிறந்தவன்மேன் ...யான ஆண்மையாளனாய் அமைந்தபோதுதான் அவன் மதிப் ...மாண்பும் பெறுகின்றான். வீரன் விழுமியோன் ஆகின்றான்.

பேடிகளால் ஒரு நாடு பெருமை அடையாது; எந்த நாடும் வீரர்களாலேயே மேலான நிலைகளை அடைந்திருக்கின்றது. இந்த நாடு வீரபூமி எனப் பண்டு மேன்மை அடைந்திருந்தது. இந் நாட்டுவீரம் பலவகைகளிலும் உயர்நலமுடையது. பண்பாடுகள்

நிறைந்தது. நீதி, மானம், தருமம், என்னும் அருமைப் பண்புகளோடு மருவி யாண்டும் உத்தம நெறியில் ஓங்கி வந்துள்ளது.

## வீர பாண்டியன்.

இத்தகைய வீர நிலையில் தலை சிறந்து நின்ற வீரபாண்டியக் கட்ட பொம்மு என்னும் பாஞ்சாலங்குறிச்சி மன்னனுடைய சரித வரலாறு முன்னம் வெளிவந்துள்ளது. ஆட்சிமுறை முதலிய மாட்சிகள் எவற்றையும் காட்சிச் சாலை போல் அந்நூல் இனிது காட்டி இந்நாட்டின் உண்மை நிலையை உணர்த்தி நிற்கின்றது.

தென்னாட்டுச் சிங்கம்என எந்நாட்டும்இசைநாட்டியாண்டும் திசை காட்டியாய் அரசாண்டிருந்த அந்த வீர மன்னனது முன்னோர் நிலையும், வடநாடு விட்டு இந்நாடு வந்ததும், இடம் கண்டு இருந்ததும், அரசு அடைந்ததும், வேட்டையில் விளைந்ததும், கோட்டை வளைந்ததும், கோமுறை புரிந்ததும், நாற்பத்தேழு தலைமுறைகளாக நடந்து வந்ததும், இடையே கும்பினியார் எதிர்ந்ததும், வரி விதித்ததும், திறை மறுத்ததும், வம்புகள் நீண்டதும், வன்சமர் மூண்டதும், கும்பினிப்படைகள் மாண்டதும், தானாபதி சொல்லைக் கேட்டு இடம் பெயர்ந்து போய் அரசு பிடிபட்டதும், அநியாயமாய் இறந்ததும், பதி அழிந்ததும் முதலிய சரித்திர நிகழ்ச்சிகள் உணர்ச்சிகளை விளைத்து உலக உள்ளங்களை உருக்கியிருக்கின்றன.வெள்ளையரும்இவரைவியந்து புகழ்ந்தனர்.

தூக்கில் ஏறி இவர் சாக எழுந்தபொழுது இராச கம்பீரமாய் நின்று இந்நாட்டுப் பாளையகாரர்களை நோக்கிச் செய்த பிரசங்கம் * வீர ஒளிகளை வீசி விவேகங்களை விரித்துள்ளது.

2400 ஆண்டுகளுக்கு முன்னர் கிரீஸ் தேசத்தில் இருந்த சாக்கிரட்டீஸ் [Socrates] என்னும் பெரியாரை அரசாங்கம் அநியாயமாய் நஞ்சை யூட்டிக் கொல்ல நேர்ந்த போது அவர் சொல்லிய மொழிகளை மேல் நாட்டார் இன்றும் புகழ்ந்து கொண்டாடி வருகின்றனர். அயலே வருவதை ஆய்ந்து அறிக.

"The hour of departure has arrived, and we go our ways-
I to die, and you to live. Which is better God only knows"
(Socrates)

"புறப்படுகிற நேரம் வந்து விட்டது; நம் வழிகளை நோக்கி

---

*இந் நூல் முதல்பாகம் பக்கம் 337 வரி 16 முதல் பார்க்க.

நாம் போவோம்; நான் சாகப் போகிறேன்; நீங்கள் வாழப் போகிறீர்கள்; இவற்றுள் எது நல்லது என்பதைக் கடவுள்தான் அறிவார்" என அந்த மகான் கூறியுள்ள இதில் அவரது மன நிலையும் மதிநலமும் தெரிய வந்தன. அன்னவாறே இம் மன்னனும் கூறியுள்ளான். உள்ளக்கொதிப்புகள் உரைகளில் தள்ளின.

மானமின்றி ஈனமாயிழிந்து வெள்ளையர்க்கு ஊழியம் புரிந்து உள்ளம் உவந்து ஈண்டு நீங்கள் வாழுங்கள்; ஆண்டு நான் போகின்றேன் என்று இந்த ஆண்டகை அன்று கூறியது அதிசய வியப்பாய் நீண்டது. இவ் வீர வேந்தனது சீவியசரிதம் சீரிய பல பண்பாடுகள் நிறைந்து வீரிய நிலைகளை விளக்கியுளது.

அந்தச் சரித வகைகள் எல்லாம் தொகையாக நினைவில் வைத்துக் கொள்ளும்படி ஒரு கவியில் அமைக்கப்பட்டுள்ளன. அதனைக் கருத்தூன்றி அறிந்து கொண்டால் முன் பாகமும் பின் பாகமும் இன்பாகமாய் ஒருங்கே நன்கு தெரிந்து கொள்ளலாம்.

### முதல் பாகத்தின் தொகைக் குறிப்பு.

திருமலிந்து ஓங்கிய திறல்மிகு பாஞ்சைப்
பதிஅமர்ந் திருந்து பாரினிது ஆண்ட
வீரபாண் டியப்பேர் விறலுயர் வேந்தன்
திசைமுகம் எங்கும் இசைபரந் தேற
ஆழிசூழ் உலகம் வாழிஎன்று ஏத்த
ஆணை செலுத்தி ஆண்மையுற் றிருந்ததும்,
வெள்ளையர் வந்ததும், வெஞ்சினம் விளைந்ததும்,
பிள்ளை சென்று பிழையாய் நெல்லைக்
கொள்ளை செய்ததும், கொடும்பகை மூண்டதும்,
அடும்படை யோடவர் ஆர்த்து வந்ததும்,
இருதிறப் படையும் பொருதுஎதிர் புகுந்ததும்,
காலன் பட்டதும், களப்படை அழிந்ததும்,
சாலவும் நொந்தவர் தாமயர்ந்து ஒழிந்ததும்,
கோனிவன் வெற்றி கொண்டனம் எனா
ஆனா உவகையோடு அமர்ந்தினி திருந்ததும்'
தானா பதிவந்து ஊனம் உரைத்ததும்,
மறுத்துரைக் காமல் மன்னவன் இசைந்ததும்,
பழிவினை தூரப் பதிவிட்டு எழுந்ததும்,
பகையிடை வந்து தொகையுற வளைந்ததும்,

இடையற எறிந்து இகல்கடந்து அகன்றதும்,
புதுவை புகுந்ததும், புகலடைந் திருந்ததும்,
சதியுடன் வந்து தரியலர் அடர்ந்ததும்,
வலையிடை அடைந்த மடங்கல் ஏறென,
நிலைகுலைந் திவன் நேர்ந்தகப் பட்டதும்,
கொலையிடை விழுந்ததும், கொடும்பழி கண்டதும்,
தலைநகர் பகைவர் தம்கைக் கொண்டதும்,
முன்னுற மொழிந்தனம்; இன்னதில் அன்னவன்
பின்னவன் செய்த பெருந்திறல் ஆண்மையை
என்னிரு கண்என இன்னுயிர் ஆமென
மன்னியுள் இருந்து மகிமைசெய் தருளும்
பன்னிரு கையுடைப் பரமன்
தன்னடி தொழுது சாற்றுவன் இனிதே.

---

# இரண்டாவது அதிகாரம்.

## பாஞ்சாலங் குறிச்சி.

ஒரு அரசுக்கு இராசதானியாய் அமைந்துள்ள நகரம் பல வகை நிலைகளிலும் உயர்ந்து சிறந்த புகழை அடைந்து கொள்கின்றது. இடம் பொருள் ஏவல் என்பன வாழ்க்கையின் உறுதித் துணைகளாய் உடன் தொடர்ந்திருக்கின்றன. தானம் அமையின் வானமும் அமையும் என்னும் பழமொழியால் இடத்தின் மகிமை இனிது புலனாம். பதி, தலம், தானம், ஊர், நகர், புரி என வருவன எல்லாம் குறியான காரணங்களையுடையன. பாஞ்சாலங் குறிச்சி என்னும் ஊரின் பேரை யாரும் நன்கு அறிந்திருக்கின்றனர். சிறிய ஒரு குறுநில மன்னன் அமர்ந்து அரசு புரிந்திருந்த இந்த இடம் பெரிய புகழை அடைந்து உலகம் எங்கும் வியந்து பேச ஒளி வீசி யுள்ளது. இவ்வளவு மதிப்பும் மாண்பும் இதற்கு எவ்வகையில் வந்தது? அவ்வகை செவ்வையாகச் சிந்தனை செய்து தெரிய வுரியது. அரிய நிலைகளை அறிவது மகிமையாம்.

### தலம் இருந்த நிலை.

தென் பாண்டி நாட்டிலே திருநெல்வேலிக்கு வடகிழக்கில் இருபத்தைந்து கடிகைத் தூரத்தில் இந்நகர் பல பவுசுகளுடன்

நிலவியிருந்தது. விரிந்து பரந்த சமவெளி; சிறந்த நீர்வளம்; நல்ல காற்றேட்டம்; அயல் எங்கணும் செவல் தரை; இயல்பான இனிய காட்சிகள்; பேல்புறம் * சாலிகுளம் என்னும் நீர்வள முடைய பறம்பு; ஏழு மைல் சுற்றளவுடையது; நிலபுலங்கள் பலவும் இடை மருவி இனிய சோலைகள் புடைசூழ எழில்கள் நிறைந்திருந்தன. பொழில்களும் வாவிகளும் வயல்களும் அயல் தழுவி யாண்டும் உயர்நிலையில் ஒளிபுரிந்து விளங்கின. இத்தகைய அழகிய விழுமிய இடத்திலே பாஞ்சைப்பதி என்னும் வீரமா நகரம் அரிய பல சீர்மைகளோடு பெரிய மகிமைகள் நிறைந்து சிறந்து நின்றது. தக்கமக்கள் தகுதியாய் வாழ்ந்து வந்தனர்.

பதியின் பெருமை.

அருமறை தெரிந்த அந்தணர் ஒருபால்;
அரசர்தம் மரபினர் ஒருபால்;
பொருதொழில் அமைந்த வீரர்கள் ஒருபால்
புகழ்மதி அமைச்சர்கள் ஒருபால்;
திருவமர்ந்துயர்ந்த வணிகர்கள் ஒருபால்;
செய்ய வேளாளர்கள் ஒருபால்;
கருமமே கண்ணுய் வினைபுரிந் துயரும்
கம்மியர் காருகர் ஒருபால். (1)

அதிகலை கற்று மதிமிகுந் துயர்ந்த
அருந்தமிழ்ப் புலவர்கள் ஒருபால்;
சுதிநெறி வழாமல் இசைநலம் தெரிந்த
சொல்லிசை வாணர்கள் ஒருபால்;

---

*இது சாரலோடு அமைந்த பெரிய ஏரி. எப்பொழுதும் வற்றாத நீர் நிலை வாய்ந்தது. அயல் இருந்த வயல் நிலங்களுக்கெல்லாம் வளமான நீரை வழங்கி வந்தது. சாலி = நெல். நல்ல செந்நெல் விளைவுக்கு நீர்ப்பாசனமாய் நிலவியிருந்தமையால் சாலிகுளம் என ஞாலம் வழங்கச் சாலவும் பெருமை வாய்ந்து இக்குளம் விளங்கி நின்றது.

சாலி குளமும் பெருக வேண்டும்
சம்பா நெல்லு விளைய வேண்டும்
ஏற்றுமீனும் ஏற வேண்டும்
எங்கள் பஞ்சம் தீர வேண்டும்.

வயல்களில் வேலை செய்கின்ற உழத்திகள் இன்றும் இவ்வாறு பாடி வருகின்றனர். நாட்டுப் பாடல்கள் பழைய கால நிலைமைகளைக் காட்டி நிற்கின்றன. பழமைக் காட்சிகள் கிழமைகளை விளக்கின.

கதிமிகுத் தடுவெம் படைக்கலம் பயின்ற
 கடும்படைத் தலைவர்கள் ஒருபால்;
ததியறிந்து ஒற்றித் தகவுடன் உரைக்கும்
 சதுருடை ஒற்றர்கள் ஒருபால். (2)

காரெனத் திரண்டு மதமிகப் பொழியும்
 களிற்றினம் களித்திடும் ஒருபால்;
பாரெனப் படாமல் தாவிமேற் பாயும்
 பரியினம் செழித்திடும் ஒருபால்;
போர்எனப் புடைத்துப் புயம்நெடி தோங்கும்
 பொருநர்கள் பொங்குவர் ஒருபால்;
நேரெனக்கு எங்கும் இலைஎன நிமிர்ந்து
 நீண்மதில் நிலைத்திடும் ஒருபால். (3)

மணிகளின் விலையை நிலையறிந் துரைக்கும்
 மணியறி வல்லுநர் ஒருபால்;
அணிகளை அழகா அமைத்துமுன் கொடுக்கும்
 அரியபொற் பணியினர் ஒருபால்;
கணிதநன் னூலை நுணுகிமுன் அறிந்து
 கசடற உரைக்குநர் ஒருபால்;
தணிவரு திணிதோள் மல்லர்கள் ஒருபால்;
 சரமுறு வில்லினர் ஒருபால். (4)

வாள்வலி அதனில் வல்லவர் ஒருபால்;
 வல்லயம் வல்லவர் ஒருபால்;
நீள்சுடர் வடிவேல் வல்லவர் ஒருபால்;
 நெடுங்கவண் வல்லவர் ஒருபால்;
தோள்வலி யதனில் வல்லவர் ஒருபால்;
 சொல்வலி வல்லவர் ஒருபால்;
நாள்வலி விழைந்து பலபடை பயின்று
 நனியுடல் பேணுநர் ஒருபால். (5)

வாரணம் ஊர்ந்து வன்பகை வெல்லும்
 வகையினை அறிபவர் ஒருபால்;
தாரணங் குறுவெம் புரவியைக் கடாவிச்
 சமர்நிலை தெரிபவர் ஒருபால்;

காரணம் காண இருவர்நேர் எதிர்ந்து
கைத்திறம் காண்பவர் ஒருபால்;
பாரணங் கினிய முகம்எனப் பொலியும்
பாஞ்சையின் வலிஎவர் பகர்வார்? (6)

காலையும் உச்சி மாலையும் முரசம்
கார்என முழங்கிடும் ஒருபால்;
சாலவும் இனிய வீணைவேய்ங் குழல்கள்
சதுருடன் இசைத்திடும் ஒருபால்;
பாலையும் இனிய தேனையும் வெறும்சொற்
பாவையர் பாட்டொலி ஒருபால்;
வேலையின் ஒலியிற் பல்லியங் களுமேல்
மேவிநின் றெங்கணும் ஒலிக்கும். (7)

அரும்பெறல் மணிகள் அழகிய பரிகள்
அடுதிறல் அளவிட லரிய
பெரும்பொரு கரிகள் விருப்புபோ தெல்லாம்
பேணிமென் மடிசுரந் துறுபால்
தரும்பரி சுடைய அரும்பசு நிரைகள்
தமனியச் சிவிகைகள் இன்ன
இரும்பொருள் பலவும் இடந்தொறும் நெருங்கி
இமையவர் உலகெனத் திகழும். (8)

மருங்கெலாம் சோலை வயல்எலாம் செந்நெல்
வரம்பெலாம் பணிலங்கள் முழங்கும்
கரும்பெலாம் கமுகின் காடெனத் திகழும்
கமுகெலாம் தெங்கென நிமிரும்
அரும்பலா மரங்கள் அசோகமா மரங்கள்
அணிஅணி யாயுறச் சாலிப்
பெருங்குளம் என்னும் இருங்குளம் பாலின்
பெருங்கடல் எனப்பொலிந் திலங்கும். (9)

இங்ஙனம் பலவகை நிலைகளிலும் தலைசிறந்திருந்த இந்தப்பாஞ்சைப்பதியிலிருந்து வீரபாண்டியக் கட்டபொம்மு அரசுபுரிந்து வந்தார். வருங்கால் வாணிக முறையில் இந்நாட்டில் வந்து குடிஏறிய ஆங்கிலேயர் பாங்குடன் முயன்றுஓங்கியுயர்ந்துதேச உரிமையை

அடைந்துகொண்டனர். கொள்ளவே எல்லைகளை ஆராய்ந்தார்; ஆட்சிமுறைக்கு வேண்டிய காட்சிகளைக் கருதினர். எங்கும்வரிகளைத்தொகுத்தார்; வரவுகளைப்பெருக்கினர். தென்னாட்டுப்பாளையக்காரர் எல்லாரும் தம்மிடம் நேரே திறைகளைச் செலுத்தும்படி முறைகளை விதித்தார்; அனைவரும் அடங்கி அமைவுடன் கொடுத்தார். பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்மாத்திரம் திறைசெலுத்தமறுத்துத் தீரமாய் எதிர்த்தது. கும்பினியார் தங்களால் இயன்ற வரையும் வம்புகள் செய்து பார்த்தார். யாதும் பலியவில்லை. தேசஆட்சிதம் கைக்குவந்து ஆறு ஆண்டுகள் ஆகியும் ஒரு காசும் கட்டபொம்மனிடமிருந்து அவர் கைவாங்கமுடியாமையால் நெடிது திகைத்துக் கடிது மறுகினர். சிறிய ஒரு குறுநில மன்னன்; பெரிய ஆங்கில ஆட்சியை யாதும் மதியாமல் அடங்கொண்டு நிற்கின்றனே! என்று உள்ளே கோபதாபங்கள் மண்டியிருந்தனர். இருந்தும் வெளியே யாதும் செய்ய இயலாமல் பல வகையிலும் நயபயங்களால் வரிவாங்கி விடவேண்டும் என்று பதம் பார்த்து வந்தார்.

## துரை வந்தது.

முடிவில் ஒரு துரையை நேரே அனுப்பினர். அவர்க்கு ஆலன் என்று பெயர். குதிரை ஏறி அவர் கோட்டைக்குவந்தார்; ஜமீன்தாரைக் கண்டார்; உற்றதை உரைத்தார்; இவர் தமது பழக்கம் வழக்கங்களை எல்லாம் விளக்கி வரி செலுத்துவது இல்லை என்று உறுதியாகச் சொல்லி விடுத்தார். துரை கடுத்துப் போனர். அடுத்து வரவே இல்லை; கும்பினியார் கொடிய ஆலோசனைகள் செய்தார். நெடிது பல சூழ்ந்து நேரம் நோக்கி நின்றார்.

பிறர்க்குக் கப்பம்கட்டி வாழுவது இழிவு என்று இவர் எண்ணியிருந்தநிலை ஏற்றமுற்று நின்றது. வெள்ளையர்களை யாண்டும் எள்ளலாகவே இவர் கருதி வந்திருக்கிறார். தன்னை அடக்கி ஆளவேண்டும் என்று அவர் அடங்கொண்டு நிற்பதை நினைந்த போதெல்லாம் இம்மன்னர் நெடுஞ் சினங்கொண்டு நிமிர்ந்து நின்று அருந்திறல் காட்டியுள்ளார். ஆண்மை வீரங்கள்மேன்மை சுரந்து யாண்டும் தாழாத நிலையில் தகைமையோடு நின்றன.

இவர் கருதியிருக்கும் கருத்துக்களும் உறுதிமொழிகளும் வீரவுணர்ச்சிகளையூட்டி நாட்டுக்குள்வ்வழியும்தீரமான உயர்ச்சிநிலை

ளை நீட்டியிருக்கின்றன. திறை கேட்க வந்த வெள்ளைத்துரையிடம் இந்த வீரத்துரை நேரே உரையாடியுள்ள முறைகள் யாரும் உணர்ந்து சிந்திக்கத் தக்கன. சில அடியிலே வருகின்றன.

என்னின் முன்னவர் இசைதிசை பரப்பிமேல் நின்ற
பொன்னின் நாட்டினும் புகழ்க்கொடி நாட்டிமுன் இருந்தார்;
பன்ன ருந்திறற் பாஞ்சையம் பதியதி பதியாய்
இன்ன நாளில்யான் இருந்துளேன் இறையுளம் தளரேன். (1)

அரசை ஆள்பவர் அடியராய் வாழ்தலும் உண்டோ?
புரசை யானைமேல் போபவர் பூனைபோ லுவரோ?
வரிசை யாலுயர் மன்னர்தம் மரபினில் வந்தேம்
வரிசெய் என்றுநீ உரைசெயல் வழிவழி இழிவே. (2)

முன்ன வர்க்குமுன் னாகிய முருகன்எம் பெருமான்
தன்ன டிக்கலால் தரணியில் மற்றுள எவர்க்கும்
மன்னன் என்திரு மணிமுடி வணங்கிடாது; என்வாய்
சொன்ன சொல்லையும் வழுவிடாது; எழுமையும் துணிவே. (3)

இனிய நல்லுயிர் தன்னிலும் எமக்குயர் மானம்
புனிதம் ஆதலால் அதனையே போற்றிமுன் வாழ்வேம்;
மனித வாழ்வினை ஒருபொரு ளாகவே மதியேம்;
துனியது எம்வழி அவ்வழி என்றுமே தளரேம். (4)

தான்பிறந்தநன் நிலத்தினைத் தலத்திருந் தாளும்
கோன்பிறந்துயர் கோக்குடி யதனிடை வந்து
நான்பிறந்துளேன் நலம்பல புரிந்துளேன் நடுவே
கால்பறந்துநீர் வந்துகால் ஊன்றுதல் கடனோ? (5)

கண்ணைக் காப்பது கவிந்துள இமையன்றி அயலே
நண்ணி யுள்ளன நயந்துடன் காக்குமோ? பிறந்த
மண்ணைக் காப்பது வந்ததில் பிறந்தமன் குலத்தோர்க்கு
ஒண்ணு மேயன்றி ஒழிந்தவர் செய்வரோ உரிமை? (6)

தலைமை யாய்நின்று தரணியை ஆளுவேம்; அந்த
நிலைமை குன்றினால் நீணிலத்து ஒருகணம் வாழேம்;
புலமை யாளரைப் போற்றிமுன் வாழ்த்துவேம்; பொல்லா
நிலைமை யாளரை நீறுசெய்து ஆழ்த்துவேம் என்றான். (7)

திறைஎன்று இன்றுநீர் வந்தனிர்! சிறிதுநாள் சென்றால்
இறைஎன்று இங்கமர்ந்து இருந்துஎமர் தலைமிசை ஏறித்
துறைதொறும் பல வரிகளைச் சுமத்திஇந் நாட்டின்
நிறையழித்துநீர் நிறைவுற நெடிதுமுன் சூழ்ந்தீர்! [8]

நன்று நன்றுநும் வஞ்சமும் ஆசையும் நாட்டில்
ஒன்றி நின்றுபின் உயிர்களை உறிஞ்சிட உற்றீர்!
இன்றுஉமக்கிறை இரங்கியிங்கு இடங்கொடுத் தேனேல்
என்றுமேதுயர் எங்கணும் இழிவுடன் எழுமே. [9]

ஏழை மக்களுக்கு இரங்கிமுன் ஈவதே அல்லால்
பீழை யாய்வந்து பிழைபல செய்துமே லாளாய்
வாழ எண்ணியே வஞ்சமாய் வந்துள நுமக்கோர்
கூழும் தந்திடேம் உறுதியீது என்றுநேர் குறித்தான். [10]
[வீரபாண்டியம்]

இவ்வுரைகளால் இவருடைய மனவலியும் மதிநலமும் மரபின் நீர்மையும் தெய்வபத்தியும் தேசாபிமானமும் தீர தைரியமும் கருமச் சூழ்ச்சியும் தரும நோக்கமும் உறுதிநிலையும் ஒருவாறு அறியலாகும். கருதியுணரும் அளவு உண்மைகள் தெரிகின்றன.

உள்ள உணர்ச்சிகள் உரைகளில் வெளிவருகின்றன.

உயர்ந்த மானிகள், சிறந்த போர்வீரர்கள், தேர்ந்த ஞானிகள் என்னும் இவர்களுடைய செயல் இயல்கள் எல்லாம் எவரும் வியந்து நோக்கும் வகையில் யாண்டும் விரிந்து நிற்கின்றன. பொதுமக்களுக்கு இம்முதுமக்கள் வழிகாட்டிகளாய் ஒளிநீட்டி நிற்கின்றனர். மான வீரங்கள் மகிமை நிலைகளாய் மருவி வருகின்றன. அரிய ஆன்மநிலை இனிய பான்மையால்மிளிர்கிறது.

மனவுறுதியாலும் மதிநலத்தாலும் மனிதன் தனி நிலையில் உயர்கின்றான். அவ்வுயர்ச்சியை வெளிமுயற்சியால் அடையமுடியாது. உள்ளத்தின் தகுதியால் அடைய நேர்கின்றது. உள்ளம் உயர எல்லா உயர்வுகளும் தாமாகவே அமைகின்றன. ஊக்கம் உடையவரதுபோக்கும் நோக்கும் வியப்பும் விம்மிதமும் விளைத்து வருகின்றன. மனித சாதி அவர்களால் மாண்பு மிகப் பெறுகின்றது. புனித வாழ்வை அவர் போற்றி ஒழுகுகின்றனர்.

## வீர சுதந்திரம்

எல்லாரும் அஞ்சி வணங்கி அடங்கி ஒடுங்கும்படி அதிகார ஆற்றல்களை எங்கும் பரப்பி விதிமுறைகளை விரித்து யாண்டும் அதிபதிகளாய் வீறுகொண்டு நிற்கின்ற கும்பினியாரோடு எதிர்த்து இவர் இறை தர மறுத்த திறம் பெரிய வியப்பாய்ப் பெருகி அரிய பல தீரங்களை உலகம் அறிய விளக்கி நின்றது.

"வானம் பொழியுது பூமி விளையுது
மன்னவனுக்கு ஏது தீர்வைப்பணம்?"

என்று அன்று இவர் சொன்னவாய்மொழியை உலகம் இன்றும் எங்கும் வியந்து சொல்லி உவந்து கொண்டாடி வருகின்றது. இதனை ஒரு பழமொழியாக இந்நாட்டு மக்கள் எவரும் கிழமை யோடு பேசி வருகின்றனர். அடிமைவாழ்வில் இருந்தும் இதனை வாயளவில் சொல்லி இன்பம் உற்றுள்ளனர். இந்த மொழியில் இவ்வளவு பிரியம் இந்திய மக்களுக்கு வந்த காரணம் சிந்தை தெளிய வுரியது. யாதும் தலைநீட்ட ஒட்டாமல் யாண்டும் நிலை தாங்கி எவ்வழியும் தம்மை அடிமைகளாக்கி வைத்து முடி ஆட்சி பூண்டு ஏகாதிபத்தியமாய் ஆங்கிலேயர் அடக்கி ஆண்டு வரும் அதிகார முறையில் இந்தச் சுதந்திர வாசகம் மக்களுக்கு நிரந்தர மான ஒரு உற்சாகத்தைக் கொடுத்து வந்தது. உணர்ச்சியூட்டி வருவதை உரைத்து மகிழ்ந்து உள்ளம் ஊக்கி வந்தனர்.

சுயாதீனம், சுதந்திரம் என்னும் மொழிகள் அரிய இனிய பொருள்களையுடையன. பாசபந்தங்கள் நீங்கி ஆன்மா நேரே ஈசனை அடைந்து இன்புற்று வாழும் நிலையே பேரின்பசுதந்திரம். அந்த நிலையை அடைந்து கொள்வதே சீவ கோடிகளுக் கெல்லாம் சொந்த முடிபாய் என்றும் தொடர்ந்து முடிந்துளது.

இந்த உலகில் எந்த மனிதனுக்கும் ஆளாகாமல் சிந்தை நிறைவுடன் தலைமையாக வாழ்வதே இங்கே நிலைமையான உரிய சுதந்திரம் என்க. முன்னது சீவனைச் சேர்ந்தது; பின்னது தெய்வத்தைச் சார்ந்தது. அயல் ஏவாமல் வாழ்வதே உயர் வாழ்வாகிறது. அதுவே புனிதமான மனித வாழ்வாம்.

"ஓவா வறுமை உழந்தாலும் மற்றொருவர்
ஏவாது உயிர்வாழ்ந் திருத்தலே நன்றாகும்;
தாவாத செல்வம தருமேனும் குற்றேவல்
ஆ ஆ கொடிது! கொடிது!" [சீகாளத்தி]

இதனால் அடிமை வாழ்வின் கொடுமை புலனும். சிறுமை யும் புன்மையும் மருவியிருத்தலால் அடிமைவாழ்வை எந்த நாடும் நிந்தனை செய்து வெறுக்கின்றது. உணர்வுடைய எவரும் சுதந்திர வாழ்வையே நிரந்தரமாக எங்கணும் விரும்பி வருகின்றனர்.

"Liberty, that sacred gift of heaven,
that glorious privilege of Britons!" (Goldsmith)

"சுதந்திரம் என்பது புனிதமான இனிய தெய்வக்கொடை; அது ஆங்கிலேயருடைய உயர்ந்த பிறப்புரிமை" என்னும் இது ஈண்டு உணரத்தக்கது. சுதந்திர நலங்களை இங்ஙனம் உவந்து அனுபவித்து வருகிற ஐரோப்பியர்கள் அயல் நாட்டில் அதனை தலைநீட்டவிடாமல் செய்து நின்றது தந்நலம் கருதிய புலைநாட்டமே யாம். அந்நாட்டம் ஒழிந்து கால வேற்றுமையால் இப்பொழுது ஒட்டம் படிந்துள்ளனர். ஆயினும் அவர் மூட்டியிருந்த அடிமைத் தழும்பு மங்காமல் இங்கே பொங்கியே நிற்கின்றது. ஆண்டவர் என்ற திமிர் அவர் நெஞ்சிலிருந்து மறைய ஆண்டுகள் பல செல்லும். அடிமை மனப் பான்மை ஈண்டும் அடியோடு தொலைய இறைவன் அருள்புரிய வேண்டும். நிலைமை அளவே மனிதன் தலைமையாய்த் தழைத்து வருகிறான்.

வஞ்சனை பொறாமை சூது குரோதம் கோள் இழிநசை கழிசெருக்கு முதலிய புலைப் புன்மைகளே இந்நாட்டில் எங்கணும் நிலையாய் நிறைந்திருக்கின்றன. அஞ்சாமை ஆண்மை நேர்மை வாய்மை தூய்மை அன்பு மானம் வீரம் முதலிய உயர்ந்த பண்பாடுகள் ஒழிந்து போயிருக்கின்றன. ஒரு பெரிய மனிதனைக் காண்பது பெரிதும் அரிதாகின்றது. எல்லாம் வெளிப்பகட்டுகளாயுள்ளன; கிட்ட நெருங்கித் தொட்டுப் பார்த்தால் கெட்ட நாற்றங்களே வீசுகின்றன. பலவகை நிலைகளிலும் தலைசிறந்திருந்த இந் நாடு இதுபொழுது நிலைகுலைந்துள்ளமையை நினைந்த போதெல்லாம் நெஞ்சம் நோகின்றது. நினைவு வேகின்றது.

நெஞ்சில் ஒருவீரம் இல்லை; நிலையான
ஆண்மை இல்லை; நேர்மை மானம்
அஞ்சாமை முதலாய அருங்குணங்கள்
அருங்குணங்கள் ஆகி, எங்கும்
பஞ்சைகளாய் இழிந்துபோய்ப் பரிதாப
நிலையிலுள்ளார்; பழி அகன்று
விஞ்சுபுகழ் நிலைஏறித் தலைநிமிர்ந்து
வெளிவரும் நாள் விளம்பாய் அம்மா! (1)

பண்டிருந்த கொடைஎங்கே? படையிருந்த
நிலைஎங்கே? பரிந்து நீதி
கண்டிருந்த அரசெங்கே? கலைஎங்கே?
கவிஎங்கே? கற்பு வாய்மை

கொண்டிருந்த குலம்எங்கே? குணம்எங்கே?
நலம்எங்கே? கொற்றம் எங்கே?
உண்டிருந்த உயர்வெல்லாம் ஒளிந்தோடிப்
போனவகை உரையாய் அம்மா!

[இந்தியத்தாய் நிலை]

பாரதமாதாவை நோக்கி இவ்வாறு பரிதாபமாய் உள்ளம் உடைந்து புலம்ப வேண்டியிருக்கிறது. உற்ற மக்கள் உயர் வடைந்தபோது பெற்ற தாய் பெருமை அடைகின்றாள். மான மும் ஞானமும் நிறைந்த வீரத்தாய் வயிற்றில் பிறந்துள்ளபிள்ளை கள் ஈனமாயிழிந்துபடாமல் வானமும் புகழ வளர்ந்தோங்க வேண்டும். தேசத்தின் திவ்விய மணிகளாய் மக்கள் தேசு மிகுந்தபொழுது ஈசன் உவந்து அவரை இனிது பேணுகின்றான். மானமும் வீரமும் ஞானமும் மருவி வர மனித இனம் மகிமை யோடு பெருகிவரின் எவ்வழியும் இனிமைகள் சுரந்து வரும்.

வானம் பொழியுது, பூமி விளையுது என இம் மானவீரர் வரைந்து சொன்னது ஒரு ஞானபோதனையாய் நிலவியுள்ளது. விண்ணும் மண்ணும் உயிரினங்களை விழைந்து காக்கின்றன என இயற்கை அன்னையின் கருணை நிலையைக் கண்ணும் கருத்தும் காண வந்தது. வானம் பொழிந்தருள்கின்றது; வையம் விளைந் தருளுகின்றது. அவ்வாறு அருளியும் உண்ண உணவின்றி உயிர்கள் தவித்து நிற்கின்றன. இது என்ன பாவம்! முன்னம் இம்மன்னன் எதை நோக்கிச் சொன்னான்? இந்நாட்டில் உள்ள ஆணும் பெண்ணும் வீட்டு வழக்கமாய் விரும்பிச் சொல்லி வருகிற இந்தச் சுதந்திர கீதத்தைத் தொடர்ந்த நாட்டுப் பாட்டு கள் நல்ல சீவ ஒளிகளையூட்டியுள்ளன. சில அயலே வருகின்றன.

வானம் பொழியுது பூமி விளையுது
மன்னவ னுக்கேது தீர்வைப் பணம்?
தானம் தெரியாமல் வந்து தலையிட்டால்
மானம் அழிந்துமடிந் திடுவீர்! (1)

வங்காளம் டில்லி வடகாசி எங்குமே
மங்காம லேநிறை கொண்டாலும்
இங்காளும் சிங்கம்ஒன் றுண்டுஎன எண்ணுமல்
ஏறி வரினோ இடருறும். (2)

நாட்டில் சுதந்திரம் இல்லை என்றால்அது
கோட்டித் தனமான வாழ்க்கை அன்றோ?

பொருள் பொதிந்த பாடலைப் புலவர் கூறவே இரவு நடந்துள்ள களவு நிலையை இவர் அறிந்து கொண்டார். அவரை ஆதரித்து அங்கே இருக்கச்செய்து உடனே பொற்கொல்லரை அழைத்து ஆறு பவுணில் ஒரு தாலிச் சங்கிலியை விரைந்து செய்து வரும்படி பணித்தார்; அவ்வாறே அவர் கொண்டு வந்து தந்தார். அந்தத் தாலியைப் புலவர் கையில் கொடுத்து மனைவியின் கழுத்தில் கட்டும்படி செய்தார். நல்ல பட்டாடைகளும் பொருளும் கொடுத்து அவரை அனுப்பி வைத்தார். இவரது மன நிலையையும் கொடை முறையையும் நினைந்து புலவர் உள்ளம் உருகினர்.

தாலிக்கு வேலி தமிழுக் குதவிய தார்மன்னனே!

என்று ஆர்வம் மீதூர்ந்து அவர் வாழ்த்திப் போனர்.

இவ்வாறு கற்றவரை ஆதரித்துப் புலவர்களுக்கு உதவி வந்தமையால் கொடை வள்ளல் என இவருடைய புகழ் எங்கும் பரவி நின்றது. யாவரும் இவரை வியந்து போற்றி வந்தனர்.

## வள்ளல் மருது

புதுக்கோட்டை அரசரிடம் நவராத்திரி விழாவில் ஒருபுலவர் பரிசில் பெற்று வந்தார். திருமயத்தின் அருகே வரும் போது கள்வர் சிலர் இடை மறித்து அவரிடம் உள்ள பொருளைப் பறித்துப் போயினர். போகவே அவர் வெறுங் கையராய் வீட்டுக்கு வந்தார். வழியிடையேவந்து கள்வர் கொள்ளை செய்துபோனதை மனைவியிடம் உரைத்தார். அவள் உள்ளம் வருந்தினள். புலவர் உடனே ஒரு பாட்டுப் பாடினர். தன் இல்லாள் உள்ளம் தெளிய அன்று அவர் பாடிய அந்தப் பாட்டு அயலே வருகின்றது.

"கள்ளன் கொடுத்ததைக் கள்ளன் எடுத்தகன்முன்
உள்ளம் கடுத்தால் உறலாமோ?---வள்ளல்
மருதரசன் உள்ளான் மடவாய்! வறுமை
ஒருவ அருள்வன உடன்."

என இங்ஙனம் ஒரு வெண்பாவால் இவருடைய பண்பாடு களை விளக்கினர். புதுக்கோட்டைத் தொண்டைமான் கள்ளர் மரபைச் சேர்ந்தவர் ஆதலால் அவர் உள்ளம் உவந்து கொடுத்ததைக் கள்ளர் பறித்துக் கொண்டு போனர் என்று குறித்தார். "வந்தவழியே பொருள்போயது; அதற்காக நாம் உள்ளம் வருந்

வீட்டில் சுதந்தரம் இல்லாமல் வந்தநீர்
வேறே சுதந்திரம் வேண்டுகிறீர்! (3)

கண்ணை இமைகாக்கும் காரியம் போலவே
மண்ணைநான் மன்னவன் காத்து வாரேன்
பெண்ணை இடைகேட்கும் பேயரைப் போலவே
பேராசை கொண்டு பிதற்றுகிறீர்! [4]

கும்பினியாருக்கு வரிதர மறுத்து இவர் வாதாடியுள்ள வீர வசனங்கள் தீரமான வழி மொழிகளாய் விழிதெரிய வந்துள்ளன. அடிமையாய்த் தலை வணங்குவது தம் குடிமைக்குக் குறை என்று கொதித்திருக்கிறார். மானமும் மரியாதையும் மாண்பும் மருவியுள்ளமையால் சுதந்தரத்தை யாவரும் ஆவலோடு விரும்புகின்றனர். எல்லா நாடுகளும் அதனை விழைந்து போற்றுகின்றன. அதற்காக எவ்வளவோ போராட்டங்களை நடத்தியிருக்கின்றன. மான வாழ்வு வான வாழ்வாகிறது.

சுதந்திரமான அத் தன்மை வாழ்வு தனி மகிமையுடையது.

A day, an hour, of virtuous liberty
Is worth a whole eternity in bondage. [Addison]

"அடிமையாய் ஊழிகாலம் வாழ்வதினும் புனிதமான சுதந்தரத்தில் ஒரு நாழிகை வாழ்வது பெருமகிமையாம்" என அடிசன் என்னும் ஆங்கில ஆசிரியர் இவ்வாறு கூறியுள்ளார்.

"The God who gave us life, gave us liberty at the same time." (Jefferson)

"நமக்கு உயிரைக் கொடுத்த கடவுள் சுதந்தரத்தையும் கூடவே கொடுத்திருக்கிறார்" என தாமஸ் ஜெவ்வர்சன் என்பவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். மானமான உயிர் வாழ்க்கைக்கும் சுதந்திரத்திற்கும் உள்ள உறவுரிமையை இவை உணர்த்தியுள்ளன.

"Better to reign in Hell, than serve in Heaven" [Paradise Lost]

"சுவர்க்கத்தில் அடிமையாய் இருப்பதினும் நரகத்தில் அரசனாய் இருப்பது நல்லது" என மில்ட்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாடியிருக்கிறார். அடிமை வாழ்வு பலவகையிலும் இழிவு தருதலால் அதனை எவரும் அருவருத்து வெறுக்கின்றனர்.

மனிதன் இன்பத்தையும் உயர்வையும் விரும்புகின்றான்; துன்பத்தையும் தாழ்வையும் வெறுக்கின்றான். இயற்கை நியம

மும் சீவசுபாவங்களும் இவ்வாறு இசைந்து இருத்தலால் இயல்பாகவே உயர்நிலையில் பழகிய அரசர்களுக்கு இழிந்த வாழ்வு ஈனமாய்த் தோன்றுகின்றது. தோன்றவே மானவீரங்கள் மண்டி எழுகின்றன. வீர மொழிகள் நேரே வெளி வருகின்றன.

## உறுதிமொழி.

இறை கேட்டு வந்த ஆலன்துரை அகன்றுபோகவே இவர் மந்திரி பிரதானிகளுடன் நிலைமைகளைக் கலந்து ஆலோசித்தார். கும்பினியார் இந்நாட்டில் புகுந்து கோமுறை புரிவதை மிகவும் வெறுத்துப் பேசினார். அந்த வார்த்தைகளால் இவருடைய உள்ளத்துணிவும் நாட்டுப்பற்றும் வீரத்திறல்களும் அக்கால நிலைகளும் நன்கு புலனாம் சிலநிலைகளை இங்கே காணவருகிறோம்.

இந்தி யாளனும் இந்தநன் னாட்டிடைப் பிறந்தார்
முந்தி யாவரும் வியந்திட முறைபுரிந் திருந்தார்;
சிந்தி யாமலே சிலர்நிலை திரிந்ததால் அயலோர்
வந்து யாவையும் வளைந்தனர் விழைந்தனர் வரவே. [1]

இந்த நாட்டுள அரசுகள் ஒன்றினோடு ஒன்று
முந்த நாட்டிய பகைமையும் பொறாமையும் மூண்டு
வெந்தகாட்டெரு வெனநிலை விளிந்துள அதனால்
எந்த நாட்டவரும் இதை எய்திட விரைந்தார். [2]

மேலை நாட்டவர் இழைநாட் டிடைவந்து தமது
கோலை நாட்டவும் கொடியினை நாட்டவும் குறித்தார்;
மாலை நாட்டிய மனத்தவர் மதியிடை எமது
வேலை நாட்டியே எந்நிலம் எமர்க்கென விதிப்பேன். [3]

வாணிகத்துறை வல்லராய் வஞ்சமும் சூதும்
பேணி எம்மவர் பெரும்பொருள் குறும்புடன் கவர்ந்தார்:
காணி யாகவும் இந்நிலம் கைக்கொள விழைந்தார்
ஆணி யாமனை எனநுழைந்து அவாவிமேல் நின்றார். [4]

ஊன் இருக்கவே உயிரினை வாங்குவார் போல
வான் இருக்கவும் வளம்நிறைந் திருக்கவும் வளைந்த
கோன் இருக்கவும் எங்கணும் வறுமையே குடியாய்த்
தான் இருக்கவே வந்தனர் நின்றனர் தழைத்தே. [5]

அட்டை மூட்டைகள் அப்பிநின்று உதிரத்தை உறிஞ்சி
எட்டி நீங்கல்போல் ஈங்குள மன்பதை தம்பால்

பட்டி யாய்ப்பல வரிகளை விதித்தெதிர் பறித்துக்
கட்டி வீங்குவர் இதனையார் கண்டு காப்பவரே? [6]

தங்க ஓரிடம் கேட்டனர் தங்கிய பின்னர்
வங்க மாதிவண் தேசங்கள் வளைந்தனர் விழைந்தே
எங்கு மேயதி காரங்கள் செய்திட எழுந்தார்
இங்கு வந்திவர் அடைந்தது போல்எவண் அடைந்தார்? [7]

எந்த வேளையும் வரவிலே கண்ணராய்த் தமது
சொந்த நன்மையே கனவிலும் சூழ்ந்திடும் துணிவோர்
இந்த நாட்டினுக் கினியராய் இதம்பல செய்ய
வந்த தாச்சொலும் வாய்ப்பசப்பு அறிபவர் யாரே? [8]

இந்நிலத்தினில் உள்ளவர் எவரையும் தாழ்த்தி
எந்நிலத்திலும் இலாதவெங் கொடுமையை இங்கே
மன்னிடச் செய மதித்தனர்; அம்மதி மறந்து
பின்னிடச் செய்வேன் பிழையிடச் செய்திடேன் பிறழ்ந்தும்.

(வீரபாண்டியம்)

இந்த மன்னனுடைய எண்ணங்களும் இயல்புகளும் இன்ன வண்ணம் யாண்டும் நாட்டு நலம் கருதி ஈட்டமுற்றிருந்தன. வரி செலுத்திக் கப்பம் கட்டி வணங்கி வாழ இணங்காமையால் கும்பினியார் இவரைக் கொடிய வம்பன் என வெறுத்து இகழ்ந்து முடிவு சூழ்ந்து நின்றார். வணங்கா முடியராய் இவர் வாழ்ந்து வந்தார். இவரது வாழ்வு வீரதேவதையின் சூழ்வாய் விரிந்து வந்தது.

## இறுதி நேர்ந்தது

மரியாதையும் மானமும் சுயவுரிமையும் வீரபராக்கிரமும் மேலோங்கி நின்றமையால் ஆங்கில ஆட்சியை இவர் எவ்வழியும் எதிர்த்து வந்தார். வெவ்விய பகை மூண்டது. விடிவு காணாமையால் முடிவுகாண நேர்ந்தது. கி. பி. ஆயிரத்து எழுநூற்றுத் தொண்ணூற்று ஒன்பதாம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஐந்தாந் தேதி பாஞ்சைப் பதிமேல் கும்பினியார் படை எடுத்து வந்தனர். (5-9-1799) காலையில் கோட்டையை வளைந்து கொடுஞ்சமர் புரிந்தனர். அந்தச் சேனைத் திரள்களை இவர் வென்று தொலைத்தார். பட்டாளங்கள் உடைந்து போயின. படைத்தலைவனாய் வந்த மேஜர் பானர் மேன் (Major Bannerman) என்னும் வெள்ளைக்காரத் துரை உள்ளம் கொதித்து ஒதுங்கி மறைந்து கள்ளம் குறித்துக் கடுத்து நின்றார். கடுமை கொடுமையாய் நின்றது.

வெற்றி பெற்றுக் கொற்றக் குரிசிலாய் விளங்கியிருந்த இவர் தானுதிபதியின் சொல்லைக் கேட்டுக் கோட்டையைவிட்டு வெளியேறித் திரிசிராபுரிக்குச் செல்ல நேர்ந்தார். இடையே பகைவர் கையில் அகப்பட்டார்; விதி செய்த சதியால் அநியாயமாய் மாண்டார். இவருடைய முடிவு மிகவும் பரிதாபமானது. அந்த வரலாறுகள் எல்லாம் முதல் பகுதியில் தெளிவாக வந்துள்ளன. இவ் வீரனுடைய தீர நிலைகளை * ஆண்டுக் கண்டு கொள்ளுக.

வீர மாநகரம் என எங்கும் இசை பரப்பிச் சிறந்த புகழோடு விளங்கியிருந்த பாஞ்சாலங்குறிச்சி அரசு இழந்தபின் பகைவர் கைவசமாய்ப் பழிபடிந்து அவலமடைந்து அழகழிந்து நின்றது.

அரசனுடைய குலமரபினர் பலவகைகளிலும் நிலைகுலைந்து பரிதாபமாய் மறுகியிருந்தனர் உரிய தலைவன் இல்லாமையால் பெரிய துயர்கள் பெருகி நின்றன. அந் நிலைகள் கவலைகளாயின.

இறந்துபோன பின்னரும் இம்மன்னனுடைய ஆட்சிமுறையையும் வீரப்பிரதாபங்களையும் உலகம் வியந்து புகழ்ந்து வந்தது. குடிசனங்கள் பாடிவந்த நாட்டுப் பாடல்கள் இக் கோமகனுடைய கீர்த்தி நிலைகளைக் காட்டிப் பாஞ்சை மேலுள்ள வாஞ்சைகளை நீட்டி நிற்கின்றன. சில அயலே வருகின்றன.

வானம் மும்மாரி பொழிந்துவர இந்த
வையகம் எங்கும் வளம் பெருக
மான பரன்கட்ட பொம்மு மனுநீதி
மாண்புற ஆண்டு மகிழ்ந் திருந்தான். (1)

வீராதி வீரன் ஜெகவீர பாண்டியன்
வெய்யரை எங்கணும் வீட்டி நின்று
சீராக நாட்டினை ஆண்டுவந்தான் இந்தச்
சிங்கேறு சீர்த்தி சிறந்ததுவே. (2)

கட்ட பொம்மன் என்று பேரைச்சொன்னால் இந்தக்
காசினி எங்கும் கெடுக்கலங்கும்;
அட்ட திசையும் நடுங்கி ஒடுங்கும்
அடங்கி மடங்குவர் யாவருமே. (3)

சிட்டுப் பறக்காத பாஞ்சால நாட்டிலே
சீமை வெள்ளைக்காரர் சேர்ந்துவந்து

---

*பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம் முதல்பாகம் வேண்டியவர்கள் "திரு வள்ளுவர் நிலையம், மதுரை" என்ற விலாசத்திற்கு எழுதவும்.

மட்டுப் படாதகம் கட்டபொம்மு வாளால்
மாண்டு மண்ணுகி மடிந்தொழிந்தார். (4)

வெள்ளைத் துரைகள் விதவித மாகவே
வேண்டிய பீரங்கி மூண்டு சுட்டார்
எள்ளத்தனை மண்ணும் பாஞ்சையின் கோட்டையில்
ஏதும் உதிர்ந்தில தேங்கி நின்ருர். [5]

தென்னுட்டுச் சிங்கமென்று எந்நாட்டும் பேர்கொண்டு
கன்னுட்டி நின்று கடுஞ்சமர்தான்
முன்னுட்டி மூண்டு பொருது விருதுடன்
முன்னிய கீர்த்தியை மன்னி நின்ருன். (6)

இவருடைய அடலாண்மைகளையும் போர்நிலைகளையும் அரண் வலிகளையும் இந்த நாட்டுப் பாட்டுகள் நன்கு காட்டியுள்ளன. புலவர் பாடும் புகழுடையராய் இவர் நிலவி நின்றனர். கொடைக் குரிசிலாயிருந்தாலும் படைக்கலப் பயிற்சியிலும் பொருதொழி லுமே அரிய நிலையில் பெருகி நின்ருர் ஆதலால் இவரது வீர பராக்கிரமங்களையே பாவலர்களும் நாவலர்களும் வியந்து பாராட்டி எவ்வழியும் உவந்து புகழ்ந்து பாடியுள்ளனர். அந்த வீரப்பாடல்கள் மிகவும் வியப்பை யூட்டி வருகின்றன.

எட்டுத் திசையும் பதிறைறு கோணமும் ஏழ்கடலும்
கட்டிச் சயங்கொண்ட கட்டபொம் மேந்திரன் காவல்என்ருல்
பட்டிக் கடாமிசை மேல்வரு வீரப் படைஎமனும்
ஒட்டிப் பதுங்கி உருதொழிந்தோடும் உளமுடைந்தே. [1]

வில்ஏந்தி நின்ற விசயனும் ராமனும் வீரர்எனச்
சொல்லேந்தி நிற்குமித் தொல்லுல கந்தனில் தோன்றலென
மல்லேந்தியபுகழ்க் கட்டபொம் மேந்திரன் வாள்எடுத்தால்
அல்லேந் தியதிரள் ஆதவன் நேரென ஆம்படையே. [2]

இவருடைய காப்புத்திறனும், வாள் வலியும் இவ்வாறு போற்றப்பட்டுள்ளன. வில்வலியில் இராமனும் விசயனும்போல் வாள்வலியில் இவர் மேல் ஓங்கி நின்ருர் என்றதனுல் இவரது வீர வென்றிகளை ஓரளவு ஓர்ந்து நன்கு உணர்ந்து கொள்ளலாம்

இவ்வாறு எவ்வழியும் தெவ்வரை அடக்கிச் சிறந்திருந்த இவர் வெவ்வினை விளைவால் விளிந்து போனது மிகுந்த துயா மாய்க் கழிந்து நின்றது. இந்நம்பி மாண்டபின் தம்பி முதலாயி னோர் தவித்திருந்தனர். அவருடைய சரித்திரங்கள் அடுத்து வரு கின்றன. கடுத்த சோதனைகள் உறுதியாக் கருதி யுணர வுரியன.

# மூன்றாவது அதிகாரம்.

## ஊமைத்துரை

உறுதியும் ஊக்கமும் பொருமுறை நோக்கமும்
வீர நீர்மையும் வியனுற நின்ற
தீர ஊமையன் திறலுறு சரிதம்
பாருல கறிந்து பண்புடன் உயர
ஏர்மிகு தமிழில் இன்புற மொழிவன்
போர்திகழ் வேலன் பொன்னடி தொழுதே

ஊமைத்துரை என்னும் இவர் வீரபாண்டியக் கட்ட பொம்முடைய தம்பி. தந்தை பெயர் திக்குவிசயத்துரை. தாய் ஆறுமுகத்தம்மாள். வாய் சிறிது கொன்னல் ஆதலால் யாரோடும் இவர் அதிகமாய்ப் பேசமாட்டார். பெரும்பாலும் மவுனமாகவே இருப்பர். அதனுல் ஊமைத்துரை என்று எல்லோரும் இவரை அழைத்துவரலாயினர். பெற்ருேர் இவருக்கு இட்ட பெயர் தளவாய்க்குமாரசாமி என்பதே. இவருடைய குணம் செயல் நடை உடை பாவனை பழக்கம் வழக்கம் முதலிய யாவும் அதிசய நிலையின. அச்சம் என்பதை யாதும் அறியாதவர். இவரது உருவநிலைக்கும் உள்ளத் திண்மைக்கும் பெரிய மாறுபாடுகள் மருவி நின்றன. அரிய சீர்மைகள் தெரிய நேர்ந்தன.

## தேக அமைப்பு

நல்ல உயரம்; சிவந்த நிறம்; மெலிந்த தேகம்; உடல் ஒல்லியாயிருத்தலால் தோற்றத்தில் ஏற்றமான கம்பீரம் தோன்றவில்லை. தமையனர் சிங்கஏறு போன்று வீறுகொண்ட பெருமித நிலையினர். அங்கம் மெலிந்திருந்தமையால் இவர் அங்ஙனம் இன்றி அமைதியாயிருந்தார். ஆயினும் முகத்தில் தெளிவும் பொலிவும் எப்பொழுதும் ஒளிவீசி நின்றன. இளமையிலேயே தமிழும் தெலுங்கும் பயின்று வந்தார்; வரினும் கல்வியில் உயர்ந்த தேர்ச்சியை அடைந்து கொள்ளவில்லை. வாள் ஆடலிலும், வில் எய்தலிலும், வேல் வீசலிலும், கல் எறிதலிலும் மிகவும் வல்லவர். ஓட்டம் முதலிய கதிவேகங்களில் அதிவேகமுடையவர். ஓடும் குதிரையில் தாவி ஏறி நேரே வாவிவருபவர்.

“கம்பு கைக்கொண்டால் பம்பரம் எனச் சுழன்று ஏறி
அம்பு கைக்கொண்ட பேரையும் அடர்த்து வென்று எழுவார்?”

என இவரது சிலம்பப்போர் முறை வியந்து விளம்பப்பட்டுள்ளது. சிறந்த போர்வீரர். இவருடைய வீரபராக்கிரமங்கள் உரைகளால் அளவிடலரியன. எதையும் அதிமதியூகமாய்க் கவனித்துக் காரியங்களை நடத்துவார். குதிரை ஏற்றத்தில் அதிகமான பிரியமுடையவர். இவர் ஊர்ந்துவரும் பரிக்குப் பாலராமு என்று பெயர். இவரைத் தவிர யாரும் அதில் ஏறமாட்டார். அந்த அழகிய குதிரை இவரைக் காணுந்தோறும் களிபேருவகையாய்க் கண்ணோக்கிக் காது நெறித்து நிற்கும். குதிரைகளின் தகுதிகளை அறிவதிலும் சுழிசுத்தங்கள் தெரிவதிலும் இவர் பெரிதும் தெளிவடைந்திருந்தார். சிவபெருமானுக்குப் பரிமேலழகன் என ஒரு பெயர் உண்டு என்று ஆதீனப்புலவர் ஒருமுறை அவையில் சொன்னபோது இவர் உவகை மீக் கொண்டார். உயர்ந்த வீரத்திறல்களோடு ஈகை இரக்கம் நேர்மை பெருந்தன்மை முதலிய நல்ல நீர்மைகளும் நிறைந்திருந்தமையால் இவரை யாரும் உவந்து போற்றி வந்தார். சாமி என்றே எல்லாரும் உரிமையோடு சொல்லி வருவது வழக்கம். இவரைக் கண்டால் படைவீரர்கள் அனைவரும் சந்திரனைக்கண்ட கடல்போல் அடல் மீறி நிற்பர். தானைத் தலைமைக்குஉரிய நிலைமை இவரிடம் இயல்பாகவே இனிதமைந்து தனியே உயர்வெய்தி யிருந்தது.

## தீர நிலை.

யாண்டும் அஞ்சாமை, எதையும் நுணுகி நோக்கும் திறம், எவ்வழியும் தளராத ஊக்கம் இவர்க்கு இயற்கை உரிமைகளாய் இசைந்திருந்தன. தேசமக்கள் யாவரும் இவரிடம் ஒரு தனியான பிரியமும் மதிப்பும் காட்டி வந்தனர். இந் நாட்டை ஊமையன் சீமை என்று பிறநாட்டவரும் பேசி வந்துள்ளமையால் இவரது திறலும் தேசும் ஆட்சியும் மாட்சியும் அறியலாகும். மாற்றாரும் மனம் உவந்து போற்றும் மகிமை மிக வாய்ந்தவர்.

"One of the most extraordinary mortrls I ever knew."
[General Welsh.]

"நான் அறிந்த எவரினும் இவர் மிகவும் அதிசயமான ஒரு அற்புத மனிதர்" என உயர்ந்த சேனைத்தலைவராயிருந்த வெல்ஷ் துரை இந்த ஊமைத்துரையைக் குறித்து இவ்வாறு கூறியிருக்கிறார். இது எவ்வளவு குறிப்பான சிறப்பு மொழி! கூர்ந்து அறிக.

இந்த நாட்டில் வெள்ளையர்களுக்கு எள்ளளவும் இடங்கொடேன் என்று தள்ளருந்திறலோடு எதிர்த்து நின்ற ஒரு பகையாளியை அந்த இனத்தைச் சேர்ந்த படைத்தலைவர் இப்படி வியந்து குறித்திருத்தலால் இவருடைய உயர்ந்த சீர்மையையும் சிறந்த நீர்மையையும் யாவரும் கூர்மையாய் ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம். அதிசய நிலைமையைக் கண்டுள்ளமையால் எதிரிகளும் துதிசெய்ய நேர்ந்துள்ளனர். கற்றாரைக் கற்றார் காமுறுதல் போல் வீரரை வீரர் வியந்து கொள்ளுகின்றனர். இவருடைய அருந்திறலையும் பொருந்திறனையும் உக்கிர வீரபராக்கிரமங்களையும் நேரே அறிந்தவர் இவரிடம் ஏதோ ஒரு தெய்வீகமான வீரசக்தி குடிகொண்டுள்ளது எனப் புகழ்ந்து பேசி வியந்து வந்துள்ளனர். அரிய நிலைகளைக் காணவே பிரியங்கள் பெருகிவரலாயின.

கொன்னிப் பேசும்இக் கோமகன் வீரத்தைக் குறித்துப்
பன்னிப் பேசினால் அஃதொரு பாரதம் ஆகும்;
முன்னிப் பாரினில் வந்தவா ளபிமனே முடிந்து
பின்னிப் பேரோடு வந்தனன் என்னவே பிறந்தோன். (1)

வீரம் என்பதுஓர் வடிவுகொண்டு இவன்பெய ரோடு
சார வந்ததென் றுரைத்துரை அமைவதே சால்பாம்;
போரில் நின்றுமுன் பொருதுள திறத்தினால் அன்றோ
பாரில் இன்னமும் இவன்பெயர் பரவியுள் ளதுவே. (2)

ஊமை யன்என இப்பொழுது அப்பெயர் சொலினும்
சீமை யும்திகில் கொண்டுதென் திசையினை நோக்கி
நாமம் கொள்ளுமால்: இத்திசை ஊமையன் நாமச்
சீமை என்றொரு பெயரையும் சேர்ந்துள தன்றே. (3)

அரியின் ஏறென ஆண்மையில் சிறந்தஇவ் வீரன்
பரியின் ஏற்றத்தில் நகுலனை வென்றனன; படையில்
வரிவில் ஆண்மையில் விசயனை அடுத்தனன; வாளில்
அரிய திண்டிறல் அபிமனை ஒத்திருந் தனனே. (4)

(வீரபாண்டியம்)

இந்தப் பாசுரங்கள் இங்கே கூர்ந்து நன்கு அறிய உரியன.

ஊமைத்துரைக்கு அபிமனை உவமை கூறியது பலவகையிலும் பொருந்தியுள்ளது. அந்தக் குல வீரன் அதிபாலியம்; வில்விசயன் மகன்; அருந்திறலாளன்; வாள் ஆடலில் அதிசய நிலையினன். இவரும் வயதில் வாலிபர்; திக்குவிசயன் புதல்வர்; பொருந்

திறலினர்; வாள்வலியில் சிறந்தவர். இறந்துபோனபின் எவரையும் உயர்ந்தவராகப் புகழ்ந்து கூறுவது உலக வழக்கம் ஆயினும் அது இவர் அளவில் விலக்காயுள்ளது. உயிர்வாழ்ந்திருந்தபோது உயர்வீரத்தில் புகழ்கூர்ந்து நின்றதுபோல் உருவம் மறைந்தபின்பும் இவர் ஒளி மிகுந்துள்ளார். அம்மானை கும்மி முதலிய நாட்டுப் பாட்டுகளிலும் தெருக்கூத்துகளிலும் இவர் சரிதம் சேர்ந்து நிற்றலால் சிறந்த நிலையில் உயர்ந்து தோன்றவில்லை. ஆயினும் பொதுமக்கள் அதிசய ஆர்வத்தோடு யாண்டும் இந்த ஆண்டகையை உவந்து போற்றிப் புகழ்ந்து வியந்து வருகின்றனர்.

ஊமைத் துரைஎன்னும் பேரைச் சொன்னால் அங்கே
சீமைத் துரைகள் எல்லாம் நடுங்கிச்
சேமத்தை நாடியே தென்திசை நோக்காமல்
சித்தம் கலங்குவர் மெத்தவுமே. (1)

செந்தமிழ் நாட்டில் பிறந்தாலும் இவன்
சீர்த்தி உலகம எல்லாம் பரந்து
அந்தரம் எங்கும் முழங்கி வருதலால்
யாரிவன் ஆண்மை அளவிடுவார்? (2)

மோழை எருதுகள் போல இந்நாட்டுள்ள
பாளைய காரர்எல் லாம்பணிந்தே
ஏழைகள் ஆக இழிந்துநின்றார் இவன்
ஏறுபோல் சீறி எதிர்எழுந்தான். (3)

நூறுக்கிருந்தாலும் ஆறுக்குள் மாய்ந்தாலும்
போருக்குள் மாய்வதை யேவிழைந்து
பாருக்குள் பாஞ்சையில் வாஞ்சையாய் வந்தவன்
பேருக்கொருவனாய்ப் பேச நின்றான். (4)

தென்னாட்டுச் சிங்கம்என்று எந்நாட்டும் பேர்நாட்டித்
திக்கு விசயங்கள் செய்துவந்தான்
இந்நாட்டுள் வெள்ளையர் ஏறி வராமலே
ஏறுபோல் சீறி எதிர்த்து நின்றான். (5)

தேச சுதந்திரம் இல்லைஎன்றால் அது
நீசநிலை என நெஞ்சில்எண்ணி
வாசம் பெறவந்த வஞ்சரை அஞ்சாமல்
வாட்டி எதிர்மாட்டி ஓட்டநேர்ந்தான். (6)

இன்னவாறு நேர்ந்துள்ள நாட்டுப் பாட்டுகளால் இவரது உள்ளக் கிடக்கையும் உறுதிநிலையும் உணர்ச்சிவேகமும் ஓரளவு உணரலாகும். பேரளவில் இவரை அறிந்து வந்தாலும் எவரும் பெருமிதம் அடைந்து உரிமை மீதூர்ந்து உவந்து புகழ்ந்து நிற்கின்றார். புகழ்ச்சி மொழிகள் மகிழ்ச்சி ஒளிகளாய் வந்துள்ளன.

## மனை வாழ்க்கை.

இவருடைய மனைவி பெயர் சவுந்தரவடிவு. பெயரியல்புக்குத் தக்கபடியே அழகும் குணங்களும் அவளிடம் உயர்வாக நிறைந்திருந்தன. அந்தக் குலமகளோடு அமர்ந்து இக்கோமகன் மகிழ்ந்திருந்தார். பலவகை நிலைகளிலும் தலைமை எய்தி எவ்வழியும் செவ்வையாய் இனிது வாழ்ந்து வந்தார். இவரது வாழ்வுமுழுவதும் வீர மணம் கமழ்ந்து வியனிலையில் விளைந்து உயர்புகழ் ஓங்கியுள்ளது.

## தம்பி நிலை.

இவருக்குப் பின் பிறந்த தம்பிக்குத் துரைச்சிங்கம் என்று பெயர். அங்க அமைதிகள் நன்கு வாய்ந்தவர். நல்ல அழகர். முன்னவர் இருவர்போலவே வீர பராக்கிரமங்களில் இவரும் சீர் பெற்று நின்றார். பருவம் எய்தியபின் ஞானமுத்தம்மாள் என்னும் மங்கையை மணந்து அரிய இன்ப நலங்கள் நுகர்ந்து இனிது வாழ்ந்து வந்தார். வீர வாழ்வுகள் நேரே விரிந்து வந்தன.

தம்பி யாகிய துரைச்சிங்கம் தமையன்மார் என்னும்
வெம்பு வெந்திறல் ஆளிகள் விழைந்திட விளைந்து
தும்பி வாம்பரி துணிவுடன் ஏறியும் சுடர்வேல்
அம்பு வாள்முதல் அடுபடை பயின்றுமாங் கிருந்தான்.

இவருடைய வாழ்வும் சூழ்வும் இவ்வழிகளில் வளமுற்று வந்தன. பொரும்படைகள் பயின்று பெருந்திறலமைதிகளோடு இங்ஙனம் வாழ்ந்திருந்தனர். உறுதியும் ஊக்கமும் பொறுதியும் வாழ்வில் மருவி நின்றன. அரிய பண்புகள் பெருகி விளங்கின.

வீரபாண்டியன், ஊமைத்துரை, துரைச்சிங்கம் என்னும் இம்மூவரும் யாவரும் வியந்து புகழ்ந்து அன்புரிமைகளில் உயர்ந்து பண்புநலங்கள் சுரந்து ஒருவரோடு ஒருவர் இனிது அளவளாவிச் சகோதர வாஞ்சையுடன் தழைந்து வந்தனர். சிறிய பாளையகாரராயினும் பெரிய சீர்மைகளும் அரிய நீர்மைகளும்

இவரிடம் பெருகி யிருந்தன. அரிய வீரத்திறல்களோடு இனிய குண நலங்களும் மருவி யிருந்தமையால் எவரும் இவரை உவந்து புகழ்ந்து உரிமையோடு யாண்டும் பெருமையாகப் பேணிவந்தனர்.

## கேடு நேர்ந்தது.

சிறந்த பாக்கியசாலிகளாய் விளங்கியிருந்த இந்த அரசகுமாரர்கள் உயர்ந்த புகழோடு உவந்து வாழ்ந்து வருங்கால் இடையே கொடிய துயரங்கள் நேர்ந்தன. கும்பினியாரோடு எதிர்த்துக் கொடும்பகை மூண்டமையால் நெடும்போர் நீண்டது. பாஞ்சாலங் குறிச்சி மீது படை எடுத்துவந்த பட்டாளங்கள் பல பட்டு மாண்டன. வெற்றிபெற்றிருந்தும் அண்ணன் அநியாயமாய் எதிரிகள் கையில் சிக்கி அழிந்து போனான். போகவே தம்பியாகிய ஊமைத்துரை வெம்பிக்கொதித்து வெந்துயரோடு நொந்திருந்தார். உள்ளக் கொதிப்புகளும் அல்லல்களும் எல்லைமீறி நின்றன.

யாண்டும் அஞ்சாத போர்வீரர் தமையனார் மாண்டு போனதை நினைந்து மறுகி நின்றார். இவருடைய உள்ளத் துயரம் உரையிடலரியதாய்க் கொடிய அல்லலுடன் ஓங்கி நின்றது.

வெள்ளமெனப் பகைதிரண்டு வேல்வெடிகள்
உடனடர்ந்து வெகுண்ட போதும்
எள்ளளவும் அஞ்சாமல் எதிரேறிப்
பொருதழிக்கும் ஏந்தல் அந்தோ!
உள்ளம்அழல் உறுமெழுகாய் உருகியழுது
அண்ணனையே எண்ணிச் சோர்ந்தான்
விள்ளரிய பிறவியுறு வெம்பாசம்
வென்றவுயர் வீரர் யாரே?

உடன் பிறந்தவரது பிரிவுத் துயரம் உயிரை வாட்டியுள்ளமை இதனால் உணரலாகும். அன்புப்பாசம் துன்பத்தொடர்பாய்நின்றது.

முடிந்துபோன முன்னவனை நினைந்து உள்ளம் உடைந்து உறுதி குன்றி ஊமைத்துரை மறுகி யிருந்தார். அதனோடு பகைவர் புரிந்த கொடுமைகள் மிகவும் கடுமைகளாக் கதித்து நின்றன.

முதலில் இவர் அடைந்திருந்த பரிதாப நிலைகளையும், இடையே மிடைந்த இடர்களையும், அடலாண்மைகளையும், முடிவில் முடிந்த முடிவுகளையும் அயலே தொடர்ந்து நிலை காண வருகின்றோம்.

# நான்காவது அதிகாரம்.

## சிறை இருந்தது.



சீரும் சிறப்பும் நிறைந்து பேரும் பெருமையும் பெற்று வீரப்புகழோடு விளங்கி யிருந்த வீரபாண்டியக் கட்டபொம்மு இறந்து போனபின் பாஞ்சாலங்குறிச்சியை ஆங்கிலேயர் கவர்ந்து கொண்டனர். ஆறு மண்டலங்களாய் மருவி யிருந்த அரசு முழுவதும் அவர் கைவசம் ஆயது. அதனை மில்லர் என்னும் துரை மேல்பார்த்து ஆட்சி புரிந்து வந்தார். அரசைக் கவர்ந்து கொண்டதோடு அமையாமல் ஊமைத்துரை முதலானவர்களை ஒருங்கு சேர்த்துப் பாளையங் கோட்டையில் சிறை வைத்திருந்தனர் அந்த வைப்பு முறை மிகவும் வெப்பமாயது. நாள் ஒன்றுக்கு ஒரு கலிப் பணம் வீதம் ஆள் எண்ணிப் படி நியமிக்கப் பட்டுப் பரிபவ நிலையில் சிறைவாசம் நெடிது நீண்டு நின்றது. "இன்று வெளிவிடுவர்; நாளை வெளி விடுவர்;" என நாளும் நாளும் வேளையை நினைந்து உள்ளிருந்தவர் அனைவரும் உள்ளம் நொந்து அல்லல் அடைந்து உளைந்திருந்தனர். அங்ஙனம் இருந்தவருள் தலைமை யானவர்களுடைய பெயர்கள் அடியில் வருகின்றன.

| | |
|---|---|
| ஊமைத் துரை | 1 |
| துரைச் சிங்கம் | 2 |
| குமாரசாமி | 3 |
| முத்தையா | 4 |
| துரைராஜு | 5 |
| இராஜ பொம்முலு | 6 |
| முத்துக்குமாரசாமி | 7 |
| வீரசின்னு | 8 |
| வீரராமுலு | 9 |
| விசயராகவன் | 10 |
| கெடி வெட்டூர் | 11 |
| சின்னமல்லு | 12 |
| ரணசிங்கு | 13 |
| வீரபொம்மு | 14 |

ஜெயராமு 15
இராமதளவாய் 16

இந்தப் பதினறு பேரும் ஜமீன்தாருக்கு நெருங்கிய உறவினர். இவரைத் தவிர வேறு சில பந்துக்களும் சேர்ந்திருந்தனர்.

தம்முடைய தம்பி, மைத்துனமார், மாமன்மார் முதலான சுற்றத்தார் அனைவரையும் குற்றவாளிகளைப் போல் தம்மோடு சிறைப்படுத்தி வைத்திருத்தலை எண்ணி எண்ணி ஊமைத்துரை உள்ளம் கொதித்து உருத்திருந்தார். அல்லலும் அவமானமும் அவரைக் கொல்லாமல் கொன்றன. குலை துடித்து நின்றார்.

இறைவழி வந்தவர் சிறை வழி வந்து ஒரு வழியும் தோன்றாமல் உளம் மிக உடைந்து நிலை குலைந்திருக்கக் கும்பினி அதிகாரம் எங்கும் நிலையாய் எவ்வழியும் தலை நிமிர்ந்து நின்றது.

பாளைய காரர் நிலை

முன்பு தம்மூப்பாகத் தருக்கிநின்ற பாளையகாரர் எல்லாரும் பின்பு கும்பினியாருக்குப் பணிந்துவணங்கிப் பதுங்கியிருந்தனர். அவர் இட்ட கட்டளை எதுவாயினும் அதனை உடனே செய்து குடியடிமைகள் போல் படிபதிந்து நின்றார். அதிசய வீரனை கட்ட பொம்மைக் கட்டழித்த வெற்றியாளர் என ஆங்கிலேயரைக் கருதிக் கொண்டமையால் எங்கிருந்த ஜமீன்தார்கள் யாவரும் இவ்வண்ணம் அவர்க்கு அஞ்சநேர்ந்தார். அச்சம் கொச்சை நிலையில் குலாவி நின்றது. அவர் உச்ச நிலையில் உலாவி நின்றனர்.

பாளையங்கள் பணிந்து வழிபடுகின்ற கோழை நிலைகளைக் கண்டு குடிசனங்கள் யாண்டும் கும்பினியை வியந்து கொண்டாடிப் பயந்து வந்தனர். தேச மக்களுடைய நிலைமையை நன்கு தெரிந்ததும் அதிகார வர்க்கங்கள் எங்கும் பொங்கி விளங்கின.

யாவரும் அஞ்சி வணங்கி அடங்கி ஒழுகி வருகிற அமைதியை நோக்கி கலெக்டர் லஷிங்டன் (S. Lushington) உள்ளம் உவந்து நின்றார். நாட்டு நிலைமையை மேலுள்ள தலைமை அதிபதிகளுக்கு நலமாக எழுதித் தனி ஆட்சி செய்து வந்தார்.

கட்டபொம்மனை அடக்கி ஒடுக்கியதனலேதான் இந் நாடு இங்ஙனம் நடுங்கி ஒடுங்கி அடங்கியுள்ளது என அவர் நினைந்து நினைந்து நெடிது மகிழ்ந்தார். அவர் மிகவும் நல்லவராயினும்

தமது ஆளுகைக்குத் தடை நீங்கியதை நினைந்து உவகை மீக் கொண்டார். உரிய மேலதிகாரிகளுக்குப் பிரியமாய் நடந்து அரிய காரியங்களை யாண்டும் அவர் நன்கு ஆற்றி வந்தார்.

கும்பினி ஆட்சிக்குக் கொடுங் கேடாய் எதிர்த்து நெடும் போர் புரிந்து கடுங்கேடு செய்து வந்தமையால் பாஞ்சாலங் குறிச்சி மரபினரைக் கொடிய சன்ம விரோதிகள் என்று எண்ணிக் கும்பினியார் வன்மம் மீதூர்ந்து வயிரம் கொண்டு நின்றார். அதனால் கொஞ்சமும் நீதி யின்றி நெஞ்சம் கொடிதாய் நெடுந் துயர்கள் செய்யநேர்ந்தார். வஞ்சங்கள் கூடி வளைந்து நின்றன.

## கும்பினி செய்த கொடுமை.

அரசுக்கு உரிய தலைவனை அநியாயமாய்க் கொன்று ஒழித்துப் பாளையத்தைப் பறிமுதல் செய்து கொண்டபின் உறவினர் எல்லாரையும் சிறையிடை வைத்துச் சித்திரவதை செய்வது எத்துணை அநீதி! எவ்வளவு கொடுமை! உய்த்துணர வேண்டும்.

நெஞ்சில் பகைமை மூண்டபோது நீதி மாண்டு போகின்றது. குரோதமும் வருமமும் கொடுமைகளை விளைத்து வருகின்றன. விரோதம் பெருக வெய்ய துயரங்களே விரிந்து பெருகுகின்றன. சிறை வாசம் நீண்டு நின்றது நெடிய தொல்லையாய் மூண்டு வந்தது. கொடிய கோபங்கள் கொதித்து வளர்ந்தன.

## காப்பு நீண்ட காரணம்

ஊமைத் துரையைச் சிறையிலிருந்து விரைவில் வெளிவிடாமைக்குத் தெளிவான காரணங்கள் இரண்டு கும்பினியாரிடம் ஒளியாமல் உறைந்திருந்தன. தம்பி ஊமையை வெளியே விடின் வெம்பகை மூண்டு வன்படை திரட்டிப் பழிக்குப் பழி நேரே வாங்கி விடுவான் என்ற பயம் ஒன்று; கும்பினியாரோடு எதிர்த்தவர் குடி நிலை குலைந்து அடியோடு சிதைந்து படு துயர் அடைவர் என நாடெல்லாம் அறிந்து நடுங்கி ஒடுங்க வேண்டும் என்ற நயம் இரண்டு. இந்த நய பயங்களால் நியாய உணர்ச்சிகள் குன்றி நின்றன. எவ்வகையிலும் இந் நாட்டில் இனிமேல் எதிரிகள் யாதும் யாண்டும் தோன்றாமல் இருக்க வேண்டும் என்னும் சூழ்ச்சியால் இவரை இவ்வாறு தாழ்ச்சியாத் தடைப்படுத்தி வீழ்ச்சியை விளக்கி அவர் ஆட்சியை வளர்த்து வந்தனர்.

இந் நாட்டுக்குப் புதியராய் வந்து தேச வுரிமையை அதி சயமாக் கைக் கொண்டுள்ளமையால் பழைய உரிமையாளரது கிழமையில் கொடிய விரோதமும் நெடிய வெறுப்பும் அவரிடம் நீண்டு வளர்ந்தன. தமக்கு எதிர் பணியாதவர்பால் முதிர் கோபங்கள் மூண்டன. அதிகாரங்கள் கதிவேகமா நீண்டன.

சுய மரியாதையும் சுயாதீனமும் உயர் மானமும் யாண் டும் தமது பிறப்புரிமையாகப் பேணி வருகின்ற இந்த ஆண்ட கையாளரை வெளியே விடின் மீண்டும் தமது ஆட்சிக்குக் கேடு விளையும் என்னும் காட்சியால் கடுங்காவலை நெடுங்காலமாக அவர் நீட்டித்து வந்தார். தம் கையில் சிக்கியவரை நையச் சிதைத்து நாசமாக்குவதில் தாம் கைதேர்ந்த வகையினர் என்னும் நிலைமையை வையம் எங்கும் காண அவர் நன்கு காட்டி நின்றார்.

இந்த நிலையில் பதினறு மாதங்கள் பரிந்து கழிந்தன.

## மரபினர் மறுகியது.

சிறையில் இருந்தவர்களைத் தவிர வெளியில் இருந்த மரபி னர்களும் வெந்துயர் உழந்தனர். அரசு இழந்தபின் நாதியற்ற சனங்களாய் நைந்து வருந்தினர். ஜமீன் இருந்த பொழுது எவ் வழியும் சிறந்த செல்வாக்குகளுடன் செழித்து வாழ்ந்து வந்த வர் ஆதலால் அது அழியவும் வேறு தொழில் முறை தெரியாமல் ஒருவழியும் காணமல் இழிவடைந்து இன்னல் மீக்கூர்ந்தனர். உரிய தலைமை குலையவே எல்லா நிலைமைகளும் குலைந்தன. தானம் குலைந்தால் மானம் குலையும் என்னும் முதுமொழி இவர் பால் புது மொழியாய்ப் பொலிந்து நின்றது. நாட்டில் உள்ளவர் களும் நாளடைவில் இவர்களை இகழ நேர்ந்தனர். இகழ்ச்சிகள் கொடிய மன வேதனைகளை விளைத்து நெடிது கிளைத்து வந்தன.

பாஞ்சையின் வீழ்வு எட்டையாபுரம் ஜமீனுக்கு ஓர் வாழ்வு ஆகி நின்றது ஆதலால் அதன் ஏற்றமும் செல்வாக்கும் இம் மர பினரைத் தூற்றவும் தாழ்த்தவும் எவ்வழியும் ஆற்றலும் ஆவ லும் அடைந்து வந்தன. எதிரியின் இனம் என ஏசல்கள் எழுந்தன. உள்ளக் கடுப்புகள் எள்ளல்களை எங்கும் விளைத்தன.

"துள்ளித் திரிந்தார்; இப்போழுது துடுக்கு ஒடுங்கினர்" என எள்ளி நகையாடி எட்டப்ப நாயக்கர் யாண்டும் இவர்க்கு இடர்

மிகச் செய்தார். ஒரு குலத்தவராயிருந்தும் மறுபுலத்தவரோடு உறவு கொண்டு ஊதியம் கண்டுள்ளமையால் இனவுரிமையும் நாட்டு அபிமானமும் அவரிடம் நாடி நில்லாமல் ஓடிப் போயின. தலைமையாயுள்ளவர் பகைமையும் பொறுமையும் பாராட்டிப் பழிமொழிகள் கூறவே குடி சனங்களும் இழிவுரைகளாட நேர்ந்தனர். நிலைமை குலையவே நெடுந் துயர்கள் தொடர்ந்து அடர்ந்தன. யாண்டும் கொடுமைகள் நீண்டு நெடிது படர்ந்தன.

கும்பினி அதிகாரங்களை வகித்து வந்த சில சில்லறை அதிகாரிகளும் இவர் மெலிந்து போனார் என்று துணிந்து வலிந்து வம்புகளை விளைத்து வசைகள் மிகச் செய்தார் மேலதிகாரிகளும் யாதொன்றையும் கவனியாமல் தீதொன்றியே நின்றார். பொல்லாத அல்லல்களே எங்கும் பொங்கி வந்தன. அருளும் நீதியும் ஆதரவும் மறைந்தன அவல இளிவுகள் கவலைகளாய்க் கலித்தன.

அருந்திறல் நிலையில் உயர்ந்திருந்த சிறந்த பாளையகாரர் சுதந்திர உரிமைக்காகப் போராடி நிலைகுலைந்து போனார் எனத் தேச மக்கள் பலரும் இவர்பால் அன்பு மீதூர்ந்து நெஞ்சிரங்கி நின்றார். நிற்பினும் கும்பினி ஆட்சியின் அதிகார ஆற்றல்களை நோக்கி அஞ்சி ஒடுங்கி யாதும் வெளியே கூறாமல் வாயடங்கி யிருந்தார் பழம் பகையாளிகளும் சில அதிகாரிகளும் எவ்வழியும் இழிவாய் இடர் இழைத்து இகல் விளைத்து வந்தனர்.

இன்னலும் இகழ்ச்சிகளும் நாளும் நாளும் பெருகி நீளலாயின. கேளும் கிளையும் கெட்டோர்க்கு இல்லை என்பது இந்த மரபினரிடம் உலக அனுபவமாய் அன்று ஒளிபெற்று நின்றது.

நோய்ந்த மாட்டை ஈ அப்பும் என்னும் பழமொழி தேய்ந்த மக்களை இளிவும் இடரும் எவ்வழியும் அடரும் என்பதைத் தெளிவாக வெளி செய்து இவரிடம் ஒளியாமல் ஓங்கி வந்தது.

பல வழிகளிலும் இகழ்ச்சிகள் நேரவே தளர்ச்சியுற்றிருந்த இவர் கிளர்ச்சி செய்ய நேர்ந்தார். உள்ளம் துணிந்து ஊக்கி மூண்டார். யாண்டும் உருத்து நீண்டு கடுத்து விரைந்தார்.

பகை வகையினர் என்று எங்கும் நகை புரிந்து மிகை மிகச் செய்யவும் இம் மரபினர் உள்ளம் கனன்று ஒரு முறை தொகையாய்த் திரண்டனர். கும்பினி ஆட்சியும் அதிகாரக் கும்பலும்

தமக்குத் துன்பமும் இளிவும் தொடர்ந்து செய்து வருதலை இவர் அடர்ந்து வெறுத்தார். மேலும் பொறுத்திருப்பது மிகவும் கேவலமாம் எனக் கிளர்ந்து நினைந்தார்; துணிந்து முனைந்தார்; சூழ்ச்சிகள் செய்தார். துறைகள் தோறும் சூழ்வுகள் வளர்ந்தன.

## உறவினர் சூழ்ந்தது.

இவருடைய சூழ்ச்சியும் கிளர்ச்சியும் மிகுந்த துணிச்சல்களாய் உணர்ச்சிகள் தோய்ந்து எழுந்தன. மறை முகமாகவே தமது ஆலோசனைகளை ஒரு முகமாய் ஓர்ந்து புரிந்தனர். "சிறையில் இருக்கின்ற ஊமைத்துரை முதலானவர்களை வெளி ஏற்றி மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியை அடைந்து கோட்டை வளைத்துக் கொத்தளங்கள் எழுப்பி வலிய அரண் அமைத்துப் பழையபடி விழுமிய நிலையில் அரசினை ஆளவேண்டும்; பகைவர் மூண்டு வரின் நேரே நெடும் போர் ஆற்றி அவரை அடியோடு வென்று முடிசூடி வாழுதல்; அல்லது நாம் குடியோடு பொன்றி முடிவாகி வீழுதல்; இந்த இரண்டினுள் ஒன்றே இனி அடைய உரியது" என உறுதியுடன் அறுதியிட்டு ஊக்கி நின்றார். அந்த ஊக்கமான உணர்ச்சியால் மறுகி எழுந்து ஆகலால் அதில் சினமும் சீற்றமும் பெருகி மன வேகங்கள் செழித்துக் கன வேகங்கள் களித்து நின்றன. யூக விவேகங்களும் உள்ளே மேவி வந்தன.

## கொம்பாடியில் கூடியது

அயலே யாரும் அறியாவகை அதி இரகசியமாகவே இம் முடிவுகள் முடிவாயின. சோதனையும் வேதனையும் நிறைந்த இந்தக் கூட்டம் முதலில் கொம்பாடி என்னும் ஊரில் கூடியது. ஜமீன்தாருக்குச் சம்பந்தகாரர் அவ் வூரில் இருந்தனர். அவர் மாப்பிள்ளைச்சாமி என்று அழைக்கப் படுவர். அப்பொழுது அங்கே தலைவரா யிருந்த சுப்பிரமணிய நாயக்கர் என்பவர் அக் கூட்டத்திற்கு முதன்மையா யிருந்தார். கூடிச் செய்த முடிவுகள் அயலே யாரும் அறியாதபடி இயல்பாகவே கூடமாயிருந்தன.

## சில்லாங்குளத்தில் தேர்ந்தது

பின்பு ஒரு வாரம் கழித்து சில்லாங்குளம் என்னும் ஊரில் கூடினர். அங்கேதான் குறிகாரர் எல்லாரும் வந்திருந்தனர். ஆத்துக்குடிச் சிவத்தையா தலைமையில் அக் கூட்டம் நடை

பெற்றது. நிலைமைகளை நன்கு ஆலோசித்து நெடிது சூழ்ந்து யாவரும் ஒரு முடிவு கொண்டனர். எல்லா நிலைகளையும் ஓர்ந்து சேர்ந்து வல்லாண்மைகளை வரைந்து வெல்லாண்மைகளை விரைந்து நின்றனர். மூன்று வாரங்கள் கழித்து மீண்டும் ஆய்ந்தனர்.

## ஒட்டநத்தத்தில் ஓர்ந்தது

ரௌத்திரி வருடம் தை மாதம் மூன்றாந்தேதி (16–1–1801) பாஞ்சாலங் குறிச்சி மரபினருள் தலைமையாயுள்ளவர் அனைவரும் ஒட்டநத்தம் என்னும் ஊரில் வந்து கூடினர் நபாவு நாயக்கர் என்பவர் அந்தக் குழாத்தில் தலைவராயிருந்தார். கருதிய காரியத்தை உறுதியாய் முடித்தற்கு உரிய கருமச் சூழ்ச்சிகள் யாவும் மருமமாய் எண்ணி ஒரு முகமாய் முடிவு செய்தனர். இன்னார் முன்னார் இன்ன இன்னபடி செய்ய வேண்டும் என்று முன்னி முடித்துப் பருவம் பார்த்துக் கருமமே கண்ணாய் யாவரும் கருதி யிருந்தனர். காலம் நோக்கி இடம் தேர்ந்து வலிகளை ஓர்ந்து வினையாண்மையோடு அவர் வீறு கொண்டு நின்றனர்.

செல்வ வாழ்வில் சிறந்து வாழ்ந்தவர் அல்லல் வீழ்வில் அலமந்து நொந்தமையால் பின்பு நல்ல நிலைமையை அடைய விழைந்து பல்வகையிலும் வெல் வகையை நாடி வெளியறியாமல் ஒளி மறைவாய் உறைந்து வந்தார். சமையம் கருதி அமைதியாய் அடங்கியிருந்தது அதிசய சாதுரியமாய் மதிநலம் தோய்ந்து விதி முறை வாய்ந்து நின்றது. உள்ளத் துணிவுகள் ஊக்கி நின்றன.

மானமும் வீரமும் மருவிய மரபினர்
ஈன வழிகளில் இளிவுகள் விளைவதைக்
கண்டுளங் கறுத்துக் காரியம் சூழ்ந்து
மண்டமர் புரியும் மரபினை ஆய்ந்து
திறலுடை வீரர்கள் வீறுடன் விரைந்து
காலம் கருதி இருந்தனர்
மூலம் தெரிந்து முடிவுகள் ஓர்ந்தே

வெளியில் இருந்தவர் இங்ஙனம் வேலையை நோக்கி நின்றார். இனி உள்ளே சிறையிலிருந்தவர் நிலைகளைச் சிறிது பார்ப்போம்

---

# ஐந்தாம் அதிகாரம்

## சிந்தை நொந்தது.

தமக்கு நேர்ந்துள்ள ஈனமான தீன நிலைமையை எண்ணியெண்ணி மானமுடன் மனம் புழுங்கி ஊமைத்துரை மறுகி யுளைந்து பெரிதும் நொந்தார். தமது ஆதீனத்தின்மேல் மூண்டு நின்ற பகைமையால் கர்மைச் சிறையில் அடைத்து வைத்துள்ளனர்; ஆயினும் விரைவில் விடுதலை செய்து கும்பினியார் வெளி விடுவர் என முதலில் இவர் கருதியிருந்தார். கொடிய கடுங்காவல் நெடிது நீண்டு வரவே இவர் நெஞ்சம் கொதித்தார். எப்படியும் சிறையை உடைத்து மீண்டு போய்விட வேண்டும் என்று மூண்டு துணிந்தார். உள்ளத் துணிவு உறுதியாய் நின்றது.

ஒருநாள் உடன் இருந்தவர்களை ஒருங்கு சேர்த்து மருங்கு வைத்து மனம் துணிந்து மந்தணமாகச் சில வார்த்தைகள் கூறினார்.

நாம் இங்கே வந்து இந்த இழி சிறையில் அகப்பட்டு ஓர் ஆண்டுக்கு மேல் ஆகின்றது. பார் ஆண்டிருந்த நமது பெருமை முழுவதும் பாழாய்ப் போயது. இனி நாம் உயிரோடு உலாவி வாழ்வதினும் இறந்து போவது நல்லது. இந்தப் பழி நிலையிலிருந்து சாவதை விட வெளியேறி மாள்வது மேலானது; எவ்வளவு காலம் ஆனாலும் கும்பினியார் மனம் இரங்கி நம்மை வெளி விடுவார் என்று துளியும் நம்ப முடியாது. அடமும் ஆங்காரமும் குரோதமும் அவரிடம் மேல் ஓங்கி நிற்கின்றன. கொடிய விரோதியராய் முறுகி நிற்கின்ற அவர் இனியராய் நமக்கு இதம் புரிவார் என்று கருதுவது பெரிய மடமையாம். பலவகையிலும் அவருடைய நிலைமைகளையும் கொடுமைகளையும் நாம் உணர்ந்திருக்கிறோம். ஒரு வீர அரசன் என்று சிறிதும் எண்ணாமல் நமது அண்ணனை ஈனமாகத் தூக்கில் இட்டுத் துடிக்கக் கொன்றனர். நாட்டைக் கவர்ந்து கொண்டனர்; கோட்டையை அடியோடு தட்டி நொறுக்கித் தரைமட்டமாக்கிக் குடிகேடு செய்தனர்; அத்தோடு நில்லாமல் நம்மை இந்த ஈனமான இழி சிறையில் வைத்து அழிதுயர் புரிகின்றனர்; நாம் வழி ஒன்றும் காணாமல் விழிகள் குருடாய்ப் பழிகளைச் சுமந்து பரிந்து நிற்கின்றோம்.

பாலை யுண்டு பழங்களைத் தின்றுமன்
கோலங் கொண்டு குலாவி இருந்தனம்;
காலை யுண்டு கழிபகல் கண்டுபுன்
மாலை யுண்டு மறுகி யுழல்கின்றோம். (1)

ஆனை ஏறி அரும்பரி யூர்ந்து நன்
மான மோடுயர் மாண்புற் றிருந்த நாம்
பூனை போலப் புகுந்திச் சிறையினில்
ஈன மாக இருக்கவும் நேர்ந்ததே. (2)

கோல்கொ ளுங்கையில் கொல்செய் விலங்கினைத்
தோல் கொளும்படி தொட்டனர் இட்டனர்;
மால்கொள் நெஞ்சுடை மாற்றலர் மெய்யில் என்
வேல்கொள் வேலை விரைந்தினிக் கொள்வனே. (3)

மானம் கெட்டு மரபின் நிலைகெட்டுத்
தானம் கெட்டுத் தளர்ந்துயிர் வாழ்தலின்
ஊனம் கட்டும் உடலை ஒழித்திடல்
வானம் கட்டிய வன்புகழ் ஆகுமே. (4)

நாயும் வாழும்; நரிகளும் வாழும்;இம்
மாய வாழ்க்கை மதிப்பது மாட்சியோ?
நேய வீர நிலையில் நிலைத்தவர்
மாய நேரினும் மாண்டிலர் யாண்டுமே. (5)

என இன்னவாறு இன்னலுழந்து ஊமைத்துரை மூண்டு மொழிந்தார். உறுதியும் ஊக்கமும் பெருகி எழுந்தன. சீரழிந்து சிறுமைப்பட்டுச் சிறையிலிருப்பதைவிட மீறி வெளியேறி ஊரையடைந்து பகைவரை வேரறுத்துப் பாராளவேண்டும்; இன்றேல் நேரே போரில் மாளவேண்டும்; இனிமேல் இங்கே காலதாமதம் செய்வது சாலவும் பழியாம் என உள்ளம் கொதித்து ஊக்கி உரைத்தார். வார்த்தைகள் உள்ளத்தை வார்த்துக் காட்டின.

இவருடைய மனவேதனையும் மான உணர்ச்சியும் சினமும் சீற்றமும் உரைகள் தோறும் ஒளி விட்டு நின்றன. குப்பினியார் செய்து வருகிற அல்லல்கள் கும்பி கொதிக்கச் செய்தன. தமது பழைய நிலைமைகளையும் இப்பொழுது நேர்ந்துள்ள இழிவுகளையும் கருதி நினைந்து உருகி மறுகினார். ஆதலால் பொறுதியை இழந்து பொங்கி எழுந்தார். பேசியிருக்கும் பேச்சுகள் பகைவர் புரிந்

துள்ள கொடுமைகளையும் இவரது பெருமித நிலைமைகளையும் உலகம் அறிய ஒருங்கே வெளி செய்து தெளிவாக்கியுள்ளன.

பழியோடு வாழ்வது பிழை என்று இவர் வழியோடு சொல்லவே தம்பி துரைச்சிங்கமும், மைத்துனர் முத்தைய நாயக்கர் முதலானவர்களும் வெளியேறி விடுவது நலம் என இவரோடு ஒத்து இசைந்து உறுதி நிலைகளைக் கருதி ஊக்கித் துணிந்தார்.

## மாமன் தடுத்தது.

ஊமைத்துரை கூறிய அந்த யோசனையை மாமனார் மாத்திரம் மறுத்துத் தடுத்தார். அவர் வயது முதிர்ந்தவர்; உலக அனுபவங்களை ஓர்ந்தவர்; கலகநிலைகளின் கடுந்துயரங்களைக் கண்டவர். பகை வகைகளைத் தொகையாக அறிந்தவர். கும்பினியாருடைய அதிகார ஆற்றல்களையும் படை வலிகளையும் நன்கு தெரிந்தவர் ஆதலால் நிலை மீறி எழுவது தவறும் என இடையே தடுத்து உரைத்தார். அனுபவ அறிவு இனிய தெளிவாய் எதிர்த்தது.

அந்தப் பெரியவர் சொன்னதை இவர் மறுத்தார். அவர் மீண்டும் உரிமையோடு இவர்க்கு அறிவு நலங்களைக் கூறினர்.

மாமன்: கும்பினியார் ஆட்சி எங்கும் தலை எடுத்து நிற்கின்றது; பாளையகாரர் எல்லாரும் அவர்க்குப் பணிந்து நிற்கின்றனர்; இவ்வேளையில் மாறுபட்டு நாம் ஒன்றும் செய்யலாகாது; முன்னமே ஊறுபாடுகள் அடைந்து உளைந்திருக்கிறோம்; மேலும் துயரங்களை விளைக்கலாகாது. இன்னும் இரண்டொரு மாதங்களில் நம்மை வெளியே அனுப்பி விடுவர்; அதுவரையும் நாம் பொறுத்திருக்க வேண்டும். பொறுமைக்குள் என்றும் பெருமகிமை உண்டு.

ஊமை: போன ஆண்டுக்கு முந்திய புரட்டாசிமாதத்தில் நம்மை இங்கே கொண்டு வந்து சிறை வைத்தார். இந்த மார்கழியோடு பதினாறு மாதங்கள் ஆகின்றன. யாதொரு மரியாதையும் காட்டவில்லை; எத்தகைய இதமும் கண்டோம்; இரக்கம் என்பதை யாதும் அறிந்திலர்; இழிதுயரங்கள் எவ்வளவு செய்துள்ளனர்! காப்புள் வைத்துக் கைவிலங்குகள் பூட்டினர் களவுகளும் கொலைகளும் புரிந்த கொடிய குற்றவாளிகளைப்போல் நம்மை மிகவும்

கொடுமையாக நடத்தி வருகின்றனர். இதனைஒரு விசித்திரமான சித்திரவதை என்றே சொல்லவேண்டும். பால் அருந்திப் பழங்கள் தின்று பவிசுடன் இருந்த நாம் இங்கே கூழ் உண்டு கும்பி கொதித்துக் குலைந்து கிடக்கின்றோம். மானம் அழிந்து மரபுநிலை இழந்து வாழ்வதை விட ஊன உடலை உதிர்த்து உயிர் ஒழிவது நல்லது அல்லவா? இந்தப் பொல்லாத புலை நிலையை இனி நாம் ஒருகணமும் இங்கே பொறுத்திருக்கலாகாது.

மாமன்: கால நிலைமைகளை நீங்கள் சிறிது கவனிக்க வேண்டும். அரசை இழந்து படாதபாடுகள் பட்டு நாம் அவலம் அடைந்திருக்கின்றோம்; இந்த நிலையில் கவலைக்கு இடமான காரியம் ஒன்றையும் கருதலாகாது. வருவதை எதிர்நோக்கி அமைதியாய் இருப்பது நல்லது. பொறுத்தார் அரசாள்வார்; பொங்கினார் போய் மாள்வார் என்பது பழமொழி. இங்கு நாம் பொறுத்திருப்பதே எவ் வழியும் இதமாம். யாவும் கருத்தோடு கவனியுங்கள்.

ஊமை: பொறுமைக்கும் ஓர் அளவு உண்டு. எவ்வளவு காலம் இங்கே நாம் ஈனமாய் இழிந்து கிடப்பது! அரசையிழந்து தோல்வியடைந்து போனோம் என்று எதிரிகள் மிகவும் எள்ளலாய் நம்மை இகழ்ந்துநிற்கின்றார்; நாம் இங்கே அமைதியாய்ப் பொறுத்திருப்பதுஅவர்க்கு அங்கே அதிகமாய் அகங்காரத்தை விளைத்து வருகின்றது. பொறுமை ஆடவர்க்கு நல்ல அணியே; ஆயினும் அதன் அருமை உணராமல் எதிரி சிறுமை செய்ய நேர்ந்தால் அப்பொழுது அவன் தலையைத் தரையில் உருட்டி நிலையில் நிற்பதே சிறந்த வீரனுக்கு உயர்ந்த அணியாம். இந்த அரிய அணியைப் பூண நான் உரிய பணியைச் செய்யப் போகிறேன். எனது செயல் பழுதாகாது.

மாமன்: வலி அளவு தெரியாமல், காலநிலை கருதாமல், இடவகை உணராமல், காரியம் செய்யத் துணிவது பெரிய பிழையாம். இது பொழுது யாதும் செய்யலாகாது. இன்னும் சில நாள் அமைதியாய் இருந்து பார்ப்போம்.

ஊமை: எவ்வளவு காலம் இருந்தாலும் வெள்ளையர் உள்ளம் இரங்கி நமக்கு ஒரு நலமும் செய்ய மாட்டார். இந் நாட்டில் புகுந்து அவர் கொள்ளை அடிப்பதற்கு நாம் குறுக்கே தடையாயுள்ளோம் என்று கருதியுள்ளமை யால் நம்மை அடியோடு தொலைத்துவிடவே அவர் குறி செய்து நிற்கின்றனர். அக் குறியிலிருந்து விலகி அவர்க்கு நாம் சரியாய் நேரே குறிவைக்க வேண்டும்.

மாமன்: நிலைமையைச் சிறிதும் சீர்தூக்கி நோக்காமல் நீங்கள் மூண்டு நிற்பது என் நெஞ்சை வருத்துகின்றது; குழப் பம் செய்ய வேண்டாம். கொஞ்சம் பொறுத்தருளுங் கள்; ஒரு மாதம் வரையும் தாமதித்துப் பார்ப்போம்.

ஊமை: பதினறு மாதங்கள் வரை பார்த்தாயிற்று; படாத இழி வுகள் எல்லாம் பட்டாயிற்று; இனிப் பட வேண்டிய பழி யாதும் இல்லை. உருவில் சின்னவன்; ஊமையன் என என்னை உள்ளிகழ்ந்து வெள்ளையர் வெளியே எள்ளி நிற்கின்றார்; என் பருவ நிலை காட்டிப் பழிக்குப் பழி எதிரிகளைச் சருவகொள்ளை செய்தால் அன்றி நான் உருவெடுத்த பயனை உற்றவனுவேன்; என்னைப் பெற்ற வன் திக்குவிசயன்; அந்த விசய வீரனுடைய பிள்ளை செய்கின்ற வீரவெற்றிகளைத் திசைகள் எட்டும் கண்டு மகிழவேண்டும் நீங்கள் வேறு ஒன்றும் மாறு கூருமல் விலகி நில்லுங்கள். விளைவதைக் கவனித்து வாருங்கள்.

மாமன்: கும்பினியார் நம்மை விரைவில் விடுதலை செய்யப் போ வதாக வதந்திகள் வந்திருக்கின்றன. அதற்கு முன் நீங் கள் இவ்வாறு தவருய் அவசரப் படுவது அவகேடே யாம். அடங்கியிருப்பதே இதுபொழுது நமக்குநல்லது.

ஊமை: வெள்ளையர் நம்மை மரியாதையுடன் உள்ளம் இரங்கி வெளியே விடமாட்டார்; ஒரு வேளை விடுதலை செய்ய நேர்ந்தாலும் இழிவான பல உடன்படிக்கைகளுக்கு இசையும்படி கேட்பர்; அங்ஙனம் இசைந்து இழிந்து வாழ்வதினும் விரைந்து அழிந்து போவதே நலமாம்.

மாமன்: உங்கள் துணிவுகளைநினைந்து என்உள்ளம் வருந்துகிறது.

மாமனாருடைய மனநிலைகளை நுணுகி யுணர்ந்த ஊமையர் உரிமையோடு கூறிய உறுதி மொழிகள் எவரும் கருதி யுணர வுரியன. வாய் உரைகள் அந்த உள்ளத்தை உணர்த்தியுள்ளன.

அரிய திண்டிறல் அண்ணலை இழந்தபின் இந்தப்
பெரிய தண்கடல் உலகெலாம் பெறினும்என் பேறு?
உரிய நங்குல உரிமையும் முறைமையும இழந்து
பிரிய மாகநாம் எதையுமே பேணுதல் ஆகா. (1)

வழி வழிப்பெருந் திறலொடும் விறலொடும் வாழ்ந்தே
அழிவி லாப்புகழ் அகிலமும் நாட்டிய மரபில்
பழிவ ரும்படி பார்த்துநாம் இருப்பது பண்போ?
கழிவி ரக்கத்தைக் கற்றவர் கைக்கொண்டு காணார். (2)

புண்ணியம் புகழ் எனும்பொருள் இரண்டுமே புவிமேல்
நண்ணி வாழுநன மக்களுக் குரியன நலமாய்
எண்ணி நின்ற அவ் இரண்டனுள் ஏதும்எய் தாமல்
மண்ணில் வாழ்தலின மாண்டுடன் ஒழிவது மாண்பே. (3)

இன்னும் இங்குநாம் இருந்திடில் இழிவொடு பழியும்
துன்னு மேயன்றித் தொடர்வதொன் றில்லை ஆதலினால்
பன்னி எனபல படுசிறை பட்டிட நாறி
மன்னு பாஞ்சையம் பதியினை மருவுதல் வேண்டும். (4)

அமரில் வந்தடர் பகைவர்தம் ஆருயிர் வவ்வி
எமனு வந்திட ஈந்துடல் கழுகினுக் கிறைத்து
நமது தொல்குல வீரத்தை நாட்டிடை நாட்டி
அமைதி கொண்டர சாண்மையோ டாளுதல் அறிவே. (5)

சிறையில் மறுகியிருந்தவர் கருதியுள்ளன இங்ஙனம் அறிய வந்தன. மன நிலைகள் இனமாய் வெளியே தெரிய நின்றன.

இன்னவாறு ஊமைத்துரை உறுதி பூண்டுள்ளமையை உணர்ந்து கொள்ளவே மாமனார் மாறு வேறு பேசாமல் மறுகி ஒதுங்கி வினைவிளை நினைந்து உளம்மிக உளைந்து தனியே இருந்தார். மற்றவர் எல்லாரும் மன்னன் ஊமையோடு உன்னி உசாவி உரிய பருவத்தைக் கருதி ஓர்ந்து உறுதி கூர்ந்து ஊக்கி நின்றார்.

இவர் இவ்வாறு இருக்க முன்னம் வெளியேகூடி வழிநாடி நின்றவர் காலம் வரவே காரியம் புரிய வீரியமாய் விரைந்தனர்.

# ஆரூவது அதிகாரம்

## மறை புரிந்தது.



சிறையில் இருக்கின்ற தமது தலைவரை வெளியே மீட்டி வரவேண்டும் என்று மூன்று முறை கூட்டம் கூடி நாட்டமாய் ஆலோசித்து முடிவு செய்தவர் குறித்த நாள் வரவும் குறித்த படியே யாவரும் திரண்டு எழுந்தனர். அந்தப் படை எழுச்சி நாட்டில் யாருக்கும் தெரியாமல் அதி இரகசியமாய் நிகழ்ந்தது. பல ஊர்களிலிருந்து குறியான வீரர்கள் மறைமுகமாக எழுந்து துறைகள் தோறும் இரவுவழி நடந்து எல்லாரும் வல்லநாட்டுமலை க்கு ஒருங்கே வந்து சேர்ந்தார். அந்தப் படைக்குத் தளபதியா யிருந்த சிவத்தையா உளம் மிக உவந்தார். வந்தவர் அனைவரை யும் எண்ணிப்பார்த்தார்; முந்நூற்றுமுப்பத்தாறுபேர் இருந்தனர்.

| | |
|---|---|
| ஆதிராமு நாயக்கர் | 1 |
| வீரசிங்கு நாயக்கர் | 2 |
| நாகம நாயக்கர் | 3 |
| அன்னகாமு நாயக்கர் | 4 |
| சென்னவ நாயக்கர் | 5 |
| சின்னபாலு நாயக்கர் | 6 |
| வீரலக்கு நாயக்கர் | 7 |
| விசயதளவாய் நாயக்கர் | 8 |
| அரசமுத்து நாயக்கர் | 9 |
| பாயும்புலி நாயக்கர் | 10 |
| ரணவீர நாயக்கர் | 11 |
| ராஜபொம்மு நாயக்கர் | 12 |

இந்தப் பன்னிரண்டு பேர்களும் அதில் தலைமையான குறி காரர்களாய் நிலவி நின்றனர். அனைவரும் அங்கே உணவு அருந் தினர். பல வகையான போர்க் கருவிகளோடு நடுநிசியில் பிர யாணமாயினர். பொழுது விடியுமுன் பாளையங் கோட்டையை அடைந்தனர். முன்னதாக நியமனம் செய்திருந்தபடியே திரள் திரளாகப் பிரிந்து அயலிடம் எங்கணும் சதுராக மறைந்து இருந் தனர். கருதியபடியே காரியம் புரியக் கருத்து ஊன்றி நின்றார்.

## கருதிச் சூழ்ந்தது

பொழுது விடிந்தது. காலை உண்டி கொண்ட பின் பல பல பிரிவுகளாய்ப் பிரிந்து நகர்முழுவதும் தொகை வகையாய்ப் புகுந்தனர். சிலர் கரவான வேடங்கள் புனைந்து உறுதி சூழ்ந்து உசாவித் திரிந்தனர். தாதர்கள் போலவும், பண்டாரங்கள் போலவும், கூத்தாடிகளைப் போலவும் கோலம் கொண்டு சிலர் உல்லாசமாய்க் கடைவீதிகள் தோறும் உலாவி வந்தனர். சிலர் சடைமுடிகள் தரித்துப் பெரிய சாமியார்கள் போல் காயாசம் முதலியன போர்த்து விபூதியை உடம்பெல்லாம் பூசிக் கொண்டு சீட வர்க்கங்களுடன் திரண்டு மடங்களிலும் கோயில்களிலும் மரங்களின் அடிகளிலும் மருவி யிருந்தனர். யோகம் வைத்தியம் சோதிடங்களில் கைதேர்ந்தவர் போல் சிலர் ஆடம்பரமாய்ப் பேசி விளங்கினர். வேல் வாள் கம்பு கண்டகோடாலி முதலிய ஆயுதங்களை உள்ளே மறைத்து வைத்து வெளியே கொஞ்சம் விறகுகளைப் பொதிந்து கட்டுக் கட்டாக வரிந்து எடுத்து வீதிகள் தோறும் நிறுத்தி விறகு விற்பவர் போல் சிலர் விரகுடன் நின்றனர். சிலர் புல்லுக் கட்டுகளுள் பொதிந்து வைத்துப் புல்லு விற்பதாச் சொல்லி யுறைந்தனர். கல்லுகளையும், கவண்களையும், கைவெடிகளையும் கூடைகளில் நிரப்பி மேலே வாழை யிலைகளைப் போட்டு மூடிக் காய்கறிகள் விற்பவர் போல் சிலர் ஆய்வுடன் அமைந்தனர். சிலர் தப்புகளை அடித்துக் கொண்டு தாளமேளங்களோடு கடைகள் தோறும் போய்க் காசுபணங்கள் வாங்கினர்.

* "திருப்பதிக்குப் போகவே
திருமாலைக் காணவே
விருப்பமுடன் வந்துள்ளோம்
விரும்பியருள் செய்யுங்கள்."

என இங்ஙனம் குறும்புகளாகப் பாடி வரும்படிகள் வாங்கிப் பொருப்படிக்கான புலன்களை நோக்கி வலங் கொண்டு

---

* பதிக்குப் போக என்றது பாஞ்சாலங் குறிச்சியைச் சேர என்றபடி. மாலைக் காண என்றது ஊமைத்துரையைப் பார்க்க என்றவாறு. அவரை மீட்டிக் கொண்டு எங்கள் பாஞ்சைப் பதிக்குப் போக நாங்கள் பாஞ்சையோடு இங்கு வந்துள்ளோம்; நீங்களும் உடனிருந்து எங்களுக்கு உரிமையோடு உதவி செய்ய வேண்டும் என்பது கருத்து.

திரிந்தனர். இடங்கள் எங்கணும் மடங்கல்கள் போல் சிலர் மறைதிருந்தனர். பலர் கருவிகளோடு அயலே மருவி உலாவினர்.

## சிறை மீட்டியது.

பகல் முழுவதும் இவ்வாறு வகை வகையாய்ப் பிரிந்து நின்றவர் பொழுது அடையவும் ஒரு தொகையாகக் கோட்டைச் சிறை அருகே நோட்டமாய் அடைந்தனர். முதல் நாள் இரவு ஓட்டமும் நடையுமாய் வந்தவர் மறுநாள் மாலையில் வேலையில் இறங்கினர். உறுதி ஊக்கங்கள் பொருதிறலோடு ஓங்கி நின்றன.

பல்லும் நகமும் கரந்த வல்லியங்கள் போல் தங்கள் வல்லாயுதங்களைப் புல்லுக் கட்டுகளிலும், விறகுச் சுமைகளிலும், காய்கறிக் கூடைகளிலும் கரவுடன் வைத்திருந்தவர் இரவு நெருங்கவும் விரைவில் வெளியெடுத்துக் கழிபேருவகையுடன் களித்து வந்தனர். மாலை 6 மணிக்கு முன்னதாகவே சிறைச் சாலை எங்கும் சூழ்ந்து வளைந்தனர். அப்பொழுது கோட்டையின் வடக்கு வாசலில் பிடித்த வெடிகளோடு இரண்டு போர்ச் சேவகர் காவல் காத்து நிற்றனர். கிழக்கும் மேற்கும் வழக்கமாய் நின்று காத்துவருகிற அந்த இருவருள் கீழ் புறம் நின்றவனிடம் வீரபோம்மு என்பவன் நேரே போனான். "நீ யார்?" என்று அக் காவல் வீரன் அவனைக் கடுத்துக் கேட்டான். "உள்ளே ஒருவரைக் கண்டு பேச வேண்டும்; சிறிது போய்வர வருதி தாரும்" என்று மறுகி வேண்டுபவன்போல் அருகுநின்று வேண்டினன். "ஒருவரும் போகக் கூடாது" என அந்தக் காவலர் இருவரும் ஒரு முகமாய் உருத்து உரைத்தார். அவ் வார்த்தை சொல்லி வாய் மூடு முன்னர் அயலே ஒதுங்கி நின்ற வல்லய வீரர் சிலர் விரைந்து பாய்ந்து அவரிடம் இருந்த வெடிகள் இரண்டையும் வலிந்து பறிந்து அறைந்து வீழ்த்தினர். இரண்டு காவலரும் கீழே புரண்டு விழுந்தனர். பதினறு வீரர்கள் உள்ளே புகுந்தனர். சிவத்தையாவும் சில குறிகாரர்களும் வாசல் எதிரிலும் பக்கங்களிலும் நின்று மாற்றலர் படை இடையேவந்து தடைசெய்யாதபடி கடு வேகத்துடன் காத்து நின்றார். யாண்டும் அடலாண்மைகள் நீண்டு நின்றன. சிலம்பப் போரில் சிறந்த வீரர்கள் கம்புகளோடு கும்பலாய் உலாவினர். புறத்தே இவ்வாறு நிற்க அகத்தே புகுந்தவர் தலைவரை நாடி நேரே தாவி வந்தனர்.

தம்முடைய மரபினரைக் கண்டதும் ஊமைத்துரை முதலாகச் சிறையில் இருந்தவர் எல்லாரும் உள்ளம் களித்து விரைந்து எழுந்தார். விலங்குகளை எல்லாம் உடைத்து எறிந்தார். அங்கேயிருந்த ஆயுதங்கள் யாவும் கவர்ந்து கொண்டனர். எதிரே தடுக்க வல்லவர் எவரேனும் உளரா? என்று சிறிது எதிர்பார்த்து நின்றனர். அவ்வமையம் அங்கே சிறைச்சாலையை மேல்பார்த்து வந்த ஜெயிலின் தலைமை அதிபதி முதலாக நாற்பத்தெட்டு அதிகாரிகள் இருந்தனர். நிலைமையைக் கண்டதும் எல்லோரும் நெஞ்சம் கலங்கிக் கூக்குரலிட்டு ஆரவாரத்தோடு நேரேமூண்டு சீறித் தடுத்தார். அவரனைவரையும் படைவீரர்கள் அடித்து விரட்டினர். சிலர் படுகாயங்களுடன் கீழே விழுந்து கிடந்தனர். பலர் தலைவிரி கோலமாய் வெளியே ஓடிப் போயினர். இவர் எல்லோரும் ஒல்லையில் வெளியேறினர். கடுங்காவலில் நெடுங்காலம் நெஞ்சு நொந்து கிடந்தவர் இப்பொழுது அடுங்காலர் போல் சீறி ஆர்த்து நின்றனர். அமராடல்களை யாண்டும் அவாவி அடர்ந்தனர்.

சிறையிலிருந்து வெளி வந்த ஊமைத்துரையைக் கண்டதும் படை வீரர் எல்லோரும் அகம் மிக மகிழ்ந்து ஆரவாரத்துடன் வீர முழக்கம் செய்தனர். நடு வீதிகள் இடையே எல்லாரும் காணும்படி விடைகள்போல் நடைகளில்கூடி நண்ணி வந்தனர்.

ஊரின் அயலே வந்து நின்று கொண்டு யாரேனும் தடை செய்பவர் உண்டா? என்று வேல்களையும் வாள்களையும் வல்லயங்களையும் மேலே தூக்கிக் காட்டிப் போருக்கு அறை கூவியது போல் நேருக்கு நேரே வீர வாதம் கூறினர். பகையாளர் யாரையும் காணாமையால் இறுதியில்நகையாடி உவகையாய்மீண்டனர்

வேறு யாரும் அருகே அணுகாதபடி அச்சுறுத்தி விலக்கி நகரை வலமாகச் சுற்றிக் கொக்கரித்துக் குலவையிட்டு ஊமைத்துரையை நடுவே வரச் செய்து படைவீரர் யாவரும் புடைசூழ்ந்து வடதிசை வழியே பாஞ்சாலங்குறிச்சியை நோக்கி விரைந்து சென்றனர். வெற்றிக் களிப்புகள் வீறுகொண்டு நின்றன.

பாளையங்கோட்டையிலிருந்து வடகீழ்த் திசையில் பாஞ்சைப்பதி முப்பது மைல் தூரத்தில் உள்ளது. கருதியது கைகூடியது என உறுதி மிகவுடையராய் நேரே ஊக்கி மீண்டார்.

## தடை கடந்தது

சிறையை உடைத்து இவர் இவ்வாறு போகவே அவ்வமையம் அங்கே கும்பினிச் சேனையின் தளபதியாயிருந்த துரையிடம் போய் நிலையே முறையிட ஓடினர். நிகழ்ந்த நிலைகளைச் சிலர் விரைந்துபோய்ச் சொல்லினர். சேனாதிபதிக்கு அவமானமாயது.

அந்த வெள்ளைத்துரை உள்ளம் திகைத்தார். உருத்துக் கொதித்தார். அடுத்து நின்றவரைக் கடுத்து மூட்டி ஒரு குதிரைப் பட்டாளத்தையும் நூற்று ஐம்பது போர் வீரர்களையும் உடனே ஏவினர். கடு வேகத்துடன் அப்படை வீரர்கள் வாவி வந்தனர். இடைவழியே பன்னிரண்டாவது மைல் தூரத்தில் இவரை அவர் தொடர்ந்து அடர்ந்தனர். கும்பினியின் படை வருவதைக் கண்டதும் கும்பலாய் நடந்து கம்பீரமாய் வந்த இவர் விரைந்து பகுதி பகுதியாய்ப் பிரிந்து வழி முழுவதும் வளைந்து நேரே எதிர்த்து நின்றார். அந்த நிலை பல கொலைகளையும் தலைகளையும் விலை வாங்கும் விளைவாய் விரிந்து விளங்கியது வாள் வேல்களோடு ஆளரிகள் போல் அடர்ந்து படர்ந்து நேரே அமராட மூண்டனர்.

அதி வேகமாய்த் தொடர்ந்து வந்த அவர் இவர் ஏகமாய்த் திரண்டு எதிரே மூண்டு நிற்பதைக் கண்டதும் மேலே ஏறி வர அஞ்சி எல்லையோடு எட்டி நின்றார். அங்கு ஜமேதாராய் வந்த துரை சுட்டி மூட்டினர். மூட்டவே போர்க் குதிரைகளைத் தட்டி உள்ளே பாய்ந்தார். இவர் வெகுண்டு மூண்டு வெட்டி வீழ்த்தினர். ஒரு குதிரையும் ஏழு படை வீரர்களும் பட்டு மாண்டார். மீதமாய் நின்றவர்கள் எல்லாரும் மீண்டு ஓடிப் போயினர்.

## பதி அடைந்தது

இவர் யாதொரு சேதமும் இல்லாமல் பாஞ்சைப் பதியை அடைந்தார். அப்பொழுது விடிய இரண்டு நாழிகை இருந்தது. ஆதவன் உதயமாவதை ஆதரவோடு எதிர்பார்த்து இருந்தனர்.

கி. பி. ஆயிரத்து எண்ணூற்று ஓராம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் தேதி இரவு புறப்பட்டுப் போய்ப் பாளையங்கோட்டையை அடைந்தனர். மறுநாள் (2—2—1801) மாலையில் சிறைச்சாலைக்குள் புகுந்தனர்; ஊமைத்துரை முதலானவர்களை வெளி ஏற்றினர்; இரவே மீண்டனர்; வழியிடையே நேர்ந்த எதிர்ப்புகளையும் தடைகளையும் தகர்த்துக் கடந்து நகர் வந்து சேர்ந்தனர். அரிய மானவீரர்கள் உரிய தானத்தை அடைந்தனர்.

### அதிபதி நாணியது

சிறைக் காவலை மீறித் தாமாகவே வெளி ஏறி விடவேண்டும் என்று வேளையை நோக்கி மூண்டு நின்ற ஊமைத் துரை தம் மரபினர் வந்து உரிமையோடு மீட்டியருளியதை நினைந்து மகிழ்ந்தார் ஆயினும் தம்முடைய தனியான சொந்த முயற்சியால் இந்த மீட்சி எய்தாமல் போயதே என எண்ணி நாணினர். சுத்த வீரர்களுடைய சுபாவங்கள் எத்தகைய நிலைகளிலும் வித்தக விநோதங்களாய் விரிந்து சிறந்து உத்தம ஒளிகளை வீசி யுள்ளன.

### அங்கே எண்ணியது

பாளையங்கோட்டையில் சிறையை விட்டு இவர் வெளி வந்ததும் தமது இனத்தவர் திரளை நோக்கினர்; மனத்துள் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். அங்கே அப்பொழுது தங்கியுள்ள கும்பினி அதிகாரிகளையும், சேனைபதிகளையும், பட்டாளங்களையும் ஒருங்கே வேட்டையாடிக் கோட்டையைக் கைப்பிடித்து அதன்பின்புதான் தமது பாஞ்சைக் கோட்டைக்குப் போக வேண்டும் என்று இவர் துணிந்து மூண்டார். தமது ஞாதியாகிய சிவத்தையா அதனைத் தடுத்தார். “அந்த வேலையை இப்பொழுது தொடங்க வேண்டாம்; பின்பு பார்த்துக் கொள்வோம்” என்று அவர் தடை செய்யவே இவர் சரி என்று இசைந்து ஊருக்குத் திரும்பினர். அவ்வாறு மீளாமல் அங்கேயே போருக்கு மூண்டிருந்தால் அன்று இவருக்குப் பெரிய வெற்றி கிடைத்திருக்கும். அந்த அரிய வாய்ப்பை நழுவ விட்டு இவர் வழுவி வந்தது எதிரிகளுக்குப் பெரிய ஊதிய மாயது. உரிய போர் ஓங்கி நின்றது.

### கும்பினித் தளபதி

கும்பினியாருக்குப் பாளையங்கோட்டையில் ஒரு கோட்டையிருந்தது. ஊமைத்துரை சிறையிருந்த சிறைச் சாலைக்கும் அதற்கும் ஒரு மைல் தூரம் இருக்கும். அங்கே சில படைகளும் இருந்தன. அவற்றிற்கு வேண்டிய அதிகாரிகளும் இருந்தனர். எல்லாச் சேனைகளுக்கும் தலைமை அதிபதியாய் மேஜர்மெக்காலே (Major Macaulay) என்பவர் ஆண்டு அமர்ந்திருந்தார். அவர் ஈண்டு வந்து பதினொரு மாதங்கள் ஆகின்றன. 5–9–1799ல் பாஞ்சாலங்குறிச்சி மேல் படை எடுத்து வந்த ஜாண் பானர்மேன்

(John Bannerman) சீமைக்குப் போன பின்பு கும்பினிப் படைகளின் தளகர்த்தராய் ராபர்ட் டூரிங் (Rabert Turing) என்பவர் வந்திருந்தார். சிலமாதங்களுள் அவரும் போயினர். அவருக்குப் பின் மேஜர் மெக்காலே கி. பி. 1800. மார்ச்சு மாதம் இந் நாட்டின் சேனைத்தலைவராய்ப் பதவியேற்றார். தலைமைத் தளபதியானார்.

இவர்தான் அன்று கோட்டையில் இருந்தார். சீமையிலிருந்து ஒருதுரை புதிதாய் வந்திருந்தமையால் அவர்க்குச் சிறந்தவிருந்து புரிந்தார். ஆண்களும் பெண்களுமாய் வெள்ளைக்காரர் பலர் அந்த விருந்துக்கு வந்திருந்தனர். எல்லாரும் உண்டு களித்து உல்லாச விநோதமாய் இருக்கும்போதுதான் சிறை உடைபட்ட செய்தியைத் தளபதியிடம் வந்து சொன்னார். அவர் உடனே படைகளை ஏவினர். பாய்ந்துபோன அவை பாழ்பட்டு மீண்டன

## வெள்ளைத் தலைவன் உள்ளத் திகில்.

சிறையை விட்டு வெளி ஏறிய வுடனே ஊமைத்துரை நேரே கும்பினிக் கோட்டை மீதே பாய விரைந்தார். அங்கே இருந்த சேனைத்தலைவரையும் சேனைகளையும் ஒருங்கே அழித்து ஒழித்து விட்டே தன்பதிக்குப் போக வேண்டும் என்று இவர் கொதித்து மூண்டார். துணைவர் சிலரால் அது தடைபட்டது; அதனால் ஊருக்கே நேரே மீள நேர்ந்தார். அவ்வாறு போகாமல் அங்கே கும்பினிப்படைகளோடு போராட நேர்ந்திருந்தால் காரியம் வேறாய் முடிந்திருக்கும். வீரிய விளைவுகளையும் வெற்றி நிலைகளையும் விழிஎதிரே கண்டிருப்பார். விதி வேறு கொண்டு சென்றது.

அந்தச் சமையத்தை இந்த ஊமைத்துரை இழந்து போனது சீமைத்துரைகளுக்குப் பெருமகிழ்ச்சியாயது. இவர்க்குப் பலமாய் வாய்ந்த காலம் அவர்க்கு நலமாய்த் தோய்ந்து நின்றது. அந்த நிலையைச் சேனைத் தலைவன் வியமாா எழுதிவைத்துள்ளான். குறிப்போடு அவன் குறித்திருப்பது கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கவுரியது. அயலே வருவதைநயமா ஆய்ந்து காணுக.

"They however, let slip the fairest opportunity they ever could have enjoyed of crippling our force.

"There we must all have perished, unprepared and unresisting, since they were several hundred strong, even before they left the place." (Records of Government)

"நமது கும்பினிப்படையைச் சிதைத்து ஒழித்து என்றும் வெற்றியின்பத்தை அடையவுரிய நல்ல சமையத்தை எப்படியோ அவர் இழந்து விட்டனர்.

"எதிரிகள் நூற்றுக்கணக்கான போர் வீரர்கள் திரண்டு நின்றனர்; யாதொரு ஆயத்தமும் எதிர்ப்பும் இல்லாமல் இருந்த எங்கள் மேல் அவர்கள் மூண்டு வந்திருந்தால் நாங்கள் எல்லா ரும் அடியோடு அழிந்துபோயிருப்போம்" என இவ்வாறு தள பதி தெளிவா எழுதியிருத்தலால் அன்று அங்கே நேர்ந்திருந்த நிலைமைகளை நாம் இங்கு ஓர்ந்து நன்குஉணர்ந்துகொள்ளுகிறோம்.

இந்த ஆங்கில வாசகங்களை மீண்டும் கூர்ந்து படியுங்கள்; வார்த்தைகள் வார்த்துக் காட்டியுள்ள காட்சிகளைக் கருதிக் காணுங்கள்! உறுதி நிலைகளை ஊன்றி ஓர்ந்து சிந்தியுங்கள்.

Perish என்ற ஆங்கிலச் சொல்லுக்கு அழிவு, நாசம் என் பது பொருள். பாஞ்சாலங் குறிச்சிப் படை அன்று கும்பினிக் கோட்டைக்குள் புகுந்திருந்தால் எல்லாரும் நாசமாய் அழிந்திருப் போம் என்று அந்த வெள்ளைத் தளபதி இந்தவாறு உள்ளத் திகி லோடு குறித்துள்ளமையால் உள்ளதை உள்ளபடி தெளிவாய்த் தெரிந்து கொள்ளுகிறோம். குறிப்புகள் வெளிப் பட்டுள்ளன.

"உன்னுடைய கும்பினிச் சேனைகளை எல்லாம் ஒருங்கே திரட் டிக் கொண்டு விரைந்து போராட என்கோட்டைக்கு வா! அங்கே உன்னை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று வீர வாதம் கூறி நேரே ஊமைத்துரை ஊருக்குப் போயிருக்கிறார். அந்தப் போக்கையும் நோக்கையும் உக்கிரவீரநிலைகளையும் உறுதி யூக்கங்களையும் இந்தஉரைக் குறிப்புகள் உணர்த்தி நிற்கின்றன.

இவருடைய செயல் இயல்களையும் உள்ளத் துணிவுகளையும் நாட்டுப் பாடல்கள் நன்கு காட்டியுள்ளன. பொது சனங்கள் பாடி வருவன மதிநலங்கள் கூடி வருகின்றன. அயலே காணுக.

ஊமைத்துரையின் உரை.

பாளையங் கோட்டையில் கும்பினிக் கோட்டையைப்
பாழாக்கி அன்றுநான் வந்திருந்தால்
வேளையறிந்து வினைபுரிந்தேன் என்ற
வெற்றி எனக்குக் கிடைத்திருக்கும். (1)

சூழும் பொழுது கழியவிடின் அது
பாழும் பொழுதாய்ப் பழுதுபடும்;
நாளும் பொழுதுமாப் பாஞ்சைக்கு வந்ததும்
ஆளும் படிக்கா அமைந்தது அன்றே. (2)

ஆண்டவன் ஆணையால் கோட்டையைக் கட்டிநான்
நீண்ட சமர்செய்ய நேர்ந்து நிற்பேன்;
மூண்டு வருகிற வெள்ளையர் எல்லாரும்
மாண்டு படவே முடிந்து நிற்பார். (3)

பாஞ்சையின் கோட்டையை மீண்டும் நான் கட்டுதல்
பாராள வேண்டும் என்று எண்ணியல்ல;
பாரத பூமியின் வீர நிலைகளைப்
பாருல கெங்கணும் காணவே தான். (4)

தென்பாண்டி நாட்டிலென் முன்பாண்ட மன்னவர்
திக்கு விசயங்கள் செய்து நின்றார்;
அன்பாண்ட ஆண்டவன் ஆணையால் யானுமே
ஆற்றல் அமர்களை ஆற்ற நேர்ந்தேன். (5)

பாளையங் கோட்டையை விட்டெழுந்தேன் என்றன்
பாஞ்சையின் கோட்டையை வந்தடைந்தேன்
நாளைவந் தாலும்எவ் வேளைவந் தாலுமே
நாசம் அடைகுவர் கும்பினியார். (6)

நாடெல்லாம் நம்மது காடெல்லாம் நம்மது
நாட்டவர் யாவரும் நம்குடிகள்;
பீடையாய் இங்கே பிழைத்திட வந்தவர்
பேரரசென்றே கொழுத் தெழுந்தார். (7)

கொண்ட கொழுப்பையும் கண்ட களிப்பையும்
கூளியும் பேய்களும் உண்டொழிய
மண்டமர் செய்து நான் பாஞ்சையின் வீரத்தை
மாநிலம் காணவே காட்டி நிற்பேன். (8)

வெள்ளைப் படைகள் விரைந்து வருமுன்னே
வீரப்படைகள் வருக வென்றே
உள்ளகம் எங்கணும் ஓலைகள் போக்கியே
ஊக்கமுடன் எதிர் நோக்கி நின்றார். (9)

இன்னவாறு வந்துள்ள நாட்டுப் பாட்டுகள் இவருடைய நாட்டங்களையும் ஈட்டங்களையும் தேட்டங்களையும் நன்கு காட்டி

நிற்கின்றன கொடிய சோதனைகளிலிருந்து நீங்கி நெடியசாதனைகளோடு நேரே வந்திருக்கின்றனர். வரவு நிலைகளும் உறவுமுறைகளும் உறுதி யூக்கங்களும் எவ்வழியும் பெருகி வரவே வெவ்வழிகள் யாவும் விரைவில் ஒழிந்து வேக விவேகங்கள் மேவிநின்றன.

## நேர்ந்து நின்ற நிலைகள்

அங்கே நேர்ந்து நின்ற நிலைமையும் இங்கே சார்ந்து வந்த நிலைமையும் ஆர்ந்த பல அதிசய அமைதிகளை ஓர்ந்து கொள்ளச் செய்கின்றன. விளைந்துள்ள விளைவுகளை விழைந்து சிந்திப்பவர் இவருடைய வீர தீரங்களை வியந்து மகிழ்ந்து புகழ்ந்து வருவர்.

சிறையை உடைத்து எழுந்து இடையே மூண்ட படைகளின் தடைகளைக் கடந்து விடைகள் போல் விரைந்து யாவரும் பாஞ்சைப் பதியை வாஞ்சையுடன் அடைந்தனர். ஊமைத்துரை வந்தது தெரிந்ததும், அங்கே கும்பினியாருடைய அதிகாரமாய்க் காரியங்களைக் கருதியிருந்தவர் எல்லாரும் ஒல்லையில் வெளியேறிப் போயினார். புலி புகுந்ததும் புல்வாய் இனங்கள் போல் கதி கலங்கிப்போன அவர் அதிபதிகளிடம் போய் விதி முறைகளைக் கூறி விலகி நின்றனர். பகை வகையினர் எவரும் மதி மருண்டு மயங்கி இருந்தார். இருண்ட சோதனைக் காலம் என்று ஏங்கி அவர் இடர் மிகுந்து நின்றார். இவர் வேதனை நீங்கிச் சாதனைகளை ஆராய்ந்தார். கருமக் காட்சிகள் கதிவேகங்களாய்நிலவின.

சூரியன் உதயமாகவும் காரிய வீரர்களோடு கலந்து ஊமைத்துரை ஊரைச் சுற்றிப் பார்த்தார். உயர்ந்த நிலையில் விளங்கி நின்ற நகரம் இழிந்து பொலிவிழந்திருந்தது. யானை குதிரை முதலிய அரச செல்வங்கள் எல்லாம் அயல் மறைந்து போயின. செயல்களெல்லாம் மயல்களை விளைத்து மனக்கடுப்பை விரித்தன.

கோட்டை மதில்கள் முழுவதும் தரையோடு தரையாய்த் தட்டப்பட்டுக் கிடந்தன. அந்த நிலைகளைக் கண்டு இந்த வீரர் நெஞ்சம் கொதித்தார். வஞ்சம் தீர்க்கத் துணிந்தார். நேர்ந்துள்ள இழிவுகளை நினைந்து நெடிது வருந்தினார் ஆயினும் அடலாண்மையுடன் யாவும் கடிது புரிய மூண்டு காரியங்களில் முனைந்தார். உற்ற கோபத்தை அடக்கி உரிய வேலைகளைக் கருதிச் செய்தார். உறுதி ஊக்கங்கள் எங்கும் பெருகி நின்றன.

---

# ஏழாவது அதிகாரம்

## அரண் ஆற்றியது.



அரிய பாதுகாவலாய் இருந்த பெரிய கோட்டை மதிலைக் கும்பினியார் அழித்துப் படுநாசம் செய்திருப்பது இவர்க்குக் கொடிய எரிச்சலை விளைத்தது. வெள்ளைத் துரைகள் புரிந்துள்ளதை நோக்கிப் பல்லைக் கடித்து உள்ளம் கொதித்து ஊமைத்துரை அன்று சொல்லிய உறுதிமொழிகள் அவருடைய குல மானத்தையும் நிலை வீரத்தையும் உலகம் அறியச் செய்தன. "எனது கோட்டை மதிலை நிலைகுலைத்துக் குட்டிச் சுவராக்கியுள்ள அந்தக் கொடிய பகைவரை இந்த மண்ணுக்கு இரையாக மடித்து அவர்களுடைய உடல்களை முன்னின்ற மதில்களின் அளவுஅடுக்கி வீர அரண் நிறுவி என் பேரையும் போரையும் பாரறியச் செய்வேன்" என்று வீர சபதம் கூறினர். இவ்வாறு தீர வுரைகள் ஆடினவர் உடனே தமது மரபினர் அனைவரும் விரைவில் வந்து சேரவேண்டும் என்று ஊர்கள் தோறும் ஓலைகள் போக்கினர். போன ஓலைகளைக் கண்டதும் வான மழையைக் கண்ட பயிர்கள் போல் யாவரும் மகிழ்ந்தனர். மானவீரர்கள் யாண்டும் மண்டி எழுந்தனர்.

### மரபினர் வந்தது.

தங்கள் தலைவர் சிறையிலிருந்து மீண்டு வந்துள்ளார் என்பதை அறிந்ததும் எல்லாரும் உள்ளம் களித்து ஒருங்கே திரண்டார். பல ஊர்களிலுமிருந்து உறவினர் யாவரும் ஆவலோடு வந்து ஊமைத்துரையைக் கண்டு உரிமை பாராட்டி உறுதியும் ஊக்கமும் பெருகி நின்றனர். அன்புரிமை யுடைய மரபினரைக் கண்டதும் இன்பமிக அடைந்து மேலே ஆக வேண்டிய காரியங்களை வேகமாய்ச் செய்ய விரைந்தார். உற்ற துணைவர்களுடன் உறுவதை ஊக்கி யுரைத்தார்: "நாம் சிறையை உடைத்து வந்திருக்கிறோம். எதிரி பட்டாளங்களுடன் விரைவில் வந்து விடுவர்; கொடிய கருமருந்துகளும், நெடிய பீரங்கிகளும், அரிய படைகளும் கடிது திரட்டி அவர் முடுகி வருவர். பகைவர் மூண்டு வருமுன் நாம் ஈண்டு வேண்டியதை விரைந்து செய்யவேண்டும். இடிந்து கிடக்கும் இக் கோட்டையை முதலில் விரைந்து கட்டி விட

வேண்டும்" என்று கட்டாண்மையுடன் இவர் கூறவே எல்லா ரும் நல்லது என உள்ளம் துணிந்தார். ஊக்கி முயன்றார். நாட்டில் உள்ள ஆண் பெண் அடங்கலும் கோட்டை கட்டுவதில் ஒரே நாட்டமாய் ஈட்டமுற்று நின்றனர். தேச பத்தியும் இராச விசுவாசமும் யாவரிடமும் மேவியிருந்தமையால் ஏவிய பணியை ஆவலுடன் புரிந்தனர். காவலன் காட்சி கருதரிய மாட்சியாய் உவகையை விளைத்து உறுதியை நாட்டி ஊக்கங்களை ஊட்டியது.

## கோட்டை கட்டியது

இடிந்து கிடந்த மதில்களை விரைந்து கட்ட முனைந்து மூண்டவர் பலவும் நினைந்து வினை விளைவுகளை எதிரறிந்து அதிமதியூகமாய் ஆய்ந்து புரிந்தார். "கும்பினியார் பெரிய பீரங்கிகளைக் கொண்டு வந்து அரிய குண்டுகள் பொழிவர்; அந்தக் கொடிய தாக்குதல்களை நெடிது தாங்கி நிலைத்து நிற்கவேண்டும்" என்னும் குறிக்கோளோடு கோட்டை மதிலை நாட்டமாய்க் கட்டினர். குழைத்த மண்ணில் கம்மஞ் சக்கையை இழைத்துச் சேர்த்துக் கருப்புக்கட்டியினீரையும் பதினியையும் இடை மடுத்துப் படை படையாக மதிலைத் தொடுத்துக் கட்டினர். தென் திசைகளிலிருந்து பனை நீர்கள் குடங்கள் குடங்களாய் வந்து கொண்டிருந்தன. நட்டாத்தி என்னும் ஊரிலிருந்து பாஞ்சாலங்குறிச்சி வரையும் தொடர்ந்து சனங்கள் கட்டாக நின்று கொண்டு காரியங்களைச் சீரிய முறையில் வீரியமாய் நன்கு விரைந்து செய்தனர்.

மண் கல்களையும் பதினிக் குடங்களையும் ஒருவரிடமிருந்து ஒருவர் கைமாற்றி வாங்கி நடைபெறுகிற வேலைக்கு யாதொரு தடையும் நேராமல் விரைந்து கொடுத்து வந்தார். வழி முழுவதும் நெட்டு நெட்டாகப் பிடியாள்களே நின்று யாவும் கைகள் மாற்றிக் கடுகி வந்தமையால் வேலைகள் விரைந்து முடிந்து வந்தன. காரிய முடிவுகள் வீரிய நிலைகளை வெளியே விளக்கி நின்றன.

மலைகளையும் மரங்களையும் வாரி நிறைத்துப் பண்டு சேது பந்தனம் செய்த வானரப் படைகள் போல் அன்று பாஞ்சைக் கோட்டையை மக்கள் பரிவுடன் கட்டினர். பட்டிக் காட்டுச் சனங்கள் எல்லாரும் கட்டாக வந்து உழைத்து நின்றார். உணவையும் உறக்கத்தையும் மறந்து பகல் இரவு என்று பாராமல் உள்ளுரிமையோடு எல்லாரும் ஊக்கி முயன்றார். ஏக காலத்தில்

ஏழாயிரம் பேர் திரண்டு நின்று அந்த அரிய அரணை உறுதியாக ஆற்றியுள்ளனர். இதனால் இந்த அரசனிடம் குடிசனங்கள் கொண்டுள்ள அன்புரிமையையும், மதிப்பையும் நன்கு தெரிந்து கொள்ளலாம். மன்னன் மாட்சிக்குக் கோட்டை ஒரு காட்சியா யெழுந்து அரிய பெரிய அதிசய சாட்சியாய் நின்றது.

## அரண் நிலை

ஒரு அரசனுடைய பாதுகாவலுக்குப் படை வலியினும் அரண்வலி மிகச் சிறந்தது. ஏறி வருகிற எதிரிகளுடைய முரண்களை அறுத்துத் தன்னைச் சார்ந்து நிற்பவர்க்கு ஆன்ற உறுதியும் ஊக்கமும் அருளிப் பெரிதும் உதவி புரிவது ஆகலால் புறமதில் அரண் என அமைந்தது. ஆற்றல்கள் எல்லாம் அதனால் ஏற்றமுற்றன. அரண் ஒன்று திறனுடைமையின் அதிசயங்களாகின்றன.

இந்தப் பாதுகாப்பு பாஞ்சைக்கு என்றும் வென்றி வீறோடு மேவியிருந்தது. சிறிய குறுநில மன்னர் ஆயினும் பெரிய போர் வீரர் ஆதலால் அரிய அரண் வலிகளை ஆராய்ந்து அமைத்து உரிய திறல்களைக் கருதி ஓர்ந்து உறுதியோடு வாழ்ந்து வந்துள்ளனர்.

வீர பரம்பரையினரது வாழ்வும் சூழ்வும் யாரும் வியந்து காண விரிந்து நிற்கின்றன. கொடிய பகைவரிடமிருந்து தப்பி வந்தவர் கடிது மறைந்து வாழாமல் அதிவிரைவில் நெடிய அரணை நிலைநிறுத்தி நேரே போருக்கு மூண்டு நிற்பது யாருக்கும் வியப்பாம். சிறந்த சுத்த வீரர்களுடைய நிலைகளை இந்நாடு எந்நாளும் எந்நாட்டுக்கும் நன்னயமா நன்கு அறிவுறுத்தி வந்துள்ளது.

இந்நாள் இதனை எண்ணியுணர்பவர் முன்னுளிருந்த முன்னோர் நீர்மைகளை உன்னி உணர்ந்து உள்ளம் உருகுவர்; கண்ணீர் சொரிந்து கருதி மறுகுவர். சுதந்திரத்தை இழந்து மானமழிந்து வாழ்வது ஈனம் என இகழ்ந்து எதிர்த்தமையால் அதிகாரமாய் ஆண்டு கொள்ள வந்த அந்நிய நாட்டார் இவர் மேல் மூண்ட பகையாய் நீண்டு நின்றார். அதனால் அல்லல்கள் பல நேர்ந்தன. எல்லையில்லாத இன்னலுழந்தும் உள்ளம் தளராமல் ஊக்கி நின்று ஊமைத்துரை இங்கே அரணை ஆக்கிவருவது அவரது முரணை விளக்கி வருகிறது. அதிசய ஆற்றல்கள் எவ்வழியும் அவரிடம் குதிகொண்டு நின்றன. அவருடைய வீரக்காட்சி

யாவருக்கும் திறங்களை விளைத்து வந்தமையால் காரியங்களை வீரியங்களாய் விரைந்து செய்து வியப்புகளை விளைத்து வந்தனர்.

ஆறு அடி அகலம், பதினெட்டு அடி உயரம், இரண்டாயிரத்து எழுநூறுமுளம் நீளம் ஆக நான்கு திசைகளிலும் மதில்கள் ஓங்கி எழுந்தன. இடங்கள்தோறும் ஒத்த தளங்களில் கொத்தளங்கள் அமைந்திருந்தன. எத்திசைகளிலுமிருந்தும் எதிரிகள் புகமுடியாதபடி உய்த்துணர்ந்து யாவும் உறுதியாகச் செய்யப்பட்டன. வெளியிலிருந்து விரைந்து திரண்டு வருகிற எதிரிகளை உள்ளே ஒதுங்கி நின்று எளிதாக வெல்லத் தக்க வழி வசதிகளை யெல்லாம் விரகுடன் வகுத்து நிரை நிரையாகப் போர்க் கருவிகளை நிறுவி உரமாக வைத்தனர். எத்தகைய பெரிய படைகளும் அருகில் அணுகாதபடி வித்தகமான பொறிவகைகளை அயல் எங்கணும் பரப்பி உயர்வான வலிகளை யாண்டும் நிரப்பி யிருந்தனர்.

"உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவுஅரண் என்றுரைக்கும் நூல்." (குறள், 743)

மேலான அரண்வலிக்கு வகுத்துள்ள இந்த விதிமுறைகளை இப்படியில் அமைத்த அரண் அன்று கருதியுணரச் செய்தது. மண், பாருமி, வைக்கோல் முதலிய எளிய பொருள்களால் நாட்டுப் போங்காகச் செய்யப் பட்டதாயினும் அரிய ஒரு பெரிய காட்டாளாக அது அமைந்து நெடிய திறலோடு நிலவி நின்றது.

"மட்டுண்டு கிடந்த அந்தத் தடமதில் தழைத்துள் ஓங்கி
எட்டுண்ட திசைகள் எல்லாம் எம்இறை வெல்வான் என்று
மொட்டுண்டு நிலைத்த தென்ன நிலைபெற நீண்டு தோன்றி
முட்டுண்டார் செல்வம் போல எழுந்துமேல் வளர்ந்த தன்றே"

என்றபடி கிளர்ந்து நின்றது. அந்தக் கோட்டை கட்டிய நிலை நாட்டில் ஒரு கிளர்ச்சியை நீட்டியது தலைவனுடைய புகழ்கள் பாட்டுகளிலும் பரவின. நாட்டுப் பாடல்கள் பல நகர்ப்புறங்களில் வழங்கி உயர் நலங்களை ஊட்டி வருகின்றன.

அலைகள்எறி கடலைமுனம் அயோத்தியர்கோன்
அரும்படைகள் அடர்ந்து நின்று
மலைகளைநேர் எதிரடுக்கி மகிமையுற
அரண்வகுத்த மாட்சி நாணத்

தலைகளுயர் கொத்தளங்கள் தாமமைந்த
கோட்டையினைத் தானே நின்று
நிலைகளுயர் பாஞ்சையர்கோன் நேர்செய்தான்
போர்செய்யும் நெறியின் ஆய்ந்தே."

என்று உலகம் புகழ்ந்துபோற்றும்படி பாஞ்சைக்கோட்டை உயர்ந்து விளங்கியது. யாரும் செய்ய முடியாத அதிசயமாய்ச் சிறந்து நின்றமையால் வையம் வியந்து காண நேர்ந்தது. அதிசயக் காட்சிகளை யாவரும் துதிசெய்து கண்டு விதிசெய்தவேலை என விழைந்து மகிழ்ந்து யாண்டும் புகழ்ந்து கொண்டாடினர்.

பல்லாயிரம் சனங்கள் ஒருங்கு கூடிப் பகலும் இரவுமாய் வேலை நடந்தமையால் ஐந்தே நாளையில் யாவும் முடிந்தன. தை மாதம் இருபத்து மூன்றாந் தேதி கோட்டை கட்டத் தொடங்கினார்; இருபத்தேழாந் தேதி எல்லாம் ஒருங்கே பூர்த்தி ஆயது.

## மன்னன் மகிழ்ந்தது.

நாட்டு மக்கள் எல்லாரும் திரண்டுவந்து கோட்டை கட்டி முடித்ததைக் கண்டதும் ஊமைத்துரை உள்ளம் களித்தார். கும்பினியார் புரிந்த பொல்லாத துயரங்களால் நெஞ்சம் அயர்ந்திருந்தாலும் குடிசனங்களுடைய அன்புரிமைகளை நோக்கி ஆறுதலடைந்து தேறுதல் மிகுந்து எதிரிகளை அடியோடு வென்று விடலாம் என்று உறுதிபூண்டு ஊக்கி நின்றார். சனங்களுடைய உரிமையும் உழைப்பும் உள்ளத்தை உருக்கி நின்றன. அன்புக் கூட்டம் இன்ப நாட்டமாய் இசைபுரிந்து இனிமைசுரந்திருந்தது.

## விருந்து புரிந்தது.

வந்திருந்தவர் அனைவரையும் உபசரித்து வைத்து முடிவில் உயர்ந்த விருந்து புரிந்தார். உபசரணைகளில் யாதொரு தவறும் நேராதபடி பந்திகளில் நேரே வந்து நின்று ஆர்வமுடன் யாவும் ஆராய்ந்து செய்தார். உண்டவர்களுடைய முக மலர்ச்சிகளைக் கண்டு மகிழ்வதில் இயல்பாகவே பிரியமுடையவர் ஆதலால் அயலே உலாவி யாவரையும் ஆதரித்து வந்தார். பந்தி எழுந்த பின் எல்லாருக்கும் சந்தன தாம்பூலங்கள் வழங்கி நன்றிகள் கூறினார். தேச மக்களாகிய நீங்கள் இந்த இடத்தில் வைத்திருக்கும் அன்புரிமைகளுக்கு ஈசனே அருள் புரிய வேண்டும் என ஆர்வமோடு மரியாதை மொழிகள் ஆடி அளவளாவி யிருந்தார்.

## காலையில் கவனித்தது.

மறுநாள் காலையில் எழுந்ததும் நெருங்கிய உறவினர்களுடன் நடந்து நான்கு கோட்டை மதில்களையும் நன்கு சுற்றிப் பார்த்தார். கொத்தளங்களின் அமைதிகளைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து ஆராய்ந்தார். வில்லாளிகளும், வல்லயக்காரர்களும், வேல் வீரர்களும் உள்ளே நின்று போர் புரியும் முறைகளைத் தளபதிகளோடு உளவுகள் நாடி உசாவி நின்றார். அதன்பின் அரண்மனைக்கு வந்தார். போர் வீரர்களைத் தேர்ந்தார். ஆயுதங்களை ஆயத்தம் செய்தார். கம்பு கண்ட கோடாலி கவண் கைவெடி வாள் வேல் வல்லயம் முதலிய எல்லா வகையான படைக் கலன்களினும் தனித்தனியே நன்கு பயிற்சி பெற்ற குறிகாரர்களைக் கருதித் தொகுத்தார். பல ஊர்களிலுமுள்ள படை வீரர்கள் யாவரும் உடனே வரும்படி உத்தரவுகள் அனுப்பி உறுதி நாடியிருந்தார். நாட்டமெல்லாம் பகைவருடைய ஈட்டங்களிலும் போர் வேட்டங்களிலுமே பொங்கி நின்றன. தெவ்வரை எவ்வழியும் வென்று தொலைக்க வேண்டும் என்று வீறு கொண்டு நின்றார். அவ் வெற்றி நிலைக்கு உற்ற துணையாக உரிய பதியை அரிய நிலையில் ஆக்கி வந்தார். கருத்தெல்லாம் போரையே குறித்து நின்றன.

ஈண்டிய திறலோ டென்றும் எழில்மிகுந் துள்ள எங்கள்
பாண்டிய நாட்டை நாங்கள் பண்புடன் நீதி யோங்க
ஆண்டினி திருந்தோம் யாண்டோ அயலிட மிருந்து வந்த
ஆண்டிகள் புகுந்து மேலே ஆண்டிட மூண்டார் அம்மா! [1

கும்பினித் துரைகள் சேர்ந்து கொடும்படை கூட்டி நீண்டு
வம்பினி விளைக்க நேரின் வந்தவர் திரளை எல்லாம்
அம்புவிக் கிரைகள் ஆக்கி ஆருயிர்க் கவதி போக்கி
வெம்புலி மடங்கல் என்ன வென்றுவீற் றிருப்ப னன்றே. [2

என இன்னவாறு இந்நம்பி தன் தம்பி தமர்களோடு உறுதி மொழிகள் கூறிப் பொரு திறல்களைப் பேணிக் கருதிய கருமங்களில் கண்ணூன்றி நின்றார். கோட்டையைப் புதுக்கிப் படை வலிகளைப் பெருக்கி இடைவெளிகளில் நேரும் தடைகளையெல்லாம் ஆராய்ந்து பகை வரவை எதிர்நோக்கித் தகவுடன் இருந்தார். போரை நாடி இவர் இருந்த இருப்பு வீரகம்பீரமாய் விளங்கி நின்றது. ஊரை எழில் பெறத் திருத்திச் சீர்கள் பல செய்தருளினர். எவ்வழியும் யாவும் செவ்வையாக் கவனித்தார்.

# எட்டாவது அதிகாரம்.

## அரசு அமர்ந்தது.

—oo:o:oo—

புதிதாக அரண்களை அமைத்து வீதிகளைச் செப்பம் செய்து விதி முறைகளை வகுத்து அதிபதி அழகு செய்யவே நகரம் பழமை போல் எழில் மிகுந்து விளங்கியது. தலைமகனைக் கண்ட குலமகள் போல் ஊமைத்துரை வரவும் ஊர் ஒளி சிறந்து உள்ளது என நாட்டு மக்கள் எல்லாரும் உள்ளம் உவந்து உரிமை கூர்ந்து நின்றார். வீரமாபுரி என யாண்டும் ஆர்வமோடு பேரும் சீரும் பெற்றிருந்த பாஞ்சாலங்குறிச்சி சிறிது காலம் நிலைகுலைந்து கிடந்தது; மீண்டும் தலைமையோடு பொலிவடைந்து நின்றது. அந்நிலை பலர்க்கும் மகிழ்ச்சி வியப்புகளை விளைத்து வந்தது. அயலூர்களிலிருந்த குடிசனங்கள் எல்லாரும் ஓர் அதிசயக் காட்சியாய்க் கோட்டையை வந்து பார்த்துக் கோனை உவந்து போயினர். மான வீரன் என மதித்துப் புகழ்ந்து துதித்தனர்.

## பதவி உதவியது.

உறவின் முறையார் உரிமையுடன் அணுகி ஊமைத்துரையைக் கண்டு உறுதி நிலைகளைக் கூறினார். மரபின் முறைப்படி அரசுரிமையை ஏற்றுப் பட்டங்கட்டிக் கொள்ளும்படி பரிந்து வேண்டினார். மாயன் முதலிய முதியவர்கள் வந்து அதிபதியாய் அமர்ந்து ஆவன செய்யுமாறு ஆவலோடு வேண்டவே இவர் அது வேண்டாம் என்று மறுத்தார். மீண்டும் அவர் வற்புறுத்தினார். அப்பொழுது தன் உள்ளக் கிடக்கையை எல்லாரும் தெரிந்து கொள்ளும்படி ஊமைத்துரை உறுதியாயுரைத்தார். "நான் பட்டம் தரித்துப் பவுசுடன் இங்கு வாழ வரவில்லை; பகைவரைப் பாடழித்துப் பழிக்குப் பழி வாங்கி என் வழிக்கு நேர்ந்த வசையை ஒழிக்கவே வந்தேன்" என இங்ஙனம் இவர் வெளிப்பட விளம்பினார். இவருடைய உள்ளத்தில் உறைந்துள்ள கொதிப்புகளும் மன வேதனைகளும் துயரங்களும் சொல்லுகளில் துடித்து வந்திருக்கின்றன. உலக வாழ்வு இவர்க்கு வெறுப்பாய் நின்றது.

'அண்ணனை இழந்தபின் மண்ணிலிருந்து நான் வாழவேண்டுமோ?'

என இன்னவாறு கண்ணீரும் கம்பலையுமாய் இவர் உரைத்திருக்கும் உரைகள் உன்னி யுணரவுரியன. பரிவும் பாசமும் உரைகள் தோறும் பெருகி வந்துள்ளன. மறுகி மொழிந்த மொழிகளிலும் உறுதியும் ஊக்கமும் பொங்கி உக்கிர வீரங்கள் ஓங்கி நின்றன.

"அண்ணலை இழந்த பின்னர் அரசினை அடைந்து வாழ
எண்ணலன்; இங்கே எண்ணி எய்தியது இழந்த நாட்டை
நண்ணலர் தம்பால்நின்று மீட்டிஎன் நாட்டம் நாட்டத்
திண்ணமாய்வந்து நின்றேன் தெளிந்ததைஇனிமேல்செய்வேன்.

பாரினைப் பேணி இன்பம் பலபல விழைந்து துய்த்துச்
சீரினைப் பெருக்கிச் செல்வச் செழிப்புடன் வாழவேண்டி
ஊரினை அடைந்தேன் அல்லேன்; உலகினை அடைய வந்தார்
போரினை அடைய வென்று புகழினை அடைய வந்தேன். (2)

அதிபதி ஆகி நின்ற அண்ணல்அவ் அமைச்சன் சொல்லால்
பதிபெயர்ந்து அகன்ற போது பதமறிந்து ஓடி வந்து
சதிசெய்து கொன்ற அந்தச் சதிக்கு நேர் சதிசெய் யாமல்
விதிமுறைநின்றே எண்ணில் வெங்கொலைவிளைப்பேன் என்றான்.

கோக்குலக் குமரன் தன்னைக் கொன்றஅப் பழிக்கு நேரே
பேய்க்குலம் களிக்க வெள்ளைப் பிணங்களைக் குவித்துப் பெய்து
மேக்குற அமர்ந்து வீர வெற்றியந் திருவோடு ஒன்றித்
தோக்கல வார்குலத்துத் தொன்முறை புரிய வந்தேன்." (4)

(வீரபாண்டியம்)

இவ்வாறு ஊக்கி யுரைத்துத் தன் உள்ளத் துணிவுகளை எல்லாரும் அறிய உணர்த்தி நின்றார். கொன்னிப் பேசும் குலமகனுடைய மன நிலைகளை இவ் வுரைகளால் உன்னியுணர்ந்து உறுதி யுண்மைகளை ஓர்ந்து பரிவு கூர்ந்து பலவும் தேர்ந்து நிற்கிறோம்.

மனிதன் எண்ணியுள்ள எண்ணங்கள் சமையம் நேரும் பொழுது உலகம் அறிய வெளி வந்து விடுகின்றன. அகத்தில் அடங்கிக் கிடப்பன புறத்தில் பொங்கி வருகின்றன. நினைவின் வண்ணமாகவே மனிதனுடைய மொழிகளும் தொழில்களும் விழி தெரிய நிகழ்கின்றன. வித்து மரத்தைக் காட்டுதல் போல் எண்ணம் செயல்களைக் காட்டுகிறது. காட்சிகள் காணநின்றன.

நேர்ந்த துன்பங்கள் நெஞ்சை வருத்தியுள்ளமையால் அஞ்சாத தீரர் அருந்திறல்களோடு அமராடல்களையே விரைந்து நாடி

ஞர். உயர்ந்த மான வீரங்களுடன் யாண்டும் சிறந்து வாழ்ந்து வந்தவர்களுக்கு இடையே இழிந்த அவமானங்கள் நேர்ந்தால் உடனே அவர் மாண்டு போகவே மூண்டு முனைந்து நிற்கின்றார்.

அந்த மாட்சியும் காட்சியும் இங்கே காண வந்தன.

"தெவ்வரோடு எவ்வகையும் போர் செய்ய வந்தேனே அன்றிச் சுக சீவியாய் வாழ வந்திலன்" என இவ்வாறு உறுதியாய் இவர் மறுத்துக் கூறவே சிவத்தய்யாவும் தம்பி துரைச்சிங்கமும் கட்டாயம் பட்டம் சூடிக் கொள்ள வேண்டும் என்று உரிமையுடன் நேரே உறுதிகள் பல கூறி உறவா வற்புறுத்தினர்.

## தம்பியின் தகவுரை.

தமையனுரான ஊமைத்துரையை நோக்கித் தம்பி துரைச்சிங்கம் பல அறிவுரைகள் கூறினர். அதி மதியூகமாய் அவர் மொழிந்த மொழிகள் அங்கே நின்ற அனைவருக்கும் உவகையை விளைத்து நின்றன. "அண்ணு! நம்முடைய நிலைமைகள் நெடிய கவலைகளுடையன. கொடிய சோதனைகள் சூழ்ந்துள்ளன. தேவி கிருபையால் சிறையிலிருந்து தப்பி விலகி வந்தோம். பதி சிதைந்து போய்ப் பரிசு குலைந்திருந்தது. நாதியற்ற நகரமாய் நைந்து கிடந்ததைக் கண்டு உள்ளம் நொந்து துடித்தது. இந்தக் கோட்டை ஐந்து நாளையில் கட்டி முடிந்துள்ளது. நாட்டு மக்கள் நம்பால் காட்டியிருக்கும் அன்புரிமைகளுக்கு நாம் எழுமையும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். கெட்டோர்க்கு நட்டோர் இல்லை என்பது பழமொழி. அந்த முது மொழி நம்மளவில் இங்கே பொருள் இழந்து பொய்பாயுள்ளது. ஏக காலத்தில் ஏழாயிரம் எண்ணுயிரம் சனங்கள் நமக்கு உதவி செய்ய மூண்டு இரவும் பகலுமாய் உழைத்து அரிய பெரிய அரணை ஆக்கி யருளினர் இது எவ்வளவு பெரிய உபகாரம்! குடி சனங்களுடைய அன்புரிமைகளை எண்ணியுணரும் போது என் நெஞ்சம் உருகுகிறது; கண்ணீர் பெருகுகிறது. சில பாளையகாரர் மூட்டிய கோள்களாலும் நம் தானுபதி செய்த வம்பினாலும் கும்பினியார் பகை கொடுமையாய் மூண்டது; நெடிய துயரங்கள் நீண்டன. அருமை அண்ணனை இழந்தோம்; பெருமை குலைந்தோம்; சிறுமைகள் அடைந்தோம்; பரிதாப நிலையிலிருந்து வெளியேறி வந்து பதியுள் புகுந்தோம். எதிர்வதை

எண்ணி ஏற்ற அரண்களை அமைத்துள்ளோம். இந்த நிலையில் தாங்கள் அரசுரிமையை எய்தித் தலைமையாய் நின்றால் ஒழிய உரிய காரியங்கள் ஒன்றும் சரியாய் முடியாது. அதிகார வுரிமை மனிதனுக்கு அதிசய ஆற்றலை அருளிவருகிறது. நீரில் விரைந்து ஓடுகிற மீன் நிலத்தில் வந்தால் யாதும் ஓடாது; உரிய இடமே யாவர்க்கும் அரிய வலிமையாய் அமைந்துள்ளது. தானத்தின் பலம் வானத்தின் வலம் என்பது சீனத்தின் பழமொழி. "உடையவன் இல்லையாயின் ஒரு முழம் கட்டை" என்பது உரியவன் பெருமையை உணர்த்தி நிற்கிறது. தாங்கள் வந்து நிற்கவில்லை ஆனால் இந்தக் கோட்டை இப்படி முடிந்திருக்குமா? பதவியை மேற்கொண்டு அதிபதியாய் நின்றால் காரியங்கள் யாவும் விதி முறையாய் விரைந்து நடக்கும். அரசுரிமையோடு அமைந்து நிற்கும் தங்கள் தலைமையைக் காணக் குடிசனங்கள் வேணவாவோடு விழைந்து நிற்கின்றனர். இனிய மதியைக் கண்டு கடல் கொந்தளித்தல் போல் உரிய பதியைக் கண்டு படைகள் களித்து ஆடலாண்மைகள் புரிகின்றன. உரிமையான தலைவன் எதிரே இல்லையானால் அரிய வலிமைகளும் வறிதே இழிந்து போகின்றன.

* "நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்." (குறள், 770)

என்றது பொய்யா மொழி. எவ்வளவு பெரிய படைகள் திரண்டிருந்தாலும் படைத் தலைவன் இல்லையானால் அவை பயன்படா என இது உணர்த்தியுள்ளமையால் தலைமையின் நிலைமையும் தானையின் வலிமையும் மானச மருமமும் புலனாய் நின்றன.

தலைவன் நேரே நின்றால் படை வீரர்கள் போர் ஏறிப் பொருது வருவர்; இல்லை என்றால் உறுதி குன்றிப் போவர். மனித சுபாவங்களை அனுபவங்களால் அறிந்து வருகிறோம். மானச தத்துவங்களைச் செய்பவரே எத் திறத்தும் உயர்ந்து விளங்குகின்றார். உறுதியுண்மைகள் வாழ்வின் அனுபவங்களாய் உணர வருகின்றன. தாங்கள் இங்கு வந்து சேரவில்லையானால்

---

*நிலைமக்கள் என்றது படைவீரர்களை. பொருகளத்தில் நிலையாய் நின்று போர் புரிய வல்லவர் ஆதலால் அந்நிலை தெரிய நிலைமக்கள் என்றார். தலைமக்கள் என்றது படைத்தலைவரை. உறுதியான போர் வீரர்கள் எவ்வளவு மிகுதியாக இருந்தாலும் தமக்குத் தகுதியான தலைவன் ஒருவன் இல்லையானால் அவர் உரிமையுடன் ஊக்கி நின்று பொரார்; உள்ளம் உடைந்து எள்ளலடைந்து ஒழிவார் என்பதாம்.

இவ்வளவுபடைவீரர்களும் குடிசனங்களும்ஈண்டு வந்து மூண்டு நின்று இவ்வாறு வேலை செய்வார்களா? இதனைச் சிந்திக்க வேண்டும். இவ்வளவு பேர்களுடைய ஆற்றல்களும் எங்கேயோ மறைந்து நின்றன; நீங்கள் வந்தவுடனே அவை பொங்கி வெளி வந்துள்ளன. அரசுரிமையைத் தாங்கள் மேற்கொண்டு நின்றால் மக்கள் யாவரும் மேலும் ஊக்கமாய் வேலை செய்வார்கள்; கால நிலை கருதிக் கரும நிலை தெரிந்து உரிமையைச் செய்து கொள்ளுவது நல்லது" எனத் தம்பி இங்ஙனம் நயமாச் சொல்லவே ஊமைத்துரை உவந்தார்; உறுதிமொழிகளை நினைந்து வியந்தார்; கரும நிலைகளைக் கருதி உணர்ந்து உரிமையை மருவ இசைந்தார்.

## பட்டம் சூடியது

அரசுக்கு உரிய மரபின் முறைப்படி பாஞ்சாலங்குறிச்சிக்கு ஊமைத்துரை அதிபதியாய் அமைந்தார். முதியவர்கள் பலர் கூடிச் சடங்குகள் புரிந்தார். நீராடி நியமங்களை முடித்துத் தேவியை வணங்கி இலட்சுமி விலாசம் என்னும் மண்டபத்தில் வந்து ஊமைத்துரை உரிய பீடத்தில் அமர்ந்தார். செய்ய வேண்டிய விதிமுறைகளைத் தெய்வம் தொழுது செய்து முடித்தபின் முடி புனைந்த படியாய் மரபின் தலைப்பாகையை அவர் சிரசில் புனைந்தார். புனைந்தபின் பாஞ்சைக்கு அதிபதி என அனைவரும் ஒருமுகமாக உவந்து கூறினர். உரியவர்கள் வந்து முறையே மங்கலப் பாடல்கள் பாடினர். சங்கங்கள் முழங்கின; காளங்கள் ஊதின; மேள வாத்தியங்கள் தாள சீர்த்திகளோடு தழைத்து ஒலித்தன. எவ்வழியும் எழில்கள் செழுமி நின்றன.

## பவனி வந்தது

உரிமை புனைந்த பின் உலா எழுந்தார். அலங்காரங்கள் செய்திருந்த நகர வீதிகள் எங்கணும் பவனி நடந்தது; முடிவில் கலியாண மண்டபத்தில் வந்து அமர்ந்தார். தான தருமங்கள் செய்தார். பெரியோர்களுக்குரிய மரியாதைகள் யாவும் மரபின் முறையே வரிசையாய் நடந்தன. அருகே சூழ்ந்து நின்ற அனைவரையும் நோக்கி ஊமைத்துரை ஓர் உறுதி மொழி கூறினர். அவருடைய மன நிலைகளையும் வினையாண்மைகளையும் வீரத்திறல்களையும் அவ்வுரைகள் தெளிவா உணர்த்தியச் செய்தன.

## வீர பட்டம்

"இப்பொழுது நான் சூடிக்கொண்டது தமரோடு அமர்ந்து அரசாளி புரிந்து உவந்து வாழ வந்த அரச பட்டம் அன்று; எதிரிகளோடு அமராடநேர்ந்த வீர பட்டம் இது" என யாவரும் அறிய விறலுடன் உரைத்தார். அந்த உரை அதிசயமாய் வந்தது.

தங்கள் அதிபதி உள்ளம் கொண்டுள்ள உறுதி நிலையை உறவினர் எல்லாரும் உணர்ந்து கொண்டனர். போராடல்களில் இயல்பாகவே பிரியம் மிக வுடைய அம் மரபினருக்கு ஊமைத் துரை கூறிய இவ் வீர வுரை பெரிதும் உவகையை ஊட்டியது.

"நானிலமதனின் உண்டு போர்என நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்."

என்றது இந்த மரபினருக்கு எந்தவகையிலும் பொருந்தியுள்ளது.

வீரப் போர்களையே யாண்டும் விழைந்து புரிகிற இவ் வுறவினரைக் கொண்டே பாஞ்சைப் பதி என்றும் வெற்றி நிலையில் சிறந்து கொற்றம் கொழித்து வந்துளது. உற்ற துணைகளின் உறுதிகளால் உயர்வுகள் விளைந்து ஊதியங்கள் நிறைந்தன.

"திருந்தலர் போர்எனின் விருந்தென விரைவோர்
முதுகிட் டறியா மதுகை வாழ்க்கையர்;
தீச்செயல் கடியும் வீச்சரி வாளினர்;
வீட்டரும் சொந்த நாட்டபி மானிகள்;
ஈனம் போக்கி மானம் காக்க
வீரப் போர்புரி சூரப் புலிகள்."

என இவ்வாறு பாஞ்சாலங்குறிச்சி மரபினர் பாராட்டப் பெற்றிருத்தலால், அவர்களுடைய மன நிலைகளும் மான வீரங்களும் போர் வலிமைகளும் யாரும் நேரே அறியலாகும்.

இத்தகைய உறவினர்களை உரிமையாகத் தழுவிப் பொருந்திறங்களை ஆராய்ந்து, வருகிற பகைவரை எதிர்நோக்கி முருகன் அருளை நினைந்து தேவியை வணங்கிப் பாஞ்சைப் பதியில் அதி உறுதியாய் விதிமுறையுடன் ஊமைத்துரை அமர்ந்திருந்தார்.

இங்கே இவ்வாறு இருக்க அங்கே பாளையங்கோட்டையில் தெவ்வர் நிலை எவ்வாறு இருந்தது? என்பதை அயலே பார்க்க வருகிறோம். போரின் பார்வை பாரின் பார்வையாய் நின்றது.

# ஒன்பதாவது அதிகாரம்.

## மூண்டு வந்தது

---

### தளபதி நொந்தது.

ஊமைத்துரை சிறை மீண்டு வந்தது அங்கே இருந்த கும்பினித் தளபதிக்குப் பெரிய அவமானமாய் நீண்டுநின்றது. தன்னுடைய பாதுகாவலைக் கடந்து படைகளையும் வென்று ஊமையன் ஓடிப் போய் விட்டானே! என்று உள்ளம் கனன்று எள்ளலை நினைந்து அவ் வெள்ளைத்துரை உருத்து உளைந்தார். கறுத்துக் கவன்றார்; சிறைச்சாலைக்கு வந்தார். இடங்களைச் சுற்றிப் பார்த்தார். சிறையின் தலைமை அதிகாரியை விசாரித்தார். ஜெயில் சூப்ரெண்டெண்டும் அந்தக் கலகத்தில் அடிபட்டிருந்தார். ஆதலால் நாணம் மிக அடைந்து நடந்தவைகளையெல்லாம் அவர் தொடர்ந்து சொன்னார். அவருடைய வாக்குமூலங்களைக் கூர்ந்து கேட்டுத் தானைத்தலைவர் பலவும் ஓர்ந்து நிலைமைகளைத் தேர்ந்து கொண்டார்.

### சிறைத் தலைவர் உரைத்தது.

காவல் கைதிகளை ஏவல் செய்யாமல் காவல் செய்து வருவது அரிய சாதனையாயிருந்தது. அந்த வகையில் தலைமை அதிகாரியாய் அங்கே இருந்து வந்தவர் நிலைமைகளை நேரே விளக்கினார்: "சேனாதிபதி பானர்மேன் உத்தரவுப்படி ஊமைத்துரை முதலானவர்கள் பாளையங்கோட்டைச் சிறைக்கு அனுப்பப்பட்டனர். அக்டோபர் மாதம் இருபத்து நாலாம் தேதி (24—10—1799) மாலையில் அவர் இங்கு வந்தனர். முப்பத்தாறு பேர் இருந்தனர். அவரை அரசாங்கக் கைதிகளாகப் பதிவு செய்து சிறைச்சாலையில் அடைத்து வைத்தேன். ஆளுக்கு ஒரு சலிப்பணம் வீதம் நாள் ஒன்றுக்குப் படி விதிக்கப்பட்டிருந்தது; அந்தப் படி முறையின் படியே உணவு முதலிய வசதிகள் தினமும் இனமாகச் செய்யப்பட்டு வந்தன. மிக்க துணிவும் வீரத் திறலும் மேவியுள்ளவர் என்று தெரிந்திருந்தமையால் எப்பொழுதும் தக்க எச்சரிக்கையுடன் யாவரையும் கவனித்து வந்தேன். ஓராண்டு வரையும் யாவரும் அமைதியாகவே அடங்கி இருந்தனர். கடின

மான விலங்குகளோடே காலம் கழித்து வந்தனர். இரண்டு மாதங்களுக்கு முன்னேதான் விலங்குகள் நீக்கப்பட்டன. சிறையில் உள்ள எனது சிப்பந்திகளிடம் யாரும் யாதொரு அல்லலும் செய்ததில்லை. எல்லாரும் எவ்வகையிலும் இதமாகவே நடந்து கொண்டனர். சில தினங்களுக்கு முன்பு ஊமைத்துரை தன் மாமனுரோடு சிறைக் கொடுமைகளைப் பற்றி மனம் வெறுத்துப் பேசினதாகக் கேள்வி. அதனை ஒரு சதியாக நான் கருதவில்லை. கும்பினி அதிகாரிகளிடமிருந்து உத்தரவு வந்து விடும்; யாவரும் விரைவில் விடுதலை செய்யப்படுவார் என்றே நம்பியிருந்தேன். நான் நம்பினது வம்பாய் முடிந்தது. நேற்று மாலை ஆறு மணிக்கு ஆயுதபாணிகளாய்ப் பலர் சிறைச்சாலைக்குள் துணிந்து புகுந்தனர். வாசல் முகப்பில் காவல் காத்து நின்ற சேவகர்களை அடித்து வீழ்த்தித் திடீர் என்று எல்லாரும் உள்ளே புகுந்து அதிகாரிகளைத் தாக்கி அச்சுறுத்தி இங்கிருந்த வெடிகள் முதலிய படைக் கலன்களைக் கவர்ந்து கொண்டு ஊமையன் முதலிய யாவரையும் வெளியேற்றி விரைந்து போயினர். ஆரவாரத்தோடு மூண்டு பாய்ந்து ஒரு நாழிகைக்குள் சிறையைச் சின்னபின்னம் செய்து அவர் விரைவாய் மீண்டு போனது பெரிய அதிசய வியப்பாய் நீண்டு நின்றது. மாறாய் யாதும் செய்ய இயலாதவராய் யாவரும் மதி மருண்டு மயங்கி நின்றோம். கலெக்கட்டருக்கும், கும்பினி அதிபதிகளுக்கும் குறிப்புகள் எழுதியுள்ளேன்; தங்களிடம் நேரே வந்து யாவும் சொல்ல நினைந்திருந்தேன்; தாங்களே இங்கு வந்து விட்டீர்கள்! மேலே ஆக வேண்டியதை விரைந்து செய்தருளுங்கள்" என இங்ஙனம் சிறை அதிகாரி முறையீடுகளை முறையே சொல்லி முடித்தார்.

தளபதி உள்ளம் கொதித்தார். "எதிரிகள் புகும் பொழுது நீங்கள் இங்கே எத்தனை பேர் இருந்தீர்கள்? எத்துணை நேரம் ஈண்டு அவர் நின்றார்? " என்று அவர் பரிந்து கேட்டார்.

## இருந்தவர் தொகை

"வெளியே வெடிகளோடு காவல் காத்து நின்ற சேவகர்களைத் தவிர உள்ளே நாற்பத்தெட்டுப் பேர் இருந்தார்கள்; அனைவருக்கும் அடியுண்டு; தனியே எனது அறையிலிருந்த நான் சத்தம் கேட்டு விரைந்து வெளியே வந்தேன்; எனக்கும் தலையில்

அடி விழுந்தது; பொல்லாத எதிரிகள் எல்லாரும் ஒல்லையில் ஓடிப் போயினர்" எனச் சிறைத் தலைவர் வருத்தமாய் உரைத்தார்.

"வந்தவர் தொகை எவ்வளவு இருக்கும்?" என அவர் தெவ்வளவைத் தெளிவாக அறிந்துகொள்ள விழைந்து உசாவினர்.

" மூந்நூறு பேருக்கு மேலிருப்பர் " என இவர் மொழிந்தார். இம்மொழியைக் கேட்டதும் தளபதி உளமிக வருந்தினர்.

"கும்பினிக்குக் கொடிய அவமானம் நேர்ந்தது; நமக்கும் நெடிய துயரம் மூண்டது" என்று நீண்ட கவலைகளோடு அவர் வெய்யமொழிந்து கும்பி கொதித்து வெகுண்டு போனர்.

போனவர் கலெக்டர் லஷிங்டன் (S. Lushington) துரைக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பி விட்டுச் சேனைகளைத் திரட்டினர். இராணுவத் தலைவர்களுக்கு ஆணைகள் அனுப்பினர். கருமத் தலைவர்களுக்கும் மருமங்கள் குறித்து விரைவு படுத்தினர்.

### படைகள் எழுந்தது

சங்கர நயினர் கோவிலிலும், சீவலப் பேரியிலும் வைத்திருந்த கும்பினிப் பட்டாளங்களை உடனே கயத்தாற்றுக்குக் கொண்டு வரும்படி கட்டளை அனுப்பினர். அந்தப் படைகளுக்கு மேஜர் ஷெப்பேடு (Major Sheppard) என்பவர் தலைவராயிருந்தார். தலைமைச் சேனதிபதியின் உத்தரவைக் கண்டதும் குறித்தபடியே அவர் படைகளைக் கொண்டு வந்து அங்கு நிறுத்தினர். நபாவின் குதிரைப் பட்டாளங்களும் ஆங்கு ஒருங்கே வந்து சேர்ந்தன.

சில ராணுவ அதிகாரிகளையும் உடன் அழைத்துக் கொண்டு பெரும் படைகளோடு மேஜர் மெக்காலே பாளையங்கோட்டையிலிருந்து கயத்தாற்றுக்கு வந்து சேர்ந்தார். கயத்தாறு என்னும் ஊர் திருநெல்வேலியிலிருந்து வடமேற்காக இருபது மைல் தூரத்தில் உள்ளது. பிப்ரவரி மாதம் ஆறுந்தேதி படைகள் யாவும் அங்கே ஆயத்தம் ஆயின. சேர்ந்த படைகளையும் ஆர்ந்த ஆயுத வகைகளையும் கூர்ந்து ஓர்ந்து தளபதி உளவுகள் ஆய்ந்தார்.

வங்காளம் பீரங்கிப் படை, குதிரைப்படை, காலாட்சேனை என்னும் மூவகை யினங்களும் மேவி நின்றன. யாவும் ஆயத்தமானதும் உபதளபதிகளுக்கு உளவுகள் கூறித் தலைமைத் தளபதி

படை எழுச்சி செய்தார். நிலைமைகளையெல்லாம் நெடிது ஓர்ந்து அதி மருமமாகக் காரியங்களை அவர் கடிது புரிந்தார்.

பிப்ரவரி மாதம் ஏழாந் தேதி இரவு கரவாகப் பாஞ்சாலங் குறிச்சியை நோக்கிப் படைகள் நடந்தன. சேனைத் தலைவரான மெக்காலே துரை (Commanding Officer) உயர்ந்த குதிரையிலும், மற்றை இருபத்தெட்டு உதவி அதிகாரிகள் வேறு குதிரைகளி லும் ஏறி வந்தனர். ஆயிரத்தறுநூறு போர் வீரர்கள் கைகளில் கூரிய ஆயுதங்களும் வெடிகளும் இருந்தன. யாரும் அறியாத படி அதி ரகசியமாய்ப் பட்டாளங்கள் கட்டாக நடந்து பதி னெட்டு நாழிகை வழிதூரம் கடந்தன. தடைகள்யாதும்நேராமல் தாவி வந்த படைகள் இடைவழியில் இனிது அமர நேர்ந்தன.

## இடையே தங்கியது.

படைகள் இரவில் எழுந்து அடைவாக நடந்து வழியிடை யே குலையநல்லூரை அடைந்தன. சூரியன் உதயமாயினன். குலையநல்லூர் என்பது சிறிய ஊர். கயத்தாற்றிலிருந்து நேர் கிழக்காய்ப் பதினெட்டு மைல் தூரத்தில் உள்ளது. அவ் வூரிலி ருந்து வட கிழக்கு முகமா நான்கு மைல் தூரம் நடந்து வந்தால் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை அடைந்து கொள்ளலாம். அவ்வாறு நேரே அடையாமல் இடையேதங்கி இளைப்பாறுபடி அவ் வூரயலே ஒரு குளத்தின் அருகே சேனைகள் அமர்ந்தன. அங்கே கூடாரங்கள் வளைந்தனர். போர் மேல் மூண்டு வந்தவர் இடைவழியில் அமர்ந்து தகுதியான இடத்தில் பாடி வீடுகள் அமைத்து யாவரும் அங்கே கூடி யிருந்தனர். பிப்ரவரி மாதம் எட்டாந் தேதி காலையில் படை வீரர்கள் எல்லாரும் ஆண்டு உணவுகள் அருந்தினர். உயர்ந்த உண்டிகள் கொண்ட பின் துரைமார்கள் கூடாரங்களில் குலாவி இருந்தனர்.

## பாஞ்சை வீரர் துணிந்தது.

அந்தப் பாசறையில் அவ்வாறு சேனைகள் தங்கி யிருக்கும் பொழுது பாஞ்சாலங்குறிச்சியார் பொங்கி எழுந்தனர். படை வரவை நாளும் எதிர்பார்த்து நின்றார் ஆகலால் இடையே வந்தி ருப்பதை அறிந்ததும் பெருமகிழ்ச்சி அடைந்தார். பேராண்மை யோடு போராட மூண்டார். சுடு வெடிகளோடு அடு துயர் செய்ய வந்திருக்கிற கும்பினிப் படைகளை நடுவழியில் வைத்தே

அடியோடு அழித்து ஒழித்து விடவேண்டும் என்று களித்துக் கலித்து ஊமைத் துரையிடம் போய் உத்தரவு கேட்டார். ஊமைத் துரைகள் நேரே ஏறி வருமுன்னரே இடையே சீறி அழிக்க வேண்டும் எனப் படை வீரர்கள் சேர்ந்து வந்து உரைத்தார். உரைக்கவே, அவர் மறுத்தார்: "வந்த பட்டாளங்கள் நேரே இங்கு வரட்டுமே; அதற்குள் நீங்கள் ஏன் முந்துகிறீர்கள்?" என்று அவர் தடுத்துச் சொல்லவே அடுத்து நின்ற ரணவீர ராமு என்னும் படைத்தலைவன் சில குறிப்புகளை எடுத்து உரைத்தான். "நாம் மெலிந்து போயிருக்கிறோம் என்று துணிந்து கும்பினிப் படைகள் கும்பலாய்த் திரண்டு வந்திருக்கின்றன; இந் நாட்டு மக்கள் அறிந்து கொள்ளாதபடி இரவே கரவாய் ஈட்டமுற்று எழுந்துள்ளன; நமது கோட்டைமேல் வரும் வரையும் நாம் ஈண்டு பொறுத்திருப்பானேன்? எதிரேறி விரைந்து கூடாரங்களை வளைந்து பாடழித்து எதிரிகளை ஓடச் செய்யவேண்டும்" என்று அவன் ஊக்கி நின்றான். அவனது நோக்கத்தை நோக்கி அவர் சரி என்று இசைந்தார். வெறி கொண்டவராய் வீரர்கள் விரைந்தார்.

## பாடி புகுந்தது

ஊமைத்துரை இணங்கவே எல்லாரும் உள்ளம் களித்துத் துள்ளி எழுந்தார். ஆயிரம் போர் வீரர்கள் ஆயுதபாணிகளாய்த் திரண்டனர். போராசை அவர்களிடம் பேராசையாய்ப் பெருகி நின்றது. கருவிகளோடு மருவி ஒருமுகமாய் உருத்து எழுந்தனர்.

கம்புகள், கண்ட கோடாலிகள், ஈட்டிகள், வளை தடிகள், வாள்கள், வேல்கள், வல்லயங்கள் முதலிய கொலைக் கருவிகளைக் கைகளில் நீட்டிப் பிடித்துக் கொண்டு ஈட்டமுற்று ஓட்டமும் நடையுமாய் ஊக்கி வந்தனர். பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலிருந்து புறப்பட்டு நாலு மைல் தூரமும் "வேலும் மயிலும் துணை; வேலும் மயிலும் துணை; வேலும் மயிலும் துணை! என்று வீறுடன் கூறி விடைகள் போல் நடைகளில் கூடி விரைந்தனர். போராட நேர்ந்ததில் ஒரு வீரவெறி அவர்களிடம் வீறுகொண்டு நின்றமையால் புலி யேறுகள் போல் மேலேறி ஆரவாரமாய் ஓடி வந்தனர். உறுதி ஊக்கங்கள் பொருதிறலோடு ஓங்கி வந்தன.

கூடாரங்களை நெருங்கி வரவும் மூன்று பிரிவாகப் பிரிந்து சூழ்ந்து பட்டாளங்களை நான்கு புறமும் வளைந்து கொண்டனர்.

அயலே வரும் பொழுதே இவர்களுடைய நிலைகளைக் கும்பினித் தளபதிகள் பார்த்துக் கொண்டார் ஆதலால் முதலில் செயலி ழந்து நின்றும் பின்பு விரைந்து மூண்டு வெகுண்டு திரண்டார்.

## படுசமர் மூண்டது.

பாஞ்சாலங்குறிச்சியார் சீறி ஏறி வேல்கள் கொண்டு தாக் கவே அவர் மாறித் தேறி வீறோடு போர் செய்ய நேர்ந்தார். குதிரை வீரர்கள் விரைந்து பாய்ந்து எதிரிகளை உள்ளே புக விடாதபடி முனைந்து அமர் புரிந்தார். பட்டாளத்தின் சிப்பாய் கள் கட்டாக நின்று சுட்டார். படைத் தலைவர்கள் பக்கம் நின்று உறுதி கூறி ஊக்கினர். கரு மருந்துகள் தக்கபடி வந்தி ருந்தன ஆதலால் சுடு வெடிகளை அவர் கடுமையாகத் தொடுத்து விடுத்தார். கம்புகளோடு கும்பலாய்ப் புறத்தே சூழ்ந்து இவர் பொருது ஏறி வரும் பொழுது அவர் அருகே குறி வைத்துச் சுடுதற்கு மிகவும் வசதியாயிருந்தது. கூடாரங்களில் ஒளிந்து நின்றும் பல இடங்களில் மறைந்திருந்தும் அவர் தொடுத்து இடை விடாது கடுத்துச் சுட்டார். சுடுகின்ற குண்டுகளையும் தாங்கிக் கொண்டு குதிரைப் படைகளையும் ஊடுருவி இவர் உள்ளே பாய்ந்து ஊக்கி ஏறி வல்லயங்களால் குத்தி வீழ்த்தி வெஞ் சமராடினர். வாள்களும் வேல்களும் எவ்வழியும் வீசினர் உயிரைத் திரணமாக எண்ணி ஆவேச வெறியராய் இவர் அட லாண்மை புரிந்தார். குடல்கள் சரிந்தும் உடல்கள் சிதைந்தும் தோள்கள் முறிந்தும் தாள்கள் ஒடிந்தும் தலைகள் இழந்தும் கும்பினிப் படைகளில் கொலைகள் பல புலையாய் விழுந்தன.

இவர் ஏறிப் பொருங்கால் குண்டுகளை அவர் வாரிப் பொழிந்தார். கொள்ளித் தீ போல் கொதித்துப் பாய்ந்த குண்டு களால் இவருள் சிலர் துள்ளி விழுந்து செத்தார். மூண்டு பொருதமையால் இரு வகையிலும் பலர் மாண்டு விழுந்தனர்.

கொடிய குண்டுகளின் கொடுமையால் நீண்ட நேரம் நின்று போராட முடியாமல் இவர் மீண்டு திரும்பினர். மாண்டு மடிந்தவர் போகக் காயம்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்த சிலரைக் கையோடு தூக்கிக் கொண்டு கோட்டையை நோக்கி கோட்டையில் மீண்ட வீரராய் இவர் விரைந்து போயினர்.

இடை வழியில் அன்று நடந்த அந்தப் போரில் இரு திறப் படைகளிலும் எண்பத்து நான்கு பேர் இறந்து வீழ்ந்தனர். காயம் அடைந்தவருள்ளும் பின்பு சிலர் மாய நேர்ந்தனர்.

## இரவு வந்தது

ஒரு முறையும் இல்லாமல் முரட்டுத் தனமாய் மூண்டு வந்து இடை வழியிலே திடீர் என்று பாய்ந்து கடிது பொருது போன பாஞ்சை வீரர்களுடைய மூர்க்கத்தையும் தீர்க்கத்தையும் நினைந்து நினைந்து கும்பினித் தளபதிகள் நெஞ்சம் கொதித்தார்; நெடிது பதைத்தார். இவர்களுடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் ஊக்கங்களையும் கருதி நோக்கி அவர் அச்சமும் திகிலும் அடைந்தார். எதிரிகள் உச்ச வீரர்கள் என்று உணர்ந்த போதெல்லாம் அவர் உள்ளம் தளர்ந்து எள்ளல்களை எண்ணி இலச்சையுழந்து அச்சமாயினைந்து நின்றார்.

நடு வழியில் நேர்ந்த நாசங்கள் அவர்க்குக் கொடிய திகில்களை விளைத்து நின்றன. காரியங்களைக் கடிது கவனித்தனர்.

இறந்துபட்ட பிணங்களை அயலே பெரிய குழிகள் தோண்டிப் புதைத்து விட்டுக் காயமுற்றவர்களைக் கருதி ஆற்றிக் கூடாரங்களைச் சுற்றிப் பட்டாளங்களைக் கட்டாகக் காவல் நிறுத்தி மிக்க எச்சரிக்கையுடன் அவர் மேவி நின்றார்.

உற்ற துணைவர்களுடன் உசாவி அற்ற நிலைகளை அடுத்து ஆராய்ந்து பிடித்த வெடிகளோடு பக்கம் எங்கும் பாதுகாப்புகளைக் கவனித்துச் சேனைத்தலைவர் யாவரும் செயிர்த்திருந்தார்.

அன்று முழுவதும் அங்கேயே தங்க நேர்ந்தமையால் பட்டாளங்களுக்கு வேண்டிய ஆகார வசதிகள் யாவும் நன்கு செய்து கொண்டனர். பகல் கழிந்தது; பொழுது அடைந்தது. அமரபட்சம் ஆதலால் நெடிது இருள் படர்ந்தது. கொடிய எதிரியினுடைய கோட்டை அருகே தங்கள் கூடாரங்கள் மருவியுள்ளமையால் இரவில் என்ன நேருமோ? என்று பலர் வெருவியிருந்தனர். கருவு கொண்டு வந்தவர் வெருவு கொண்டு விடிவு காணும் வரையும் விழிகள் மூடாமல் முடிவு காண நேர்ந்தனர்.

குதிரைப் படைகளை வகைப்படுத்தி நான்கு திசைகளிலும் தகுதியாக நிறுத்தி வைத்து அயல் எங்கும் கருவிகள் கொண்டு

கூர்ந்து மருவலர் மருவாதபடி செயல்கள் தேர்ந்து நின்றார். உபதளபதிகள் யாவரும் உளவுகள் ஓர்ந்து எவ்வழியும் செவ்வையாய்க் காவலாளிகளை ஊக்கி ஆவலோடு உலாவி வந்தார்.

சேனைத்தலைவர் மேக்காலே துரை மானமும் நாணமும் மருவி மறுகியிருந்தார். நடந்த நிகழ்ச்சிகள் அவருடைய உள்ளத்தைக் குடைந்து நின்றன. சிறைச்சாலையை உடைத்து ஓடிப் போன ஒரு ஊமையனைப் பிடிக்கத் தாம் படைதிரட்டி வந்ததும், இடைவழியில் இடைமறித்து எதிரிகள் துணிந்து புகுந்து அடலமர் புரிந்ததும், ஆர்த்துப் போனதும், படுகொலைகள் விழ்ந்துள்ளதும், அவருக்கு நெடிய அவமானங்களாய் நீண்டு நின்றன. இரவு ஒரு மணி வரையும் அவர் உறங்கவில்லை; யாவும் எண்ணி எண்ணி யுளைந்தார். அதன் பின் சிறிது கண்ணயர்ந்தார்.

இருளில் நேர்ந்த மருள்.

நடுச்சாமம் கழிந்து மூன்று நாழிகைக்குப் பின் பட்டாளங்கள் தங்கியிருந்த இடத்துக்கு அயலே வடமேற்கு மூலையில் ஏழு எட்டு வெடிச் சத்தங்கள் ஏகமாய்க் கேட்டன. அந்தப் பேரொலியைக் கேட்டவுடனே யாவரும் பெருந்திகில்களோடு விரைந்து எழுந்தனர். உறக்க மயக்கத்தில் ஒரு நிலையும் தெரியாமல் பெருங் குழப்பமாய்ப் பேதுறலானார். எதிரிகள் வந்து மீண்டும் புகுந்து விட்டார் என்று எண்ணி மயங்கிக் கண் விழிப்போடு யாண்டும் மூண்டு நோக்கினார். யாதொரு உருவமும் தெரிய வில்லை. யாவரும் அமைதியாயினர். பின்பு குதிரை வீரர் ஐவர் அந்த வேட்டொலி வந்த இடத்தைப் போய் எச்சரிக்கையுடன் பார்த்தார். ஆளரவம் யாதும் காணோம். மீண்டு வந்து வேண்டிய பாதுகாவல்களோடு மிக்க விழிப்பா யிருந்தார்.

"கும்பினிப் படைகள் உள்ளே இனம் தெரியாமல் ஒருவரை ஒருவர் அடித்துச் சுட்டு ஒழிந்து போகட்டும்" என்று எதிரிகள் அஞ்சாது வந்து செய்த வஞ்சச் சதி என்று அவர் நெஞ்சம் துணிந்து நெடிது சினந்து கடிது காத்து விடிவை நோக்கி விழைந்திருந்தார். நெஞ்சத் திகில்கள் நிறைந்து நின்றன.

பொழுது விடிந்தது.

எதிரியின் முடிவையும் இரவின் விடிவையும் எதிர்பார்த்திருந்த அவருக்கு உதவி செய்ய வந்தது போல் உதயம் தோன்றியது.

ஆதவன் உதிக்கவே யாவரும் உவந்து எழுந்து ஆவதை விரைந்து புரிந்தார். வினை செயல் வகைகள் யாவும் விறுடன் நிகழ்ந்தன.

கருதி அடைந்தது.

காலைக்கடன்கள் முடிந்தவுடனே சேனைத்தலைவர் ஆணையின் படி படைகள் எழுந்து நடந்தன. நடந்து வரும் பொழுதே மேலே நடப்பதை யெல்லாம் நினைந்து கொண்டு படைத் தலைவர்கள் பெரிய பரிகளில் இவர்ந்து பின்னே தொடர்ந்து வந்தார்.

பாசறையில் முதல் நாள் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எதிரிகளுடைய உணர்ச்சிகளையும் தறுகண்மைகளையும் உள்ளே உணர்த்தி வந்தன ஆதலால் வினை விளைவுகளை நெடிது நாடி வெள்ளைத்துரைகள் எல்லாரும் மறுகி வந்தனர். சாலிகுளம் பறம்பைக் கடந்து சரிவில் இறங்கியதும் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைக் கண்டார். அந்தக் காட்சி அவர்க்கு அதிசய வியப்பாய்ப் பெருகி நின்றது. மதி மயங்கி மருண்டு வெருண்டு திகைத்தார்.

கண்டு திகைத்தது

சூரியன் உதயமாகி எழு நாழிகை அளவில் படைகள் பாஞ்சைப் பதியை அணுகின. அதன் நிலைமையை நோக்கிப் படைத் தலைவர்கள் நெடிது வியந்தனர். முடுகி வந்தவர் அருகு நெருங்கவே பெரிதும் அதிசமாய் வெருவி நின்றனர். 9–2–1801 காலையில் வந்து அந்த வீரமாபுரியை விழைந்து கண்டவர் உளைந்து நின்று வியப்பும் திகிலும் ஒருங்கே அடைய நேர்ந்தனர்.

தான் கருதி வந்ததற்கு முழுதும் மாறாகச் சிறந்த அரண் வலியோடு எதிரி ஏற்றம் பெற்றிருத்தலை நினைந்து சேனாதிபதி இனைந்து நின்றார். ஊமைத்துரையை இலகுவாக உடனே பிடித்துக் கையோடு கொண்டுபோய் விடலாம் என்று அந்தச் சீமைத்துரை எளிதாக எண்ணி வந்தார் ஆதலால் வலிய அரண் நிலையைக் கண்டதும் பெரிய திகைப்பாய் மறுகி மயங்கினார்.

சிறையை உடைத்துத் தன் பாதுகாப்பு முறையைத்தகர்த்து ஆடலோடு மீறி வெளியேறிப் போன வீரனை மாறிப் பிடிக்க மானமோடு சீறி வந்த சேனைத் தலைவர் சிந்தை தளர்ந்து நின்றார். அந்தப் படையெழுச்சியில் பாஞ்சாலங்குறிச்சியை அவர் வந்து கண்ட நிலையை அன்று உடனிருந்து எழுதிய தளபதியின் ஆங்

கிலக் குறிப்புகள் பாங்கோடு விளக்கி நன்கு காட்டியுள்ளன. ஈங்கு அவசியம் யாவரும் காண வுரியன; அயலே வருகின்றன.

"After a sleepless night, we marched the next morning and reached a plain close to Panjalamcourchy by nine o' clock, when, to our utter astonishment, we discovered that the walls, which had been entirely levelled, were now rebuilt, and fully manned by about fifteen hundred Polegars."

(The Second Polegar war)

"முதல் நாள் இரவு உறக்கம் இல்லை; மறு நாள் காலையில் படைகளை எழுப்பிப் பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தோம்; அப்பொழுது மணி ஒன்பது; அங்கே நாங்கள் கண்ட காட்சி எங்களுக்குப் பெரிய ஆச்சரியமாய் இருந்தது; தரையோடு தரையாத் தகர்த்துத் தட்டப்பட்டுக்கிடந்த கோட்டை மதில்கள் மீண்டும் ஆக்கப்பெற்று நெடிய அரண்களாய் நிலவி நின்றன: ஆயிரத்து ஐந்நூறு போர் வீரர்கள் அடலாண்மையோடு ஆயத்தமாய் நின்றனர்" என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

ஊமைத்துரையைத் தொடர்ந்து மேஜர் மெக்காலே படை எடுத்து வந்த பொழுது பாஞ்சாலங்குறிச்சி இருந்த நிலையை இதனால் அறிந்து கொள்கிறோம். அரிய பல உண்மைகளை இது கருதியுணரச் செய்தது. கரும வினைவுகள் அருமை பெருமைகளை மருமங்களாக வெளியிடுகின்றன. கும்பினியாரால் பறிக்கப்பட்டு பதினெட்டு மாத காலமா நாதியற்றுக் கிடந்த நகரம் உடையவன் வரவும் உயர் நிலை அடைந்து அடையலரை வெல்ல அரண் கொண்டு அடலமைந்து நிற்பது அதிசயக் காட்சியாயுள்ளது.

தாங்கள் தரைமட்டமாக்கிய கோட்டை தங்களைத் தரைமட்டமாக்க நெடிது நீண்டுள்ளதே! என்று வெள்ளையர் நெடுந் திகில் கொண்டு நின்றார். அடுந்திறலோடு ஆர்த்து வந்தவர் கடுந் திகிலோடு உளைந்து நெடுங் கவலையாய் வியந்து அயர்ந்தார்.

அஞ்சாத நெஞ்சரும் அஞ்சி மலையும்படி அஞ்சே நாளையில் கோட்டையைக் கட்டி யிருப்பது ஊமைத்துரையின் அற்புத நிலையைக் காட்டி நிற்கிறது. நாட்டில் இவருக்கு இருந்த சிறந்த செல்வாக்குக்கு இஃது ஓர் நல்ல எடுத்துக் காட்டாக வுள்ளது.

தேசம் எங்கும் தங்கள் அதிகார ஆட்சியைப்பரப்பி யாண்டும் பெரிய பலம் உடையராய் நீண்டு நிற்கிற கும்பினியாருக்கு நேர் விரோதி என்று தெரிந்திருந்தும் தேச மக்கள் இவரிடம் அன்புரிமையுடன் பாசம் கொண்டாடி அரிய உதவிகள் செய்து ஆர்வமாய் வந்திருத்தலால் உரிய உண்மைகள் உணர வந்தன.

அரிய அரண் அமைப்பு எதிரிகளுக்கு நெடிய வியப்பை விளைத்தது. அதனை நினைந்து வியந்து யாவரும்உளைந்துஉயங்கினர்.

"An entrenchment and breastwork had been run up with incredible celerity" (Hughes)

"அரணும், கோட்டையும் யாரும் நம்பமுடியாத வேகத்தில் முடிந்திருக்கின்றன" என்று* ஹாயஸ் என்னும் தளபதி வாய் விட்டு வியந்திருக்கிறார். கோட்டையைச் சுற்றிப் பல இடங்களிலும் அகழ்க் கிடங்குகள் தோண்டி எதிரிகள் எளிதே அணுக முடியாதபடி முரணான அரண்கள் திறமாக அமைத்திருந்தனர்.

பாதுகாப்பின் வலியையும், பாஞ்சை வீரர்களுடைய நிலைகளையும் நேரே பார்த்ததும் மூண்டு வந்த சேனைத் தலைவர் முரண மிந்து நின்றார். பலவும் நினைந்தார். துணைவர்களோடு சூழ்ந்து ஆலோசித்தார். கிட்ட நெருங்கினால் கட்டாயம் கேடு நேரும் என்று உறுதியாய் உணர்ந்து கொண்டமையால் பட்டாளங்களை ஓட்டப்பிடாரம் என்னும் ஊர் அருகே போய்த் தங்கும்படி கட்டளையிட்டார். பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்கு ஒரு மைலுக்குத் தெற்கே கூடாரங்களை அமைத்து அங்கே சேனைகளை அமர்த்தினர். மிகுதியான பாதுகாப்போடு பகுதிகள் யாவும் தகுதியாய் அமைந்தன. படை வீரர்கள் யாவரும் உணவுகள் உண்டு அடைவாக அமர்ந்தனர். வினையாண்மைகளை நினைந்து தலைவர்கள் முனைந்தனர். நிலைகளை நேர்ந்து விரகுகள் புரிந்தனர்.

உளவுகள் ஓர்ந்தது.

உண்டு சிறிது இளைப்பு ஆறியபின் சேனைத் தலைவர் செயல்

---

*ஜார்ஜ் ஹாயஸ் (George A. Hughes)என்னும் இவர் கும்பினிப் படைகளின் தளபதிகளில்ஒருவர். பாஞ்சாலங்குறிச்சிப் போரில்நேரில் கண்ட அனுபவங்களைக் கை எழுத்தில் நாளும் குறித்துவந்துள்ளார். "Narrative of the last Outbreak" என்னும் தலைப்பில் அது புத்தகமாய் வெளி வந்துள்ளது. 1844ல் சீமையில் அச்சாகி யிருக்கிறது.

வகைகளை ஆராய்ந்தார். அயலே யிருந்த மேட்டின் மேல் நின்று சீனக் கண்ணாடிகளை மாட்டி மீண்டும் கோட்டையைக் கூர்ந்து பார்த்தார். எதிரியினுடைய ஆயத்தங்களும் உறுதி ஊக்கங்களும் அவருக்குப் பெரிய திகைப்பையும் வியப்பையும் விளைத்தன. கோட்டை அருகிலும் கொத்தளங்களிலும் உத்தேசமாக இரண்டாயிரம் போர் வீரர்கள் திரண்டு ஆயுதபாணிகளாய் ஆவலோடு அமராட ஆர்த்து நிற்பதைப் பார்த்து அதிசயித்து நின்றார். "இவ்வாறு வீறுடைய பேரரணை ஆறு நாளைக்குள் எவ்வாறு செய்து முடித்தனர்? இது என்ன மந்திர சத்தியா? இந்திர சாலமா?" என்று சிந்தை வியந்தார். எந்த அதிபதிகளும் செய்யமுடியாத அதிசய நிலைகள் என இந்தப் பதியினுடைய அந்த அரணமைதிகளைக் கருதி வியந்து மறுகி வந்து உறுதிகள் நாடிக் கும்பினித் தளபதிகள் ஒருங்கே கூடி ஆலோசனைகள் புரிந்தனர்.

ஒற்றர்களை உய்த்தது.

கோட்டையின் வெளியே காணப்படுகிற வீரர் திரள்களை நேரே பார்த்து வியந்தவர் உள்ளே யிருக்கிற நிலைகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள விழைந்தார். ஷெப்பேடு (Sheppard) வேசி (Vesey) முதலிய உப தளபதிகளோடு அளவளாவி எதிரியின் உளவுகளை உறுதியாக அறிய வழி வகைகளை நாடினர். யாரும் யாதும் தெரியாதபடி உள்ளே போய் வரக்கூடிய சதுரர்களைத் தம் படையிலிருந்து தகுதியாகத் தேர்ந்து எடுத்தார். பகைப் புலம் புகுந்து பாடறியும் திறங்களைத் தொகையாக உணர்த்தி யாவும் தெளிவாக் குறித்து வருமாறு தொகுத்து விடுத்தார்.

மாறுவேடம் பூண்ட அந்த இருவர்களோடு அங்கே நாட்டுப்புறத்தில் அப்பொழுது புதிதாகக் கிடைத்த இரண்டு பேர்களையும் சேர்த்து அனுப்பினர். உழவு தொழில்களுக்கு மாடுகள் வாங்க ஊர்கள்தோறும் திரிந்து வருபவர் போல் வெளிவேடங்கள் காட்டிப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்குள் அவர் நோட்டமாப்புகுந்தார். உள்ளங்களில் திகில்கள் நிறைந்திருந்தாலும் கள்ளங்களோடு கரவுகளாய் எல்லா இடங்களிலும் திரிந்து நிலைகளை ஓர்ந்து உலாவினர்; விரைவுடன் மெல்ல வெளியேவந்தனர். கோட்டை மதில்களை நான்கு புறமும் சுற்றி வந்து நாட்டமாய்ப் பார்த்தார். அடலாண்மைகளோடு படை வீரர்கள் யாண்டும்

எச்சரிக்கையாய் எதிரிகளையே எதிர்பார்த்து மூண்டு நின்றாலும் கரவாய் வந்து உறவினர்போல் புகுந்து உளவுகள் ஓர்ந்து திரியும் அந்தக் கள்ளவாளிகளை எதிரிகள் ஏவிய வேவுகாரர்கள் என்று யாதும் இவர் அறிந்து கொள்ளவில்லை. பாஞ்சை வீரர்கள் என்றும் நேர்மையானவர்கள்; வஞ்சனை சூதுகள் யாதும் தெரியாதவர்கள். எவரையும் எளிதே நம்பும் இயல்புகள் உடையவர்.

"வஞ்சம் இல்லவர்; யாரையும் நம்புவர்; வாய்ந்து
தஞ்சம் என்றவர்க்கு அஞ்சலஎன்று அடைக்கலம் தருவார்;
நஞ்சம் அன்னவர் ஆயினும் நம்பினர்க்கு இடரை
நெஞ்சகத்திலும் நினைந்திடார்; நேர்மையே நினைவார்."

என்றதனால் இவருடைய நீர்மைகளை நினைந்து கொள்ளலாம்.

இவ்வாறு வெள்ளை உள்ளத்தராகிய இவர் வெள்ளையர் ஏவிய கள்ள வஞ்சரைக் கண்டு கொள்ளவில்லை. உள்ளே கரவாய்ப் புகுந்து உளவுகளை யெல்லாம் அளவாக ஆராய்ந்துஓர்ந்து கொண்ட அவ் ஒற்றர்கள் ஒல்லையில் மீண்டார். எல்லை கடந்து பிழைத்தோம் என்று உள்ளம் உவந்து அவர் துள்ளி வந்தார்.

## உற்றதை உரைத்தது.

அந்த வேவுகாரர் வரவை ஆவலோடு எதிர்பார்த்திருந்த சேனாபதி அவர் வந்ததும் தன் கூடாரத்துக்குள் தனியே அழைத்துவைத்து நிலைமைகளை விசாரித்தார். அவர் நேரே கண்டு வந்ததை நெறியே சொன்னார்: "வெளியே கொத்தளங்களில் காணப்படுகிற படைகள்போல் உள்ளே இரண்டுமடங்கு போர் வீரர்கள் திரண்டிருக்கின்றனர். வேல், வாள், வில், வல்லயங்கள் முதலிய பொல்லாத ஆயுதங்கள் எல்லார் கைகளிலும் உள்ளன. சிலரிடம் வெடிகளும் இருக்கின்றன. கம்புகளும், கவண்களும், கல்லுகளும், ஈட்டிகளும், கண்டகோடாலிகளும் கண்ட இடங்களில் எல்லாம் கும்பல் கும்பலாய் குவிந்து கிடக்கின்றன. போராட மூண்டு யாவரும் பேராசையுடன் நிற்கின்றனர். "பட்டாளங்களைத் திரட்டிப் பீரங்கி வெடிகளோடு பிடிக்க வந்தவர் அடுத்து வராமல் ஏன் அயல் ஒதுங்கி யிருக்கின்றார்? ஒரு வேளை நடந்து வந்த களைப்பால் இன்று ஆறியிருந்து நாளை ஆரம்பிக்கலாம் என எண்ணி இருப்பரோ? அப்படி ஆயின் இன்று இரவே கூடாரங்களை வளைத்து அனைவரையும் தொலைத்து அழித்து

அழித்துச் சேனாதிபதியைப் பிடித்து வந்து பதிலுக்குப் பதில் சிறை வைக்க வேண்டும்; அல்லது முன்னம் நம் மன்னனைக் கொன்ற பழிக்குப் பழியாகக் கோட்டை வாசலில் நிறுத்தி வெட்டி வேட்டையாட வேண்டும்" என்று நாட்டமாய் ஈட்ட முற்றுள்ளனர்; உள்ளே இருக்கின்ற படை வீரர்களுடைய உறுதியும் ஊக்கமும் அளவிடலரியன" என இன்னவாறு உளவுகள் ஓர்ந்து வந்த ஒற்றர்கள் உள்ளதை உள்ளபடி நேரே சொல்லவே மேஜர் மெக்காலே உள்ளம் கலங்கி உருத்துச் சினந்தார்.

தலைமைத் தளபதி நிலைமைகளை நெடிது சிந்தித்து நெஞ்சம் கவன்றார். பட்டாளங்களை வருத்து ஏவிக் கோட்டையை எப்படியும் பிடித்து விட வேண்டும் என்று துணிந்து நின்ற படைத் தலைவருக்கு ஒற்றர்கள் வந்து உரைத்த மொழிகள் உறுதியைக் குலைத்து விட்டன. உளவாளிகள் சொன்ன உண்மைகளையும் உற்றிருந்த நிலைமைகளையும் குறித்து அப்பொழுது எழுதி வைத்த தளபதியின் குறிப்புகள் எப்பொழுதும் தெளிவாக யாவும் வெளியாக்கி வேவுகளை விளக்கியுள்ளன. அடியில் வருகின்றன காண்க.

"Some of our scouts came in, with the agreeable intelligence that the Polegars, now amounting to five thousand, were prepared to assault our camp at night fall." R. G.

"பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் இப்பொழுது ஐயாயிரம் பேர் திரண்டிருக்கின்றனர்; இரவில் வந்து நமது கூடாரத்தைத் தாக்கி அழிக்கத் தீர்மானித்துள்ளனர் என்னும் உறுதியான செய்தியை நம் ஒற்றர் வந்து உரைத்தனர்" என்று படைத் தலைவர் குறித்துள்ளமையால் உற்ற உண்மைகள் நன்கு உணர வந்தன.

கோட்டையிலுள்ள இரகசியங்களை அறிந்து வரும்படி ஒற்றர்களை உய்த்ததும், அவர் ஓர்ந்து வந்து சொன்னதும், அதன் பின்னர்த் தளபதிகள் தேர்ந்து தெளிந்ததும், சேர்ந்து விரைந்து செய்ததும் ஆர்ந்த ஆலோசனைகளாய் அமைந்து நின்றன.

எளிதாகக் கருதி வந்தவர் எதிரியின் அரணையும், வலியையும் அறிந்து கொள்ளவே பெரிதும் மறுகியுள்ளனர். அவர்களுடைய மறுக்கங்கள் பல வகைகளிலும் வெளி வந்துள்ளன. அயலே வருகிற குறிப்புகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளலாம்.

"Here then was an unlooked for occurrence: in the first place, we were opposed by a strong fort, raised, as it were by magic, in six days; and in the second, its defenders, increased beyond all possible calculation, were likely to become the assailants." R. G.

"இங்கே யாரும் எதிர்பாராத நிலை நேர்ந்தது: ஆறே நாளை
யில் அதிசய மாயா சாலமாய் எழுந்துள்ள கோட்டை முதலில்
நேரே எதிர்த்து நின்றது; அடுத்து நாங்கள் பிடிக்க வந்த எதிரி
கள் அளவு மீறி எங்களை ஏறித் தாக்க மூண்டனர்" என்னும்
இதனால் மூண்டு வந்த படைத் தலைவர்கள் உள்ளம் தளர்ந்து
உளைந்துள்ளமையை நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். சீறி வந்
தவர் மாறி நொந்துள்ளனர். "ஆறு தினத்துள் இது எவ்வாறு
எழுந்தது? அதிசயமான மாய வேலையா யுள்ளதே!" என்று
கோட்டையைப் பார்த்து அவர் யாவரும் வியந்திருக்கின்றனர்.

பிப்பரவரி மாதம் 2-ந் தேதி இரவு பாளையங்கோட்டைச்
சிறையை நீங்கி எழுந்து 3-ந் தேதி விடியுமுன் ஊமைத்துரை
பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தார்; 8ந் தேதிக்குள் கோட்டை
கட்டி முடிந்து விட்டது. கும்பினிப் படை 9-ந் தேதி காலை 9
மணிக்கு வந்து பார்த்தது ஆகலால் 6 நாள் என்று கணக்கிட
நேர்ந்தனர். ஐந்தே நாளையில் எல்லாம் முடிந்திருக்கின்றன.

தலைவனை இழந்து, அரசைப் பறிகொடுத்து விட்டுப் பலவூர்
களிலும் அவமானமாய் அவல நிலையிலிருந்த குலமரபினர் ஒருங்
கே திரண்டு ஊக்கி வந்து கும்பினியாரோடு போராட மூண்டு
நின்றனர். தங்களுக்கு எள்ளல் இழைத்து இன்னல் விளைத்துள்
ளவர் என வெள்ளையர்களை அவர் வெறுத்து நின்றமையால்
பகையினத்தை வென்று தொலைக்க வேளைவாய்த்தது என்று உள்
ளம் களித்து ஊக்கி வந்து அமராடலை எதிர் நோக்கி ஆவலோடு
நின்றுள்ளார். அவரது போராசை பேராசையாய் நின்றது.

"The population of the sequestered pollams seemed to be delighted with the opportunity afforded them of trying their strength with the English once more." L. P. W.

"ஜமீன் உரிமைகளை இழந்து மறுகியிருந்த பாஞ்சாலங்
குறிச்சியார் மறுபடியும் ஆங்கிலேயரோடு போராடக் கிடைத்த

சமையத்தை நினைந்து உள்ளம் உவந்து ஊக்கி நின்றனர்'' என்னும் இது ஈண்டு ஊன்றி உணர்ந்து ஓர்ந்து சிந்திக்க வுரியது.

கும்பினியார் செய்து வந்த வம்புகளும் கொடுமைகளும் பாஞ்சாலங் குறிச்சியாருடைய நெஞ்சங்களைக் கொதிக்கச் செய்து நெடிய கோபங்களை மூட்டி நின்றன ஆதலால் அவர் நேரே போராட நேர்ந்து நேரலரை வேரறுக்க வேண்டும் என்று மூண்டு நின்றார். அந்நிலையில் போர்வெறி மண்டி அவர் உள்ளம் களித்துள்ளமையை வெள்ளையர் வியந்து குறித்துள்ளனர்.

இயல்பாக இந்தவீரமரபினர் போரில் பேராவலுடையவர் ஆதலால் நெடியபோர் நேர்ந்ததும் உள்ளே பெரியமகிழ்ச்சியாயது.

"போர்பெ றாதநாள் புல்லிய நாள்எனப் புலந்து
கார்பெ றாதபைங் கூழெனக் கரிந்துளம் கவல்வார்;
பார்பொ றாதவெம் படைவந்த தென்னினும் பயந்து
நேர்பொ ராதக லார்எதிர் ஏறிமுன் நிற்பார்."

(வீரபாண்டியம்)

என்றதனால் இவரது நிலைமைகளை நன்கு தெரிந்து கொள்ளலாம்.

தலைமையான வழிகளில் நீண்ட காலமா் மானம் மரியாதைகளோடு வாழ்ந்து வந்தவர் ஆதலால் தம் மரபுக்கு அவமானங்களைச் செய்ய மூண்டவர் மேல் நீண்ட பகைமை கொண்டு நெடிது கொதித்து யாவரும் திரண்டு அடலமர் புரிய மிடல் மண்டி எழுந்தனர். உடல் பொருள் ஆவிகளை ஒரு பொருளாக எண்ணாமல் எதிரிகளை வென்று தொலைப்பதிலேயே கண்ணும் கருத்துமாய்க் கதித்து விரைந்தனர். காரிய விரைவுகளில் வீரிய வெற்றிகள் வீறுகொண்டு யாண்டும் மீறி நின்றன.

"மானம் மரியாதை எங்கள்உயிர் அவை
ஊனமுற நாங்கள் வாழ மாட்டோம்;
வானகம் மேவினும் வையகம் ஆயினும்
ஈனம் அணுவும் இசைந்து நில்லோம்."

இந்த நிலையில் பழகியுள்ளமையால் வந்த பகையை வகையாத் தொலைக்கத் தொகையாய்த் திரண்டு தொடர்ந்து நின்றனர்.

# பத்தாவது அதிகாரம்.

## மீண்டு போனது

—∞⁂∞—

அரண் வலியும், போர் வீரர்களுடைய அடலாண்மைகளும் கும்பினியாரின் குடல் கலங்கச் செய்தன. ஊமைத்துரையை எளிதாகப் பிடித்துக் கொள்ளலாம் என்று படைகளோடு தொடர்ந்துவந்த சீமைத்துரைகள் நிலைமைகளை நேரே அறிந்ததும் மனமயர்ந்து மீண்டு போக நேர்ந்தனர். தமக்கு மூண்டுள்ள அவமானங்களை நினைந்து நாணினர். திரும்பாமலே முனைந்து போர் தொடங்கலாமா? என்று தலைமைத் தளபதி மறுபடியும் துணிந்து ஆலோசித்தார். மானத் துடிப்போடு பூதக் கண்ணாடி மூலம் மீண்டும் கோட்டையைக் கூர்ந்து நோக்கினர். படை வீரர்கள் அரணைச் சூழ்ந்து வெளியே நெடிய வேல்களோடு அமராட ஆயத்தமாய் நிற்றலைக் கண்டார்; நெடுந்திகில் கொண்டார். பிற்பகல் ஒரு மணிக்குப் பார்த்தார் ஆதலால் வேல்களும் வல்லயங்களும் வாள்களும் வெயிலில் ஒளிவீசி மிளிர்தலை நோக்கி உள்ளம் கலங்கினர்; திரும்பிச் செல்வதே நல்லது என்று தீர்மானித்தார். ஒல்லையில் மீண்டு போக உறுதியாய் ஊக்கிமூண்டார்.

### முடிவு கொண்டது.

இரவு வரையும் ஈண்டுத் தாமதித்திருக்கலாகாது; விரைவில் மீண்டு விடவேண்டும் என்றே யாவரும் விரைந்து நின்றனர். முதல் நாள் பகலில் குலையநல்லூர்ப் பக்கம் பாசறையில் தாம் பட்டபாட்டை நினைந்த போதெல்லாம் பாஞ்சாலங்குறிச்சிப் படைகளுடைய துணிவும் துடுக்கும் கோபக் கொதிப்புகளும் அவர்க்குக் கொடிய ஆபத்துகளாய் நேரே நெடிது தோன்றின. அன்று அங்கு நின்றால் அடியோடு அழிந்து படவே நேரும் என்று நன்றாக அறிந்து கொண்டமையால் உடனே பாளையங் கோட்டைக்கே திரும்பிச் செல்லவேண்டும் என ஒருமுடிவாய்க் கடிது துணிந்தார். மீண்டு போக வேண்டும் என்று மூண்டு முனைந்தவர் ஆண்டிருந்து மீள்வதைக் குறித்துப் பின்பு ஆலோசிக்கலாயினர். "நாம் ஒதுங்கி அகல்வதை எதிரிகள் தெரிந்தால் உடனே தொடர்ந்து ஓடிவந்து வளைந்து கொள்வர்; அங்ஙனம்

ஆயின் எங்ஙனம் மீள்வது? எவ்வாறு உய்ந்து போவது? எப்படித் தப்புவது?'' என இப்படியெல்லாம் அவர் தப்பிச் செல்வதையே நினைந்து நினைந்து உளைந்தார். வெள்ளைத் தளபதி உள்ளத் திகிலோடு முடிவில் ஒரு முடிவுக்குக் கடிது வந்தார்.

## தந்திரி செய்த தந்திரம்.

“எதிரியினுடைய படைகள் கொடிய கொலைக் கருவிகளைக் கையில் ஏந்திக்கொண்டு போருக்கு ஆயத்தமாய் நெடிது ஊக்கி நம்மை எதிர்நோக்கி நிற்கின்றன. இந்த நிலையில் நாம் பின் வாங்கிப் போவதைக் கண்டால் எள்ளலாக எண்ணி எதிரிகள் முதிர் வேகத்தோடு மூண்டு முடுக்கி நீண்டு போர் செய்ய நேர்வர். அங்ஙனம் நேரின் அது நமக்கு நெடிய பிழையாகிக் கொடிய கேடாய் முடியும். நமது மீட்சி தோல்வியாகாமல் வெற்றிகரமாய் விளங்க வேண்டும்'' எனச் சேனாதிபதி அதிசாதுரியமாய் உறுதி செய்து உரைத்தார். கேப்டன் மார்ட்டின், [Captain Martin] ஷெப்பேடு, (Sheppard) வெசி (Vesey) முதலிய உப தளபதிகளும் தலைமைத் தளபதியின் உபாயத்தை வியந்து அபாயத்தைக் கடந்து போக ஆயத்தமாயினர். புறங்காட்டிப் போவதிலேயும் தங்கள் திறங்காட்டி மறங்காட்ட நேர்ந்தார்.

கோட்டை மேல் போர் தொடுக்க மூண்டு எழுந்ததாக வெளியே ஆடம்பரமாகப் பாவனை காட்டி எதிரிகளை ஏமாற்றி இதமாய் மீண்டு போய்விடவேண்டுமென்று உள்ளே விரகுடன் துணிந்தார். கள்ள வேலைகளைக் கரவுடன் திரமாய்ப் புரிந்தார்.

அவர்களுடைய ஆயத்தங்கள் மிகவும் விரைவாகவும் எச்சரிக்கையாகவும் நடந்தன. எல்லாரும் உணவுகள் அருந்தினர். ஒல்லையில் மீள உபாயங்கள் புரிந்து எல்லைகள் வரைந்தனர்.

## பின் வாங்கியது.

பிற்பகல் இரண்டு மணிக்குப் போர்செய்யத் துணிந்ததாகச் சங் குழல்களை ஊதிப் போர் முரசங்களை முழக்கினர். பட்டாளங்கள் எழுந்தன; யாண்டும் கட்டாக அணிவகுத்து நின்றன. முன் பக்கத்திலும் வலம் இடமாகவும் குதிரைப் படைகளை நெட்டாக நேரே நிறுத்தினர். கூடாரங்களின் மறைவுகளில் காலாட் படைகளை ஒரு முகமாக விரகுடன் செய்தனர். கொண்டு வந்திருந்த உபகரணங்களையெல்லாம் பல மூட்டைகளாகக் கட்டி

நடுவே தொகுத்தனர். பீரங்கிகள் முதலிய யாவும் ஓரங்களாய் உருவாகி நின்றன. ஓட்டத்தில் வல்ல சிப்பாயிகள் குதிரைப் படைகளின் அருகே வரிசை வரிசையாய்ப் பிடித்தவெடிகளோடு தொடுத்து நின்றனர். எல்லாம் ஆயத்தமானவுடன் மெல்லப் பின் வாங்கிப் போகும்படி தலைமைத்தளபதி கட்டளையிட்டார். சுமைகளும் பொதி மாடுகளும் முதலில் நடந்தன. படைகள் அடைவாக அடுத்துச் சென்றன. தளபதிகளும் நடுவே குதிரை களில் போயினர். நேரே போருக்கு வருவதாகப் பாவனைகாட்டி முன்னே மூண்டு நின்ற குதிரைப் பட்டாளங்கள் மாத்திரம் பின்னே போக நேர்ந்தன. 2 மணிக்குத் தொடங்கிய ஆயத்தங் கள் ஐந்து மணிக்கு முடிந்தன. முடிவு வினயமான விடிவாயது.

பாஞ்சை வீரர் ஏமாந்து நின்றது.

கும்பினிப் படைகள் போருக்கு மூண்டு எழுந்தன என்று முதலில் இரண்டு மணிக்குத் தெரிந்தவுடனே ஊமைத்துரை படைகளை ஊக்கினார். போர் வீரர்கள் யாவரும் நேரே ஆவ லோடு பொங்கி நின்றனர். வேல்களும், வாள்களும், வல்லயங் களும் சூரியன் ஒளியில் பள பள என்று மின்னி விளங்கின.

கோட்டை அருகிலும் சம வெளிகளிலும் மதில்களிலும் கொத்தளங்களிலும் கூட்டம் கூட்டமாய்த் திரண்டு இன்று நல்ல வேட்டை வாய்த்தது என்று வேட்கை மீதூர்ந்து படை வீரர்கள் எல்லாரும் முதிர் வேகத்துடன் எதிரிகளை எதிர்பார்த்து நின்றனர். அந்த நிலை வெற்றி வீறுகளோடு விரிந்து நின்றது.

படைகள் முன்னேறி வரும் வரும் என்று கருதி நின்ற இவர் எதிரிகளுடைய கால தாமதத்தைக் கண்டதும் சாலவும் திகைத்தார். வஞ்சனை சூதுகளை நன்கு தெரியாதவர் ஆதலால் நெஞ்சங்களில் பல பல நினைந்தார். எண்ணிய எண்ணங்கள் இவருடைய கண்ணியங்களை வெண்மையாக் காட்டி நின்றன.

"வெள்ளைக்காரர் மிகவும் தந்திரசாலிகள்; யுத்த முறையில் நன்கு பயிற்சி பெற்றவர்கள்; எங்கும் இதமாய் முயற்சித்து வருபவர் ஆதலால் படைகளை முறைப்படி அணிவகுத்து மேலே நடத்தி வருவார்கள்; வரட்டும் வரட்டும்" என்று மிகவும் இவர் எதிர்பார்த்து நின்றார். இவர்களுடைய பார்வைகள் எல்லாம் போர்மேல் மூண்டு நிற்க அவர் புறங்காட்டிப் போவதில் நீண்டு

நின்றார். மாறுபாடுகள் வேறுபாடுகளாய்க் கூறுபட்டு நின்றன.

முன் அணியில் நின்ற குதிரைப்படைகளை அங்கும் இங்கும் செலுத்தி அமராட வருவது போல் பாசாங்கு காட்டி வந்தவர் முடிவில் கடிது பின்வாங்கிப் போவதைக் கண்ட போதுதான் இவர்க்கு உண்மை தெரிந்தது. பகை வகைகளின் செயல்கள் நகை வகைகளாய் வந்தன. தொகையாய்த் துணிந்தனர்.

பின் தொடர்ந்தது.

சண்டை செய்யவந்த வெள்ளைத்துரைகள் நம்மை ஏமாற்றி விட்டு உள்ளம் பயந்து ஓடுகிறார் எனப் படை வீரர்கள் அறிந்த வுடனே அனைவரும் விரைந்து பின் தொடர்ந்தார். ஓடுகிறவனைக் கண்டால் முடுக்குகிறவனுக்குப் பீடு என்று இந் நாட்டில் வழங்கிவரும் பழமொழிக்கு அன்று அவர் காட்டாய் நின்றார். நீட்டிய வேல்களோடு இவர் ஒருங்கு திரண்டு ஓட்டமாய்த் தொடர்ந்து அடர்ந்தார். எட்டாவது மைலில் எட்டிப் பிடித்தார். அப்பொழுது இரவு ஏழு மணி. பொல்லாத புலிகள்போல் வல்லயங்களோடு இவர் வந்து பாயவே அவர் சிந்தை கலங்கித் திகைத்து அலமந்தார். உடனே தேறிப் படைகள் மீது மாறிச் சீறினர். கொடிய போர்கள் கடிது மூண்டன. நெடிய திகில்கள் எங்கும் நீண்டன. அடி, பிடி, குத்து, வெட்டு, கொல்லு என்னும் கோர ஒலிகள் மீறி எழுந்தன. போர் வெறிகள் பொங்கி நின்றன.

பொருது வந்தது.

கருமருந்துகள் நிறைந்த துப்பாக்கிகளைக் கும்பினிப் படைகள் கும்பலாய்த் தாங்கிச் சென்றார் ஆதலால் எதிரிகள் புகுந்த வுடன் முதிர் வேகத்துடன் மூண்டு சுட்டனர். பாஞ்சைப் படையுள் பலர் பட்டு மாண்டனர். நான்கு புறங்களிலுமிருந்து உள்ளே பாய்ந்து ஏறி வாள்களாலும் வேல்களாலும் வெட்டிக் குத்திச் சூறையாடினர் ஆதலால் கால் இழந்தும் கையிழந்தும் தலை இழந்தும் அவருள் பலர் அழிந்து வீழ்ந்தனர். குதிரைகளிலிருந்து கொண்டு கைத் துப்பாக்கிகளைக் கடிது செலுத்தித் தளபதிகள் நெடிது ஊக்கினமையால் படைவீரர்கள் சுடு வெடிகளைத் தொடுத்து மடுத்துக் கடுத்துச் சுட்டார். இரவு இருட்டு ஆதலால் இருதிறப் படைகளும் இனம் தெரியாமல் மருண்டு மல்லாடி அல்லலுழந்தன. முன்னணியில் நின்றவர் மூண்டு

சுட்டுக் கொண்டே பின்வாங்கிப் போயினர். அரை மைல் தூரம் நடந்து தொடர்ந்து இருவகை படைகளும் அமராடிச் சென்றன. எட்டு மைல் தூரம் வேகமாய் ஓடிவந்து ஏகமாய்ப் போர் புரிந்தமையால் இவர் கருதியபடி நின்று உறுதியாக ஒன்றும் செய்ய முடியவில்லை. உள்ளம் மறுகி உருத்து மீண்டார்.

பாஞ்சைக் கோட்டையை நோக்கி இவர் மீண்டு வரவே அல்லல் ஒழிந்ததென்று பாளையங்கோட்டையை நோக்கி அவர் ஒல்லையில் ஏகினர். இரு திறத்திலும் கொலைகள் பல விழுந்தன. மாண்டு பட்ட பிணங்கள் இரவு முழுவதும் ஆண்டே கிடந்தன. இரண்டு வகையாரும் இழவுகளுடையராய்ப் பிளவுகள் கொண்டு பிரிந்து போயினர். போராடல்கள் புலைபாடல்களாயின.

பாளையங்கோட்டை அடைந்தது

கொடிய பகைவரிடமிருந்து நாம் தப்பினோம் என்று அவர் நெடிது மகிழ்ந்தாலும் எல்லாருடைய நெஞ்சங்களிலும் திகில்கள் நிறைந்திருந்தன. கையில் கொண்டு வந்திருந்த வெடிகள் சிலவற்றை எதிரிகள் பறித்துக் கொண்டு போனமையால் பலர் பரிந்து நாணினர். சேனைத்தலைவராய் வந்த மேக்காலே துரை மானத்தால் புழுங்கி மனம் மிக வருந்தினர் யாண்டும் அடையாத அவமானம் ஈண்டு நேர்ந்ததே! என்று இரங்கி நொந்து படைகளை அடைவாக நடத்திச் சென்றார். மீண்டும் எதிரிகள் வழியிடையே மறைந்திருந்து மூண்டு அழிவுசெய்வரோ? என்று இரவு முழுவதும் எவ்வழியும் விழியூன்றி நோக்கி எங்கணும் எச்சரிக்கையாய்த் தமது மீட்சியைக் காட்சியோடு கருதிப் போனார். பொழுது விடிந்த போதுதான் அந்த வெள்ளைத்துரையின் உள்ளக்கவலை ஒருவாறு நீங்கியது. சூரியன் உதயமாகி எட்டு நாழிகை அளவில் பாளையங்கோட்டையை அடைந்தார்.

ஊமைத்துரையை பிடிக்கச் சீமைத்துரை படை எடுத்து வந்ததும், ஒன்றும் முடியாமல் உள்ளம் உடைந்து மீண்டு போனதும் ஆகிய இச் செய்திகள் நாடெங்கும் பரவின. நகை விளைத்து நின்றன. பாஞ்சையின் கீர்த்தி எங்கும் ஓங்கி நின்றது.

இந்தப் படை எழுச்சியைக் குறித்து உடன் வந்திருந்த தளபதி எழுதிவைத்துள்ள வாசகம் ஒன்று அயலே வருகின்றது.

"We could plainly discern a body of fifteen hundred or two thousand men outside of the boundary hedge, their long spears glittering in the sun. (R. G.)

"ஏறக்குறைய இரண்டாயிரம் போர் வீரர்கள் நெடிய வேல்களோடு கோட்டையைச் சூழ்ந்து நிற்பதை நாங்கள் நேரே கண்டோம்; சூரியன் ஒளியில் அவ் வேல்கள் மின்னின" என்னும் இதனால் அவர் உன்னி நின்றமை உணரலாகும். பாஞ்சை வீரர்களுடைய நிலைமைகளை இங்ஙனம் அறிந்து கொள்ளவே வெள்ளையர் விரைந்து பின்வாங்கி மறைந்து போக நேர்ந்தனர்.

"As soon as the formation was completed, we commenced our march, not for the Fort, but for Palamcottah, and when we were overtaken in the dark, by a body of the enemy, who rushed on us with shouts and screams, almost to the bayonet." (R. G.)

"யாவும் ஆயத்தம் ஆனவுடனே நாங்கள் புறப்படத் தொடங்கினோம்; பாஞ்சைக் கோட்டைமேல் போருக்கு அல்ல; பாளையங்கோட்டையை நோக்கியே; மீண்டு திரும்பிய எங்களைப் பின் தொடர்ந்து எதிரியின் படைகள் ஆரவாரமாய்க் கூவிக் கொண்டு மூண்டு வந்து பாய்ந்தன" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. கொடிய போராட்டங்கள் நெடிய மாறாட்டங்களாய் நிலவி நிற்கின்றன. ஏறி வந்தவர் மாறி மீளவே இவர் சீறி மூண்டுள்ளார். பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் அங்கே போருக்கு மூண்டு நின்றதும், அந் நிலையைக் கண்டு குப்பினிப் படைகள் மனமுடைந்து மீண்டதும், இவர் முடுக்கித் தொடர்ந்து கடுத்து அடர்ந்ததும், அவர் கலங்கி அலமந்து ஓடியதும் ஆகிய உண்மை நிலைகளை இதனால் தெளிவாக அறிந்து கொள்ளுகிறோம்.

## பாஞ்சையர் கவர்ந்தது

புறங்காட்டிப் போன குப்பினிச் சேனைகளை வம்பாகத் தொடர்ந்து வழி மறித்து வன்சமராடி வெங் கொலைகளை விளைத்து வெடிகள் முதலிய ஆயுதங்களைப் பறித்துக் கொண்டு விரைந்து மீண்ட பாஞ்சாலங்குறிச்சி வீரர் ஊமைத்துரையைக் கண்டு சீமைத் துரைகளுடைய நிலைகளைச் சிரித்துக் கூறினார். தங்களுடைய படையுள் சிலர் இறந்து பட்டாலும் எதிரி உடைந்து போனதை நினைந்து உள்ளம் உவந்து ஊக்கி நின்றார்.

வெள்ளையர்களைத் தொடர்ந்து அடர்ந்துபோராடி அவர்களுடைய படை வெடிகளைக் கொள்ளைசெய்து வந்தவர்களுள் கோத்தாளமுத்து என்பவன் சிறந்த குறிகாரனாய் விளங்கி நின்றான்.

கொத்தாள முத்தென்னும் கொண்டயங்கோட்
  டைமறவன் கொதித்துப் பாய்ந்தே
எத்தாலும் வெலற்கரியான் எனநின்ற
  தலைவனுடன் எதிர்த்து நான்தான்
செத்தாலும் உன்னைவிடேன் என்றுசினந்து
  அவனுயிரைத் தின்று அன்னான் கை
வைத்தாடல் புரிந்திருந்த வாள்வெடியைக்
  கவர்ந்து வந்து வணங்கி நின்றான். (1)

அன்னவன்றன் அருவலியும் அயல்வீரர்
  அடுதிறலும் ஆர்வத் தோடு
மன்னன்முறை முறைநோக்கி மனமகிழ்ந்து
  மிகப்புகழ்ந்து வரிசை யாகப்
பொன்னணியும் மணியணியும் புகழ்க்குரிய
  பெருந்தகவும் பொருந்தத் தந்தான்
இன்னகுல மன்னனமெம் இன்னுயிர்என்று
  அவரெல்லாம் ஏத்தி நின்றார். (2)

இன்னவாறு இம்மன்னன் படை வீரர் துன்னிய அன்போடு சூழ்ந்து நின்றார் மாற்றாரோடு போராடி ஏற்றமுற்று வந்தவர் ஆற்றலை வியந்து அகம் மகிழ்ந்திருந்தார். பகைவரிடமிருந்து கவர்ந்து கொண்டு வந்த கருவிகள் யாவும் ஆயுத சாலையில் சேர்க்கப் பட்டன. புறங்காட்டிப் போனவர் மறுபடியும் மறங்காட்டி வருவர் என்று சிலர் மதித்து வந்தனர். பொல்லாத அமராடல்களை உல்லாச விளையாடல்களாக எல்லாரும் கருதி எவ்வழியும் மூண்டு யாண்டும் எதிர்பார்த்து நின்றனர்.

## படை எழுச்சியின் பலன்.

முதலாவது படை எழுந்து வந்ததும், இடை வழியில் அல்லற்பட்டுப் பாஞ்சாலங்குறிச்சியை அடைந்ததும், பாளையம் இறங்கினதும், அதிசயமாய் வளர்ந்து நின்ற கோட்டையைப் பார்த்து ஆச்சரியப் பட்டு மாச்சரிய முற்றதும், எதிரி கொடிய படைகளோடு வலிமை கொண்டிருப்பதை நினைந்து திகைத்ததும், இரவில் வந்து கூடாரத்தை வளைந்து கூட்டோடு அழிக்கக்குறிக்

கொண்டுள்ளனர் என ஒற்றர் வந்து உளவு கூறவும் தளபதிகள் உள்ளம் கலங்கி உடனே பட்டாளத்தை எழுப்பிக் கள்ளமாகப் புறங்காட்டிப் போகச் செய்ததும், பாஞ்சை வீரர் பின் தொடர்ந்து இடைமறித்து அடுபோர் புரிந்ததும், இரு வகையிலும் படுகொலைகள் விழுந்ததும், சுடு வெடிகளின் உதவியால் அவர் அரிது தப்பிக் கடிது போனதும், வழிகள் தோறும் விழிகள் பரப்பி மறுகி நடந்து இரவு முழுவதும் விரைந்து சென்று மறுநாள் காலை 9-மணிக்குப் பாளையங்கோட்டையை அடைந்ததும், இந்தப் படையெழுச்சியின் பலன்களாய் முடிந்தன.

"Severe march, which lasted all night, than by imagination, which placed an enemy behind every bush on the road."

"இரவு முழுவதும் கடினமான பயணம்; வழியிடையே ஒவ்வொரு புதரிலும் பகைவர் ஒளிந்திருப்பரோ! என்று திகிலோடு வந்தோம்" என இங்ஙனம் அவர் குறித்திருத்தலால் நேர்ந்துள்ள நிலைமைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். யாண்டும் காணாத தோல்வியும் அல்லலும் ஈண்டு நேரே நீண்டு கண்டமையால் எவ்வழியும் யாவரும் மூண்டு முயன்றனர்.

எதிரியின் அரிய பெரிய திறல்களை நினைந்து பெரிதும் மறுகினர்.

தரையோடு தரையாகத் தட்டிவிட்ட
கோட்டையைவான் தட்டக் கட்டிக்
கரையோடு பொருகடல்போல் கடும்பரியும்
காலாளும் கணக்கில் லாமல்
நிரையோடு நிறைத்துவைத்து நெடுந்தோளின்
தினவோடு தினமும் நேரே
வரையாமல் வருபோரை வழிநோக்கி
நிற்கின்றான் வன்மை என்னே!

என இன்னவாறு எதிராளியினுடைய வலி நிலைகளையெல்லாம் உன்னி யுளைந்து உறுதி குலைந்து பெரிதும் அவர் கவன்றார்.

சிறையை உடைத்துத் தனது பாதுகாவலைக் கடந்து ஊமையன் போய் விட்டானே! என்ற உள்ளக் கொதிப்போடு படை யெழுச்சியில் அடைந்த அவமானமும் சேனைத் தலைவருடைய உள்ளத்தை மிகவும் வருத்தி நின்றது. வெள்ளைக்காரர்

எல்லாருக்கும் பெரிய எள்ளல் நேர்ந்தது என்று அவர் மறுகி மயங்கி உறுதிகளை ஊக்கி நாடினார். குப்பினி அதிபதிகளுக்கு நிலைமையைக் கடுமையாக எழுதி விடுத்தார்; பல இடங்களினு மிருந்து படைகளைத் தொகுத்தார். போரில் கைதேர்ந்த தளபதி கள் யாவரும் வந்து சேரும்படி கடிதங்கள் அனுப்பினர். அந்த நாளில் தந்தி தபால்கள் இல்லையாதலால் யாவும் அஞ்சல்களிலே யே சென்றன. நெஞ்சத் திகில்களோடு வேலைகள் நடந்தன.

சேனாதிபதி திருமுகங்கள் திசைகள்தோறும் போகவே படைகள் வந்து குவிந்து கொண்டிருந்தன. காரிய ஆலோசனை கள் யாவும் வீரியங்களாய் விரைந்து நடந்தன. எல்லாம் போர் முகமாய்ப் பொங்கி யெழுந்தன. எதிரியின் வலிமையை நேர் முகமாய் அறிந்துவந்தவர் ஆதலால் முதிர் வேகமாய் மூண்டு யாண்டும் அமர் ஆற்றல்களை ஏற்றமாய்ப் பெருக்கலாயினர்.

## சேனைப் பெருக்கம்

தானைத் தலைவன் மானத் துடிப்போடு எவ்வழியும் ஊக்கி முயன்றான். பாஞ்சையர் வீரம் படுதிகில்களை விளைத்து வந்தமை யால் நெடிது கவன்று வந்தான். குப்பினி ஆட்சி இந் நாட்டில் நிலைத்து நில்லாமல் நிலைகுலைந்து போய் விடுமோ? என்ற கவலை தளபதி நெஞ்சைக் கலக்கி வந்தது. பட்டாளங்கள் கட்டாக விரைந்து வந்து சேரும்படி முடுகி வேலை செய்தமையால் யாவும் கடிது அடைந்தன. படைகளின் வரவு தொடர்பாய் வந்தது.

"Troops were pouring in from various quarters, till the 27th."

"இருபத்தேழாந் தேதி வரையும் பல இடங்களினுமிருந்து சேனைகள் வந்து குவிந்து கொண்டிருந்தன" என்று இங்ஙனம் குறித்திருத்தலால் படைகளின் குவியல்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். 27—2—1801 வரை சேனைகள் திரண்டன.

ஊமைத்துரை அங்கே அவ்வாறு ஆயத்தம் செய்து வர, ஊமைத்துரை இங்கே எவ்வாறு சேமத்தை நாடிச் செய்து வந் தார்! என்பதை அயலே செவ்வையாக நாம் காண வருகிறோம்.

# பதினோராவது அதிகாரம்.

## ஈண்டு நிகழ்ந்தது.

போருக்கு மூண்டுவந்த படைகள் நேரே போர்மேல் ஏறாமல் மாறாய் மீண்டு போனதை நினைந்து ஊமைத்துரை உவந்து நின்றார் ஆயினும் உறுவதை எதிர் நோக்கிக் கருமங்களை இரவும் பகலும் கருதிச் செய்தார். கோட்டையைக் கட்டி அரணைப் பலப்படுத்தியது போல் போர்க் கருவிகளைத் தலைமையாக நிலைப்படுத்தினார். பிப்ரவரிமாதம் பத்தாந் தேதி (10–2–1801) மாலையிலிருந்தே ஆயுதசாலைகளைத் தக்கபடி ஆயத்தம் ஆக்கினார். எதிரிகளுடைய இயல்புகளையும் செயல்களையும் அதி மதியூகமாய்க் கவனித்து வந்தார். பொல்லாத சூழ்ச்சியாளர்கள் என வெள்ளையர்களை உள்ளம் கருதியுள்ளமையால் இவர் யாண்டும் விழிப்பாக விரைந்து புரிந்தார். இரு திறத்தாரும் பொரு திறங்களையே கருதி முயன்று உறுதி பூண்டு நின்றார். உடைந்து போன கும்பினித் தலைவர் இடங்கள்தோறும் முடங்கல்கள் போக்கிச் சேனைகளைத் திரட்டிக்கொண்டிருப்பதை நன்கு தெரிந்து எங்கும் இவர் துரிதமாக வேலைகள் செய்தார். அதிகார ஆட்சிகளுக்கு உரிய பக்க பலங்களையே முக்கியமாகக் கருதி முனைந்தார்.

### எல்லைகள் தேர்ந்தது

தமக்கு உரிமையாக நெல்லை மண்டலத்தில் கும்பினியார் அதுவரையும் எல்லை செய்திருந்த எல்லா இடங்களையும் இவர் கைப்பற்றிக் கொண்டார். முன்னம் பாளையகாரரிடமிருந்து கவர்ந்த ஆயுதங்களையெல்லாம் சிந்துபூந்துறையிலும் ஸ்ரீவைகுண்டத்திலும் அவர் சேமமாகச் சேர்த்து வைத்திருந்தார். வேல் வாள் வெடி முதலிய போர்க் கருவிகள் அங்கே திரளாக நிறைந்திருந்தன. அந்தப் படைக்கலங்களையெல்லாம் எடுத்து வரும்படி ஊமைத்துரை தம் படைகளை அனுப்பினார். எழுநூறுபோர் வீரர்கள் எழுந்தனர். வீரலக்கு, ரணவீரசின்னு, ஜெயவீரராமு, ஆதிமுத்து, இராமதளவாய், இராஜபொம்மு, சின்னபாலு என்னும் இந்த எழுவீரர்களும் அந்தப் படைக்குத் தலைவர்களாய்ச் சென்றனர். சேனைகளை நடத்திப்போய்க் குறித்த இடங்களிலிருந்த

ஆயுத சாலைகளை விரைந்து வளைந்தனர். அங்கே காவலாளிகளா யிருந்த யாவரையும் அடித்து விரட்டினர். அனைவரும் வெருண்டு ஓடினர். ஆயுதங்களையெல்லாம் கவர்ந்து கொண்டு இவர் மீண்டு வந்தனர். திரண்ட படைக் கலன்களைக் கண்டதும் ஊமைத்துரை உள்ளம் உவந்து கொண்டார். பசித்தவன் உணவைக் கண்டது போல் அந்தக் கொலைக் கருவிகளை நோக்கி இவர் உவகை மீக் கூர்ந்து நின்றமையால் உள்ள நிலைமைகள் உலகம் அறியவந்தன.

## வெள்ளையர் மீது வெறுப்பு

இந்த நாட்டில் வெள்ளையர்களை இல்லாமல் செய்வதே தன் னுடைய முதல் வேலை என்று இவர் யாரிடமும் வீறோடு கூறி வந்தார். தன் அண்ணனைக் கொன்று அரசினைக் கவர்ந்து இன் னல் பல புரிந்துள்ளமையால் கும்பினியார்மீது இவர் கொதித்து நின்றார். கொதிப்பு நாளும் கதித்து வளர்ந்தது. அயல் நாட்டி லிருந்து வந்தவர் இந் நாட்டவரைத் தலைநீட்ட ஒட்டாமல் யாண் டும் நிலையடக்கி வருகிறார் என நெஞ்சம் கடுத்து நின்ற இவர் எவ்வழியும் அவரை வஞ்சம் தீர்க்கவே வருமமாய் மூண்டார். தாம் கருதியபடி உறுதியாக வேலை செய்யக் கருவிகள் கிடைத் தமையால் பெருமகிழ்ச்சி யடைந்தார். அவரது ஆட்சியைக் குலைத்து ஆங்காங்கு வகை வகையாய் இருந்த ஆயுதங்களை எல் லாம் இவர் தொகை தொகையாய்த் தொகுத்து ஈட்டி வந்தார்.

## காடல்குடியில் நேர்ந்தது.

அவ்வாறு செய்து வருங்கால் இவர் கைவசமான காடல் குடி ஜமீனை மீண்டும் கைப்பற்றத் துணிந்து கும்பினியார் ஆண்டு ஒரு படையை அனுப்பினர். அந்தச்சேனைக்கு [Captain Hazard] கேப்டன் ஹாசாடு என்பவர் தலைவராய்ச் சென்றார். அதிரகசிய மாய்ச் சென்ற அந்தப் படையெழுச்சியை முன்னதாகவே அறிந்து கொண்டமையால் இரண்டாயிரம் போர் வீரர்களை அங் கே ஊமைத்துரை அனுப்பி யிருந்தார். சீமைத் துரைகளுடைய செருக்கை அறுத்தொழிக்க வேண்டும் என்று சேனைத் தலைவர் கள் சீறிச் சென்றனர். மான வீரர்கள் மருவி விரைந்தனர்.

"சரியான பாதுகாப்பில்லை; மெலிந்துள்ளது; எளிதாகக் கைப்பற்றிக் கொள்ளலாம்" என்று களிமிகுந்து வந்த கும்பினிப் படைகள் இந்தப் பாஞ்சைப் படைகளைக் கண்டதும் பரிந்து

கின்றன. தாம் கருதி வந்தது போல் இல்லையே! என்று உறுதி குலைந்தாலும் தளபதிகள் ஊக்கி ஏவினமையால் பட்டாளங்கள் போருக்கு மூண்டன. சுடு வெடிகளோடு சுற்றி வளைந்தன. பாஞ்சை வீரர்கள் நேருக்கு நேர் எதிர்ந்தனர். நெடும் போர் மூண்டது; சிலர் மாண்டு பட்டனர். கருமருந்துகளையும் கை வெடிகளையும் ஒரு சிறிதும் மதியாமல் பொரு திறலோடு இவர் போராடுவதைக் கண்டு சேனைத் தலைவன் சிந்தை திகைத்தான். நொந்து பதைத்தான். இறந்து போனவர் போக மீதியுள்ள படைகளை மீண்டு கொண்டு போனான். பாளையங்கோட்டையை அடைந்தான்; தலைமைத் தளபதியிடம் நிலைமைகளை யெல்லாம் நேரே சொல்லினான். யாவரும் அலமரலோடு பலபல நினைந்தார்.

## தளபதிகள் உளைந்தது

"எதிரியின் ஏற்றம் பெரிதாய் வருகிறது. யாண்டும் மூண்டு புகுந்து நம்முடைய உரிமைகளை யெல்லாம் கவர்ந்து கொண்டு போகிறான். சென்ற இடங்களிலெல்லாம் அவன் வென்றி யடைந்து கொள்ளுகிறான்; நாம் தோல்வியடைந்து மீளுகிறோம். நாட்டில் பெரிய அவமானங்கள் நமக்கு நேர்ந்தன. இந்தக் கேட்டிலிருந்து நாம் தப்பி உய்ய வேண்டுமானால் சிறந்த படைகளை விரைந்து கொண்டுவர வேண்டும். தாமதம் செய்தால் எல்லாவற்றையும் நாம் இழந்து போகவே நேரும். கொடிய குல விரோதியாய் நம்மை நெடிது வெறுத்திருத்தலால் கும்பினிப் படைகளை எங்கே கண்டாலும் ஊமையன் படைகள் கொன்று தொலைத்து விடுகின்றன. வென்றி வீறுகளோடு எங்கும் அவை விரிந்து திரிகின்றன; வெந்துயர் புரிகின்றன" என இன்னவாறு சிந்தை கலங்கி நிலைமைகளை யெல்லாம் நினைந்து நினைந்து நெடிது கவன்றார். அவருடைய கவலைகள் பாஞ்சை வீரர்களுடைய நிலைகளை விளக்கி நின்றன. இவர்களுடைய அஞ்சாமையும் அருந்திறலாண்மைகளும் அவர்களுடைய நெஞ்சங்களைக் கலக்கி நெடும் பீதிகளை விளைத்துக் கடுந் திகில்களை வளர்த்து வந்தன.

## வைகுண்டம் வந்தது

பாஞ்சாலங்குறிச்சி ஜமீனுக்கு உரிமையா யிருந்த ஊர்களை யெல்லாம் கும்பினியார் முன்னம் பறித்துக் கொண்டார் ஆத

லால் அவை யெல்லாவற்றையும் ஊமைத்துரை மீண்டும் கவர்ந்து வேண்டிய காரியங்களை யாண்டும் மூண்டு விரைந்து செய்தார்.

முன்னம் சேனாதிபதியாய் வந்திருந்த பானர்மேன் [John Bannerman] இந் நாட்டுப் பாளையகாரருக்கு 21—10—1799ல் இட்ட கட்டளைப்படி ஜமீன்தார்களிடமிருந்து பறித்துச் சேர்த்த ஆயுதவகைகளை யெல்லாம் பல இடங்களிலும் ஆராய்ந்து கவர்ந்து கொண்டதோடு கும்பினிப் படைகளுக்காகத் தொகுத்து வைத்திருந்த வெடிகள் பீரங்கிகளையும் நெடிது கொண்டு போய்ப் பாஞ்சையில் சேர்த்தனர். நாட்டுரிமைகளைவிட யுத்ததளவாடங்களையே கண்ணும் கருத்துமாய் எண்ணி ஊமைத்துரை சேர்த்து வருவது கும்பினியின் சேனைத் தலைவர்களுக்கு மிகவும் கொதிப்பை மூட்டியது. தம்முடைய மதிப்பெல்லாம் இழந்து மானம் அழிந்து ஈனமடைந்து போனதாகவே அவர் எண்ணித் தவித்தார். எதிரியின் நிலைமையை நாளும் நாளும் மேலே எழுதியனுப்பிப் பெரியபடைகளை அனுப்பியருளும்படி பரிந்துவேண்டி எவ்வழியும் எங்கும் கருமங்களில் விரைந்து நின்றனர். தங்களுடைய உரிமைகளும் படைக்கலன்களும் பறிபோயின என்று மறுகி நொந்து யாண்டும் விரைந்து மூண்டு முயன்றனர்.

"Several of our small posts in the surrounding country fell into the hands of the enemy, by which means they have captured nearly one thousand musquets with their ammunition."

R. G

"தேசத்தில் நமக்கு உரிமையாயிருந்த பகுதிகள் பல எதிரியின் கைவசமாயின; அதன் மூலமாய் ஆயிரம் வெடிகளும் அநேக யுத்த தளவாடங்களும் அவர் அடைந்திருக்கிறார்" என இங்ஙனம் சேனைத் தலைவர் வரைந்திருத்தலால் இவர் துணிந்து புகுந்து கவர்ந்திருக்கும் நிலைகளை உணர்ந்து கொள்ளலாம். கும்பினிப் படை புறங்காட்டி மீண்டதிலிருந்தே பாஞ்சாலங்குறிச்சியார் யாண்டும் மறங்காட்டி வேலை செய்ய மூண்டார். இழந்து போன உரிமைகளை யெல்லாம் பதினைந்து தினங்களுள் மீளவும் இவர் அடைந்து கொண்டனர். பாளையத்தை அடுத்திருந்த ஊர்களை யெல்லாம் கைவசம் செய்து கொண்டபின் தெற்கே படை எடுத்துச் சென்றார். உக்கிர வீரர்கள் எங்கும் ஓங்கிநின்றனர்.

தென்னாட்டு வரிகளையும் வாரங்களையும் வசூல்செய்து வைப்பதற்கு ஸ்ரீவைகுண்டம் தலைமைத் தானமாய்க் கும்பினியாருக்கு அமைந்திருந்தது. முன்னம் தானாதிபதி சிவசுப்பிரமணிய பிள்ளை வந்து நெல்லை வாரிச் சென்றது இந்த ஊரிலேதான் என்பது முதல்பாகம்படித்தவாசகர்களுக்குநன்குஞாபகமிருக்கலாம்.

எள்ளளவும் இந்த நாட்டினில் வெள்ளையர்க்கு
இல்லை இடம்என ஏறிவந்து
உள்ள பொதிகளில் நெல்லினை வாரியே
பிள்ளைமகன் அன்று வென்று போனான்.

என்னும் நாட்டுப் பாட்டுகளால் கும்பினி நெல்லைக் கொள்ளை செய்து போன அந்தப் பிள்ளையின் உள்ளத்தையும் வெள்ளையர் நிலையையும் இங்கே அறிந்து கொள்ளுகிறோம். கால நிலைகளையும் நாட்டுப் பற்றுகளையும் பாட்டுகள் ஓரளவு காட்டி வருகின்றன. காட்சிகளையும் ஆட்சிகளையும் நாம் கருதி வருகிறோம். குறைகளையும் குற்றங்களையும் விரைவில் சொல்லி விடாமல் நிலைகளைச் சீர்தூக்கிநோக்கி உரைகளைஓர்ந்துபேசவேண்டும்.

அந்நிய நாட்டினர் வந்து ஈண்டு மண்டியிட்டு உள்நாட்டில் வஞ்சமாக வேண்டியவர்களைத் துணை சேர்த்துக் கொண்டு யாண்டும் ஆண்டவராய் ஆட்சி செலுத்த நேர்ந்தமையால் இயல்பாகவே இங்கு மாட்சியில் மிகுந்திருந்த பாஞ்சாலங்குறிச்சியார் பணியாமல் நின்று துணிவோடு எதிர்த்தனர். துயரங்கள் மூண்டன. சுய மானமின்றி நய வஞ்சகர் சிலர் அயல் நின்று புரிந்த கொடிய கோள்களால் நெடிய வேதனைகளும் சோதனைகளும் நேரலாயின. அந்த நிலைகளையெல்லாம் நேரேபார்த்து வருகிறோம். நெஞ்சம் வருந்துகிறோம்; பின்பு நினையாமல் மறந்து போகிறோம். வினைவிளைவுகள் விசித்திர வேலைகளைச்செய்து வருகின்றன. நல்ல மானிகள் அல்லலுறுவதும் பொல்லாத ஈனர்கள் பொங்கி வாழ்வதும் கலிகாலக் கொடுமைகளாய்க் கலித்து நிற்கின்றன.

தமது நிலைமைக்குத் தலைமையான உரிமையோடு கும்பினியார் அரண் செய்து வைத்திருந்த ஸ்ரீவைகுண்டத்தின் மீது படை எடுத்து வந்த பாஞ்சைப் படைகள் அதனை விரைந்து பிடித்துக் கொண்டன. அந்தச் செய்தி பாளையங் கோட்டையிலிருந்த சேனைத் தலைவருக்குத் தெரிய வந்தது. கும்பினி உரிமை

கள் யாவும் ஒன்றன்பின் ஒன்ருக முறையே பறிபோய்க்கொண்டிருப்பதை அறிந்ததும் அவர் பெரிதும் பரிதாபமாய் வருந்தினர். உள்ளம் கடுத்து அந்த வெள்ளத்துரை ஒரு பெரிய சேனையை அங்கே அனுப்பினர். மேஜர் ஷெப்பேடு(Major Sheppard) என்பவர் அந்தப் படைக்குத் தளபதியாய்ச் சென்ருர். பாளையங்கோட்டையிலிருந்து கிழக்கே பதிறு மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீவைகுண்டம். மார்ச்சுமாதம் பதின்மூன்ருந்தேதி அந்த ஊரை வந்தடைந்த பட்டாளங்கள் தக்க ஆயத்தங்களைச் செய்து கொண்டு மிக்க ஊக்கமாய் மூண்டு போரைத் தொடங்கின.

தாம் கவர்ந்து கொண்டிருந்த முற்றுகையைக் கைநெகிழ விடாமல் யாண்டும் பாஞ்சாலங்குறிச்சியார் மூண்டு எதிர்த்தனர். வேண்டியமட்டும் கும்பினிப் படைகள் போராடிப் பார்த்தன. யாதும் பலியவில்லை. மூன்று நாளாக மன்ருடிமுடிவில் பதினருந்தேதி முறிந்து போயின. 16–3–1801ல் அந்தப் பட்டாளங்கள் உடைந்து பாளையங் கோட்டைக்கு மீண்டன. மீண்டபோதும் விடாமல் பின் தொடர்ந்து கும்பினிப் படைகளைப் பாஞ்சாலங்குறிச்சியார் அடுதிறலோடு படுதுயர்கள் செய்தனர். கொடிய புலிகளிடமிருந்து தப்பிய மாட்டு மந்தைகள் போல் அந்தப் பட்டாளங்கள் அல்லல்கள் பல அடைந்து எல்லை கடந்து ஓடின.

"The enemy annoyed them the whole way."

"எதிரிகள் வழிமுழுவதும் பட்டாளங்களைத் தொல்லைப் படுத்தினர்" என்று சேனைத்தலைவன் சொல்லியுள்ளமையால் அன்று அவர் பட்டுப்போன பாடுகளை உய்த்துணர்ந்து ஓர்ந்து கொள்ளுகிருேம். எவ்வழியில் கண்டாலும் தெவ்வரை வெவ்வலியோடு வெகுண்டு தாக்கி வருதலால் அவர் வெருண்டு மருண்டு சென்ற இடங்களிலெல்லாம் சிறுமையும் துயரங்களும் அடைந்து உரியவர்களை இழந்து பெரிய இழவாய் அவர் சீரழிந்து வந்தனர்.

இவர் வென்றி வீறுடன் எங்கும் விளங்கி நின்றனர்.

## பரிவு கொண்டது

இந்த வீரர்களுடைய பகைமையை வளர்த்துக் கொண்டது பெரிய தவறு எனக் கும்பினி அதிபதிகளுள் சிலர் கருத நேர்ந்தனர். அல்லல் நேர்ந்தபோது நல்ல உணர்ச்சிகள் சிலருடைய உள்ளங்களில் உரிமையோடு இயல்பாய்த் தோன்றுகின்றன.

நியாயஒழுங்குகளும் நெறிமுறைகளும் மறைமுகங்களாத் துறைகள் தோறும் இடையிடையே வெளிவருகின்றன. யாரிடமும் நேர்மை நீர்மைகளைக் காணும்பொழுது யாவருக்கும் அது பெருவகைகளைத் தந்து பெரிதும் ஆறுதல் புரிந்து வருகின்றது

ஜெனரல் வெல்ஷ்

பாஞ்சாலங்குறிச்சி மேல் படையெடுத்து வந்த கும்பினிப் பட்டாளங்களுக்குக் கைதேர்ந்த தளபதிகள் பலர் அமைந்திருந்தனர். அவருள் ஜெனரல் வேல்ஷ் (General Welsh) என்பவர் சிறந்த குணசாலி. நிறைந்த பெருந்தன்மை யுடையவர். நல்ல கல்விமான். போர் முறைகளைக் கூர்மையாகப் பழகி யிருந்தாலும் இளகிய நீர்மையான நெஞ்சமுடையவர். பாஞ்சைப் போர் நிலையை ஆதியிலிருந்து அந்தம் வரையும் உடனிருந்து நேரே கண்டவர். நாளும் தவறாமல் குறிப்புகள் எழுதி வந்தவர். அவர் இந்தியாவை விட்டுச் சீமைக்குப் போன பின்பு தாம் எழுதி வைத்திருந்த வரலாறுகளை யெல்லாம் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட்டருளினர். அதற்கு இராணுவ நினைவுகள் (Military Reminiscences) என்று பெயர். அந்தப் புத்தகம் லண்டனில் (London) அச்சாகி 1830ம் ஆண்டில் வெளி வந்துள்ளது. அதிலிருந்து ஒரு சிறு பகுதி அயலே வருகிறது.

"The southern Polegars, a race of rude warriors, habituated to arms and independence, and those of PANJALAMCOURCHY were the hardiest and bravest of the whole.

Their chief, called CATABOMA NAIG, having successfully defended the fort against a force under COLONEL BANNERMAN two years before, had at length been taken prisoner, with the rest of his family, and kept in close confinement.

It is not for me to decide upon the justice or policy of such a measure, but I should have thought that liberality and kindness would have been the best way to secure their allegiance.

While their chiefs were condemned to a perpetual and ignominious imprisonment, the fort of Panjalamcourchy was ordered to be razed to the ground, with some others of less note:

Such treatment to a high-spirited people was not much calculated to win their affections, and the indignities to which individuals were subjected by the native servants of the Collector, adding fuel to the fire, the whole burst out at once, and for a season bore down all before them." M. R.

"தென்னாட்டுப் பாளையகாரர் துணிவான வீரர்கள்; இயற்கையாகவே போர்ப் பயிற்சியும் சுதந்திர வுணர்ச்சியும் வாய்ந்தவர். அவர்கள் எல்லாரினும் பாஞ்சாலங்குறிச்சியார் மிக்க மன வுறுதியும் தக்க தைரியமும் சிறந்த போர்வீரமும் உடையவர்கள். கர்னல் பானர்மேன் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் பாஞ்சைக் கோட்டைமேல் படை எடுத்துச் சென்றபோது மன்னர் கட்டபொம்மு நாயக்கர் எதிர்த்துப் போராடி வெற்றி கொண்டார். வென்றும் முடிவில் பிடிபட்டு மாண்டார். அவரது சுற்றத்தாரைக் கும்பினியார் சிறையில் அடைத்து வைத்தார்.

"இவ்வாறு செய்தது நீதி அன்று; இராச தந்திரமும் அல்ல; என்று நான் சொல்ல வரவில்லை. அவ்வாறு சொல்வது என்னுடையவேலை அன்று; ஆனால்,கொஞ்சம் தயாளமாய் அன்புசெய்து நடந்திருந்தால் இந்தப் பகைமை நேர்ந்திராது; அவர்களுடைய உறவுரிமையைப் பெற்றிருக்கலாம் எனக் கருதுகின்றேன்.

"இழிவான கொடியசிறையில் தங்கள் தலைவரை நெடுங்காலமாக வைத்துக் கொண்டு பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைத் தரையோடு தரையாகத் தட்டி அழித்தது உயர்ந்த மானமுடைய அந்த மரபினருக்கு மிகுந்த கோபமாய் மூண்டது.

"இப்படி நாம் கொடுமையாய் நடத்தியது நேர்மையான அவர்களுடைய அன்பை இழக்க நேர்ந்தது. அத்தோடு அதிகாரிகள் செய்த அவமானங்கள் எரிகிறநெருப்பில் எண்ணெயை வார்த்தது போல் பெரிய கோபத் தீயை மூட்டியது; காலம் கருதி யிருந்தனர்; முடிவில் பொறுக்க முடியாமல் எல்லாரும் கொதித்து எழுந்தனர்."

இது, மேலே குறித்துள்ள ஆங்கிலத்தின் நேர் பொருள்.

இந்தக்குறிப்புகள் பல உண்மை நிலைகளைக் கூர்ந்து காணச் செய்கின்றன. ஓர்ந்து உணரவேண்டும். ஜெனரல் வெல்ஷ்துரையினுடைய மன நிலையும், நடுவு நிலைமையோடு உண்மைகளை

உரைத்திருக்கும் தன்மையும் உயர்ந்த பண்பாடுகளை விளக்கி நிற்கின்றன. செவ்விய நேர்மையுடையவர் எவ்வழியும் சீர்மையாகவே பேசி வருகின்றனர். பகைமையிலும் தகைமை யுளது.

போராட்டங்கள் பொங்கி எழுந்துள்ள நிலைகளை இங்கே நாம் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். சிறிய மாறுபாடுகளிலிருந்து பெரிய வேறுபாடுகளும் கொடிய கேடுகளும் நெடிது விளைந்து கடிது நீண்டு படு துயரங்களாய் வளர்ந்திருக்கின்றன.

கோள் செய்த கொலை

கும்பினியாருக்கும் பாஞ்சாலங்குறிச்சியாருக்கும் மூண்டு நின்ற பகைக்கு மூல காரணங்கள் பல. அவற்றுள் சில யாரும் அறியமுடியாத அதிக இரகசியங்களானவை. இந்நாட்டுள் சிலர் நயவஞ்சகமாய் நின்று சுயநலங் கருதிக் கொடுமையா மூட்டிய கோள்களே பாஞ்சைக் கோட்டையைப் பாழாக்கி நின்றன.

வாள் வாய்க்குத் தப்பினும் கோள் வாய்க்குத் தப்பமுடியாது என்பது பழமொழி. கோளின் கொடிய கொலை நிலையை இது நெடிது விளக்கி யுள்ளது. இந்த நீசக் கோளரால் நாசக் கேடுகள் விளைந்திருக்கின்றன. தீயகோள் தீயினும் தீயதாயது.

கொடியவிடப் பாம்பினுமே கோளன்மிகக்
　　கொடியவன்காண்! கொடிய பாம்பு
கடிஎவரைச் செய்ததோ அவர்மாய்வர்;
　　கடியாமல் கடுங்கோள் செய்யும்
நெடியகொடும் பாம்பொருவன் காதோரம்
　　வாய்வைக்க நேரே மற்றோர்
அடியோடு குடிகேடாய் அல்லலுழந்து
　　அழிவரே அந்தோ! அந்தோ!

இந்தவாறு கோளரால் குடிகேடு அடைந்து படுதுயரங்கள் படிந்து பாஞ்சை மன்னர் பாழாகி யுள்ளனர். புறப் பகைவரினும் அகப் பகைவர் மிகவும்கொடியர் என்பது இவர் சரிதத்தில் பெரிதும் தெளிவா யுள்ளது. பரிதாபங்கள் விழி தெரிய நின்றன.

கும்பினியின் தளபதியாயிருந்தும் வெள்ளைத்துரை உள்ளம் இரங்கி உள்ளபடியே உரையாடியிருப்பது உவகை தருகின்றது. செம்மையாளர் எவ்வழியும் உண்மைகளைச் சீர் தூக்கி நோக்கி நல்ல தன்மையுடன் உலகமறியச் சொல்லியருளுகின்றனர்.

கலெக்டர் முதலிய பெரிய அதிகாரிகளும் சிறிய சிப்பந்திகளும் பாஞ்சாலங் குறிச்சியாரிடம் கடுமையாகவும் கொடுமையாகவும் நடந்து வந்துள்ளமையை வெல்ஷ்துரை எழுத்துகள் தெளிவாக விளக்கியுள்ளன. நிலைமைகளை யுணராமல் தலைமையாளர்கள் செருக்கிச் செய்த துயர்கள் சீற்றங்களை விளைத்தன.

மானமும் வீரமும் நேர்மையும் யாண்டும் பரம்பரையாகவே வரம்பாகப் பூண்டு வந்த மரபினர் ஆகலால் பிறர் புரிந்த ஈனஇழிவுகளைச் சகிக்கமுடியாமல் கொதித்து மூண்டு நேரே துணிந்து போராட நேர்ந்தனர். அரிய மானவுணர்ச்சி பெரியசீற்றமாயது

"High-spirited people" உயர்ந்த உணர்ச்சியுள்ள சனங்கள் என்று ஜெனரல் குறித்திருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது. பாஞ்சை மரபினருடைய மனநிலைகளையும் அடலாண்மைகளையும் உறுதி ஊக்கங்களையும் நேரே கண்டு கொண்டவர் ஆகலால் இங்ஙனம் கருதி எழுதலானார். காரியக் கேடுகளைக் கூரிய நோக்கோடு கூர்ந்து உணர்ந்து ஆர்ந்த பரிவுடன் ஓர்ந்து குறித்துளார்.

வீணே கோபத்தைமூட்டிக் கொடும் பகைமையை வளர்த்துக் கொண்டமையால் கும்பினிக்கு வம்பாகத் தொல்லைகள் நேர்ந்தன; அல்லல்கள் மூண்டன என்று அந்த வெள்ளைத்துரை உள்ளம் சலித்திருத்தலை உரைகள் தெளிவா ஒலித்திருக்கின்றன.

நாள் கருதி நின்றது.

மூண்டு எழுந்த விரோதியை எப்படியும் அடக்கிவிட வேண்டும் என்று பெரிய சேனைத் தலைவர் அரிய சாதனங்களை யாண்டும் ஆயத்தம் செய்து வருதலை அறிய அறிய ஊமைத்துரை பெரிதும் ஊக்கி உறுதியோடு முயன்றார். குறியான இடங்களை யெல்லாம் சரியாகக் குறி வைத்துக் கவர்ந்து கொண்டபின் மேலும் விரைந்தார். மாற்றலர்களுடைய ஆற்றல்களை எவ்வழியும் குறைத்து ஒடுக்க ஏற்றமுடன் மூண்டார். தோற்றிய படியெல்லாம் துணிந்து புரிந்தார். யாண்டும் ஆண்மைகளை ஆற்றி வந்தார்.

கொள்ளைப் பதியாக வெள்ளையர் கொண்டுள்ள
கூடங்கள் மாடங்கள் நாடெங்குமே
உள்ளன யாவையும் ஒல்லையில் சென்றுநீர்
ஊக்கி உரிமைகள் ஆக்குமினே!

என்று கூறித் தம் படை வீரர்களைப் போக்கி நின்றார்.

கடல் வழியே சென்று வருதற்கு வசதியாகத் தூத்துக்குடியில் கும்பினியார் ஒரு கோட்டையை அமைத்திருந்தார். பல பண்டக சாலைகளோடு அலைவாய்க் கரையோரத்தில் கோட்டை நிலையாய் மருவி யிருந்தது. அதனைக் கைப்பற்ற இவர் குறிவைத்தார். மாசிமாதம் இருபத்துமூன்றும் தேதி செவ்வாய்க் கிழமை நல்ல நேரம் பார்த்து அங்கே படையெழுச்சி செய்ய உறுதி பூண்டார். அச்சமையம் பாஞ்சை வீரர்களுடைய உற்சாகமும் ஊக்கமும் உச்ச நிலையில் ஓங்கி நின்றன. அச்சம் என்பதை யாதும் அறியாமல் யாண்டும் அடலாண்மைகளை ஆற்றி அடு புலிகள்போல் ஆர்த்து அமர்களையே நோக்கி ஊக்கி நின்றனர்.

வெள்ளைத் தலைவர் வியந்து நின்றது.

பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் கூரிய ஆயுதங்களைச் சீரிய நிலையில் தொகுத்துப் படைகளைத் திரட்டிக் கும்பினியாரை அடியோடு வென்று தொலைத்து வெற்றி பெற மூண்டு முனைந்து வருவதை ஆங்கில தளபதிகள் அறிந்து நீண்ட திகில்களோடு நெஞ்சம் கலங்கி வந்தனர். இவருடைய வீரவேகங்களைக் கண்டு வெள்ளையர் உள்ளங்கள் வெருவியுள்ளன. அவ்வுண்மையை அவருடைய உரைக் குறிப்புகள் தெளிவாத் துலக்கி யிருக்கின்றன.

"While we were reinforcing our detachment from a distance, the insurgents who had their resources nearer at hand, were not idle; but rising in various quarters, they possessed themselves of forts, arms, and in so active a manner, that we hardly ever knew where to find them." R. G.

"தூரத்திலிருந்து அதிகமான படைகளை நாம் திரட்டிக் கொண்டிருந்த பொழுது, விரோதிகள் தங்களுக்கு வேண்டிய ஆதரவுகளை விரைந்து சேர்த்தனர். சோர்பல் யாதும் இன்றி பல இடங்களிலும் விரைந்து படைக்கலங்களைத் திரட்டிக் கோட்டையைப் பலப் படுத்தி நின்றனர். யாரிடமும் யாண்டும் காணமுடியாத வேகமும் சுறுசுறுப்பும் அவரிடம் வீறுகொண்டு நின்றன" என்னும் இதனுல் இவ் வீரர் செய்துள்ள செயல்களையும் போர் நிலைகளையும் பூகமாய் ஈண்டு நாம் உணர்ந்து கொள்கிறோம்.

# பன்னிரண்டாவது அதிகாரம்.

## தூத்துக்குடி தொடர்ந்தது.

—∞○∞—

திருநெல்வேலி மண்டலத்தில் தூத்துக்குடி தலை சிறந்த நகரமாய் இப்பொழுது நிலவியுளது. முன்னம் சின்ன ஊராய் இருந்தது. பழைய நிலைமையும் புதிய தலைமையும் அதிசய விளைவுகளாய் மதி தெளிய நின்றன. கால வேற்றுமைகளால் யாவும் மாறுதல் அடைந்து வேறு வேறு துறைகளும் தோற்றங்களும் ஏற்றங்களாய் யாண்டும் மேவி வருகின்றன. இயற்கை விளைவுகள் வியப்புகளை விரித்து நிற்கின்றன. துறைமுகப் பட்டணமாய்த் தூத்துக்குடி இன்று துலங்கி நிற்கின்றது; பண்டு மறைமுகமாய் மருவி யிருந்தது. சிறியது பெரியதாய்ப் பெருகி வருவதும் பெரியது சிறியதாய் ஒருவி மறைவதும் உலக விசித்திரங்களாய் நிலவி உரிய நிலைகளைத் துலக்கியுள்ளன.

### பெயரின் காரணம்

ஆதியில் அங்கே அலைவாய்க்கரை ஓரங்களில் சில வலைஞர்கள் மாத்திரம் தனியே குடியேறியிருந்தனர். கடலில் மீன்களைப் பிடித்து விலைப்படுத்தி வாழ்க்கைகளை நடத்தி வந்தமையால் அவர் மீன் பரவர் என நேர்ந்தனர். பரவை = கடல். பரந்து விரிந்து இருப்பது என்னும் ஏதுவான் வந்தது. பரவையில் உலாவி வருபவர் பரவர் என வந்தார். தாம் செய்யும் தொழில்களாலேயே மனித சமுதாயம் பிரிக்கப்பட்டுப் பெரும்பாலும் பெயர் பெற்றுள்ளது. அந்த மரபினர் புன்னைக் காயல் என்னும் ஊரில் முன்னம் அதிகமாயிருந்தனர். அவருள் சிலர் மீன் பிடித்தற்காக அங்கே வந்து கடற்கரை அருகே சிறு சிறு குடிசைகள் அமைத்துக் குடியமர்ந்திருந்தனர். அதனை அவ் வூரார் ஒதுக்குக் குடி என அழைத்து வந்தார் அதுவே பின்பு தூத்துக்குடி என மாறியது என்பர். ஊரின் விளைவால் பேரும் சீரா மருவி வருகிறது.

இப் பெயர்க்கு வேறு சில காரணங்களும் கூறுகின்றனர். கடல் அருகே உள்ளமையால் நல்ல குடிதண்ணீருக்காகப் பள்ளம் தோண்டுவர்; நீர் பெருகும்; பருகி வருவர்; சில நாளுள்

மையால் கரைந்து விழுந்து நீர் ஊற்று மறைந்துபோம்; போகவே அயலிலே அகழ்ந்து குடித்து வருவர்; அதுவும் அவ்வாறாகவே அதனைத் தூர்த்து விட்டு அடுத்துத் தோண்டுவர். அங்ஙனம் தூர்த்துத் தூர்த்து நீர் குடித்து வந்தமையால் தூர்த்துக்குடி என அவ் வூருக்கு முதலில் பேர் தோன்றியது; பின்பு அதுவே தூத்துக்குடி என மருவியது என்று சேர்த்துக் கூறுவர்.

திருமந்திர நகரம் எனவும் இதற்கு ஒரு பெயர் புராண முறையில் வழங்கி வருகிறது. இந் நாட்டில் தோன்றியுள்ள பெரிய ஊர்களுக்கெல்லாம் மூல காரணங்கள் சிறியனவாயிருந்தாலும் அரிய மகிமைகளை ஏற்றிப் பெருமையாகப் போற்றி வருவது யாண்டும் வழக்கமாயுள்ளது. ஊரிலும் பேரிலும் சீர்களைக் கூறிவரும் திறங்கள் யாரிடமும் போபிமானங்களாய்ப் பெருகி நிற்கின்றன. பெருமையில் எல்லாருக்கும் பிரியம் ஆகலால் அதனை எவ்வழியும் இடையே மருவி இனிது மகிழுகின்றனர்.

அயல் நாட்டினர் செயல் நாட்டியது,

இந்நாட்டை நாடி மறுபுலத்தவர் கூட்டம் கூட்டமாய்க் கூடி வந்துள்ளனர். அயல் நாடுகளிலிருந்து வியாபாரங்கள் கருதிக் கடல் வழியாக இந்நாட்டுக்கு வந்தவர்களுள் போர்த்துக் கேசியர் முதன்மையாயுள்ளனர். கி. பி. 1532ல் பாய்க் கப்பல் மூலமாய் வந்து தூத்துக்குடிக் கரையில் அவர் இறங்கினர். நாட்டு நிலைகளை நாடி ஆராய்ந்தனர். வியாபாரங்களை விருத்தி செய்ய நேர்ந்தனர். அலைவாய்க்கரை அருகே பண்டகசாலைகளை அமைத்தனர். தொழில்களை வளர்த்து வந்தனர். இந்நாட்டில் மலிவாக வாங்கிய பண்டங்களை மறுபுலங்களுக்கு அனுப்பி அங்குள்ள சாமான்களை ஈங்குக் கொணர்ந்து வணிக முறையிற் பாங்கோடு செய்து வந்தமையால் வளங்கள் ஓங்கி வந்தன.

ஆண்டுகள் பல நீண்டு ஈண்டிய பொருள்களோடு இவர் வளம் பெற்று வருவதைக் கண்டதும் டச்சுக்காரர் இங்கே தொடர்ந்து வந்தார். அவரும் தூத்துக்குடியையே வாசமாக்கொண்டு வாணிகங்கள் புரிந்தார். சிறந்த சாமர்த்தியசாலிகள் ஆதலால் தொழிலில் விரைந்து முன்னேறினர். பெரும்பொருள் திரண்டது. வளரிய போர்த்துக் கேசியரிடமிருந்து தூத்துக்குடியைக் கவர்ந்து கொண்டார். வாணிகம் பேணிக் காணியாக் கவர்ந்தனர்.

இது, கி. பி. 1658ல் நடந்தது. அதன் பின் டச்சுக்காரரே அங்கே தனியுரிமையோடுதலைழத்து வந்தார் அவர்செல்வநிலையில் சிறந்து திகழ்வதை அறிந்ததும் பிரஞ்சுக்காரர் இங்கே வந்தனர். அவர் புதுச்சேரி, காரைக்கால் முதலிய துறைமுகங்களில் இறை முகம்பெற்றமையால் தூத்துக்குடியைத் தொடாமல்போயினர்.

பின்பு இங்கிலாந்து தேசத்தவராகிய ஆங்கிலேயர் ஈங்கு வந்தார். கூடி முயன்றார். கோடி கோடியாகப் பொருளைத் தேடினர். முன்பு வந்த எவரினும் இவர் உயர்ந்த தந்திரசாலிகள் ஆதலால் திரண்ட செல்வங்களை அடைந்து சிறந்த திருவாளராய்ச் செழித்து விளங்கினர். செழிக்கவே கடலின் துறைமுகம் தமக்குத் தனி யுரிமையாக இருக்க வேண்டும் என்று பெரிதும் கருதிவந்தார்; இறுதியில் டச்சுக்காரரிடமிருந்து தூத்துக்குடியை இங்கிலீஷ்க்காரர் குறிப்போடு கூர்ந்து பறித்துக் கொண்டார்.

இந்தப் பறி கி. பி 1782ல் நிகழ்ந்தது.

போர்த்துக்கல் (Portugal) தேசத்தவர் போர்த்துக்கேசியர்.

ஹாலந்து (Holland) தேசத்தவர் டச்சுக்காரர்.

பிரான்சு (France) தேசத்தவர் பிரஞ்சுக்காரர்.

இங்கிலாந்து (England) தேசத்தவர் ஆங்கிலேயர்.

என இன்னவாறு ஈங்கு அவர் வழங்கப் படுகின்றனர். போர்த்துக்கேசியரைப் பறங்கிக்காரர் எனவும், டச்சுக்காரரை உலாந்தக்காரர் எனவும் வேறு பேரால் கூறுவதும் உண்டு.

ஆங்கிலேயரிடம் தாம் பறிகொடுத்திருந்த தல உரிமையை மூன்று ஆண்டுகள் கழிந்தபின் மீண்டும் டச்சுக்காரர் அடைந்து கொண்டனர். தங்கள் தொழில் முறைக்கு உயிர் நிலையமாய் இருந்தமையால் தூத்துக்குடித் துறைமுகத்தை அவர் மிகுந்த ஆர்வத்தோடு போற்றி எவ்வழியும் இனிது காத்து வந்தார்.

தாம் மெலிந்தபோது இழந்துபோனலும் அதனை எந்தவகையிலாவது தமக்கு என்றும் நிலையாக உரிமை செய்து கொள்ள வேண்டும் என்று பெரிதும் ஆவலோடு ஆங்கிலேயர் கருதி வந்தனர். அரிய பல சூழ்ச்சிகளைச் செய்து வந்து முடிவில் அந்தத் துறைமுகத்தைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டனர்.

திரை கடல் ஓடியும் திரவியம் தேடு.

என இந் நாட்டுப் பாட்டி நமக்குப் போதித் துள்ளதை அந்நிய நாட்டார் நன்கு சாதித்து வருகின்றனர். நாம் யாதும் சாதியாமல் பள்ளியில் ஓதி வந்த அளவு உள்ளி மொழிந்து உரையாடி வருகிறோம். ஆள் வினையில் மூண்டவர் ஆள்வினையாளராய் வாழ்வில் உயர்ந்து வையம் வணங்க வாழ்கின்றார். அங்ஙனம் மூளாமல் அயர்ந்து நின்றவர் தாழ்வினையடைந்து தளர்ந்து உழலுகின்றார். வாழ்வுக்கும் தாழ்வுக்கும் முயற்சியும் அயர்ச்சியும் காரணங்களா யுள்ளன அவ்வுண்மை உணர வந்தது.

செய்யான் தொழில் எனின் செய்யாளும் யாதுமே செய்யாள்.

என்றதனால் சோம்பேறி திருவிலியாய் இழிந்து படும் நிலை தெளிந்து கொள்ளலாம். எவ்வழியும் செவ்வையாய் முயன்று உயர்ந்தவர் ஆதலால் கருங்கடல்கள் பல கடந்து வரும்படிகள் கருதி ஆங்கிலேயர் பெரும்படியாய் ஈண்டு வரும்படி நேர்ந்தனர்.

தமது வருவாய்க்கு நல்ல நிலையம் என்று நன்கு தெரிந்து கொண்டமையால் வணிக முறையில் வல்லவரான வெள்ளைத் துரைகள் அந்தத் துறைமுகத்தை எந்த வகையிலும் யாருக்கும் இடமில்லாமல் தமக்கே சொந்தமாக உரிமை செய்து கொண்டனர்.

1. The Dutch took Tuticorin from the Portuguese in 165 8
2, It was taken from the Dutch by the English in I782.
3. It was restored by the English to the Dutch in 1785.
4. It was taken again by the English in 1795.

போர்த்துக் கேசியரிடமிருந்து தூத்துக்குடியை டச்சுக்காரர் கி. பி. 1658ல் கவர்ந்து கொண்டனர். டச்சுக்காரரிடமிருந்து அதனை இங்கிலீஷ்க்காரர் 1782ல் பறித்துக் கொண்டார் மறுபடியும் ஆங்கிலேயரிடமிருந்து டச்சுக்காரர் கைக்கு 1785ல் அது திருப்பி வந்தது. பின்பு 1795ல் டச்சுக்காரரிடமிருந்து தூத்துக்குடியை ஆங்கிலேயர் மீண்டும் கவர்ந்து கொண்டனர். என்னும் இது ஈண்டு ஊன்றி யுணர்ந்து ஓர்ந்து கொள்ளவுரியது.

அந்நிய நாட்டார் இத்தென்னாட்டில் வந்து தூத்துக்குடியை ஆவலோடு உரிமை கொண்டாடி யிருக்கும் நிலைகளை இதனால் தெளிவாய்த் தெரிந்து வினைவுகளை உணர்ந்து கொள்ளுகிறோம்.

கடல் வழியே சரக்குகளை ஏற்றி அனுப்பவும், இறக்கிக் கொள்ளவும் வசதியாக இருந்தமையால் அத் துறைமுகத்தை மறுபுலத்தவர் இவ்வாறு மாறி மாறி அவாவி அடைந்துள்ளனர். இறுதியில் வெள்ளையரிடம் அது அறுதியாய் வந்து சேர்ந்தது.

## கும்பினிக் கோட்டை

தங்கள் வியாபாரங்களைச் சிறந்த முறைகளில் விருத்திசெய்து கொள்வதற்குத் தூத்துக்குடித் துறை முகத்தில் வெள்ளையர் குடியேறி யிருந்தனர். பண்டக சாலைகளுக்குரிய மண்டபங்களும் மாளிகைகளும் அமைத்து நல்ல பாது காவலுக்கு உரிமையாக ஒரு கோட்டையும் சமைத்துக் கொண்டனர். வாழ்க்கைகள் நடந்து வந்தன. வருங்கால் அங்கே சில சிப்பாய்களும் படைகளும் வைத்து அரண்களைச் செப்பப்படுத்தினர். அந்தச் சேனைகளுக்குத் தலைவராக இரண்டு தளபதிகள் அங்கே நிலையாய் அமைந்திருந்தனர். தானைகளும் நன்கு தழைத்திருந்தன.

சிறந்த படைவலிகளோடு அமர்ந்து செல்வங்களைத் திரட்டித் தேச ஆட்சிக்கு அரண் செய்துவருதலால் அந்தக் கும்பினிக் கோட்டையை விரைந்து பிடித்துக் கொள்ள வேண்டும் என்று பாஞ்சாலங்குறிச்சியார் துணிந்து சூழ்ந்து ஆய்ந்து வந்தார்.

## ஊமைத்துரை உறுதிசெய்தது

தூத்துக்குடி, ஆறுமுகனேரி முதலிய இடங்களில் இந்த ஜமீனுக்கு உப்பளங்கள் பல உள்ளன. முன்னமே தமக்குச் சொந்த உரிமையா யிருந்த அந்த நகரை எந்த வகையிலும் மீண்டும் கைப்பற்ற வேண்டும் என ஊமைத்துரை உள்ளம் துணிந்து ஊக்கி மொழிந்தார். மொழியவே படைகள் திரண்டன.

எண்ணூற்றெழுபது போர் வீரர்கள் எழுந்தனர்.

| | |
|---|---|
| பராக்கிரம பாண்டியன். | க |
| இராஜ பாண்டியன். | உ |
| பெருமாள்சாமி. | ௩ |
| வீரசூடாமணி. | ௪ |
| துரைமல்லு. | ௫ |
| சிவத்தையா. | ௬ |
| பொம்முதுரை. | ௭ |

வீரதளவாய். ௮
விஜயராமுலு. ௯
சூரசங்கு. ௰

இந்தப் பத்துப் பேரும் அந்தச் சேனைக்குத் தலைவர்களாய் நின்றனர். போர் முறைகளில் கைதேர்ந்த சிறந்த வீரர்களான இந்தத் தளபதிகள் தலைமையில் அந்தப் படைகள் நடந்தன.

## வீரர்கள் விரைந்தது.

அமராடலைத் தமர்களோடு கூடி விளையாடுதல்போல் உவந்துள்ளவர் ஆதலால் இந்தப் படையெழுச்சியில் எல்லாரும் உள்ளம் களித்து உல்லாச விநோதமாய்த் துள்ளிப் போனார். கும்பினிக்குரிய பல இடங்களையும் விரைந்து கவர்ந்து கொண்டமையால் இதிலும் தப்பாமல் வெற்றி கிடைத்து விடும் என்னும் நம்பிக்கையோடு ஆரவாரமாய் வீறு கொண்ட நேரே சென்றார்.

பாஞ்சாலங்குறிச்சியி லிருந்து தென் கிழக்கே பதினேழு மைல் தூரத்தில் தூத்துக்குடி உள்ளது. மார்ச்சு மாதம் எழாம் தேதி மாலையில் படைகள் எழுந்தன. இடையே இரவில் குறுக்குச் சாலை அருகே சிறிது தங்கின. பின்பு நடந்தன; விடியுமுன் போய்த் தூத்துக்குடியை அடைந்தன; கும்பினிக் கோட்டையை ஒருங்கே வளைந்து கொண்டன. முற்றுகை யிட்டது வெற்றி நாட்டமாய் வீறுமண்டி நின்றது. வீரக்களிப்புமீறி விளங்கியது.

## சூழ்ந்து செய்தது.

மூண்டு திரண்டு வந்த சேனைகள் பாங்காகப் பிரிந்து நான்கு புறங்களிலும் அணி அணியாய்ச் சூழ்ந்து அடலாண்மையோடு அடர்ந்து நின்றன. ஈட்டி வேல் வாள் வல்லயங்களோடு உக்கிர வீரமாய் வந்து உருத்து நிற்கிற இந்தப் படைகளைக் கண்டதும் அங்கிருந்த சிப்பாய்கள் எல்லோரும் சிந்தை கலங்கித் திகில் கொண்டு திகைத்து நின்றனர். அந்தப் பட்டாளத்தின் ஆங்கில தளபதி நிலைமையை நோக்கி முதலில் அஞ்சினன் ஆயினும் பின்பு நெஞ்சம் துணிந்து படைகளை ஊக்கி நிறுத்தி எதிரிகள் உள்ளே புகாதபடி எதிர்த்து முதிர்வேகமாக் காத்தான்.

சுடு வெடிகளோடு தொடர்ந்து அடர்ந்த கும்பினிப் பட்டாளங்கள் கடுமையாய் எதிர்க்கவே பாஞ்சை வீரர் ஆடு திற

லோடு ஆர்த்து மூண்டார். நீட்டிய வேல்களை நேரே காட்டிக் கூட்டமாய்த் திரண்டு இவர் கொதித்துப் பாயவே சிப்பாய்கள் சிதறி ஓடினர். படைகள் உடைந்து போகவே படைத் தலைவனை இவர் விரைந்து பிடித்துக் கொண்டார். ஜமேதார் சுபேதார் முதலிய உதவி அதிகாரிகள் யாவரும் இந்துக்கள் ஆதலால் அவர்களை அயலே தள்ளிவிட்டு அந்த வெள்ளைத் துரையை மட்டும் கொள்ளைப் பொருளாகக் கைப்பற்றிக் கொண்டு உள்ளே புகுந்து எல்லாம் தேடினர். யாண்டும் யாவும் ஊக்கி நாடினர்.

## ஓர்ந்து கவர்ந்தது.

கோட்டையை வளைந்து நின்ற படை வீரர்கள் எவ்வழியும் எதிரிகளை எதிர்நோக்கி நிற்க உள்ளே அறுபத்து நான்கு போர் வீரர்கள் புகுந்தனர். எல்லாப் பொருள்களையும் நாடி எங்கும் தேடினர். வேறு எதையும் தொடாமல் போர்க் கருவிகளையே குறிப்பாய்க் கூர்ந்து கவர்ந்தார் வெடிகள், கருமருந்துகள், முதலிய யுத்த தளவாடங்களையெல்லாம் ஒருங்கே எடுத்தனர். ஆயிரத்து மூந்நூறு வெடிகள், ஈட்டிகள் வாள்கள் கைக் குண்டுகள் யாவும் கவர்ந்து கொண்டனர். உவந்து வெளியே வந்தனர்.

## படைத் தலைவனைப் பாதுகாத்தது

இவர்களுடைய கையில் சிக்கிய அந்த வெள்ளைத்துரை உள்ளம் கலங்கி உயிர் போய் விடும் என்று மறுகி நின்றான். அவன் நல்ல வாலிபன்; கலியாணம் ஆக வில்லை. கூர்மையான கொடிய ஆயுதங்களோடு நெடிது சூழ்ந்து நிற்கும் இப் படைகள் இடையே அவன் கைதியாய் நின்ற நிலை பெரிதும் பரிதாபமாய் இருந்தது. அவல நிலையில் மருண்டு மறுகி நின்றான்.

தமிழோ, தெலுங்கோ, இத்தேச மொழிகளுள் யாதும் அவனுக்கு எதும் பேசத் தெரியாது. ஒன்றும் பேச மாட்டாமல் மருண்டு விழித்துக் கண் கலக்கத்துடன் அவன் வெருண்டு நிற்கும் நிலையைக் கண்டு சேனாதிபதியான பராக்கிரமபாண்டியன் உள்ளம் இரங்கினான்; யாதொரு இடையூறும் யாரும் அவனுக்குச் செய்யலாகாது என்று தன் படை வீரர்களை இடை அகற்றி அவனை அருகு அழைத்து வைத்து ஆதரவு காட்டினான். நெஞ்சம் கலங்கி அஞ்சி அலமந்து அயர்ந்து நின்ற அவன் இவ் வீரனுடைய அன்புரிமையைக் கண்டதும் கொஞ்சம் தெளிந்து

முகமலர்ந்து பரிவோடு பார்த்தான். அந்தப் பார்வை "என் ஆருயிரைக் காத்தருளும் பேருபகாரி நீர்" என்று இவ் வீரனை நோக்கிப் பேசுவது போல் இருந்தது. வாய் பேசாததைக் கண்கள் நன்கு பேசியுள்ளன. காட்சிகள் நேரே தெரிய வந்தன.

தோணியில் ஏற்றிப் பேணி விடுத்தது.

இந்தப் பாஞ்சைத் தலைவன் அந்தப் படைத் தலைவனிடம் வாஞ்சை காட்டி "நீர் இந்த இடத்தை விட்டு இப்பொழுதே உம்முடைய சீமைக்கு ஓடிப் போய் விடுவீரா?" என்று சைகையாக் கை அசைத்துக் கேட்டான். அவன் சரி என்று தலையை அசைத்து இசைந்தான், உடனே அப்படியே அவனை அலைவாய்க் கரைக்கு அழைத்துப் போனான். அங்கே மீன் பிடிக்க இருந்த ஒரு தோணியில் ஏற்றி உன் ஊருக்கு விரைந்து போய் விடு என்று பரிந்து விடுத்தான். ஊன் பிடித்த படைக்கு இரையாக நின்றவனை இடைவிலக்கி உயிர்காத்துப் பிடித்து வந்து மீன் பிடிக்கவந்த படகில் ஏற்றிக் கடலில் ஓடவிடுத்து மேலும்பிடிக்க வேலும் கையுமாய் வெற்றி வீரோடு அவன் மீண்டு வந்தான்.

மாண்டே போவான் என்று நிலை குலைந்திருந்த அந்தத் தளபதி அலைகடல் வழியே தொலை நோக்கிப் போனான். கொடிய எதிரிகளாயிருந்தும் தன்னைக் கொலை புரிந்து விடாமல் அருள் புரிந்து விட்ட இவர்களது நிலைமை நீர்மைகளை நினைந்து தலைமை அதிபதியை வியந்து நெஞ்சம் உவந்து அவன் நெடிது சென்றான்.

பாஞ்சை வீரர் பான்மை

தங்கள் கையில் சிக்கிய ஆங்கிலேயனை அல்லல் யாதும் செய்யாமல் ஆதரவு செய்து விடுத்த இவரது பெருந்தன்மையை வியந்து வெள்ளையரும் உள்ளம் உவந்து கொண்டார். நல்ல நீர்மைகள் எல்லாரையும் எவ்வழியும் வசப்படுத்திக் கொள்ளுகின்றன. அயலே வருகிற ஆங்கில வாசகம் ஈங்கு அறிய வுரியது.

In proof, however, of the noble spirit of these untutored savages, they treated the officer with the utmost kindness; and without exacting any promise from him, permitted his embarkation in a fishing boat, for an English settlement. (G. W.)

"நல்ல கல்விப் பயிற்சி யில்லாத இந்த முரட்டு மக்கள் பகைமை பூண்டிருந்தும் அந்தப் படைத் தலைவனை மிகவும் அன்

போடு பேணி, யாதொரு அவமானமும் செய்யாமல் மீன் படகில் ஏற்றித் தன் சொந்த இங்கிலீஷ் நாட்டுக்குப் போகும்படி அனுப்பியிருப்பது அவர்களுடைய இயல்பான உயர்ந்த பெருந்தன்மைக்குச் சிறந்த அடையாளமாய் அமைந்திருக்கிறது." என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பாங்கான பொருள்.

இதனால் பாஞ்சாலங்குறிச்சியாருடைய மேலான பண்பாடுகள் விளங்கி நிற்கின்றன. எதிரிகளும் இப்படி வியந்து புகழ்ந்து உவந்து சொல்லியிருப்பது உணர்ந்து சிந்திக்கத் தக்கது.

இயற்கையாகவே நல்ல சுபாவங்களையுடைய இந்த வீர மரபினரைப் பொல்லாத பகைவர்களாக்கிக் கும்பினியார் வம்பாகப் போராட நேர்ந்தது கோரமான கொடிய புலையாட்டமேயாம். இந்நாட்டிலுள்ள நல்ல மானிகளையும் சிறந்த போர் வீரர்களையும் அந்நிய நாட்டார் புகுந்து அவலப்படுத்தி யிருப்பது கவலைக்கிடமாயுள்ளது. கோபத்தை மூட்டவே கொடும் பகைமைகள் ஆபத்தாய் மூண்டன. யாண்டும் அல்லல்கள் நீண்டன.

கும்பினி கும்பியது.

பாஞ்சை வீரர்களுடைய அருந்திறலாண்மைகளை அறிந்து ஆங்கிலேயர்கள் அஞ்சி அலமந்து வந்தாலும் இவரிடம் அமைந்துள்ள பெருந்தகைமைகளை உணர்ந்த போதெல்லாம் உள்ளம் உவந்து புகழ்ந்துள்ளனர். சிறை பிடித்த வெள்ளைத் தலைவனை இவர் கொல்லாமல் விட்டது அவருடைய உள்ளங்களை உருக்கியிருக்கின்றன. அவ்வுண்மையை அவர் உரை வெளிப்படுத்தியுளது. "The noble spirit" உயர் குடிப்பிறப்பின் உயிர் ஒளி என இப்படி அவர் குறித்திருத்தலால் அவரது மகிழ்ச்சி நிலையை நாம் உணர்ந்து கொள்கிறோம். இவ்வாறு மகிழ்ந்தாலும் இவரது வெற்றிநிலை அவர்க்குக் கவலையை விளைத்துக் கடுந்திகில் புரிந்தது.

"The enemy made good use of their time, and seized on Tuticorin" (R. G.)

"தம் காலத்தை நன்கு உபயோகித்து எதிரிகள் தூத்துக்குடியைப் பிடித்துக் கொண்டார்" என்று இங்ஙனம் வடித்து உரைத்திருத்தலால் இவரது வெற்றி வரவையும், அவரது தோல்வி நிலையையும் உய்த்து உணர்ந்து ஓர்ந்து தெளிந்து கொள்கிறோம்.

# பதின்மூன்றாவது அதிகாரம்

## துரையைச் சிறை வைத்தது

—oo:o:oo—

பிடித்த படைத்தலைவனைக் கடல்கடத்திவிட்டுப் பாஞ்சைத் தளபதி மீண்டு வருமுன் கும்பினியாருக்கு உரிய இடங்களை யெல்லாம் படை வீரர்கள் கவர்ந்து கொண்டனர். முதலில் எதிர்த்த பட்டாளங்கள் ஊன்று போராடாமல் விரைந்து முறிந்து போனமையால் இருதிறத்திலும் யாதொரு உயிர்ச் சேதமும் நேரவில்லை. யாண்டும் தடையின்றி இவர் ஏறி வாரினர். யுத்தத்திற்குரிய சாதனங்களையே எவ்வழியும் வவ்வி வந்தனர். தலைமையான கோட்டையைத் தங்கள் கைவசம் செய்து கொண்டபின் அயலே இருந்த பண்டக சாலைகள் எல்லாம் இயல்பாய் அமைந்தன. பிடித்த தானங்களைத் தக்கபடி காவல் செய்து வைத்து அடுத்த நிலைகள் யாவும் தொடுத்து ஆராய்ந்தனர். இவர் யாண்டும் ஊன்று ஆய்ந்து வருங்கால் ஆண்டு ஒரு பெரிய மாளிகையைக் கண்டனர். நான்குபுறமும் சூழ்ந்த மதில் வளைவுகளோடு ஓங்கியிருந்த அதனைக் கண்டதும் உள்ளே பாங்குடன் புகுந்தார்.

## அதிபதி அமைந்தது

இராணுவ அதிகாரத்தோடு வாணிபங்களையும் மேல்பார்த்து வருகிற தலைமையான கும்பினி அதிபதி அங்கே குடியிருந்தார். பாஞ்சைவீரர் புகுந்து கோட்டையை முதலில் வளைந்து வெற்றி கொண்டதை அறிந்ததும் அவர் வெளியே தலை நீட்டாமல் உள்ளேயே மறைந்து ஒதுங்கி யிருந்தார். [Regimental officer] பட்டாளத் தலைவர் என்று அதிகாரிகள் எல்லாரும் அவரை அழைத்துவருவது வழக்கம். அவருடைய இயற்கைப் பெயர் பங்கட் [Baggatt] என்பது. அப்பொழுது அவருக்கு வயது முப்பத்தெட்டு. நல்ல தோற்றமுடையவர். அந்த ஆங்கிலத் தளபதியைப் பார்த்ததும் இந்தப் பாஞ்சைவீரர்கள் ஆர்த்து வளைந்தார். கூரிய வேல்களோடு இவர் சீறி நிற்கவே அவ் வெள்ளைத்துரை உள்ளம் பதறி யாதொன்றும் செய்யாமல் அயர்ந்து நின்றார். அவரைக் கைப்பிடியாக இவர் பற்றிக் கொண்டார். அங்கிருந்த சிறந்த

பொருள்களையும் கவர்ந்து வந்தனர். போர்க்கருவிகளுள் மூன்று ரிவால்வர்களும், இரண்டு பிஸ்தோல்களும் இருந்தன.

### வெள்ளைத் தளபதி வெருவியது.

அவர் வெளியே வந்ததும் மருண்டு வெருண்டு மறுகி நின்றார். நாணமும் மானமும் அவரை வாட்டி நின்றன. தம்முடைய இனத்தவர்மீது கோபக் கொதிப்போடுள்ள கொடிய பகைவர் ஆகலால் தன்னைக் கொன்றே விடுவர் என்று அவர் முடிவு செய்து கொண்டார். தமிழ் கொஞ்சம் கொச்சையாக அவருக்குப் பேசத் தெரியும்; ஆயினும் அன்று யாதொன்றும் பேசாமல் உள்ளமுடைந்து உறுதி குலைந்து இவர்பால் அவர் ஒடுங்கியிருந்தார். அவருடைய நிலை எள்ளலாய் இழிந்து நின்றது.

முதலில் பிடித்தவரைத் தோணியில் ஏற்றி உன் ஊரை நோக்கி ஓடிப்போ என்று விரட்டி விட்டதுபோல் அவரை வெளியேவிடவில்லை. கொள்ளைப் பொருளோடு அவ் வெள்ளைத் தலைமையும் உடன்கொண்டு பாஞ்சாலங்குறிச்சியை நோக்கிப் படை வீரர் புறப்பட்டனர். விடிய மூன்று நாழிகைக்கு முன் படைகள் எழுந்தன. இடையே மீள விட்டான் அருகே காலை உண்டி கொண்டனர். வந்த வேலை சிந்தை மகிழ முடிந்தமையால் யாவரும் அங்கே உல்லாச உரைகள் ஆடிச் சல்லாபமாயிருந்தனர்.

### மீள விட்டான்

இந்த ஊர் தூத்துக்குடிக்கு மேற்கே நான்கு கல் தூரத்தில் உள்ளது. இவ்வூருக்கு வாய்ந்துள்ள பேருக்கு அப்பக்கத்தில் உள்ளவர் கூறும் காரணம் விசித்திரம் மிக வுடையது. கன்ன பரம்பரைக் கதைகளை என்ன வகையில் கேட்டாலும் இனிமை சுரந்து வருகிறது. இன்னலான இன்ன நிலையிலும் இனியது தெரிய நேர்ந்தது. அரிய நிகழ்ச்சி பெரிய மகிழ்ச்சியைத் தருகிறது. அந்தக் கதையை இங்கே அறிய வருகிறோம்.

கம்பர் சோழ நாட்டை விட்டுப் புறப்பட்டுத் தலங்கள் தோறும் சென்றார். தமது புலமைத் திறத்தையும் கவி வன்மையையும் அரசர்களிடமும் குறுநில மன்னர்களிடமும் வெளிப்படுத்திப் பரிசில் பல பெற்று விருது வெற்றிகளோடு பாண்டி நாட்டிற்கு வந்தார். பலவூர்களையும் கடந்து இவ்வூர் அருகே வரும்

போதை செடி கொடிகள் நிறைந்த காடு ஒன்று எதிரே நேர்ந்தது. அதன் இடையே புகுந்து போகும் பொழுது ஒரு பெண்ணின் குரல் பண்ணின் இசையோடு இனிமையாகக் கேட்டது

"சில்லென்று பூத்த சிறுநெருஞ்சிக் காட்டுடே
நில்லென்று சொல்லி நிறுத்திவைத்துப் போனீரே!"

என்னும் இந்தப் பாட்டு அந்த நாட்டுப் புறத்துப் பருவ மங்கை வாயிலிருந்து மதுரகீதமாய் எழுந்து வந்தது. இப்பாவின் சுவையையும் நாவின் இசையையும் கேட்ட கம்பர் நாட்டமாய் வியந்து நின்றார். ஒரு காதலன் நீர் பருகி விரைவில் வருவதாகத் தன் காதலியிடம் சொல்லித் தனியே காட்டு வழியில் விட்டுப் போயுள்ள நிலைமையைக் குறித்து அப்பாட்டு அன்புரிமையோடு மருவி அமைந்துள்ளமையால் அதனை நினைந்து நினைந்து கவிஞர் பிரான் இன்பம் மிக அடைந்தார். "பட்டிக் காட்டுப் பெண்ணே இப்படிப் பாடுகிறாளே! இப் பக்கங்களில் படித்த ஆடவர்கள் எப்படிப்பட்ட கவிஞர்களா யிருப்பார்களோ!" என்று கருதிப் பயந்து அப்படியே மீண்டு போய் விட்டாராம். எந்த இடத்திலிருந்து கம்பர் மீண்டு போனாரோ அந்த இடத்தில் இந்த ஊர் அமைந்திருத்தலால் மீள விட்டான் என்று பேர் அமைந்ததாம்

இவ்வாறு உல்லாச விநோதமாப் பேர் வந்துள்ள அவ்வூர் அயலே பாஞ்சைப் படைகள் இறங்கியிருந்தன. அந்தக் கூட்டத்துள் இருந்த வீரபத்திரன் என்பவன் படைத்தலைவராகிய பராக்கிரம பாண்டியனைப் பார்த்து "உங்களுக்கும் மீள விட்டான்" என்று ஒரு பெயர் ஏற்பட்டது எனச் சாதுரியமாய்ச் சொன்னான். அது எப்படி? என்று அருகிலிருந்தவர் கேட்டார். தூத்துக்குடியில் பிடித்த அந்த வெள்ளைக்காரனை மீன் படகில் ஏற்றி மீளவிட்டமையால் மீள விட்டான் என்னும் பெயரைத் தனக்கு உரிமையாக நேற்று முதல் இவரும் நீள விட்டார் என அவன் ஓலமிட்டான். காலமும் இடமும் களிப்புகளாய் நின்றன.

நகைச் சுவையோடு பேசுகிற அவனுடைய நளின வசனங்களைக் கேட்டு அனைவரும் உவந்து கொண்டனர். எல்லாரும் உல்லாசமும் உவகையுமாய்த் துள்ளியிருக்க அந்த வெள்ளைத் துரை உள்ளம் கருகி உணர்வு குலைந்து உயிர் மறுகி யிருந்தார்.

## வழி நடந்தது

காலை உணவு அருந்தி முடிந்தபின் அங்கிருந்து சேனைகள் எழுந்தன. வெற்றிக் களிப்புடன் விரைந்து நடந்தன. துரையும் கால் நடையாய் வருந்தி நடந்து தொடர்ந்து வந்தார். அவரை நடுவே நடத்திப் படை வீரர்கள் புடைசூழ்ந்து வந்தது என்றும் காணாத ஒரு புதுமையா யிருந்தது. "மனிதன் கையில் மனிதன் அகப்பட்டால் குரங்கு" என்னும் பழமொழி இரங்கி எண்ணவுரிபது. பாஞ்சாலங்குறிச்சி வீரர் ஒரு வெள்ளைத் துரையைச் சிறை பிடித்து வருகிறார் என்னும் செய்தி அயல் எங்கும் பரவவே வருகிற வழிகளில் பட்டிக்காட்டுச் சனங்கள் திரள் திரளாகச் சேர்ந்து வந்து இரு புறங்களிலும் தொடர்ந்து அடர்ந்து வேடிக்கை பார்த்து வியப்படைந்து இவ் வீரர்களைப் புகழ்ந்து நின்றார்.

யாரும் செய்ய முடியாத அரிய காரியத்தை வீரியமாய் இவர் செய்து வந்துள்ளார் என்று வியந்து புகழ்ந்து நாட்டு மக்கள் மகிழ்ந்து கொண்டாடினர். பேச்செல்லாம் பெரு மகிழ்ச்சிகளாய்ப் பெருகி நின்றன. வெற்றி விருதுகள் வீறு கொண்டு சென்றன. உற்ற உவகைகள் எங்கும் உரிமைகளாய் ஓங்கின.

வழி யிடையே சில ஊர்களில் இருந்த குடித் தலைவர்கள் இப்படைத் தலைவர்களுக்கு மலர்மாலைகள் சூட்டி மரியாதைகள் செய்தனர். சில இடங்களில் சிற்றுண்டிகள் வழங்கினர். பானகமும் மோரும் பானை பானைகளாய்ச் சேனைகளுக்கு வந்தன. பொது சனங்களுடைய அன்புரிமைகள் அதிசய இன்பங்களை அருளின பிரியமொழிகள் அரியஉறுதிகளாய்ப் பெருகிநின்றன.

## பாஞ்சையை அடைந்தது

கருதிச் சென்ற காரியம் கைகூடி வந்தமையால் பெருமகிழ்வுடையராய் இவர் விரைந்து வந்தனர். பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தனர். கோட்டை வாசலை அடைந்ததும் வேட்டையில் வெற்றி என வீர விருதுகள் கூறினர். உடனே ஊமைத்துரை முன் அச்சீமைத்துரையைக் கொண்டுவந்து நிறுத்தினர். அரண்மனையுள் இருந்தவர் எல்லாரும் விரைந்து வெளியே வந்து வேடிக்கை பார்த்து நின்றனர். அவரது காட்சி ஒரு புதிய அதிசயமாகவும் ஆச்சரியமான பரிதாபமாகவும் மருவியிருந்தது.

## அரசு ஆதரவு செய்தது

ஆரங்கமாலில் ஊமைத்துரை அமர்ந்திருந்தார். ஈட்டி வேல் வல்லயம் கண்டகோடாலி முதலிய கொடிய ஆயுதங்களைக் கை களில் ஏந்தி இருமருங்கும் படை வீரர்கள் நிற்க இடையே ஆசனத்திலிருந்த அதிபதி எதிரே வந்த வெள்ளைத்துரை உள்ளம் கலங்கினார். பாவம்! அவர் வெட்கமும் துக்கமும் உடையராய் வெருவி நின்றார் அவரது நிலைமையைக் கண்டதும் இவர் உள்ளம் இரங்கினார் வெள்ளையர் மீது கொண்டுள்ள கோபக் கொதிப்புகளை எல்லாம் அடக்கிக் கொண்டு அவர்பால் அன்புரிமை யோடு ஆதரவு கூறினார்: "நீர் ஒன்றும் பயப்பட வேண்டாம்; ஈண்டு யாதொரு அல்லலும் யாரும் உமக்குச் செய்யமாட்டார்; கும்பினியாரை அடியோடு வென்று ஒழித்தபின் உம்மைச் சீமைக்குப் போகும்படி சீட்டுக் கொடுத்து அனுப்பிவிடுவோம்; நீர் சுகமே போய்ச் சேரலாம்; அதுவரையும் இங்கேயே தங்கி யிரும்" என்று அமைதியாய்க் கூறி அயலே நின்ற சேவகர்களை நோக்கினார். "இந்தத்துரையைக் கோண்டு போய் வைக்க வேண் டிய இடத்தில் வையுங்கள்!" என்று பக்குவமாய்ச் சொன்னார்.

## சிறையில் இட்டது

"எதிரி இனத்தைச் சேர்ந்தவன் நம் கையில் சிக்கி யிருக்கி றான்; இன்று இவன் செத்தான்" என்று இன்னவாறு சின்ன எண்ணங்களோடு செருக்கி நின்ற சேவகர்கள் ஊமைத்துரை யின் உரையைக் கேட்டதும் உள்ளம் திகைத்தார்; பின்பு அந்த வெள்ளைத் துரையைப் பிடித்துக் கொண்டு போய்ச் சிறையில் அடைத்து வைத்தார். அங்கே அவலமாய் அவர் அலமந்திருந்தார். மாட்டிறைச்சி இன்றி நாட்டுக் களியைத் தின்று மனம் மிக வுடைந்து மறுகிக் கிடந்தார். அவரது நிலை பரிதாபமா யிருந்தா லும் ஊமைத்துரை கூறிய உறுதி மொழியை நினைந்து சிறிது தேறி யிருந்தார். நெஞ்சக் கவலைகள் நெடிது நீண்டு நின்றன.

## வெள்ளையர் உள்ளம் உளைந்தது

சேனைத் தலைவராய்ச் சிறந்திருந்த சீமைத் துரை ஊமைத் துரை ஊரில் வந்து ஈனச் சிறையில் இழிந்து கிடக்கின்றார் என் னும் உரைகள் உலகம் எங்கும் பரவின. தங்கள் சாதிக்குப் பெரியபழி நேர்ந்தது என்று வெள்ளைக்காரர் எல்லாரும் உள்ளம்

கவன்றார். உள்ளலே நினைந்து வருந்தி எப்படியும் சிறையை நீக்கித் துரையை மீட்டிக் கொண்டு வரவேண்டும் என்று கூட்டங்கள் கூடினர். கும்பல் திரண்டு கூடிப் பேசினாலும் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்கு வரப்பயந்து குலை நடுங்கி அவர் அயல் ஒடுங்கி நின்றார். அவமானங்கள் அவரிடையே ஓங்கி நின்றன.

## கருவிகளைக் கண்டது

துரையைச் சிறையில் இட்டபின் நிரையாய் வாரிவந்துள்ள யுத்த தளவாடங்களை யெல்லாம் ஊமைத்துரை உவந்து பார்த்தார். சுடு வெடிகளும் கருமருந்துகளும் குண்டுகளும் பெரிது கிடைத்திருப்பதைக் கண்டு பேருவகை கொண்டார். அவற்றுள் பழுதுபட்டுள்ளனவற்றைச் சீராகக் கூராக்கிச் செம்மைப் படுத்தி ஆயுத சாலையில் சேர்க்கும்படி கட்டளையிட்டு மேலுள்ள காரிய விசாரணைகளைக் கருதிச் சீரிய வினைகளை வீரியமாய்ச் செய்தார்.

## காரியம் விசாரித்தது

தூத்துக்குடிமேல் படையெடுத்துச் சென்ற படைத்தலைவர்களை அழைத்து வைத்து அங்கே நேர்ந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் விவரமாக விசாரித்தார். கும்பினிக் கோட்டையைக் கைப்பற்றியது முதலாக யாவும் தெளிவாக அவர் சொன்னார். முன்னதாகக் கையில் அகப்பட்ட பட்டாளத் தலைவனை அவர் கடல் கடத்தி விட்டதைக் கேட்டதும் இவர் அதன் காரணத்தைப் பூரணமாக அறிய விரும்பினர். நேரே உசாவினர்:

ஊமைத்துரை: முதலில் பிடித்த வெள்ளையனை இங்கே கொண்டு வாராமல் ஏன் அங்கே விட்டு விட்டீர்கள்? விடும்படி யாரேனும் சொன்னார்களா? வெளியே விட்டதற்குக் காரணம் என்ன?

சேனைத்தலைவன்: அவனைப் பார்க்கும் போது இரக்கமா யிருந்தது; கொஞ்ச வயசு; ஒன்றும் பேச மாட்டாமல் அஞ்சி வெருண்டு அலமந்து விழித்தான்; இன்னும் கலியாணம் ஆகாதவன்; போய்த் தொலையட்டும் என்று போக்கி விட்டேன்.

ஊமைத்துரை: அவன் எங்கே போனான்?

சேனைத்தலைவன்: தன்னுடைய சொந்த நாட்டுக்குப் போய் விடுவதாக அவன் சைகை காட்டினான்; நானே

கடல் கரைக்குக் கொண்டு போய் மீன் படகில் ஏற்றி விரைந்து போய் விடு என்று வடக்கு முகமாக விரட்டி விட்டேன்.

ஊமைத்துரை: அகப்பட்டுள்ள இந்த வெள்ளையனை இங்கே வைத்துக் கொண்டு என்ன செய்வது? இவனையும் அப்படி அனுப்பி விட்டால் என்ன?

சேனைத்தலைவன்: எதிரிகள் மேலே என்ன செய்கிறார்கள் என்று பார்ப்போம்; ஓடிப் போன கும்பினியார் மீண்டும் படை எடுத்து ஈண்டு வராமல் இருப்பாரா? அவருடைய ஆங்காரங்களும் அதிகார மமதைகளும் எளிதில் ஓய்ந்து ஒழியும் என்று தெரியவில்லை; போர் முடிவு தெரிந்து இதனை ஓர் முடிவு செய்து கொள்வோம்; அது வரையும் துரை சிறையில் இருக்கட்டும்.

ஊமைத்துரை; நம்மைக் கும்பினியார் சிறை வைத்ததற்குப் பதிலாக நாமும் அவருள் ஒரு தலைவனைப் பிடித்துச் சிறை வைத்துள்ளோம் என்று பெருமை கொண்டாடவா இந்தக் கருமம் செய்தது?

சேனைத்தலைவன்: அவ்வாறு வீண் பெருமை கொள்ள வில்லை. நேரே போரில் வென்று கொண்டு வந்தது ஆதலால் போர் முறைப்படி செய்துள்ளது. வெற்றி தோல்விகளை யார் அறிய வல்லவர்? எல்லாம் விதிவிளைவின்படி நடைபெறுகின்றது.

ஊமைத்துரை: நம்முடைய விதிமுறை எப்படி இருக்கிறதோ?

## பேச்சிமுத்து பேசியது

இப்படி இவர் பேசிக் கொண்டிருக்கும் பொழுது பேச்சிமுத்து என்பவன் அருகே வந்தான்! அவன் மறவர் மரபினன; சிலம்பப் போரிலும் வாள் ஆடலிலும் வல்லவன் நல்ல குறிகாரன அவன் ஊமைத்துரை முன் வணங்கி நின்று, "மகாராஜா! கையில் கிடைத்ததை அடைத்து வைத்திருப்பானேன்? நமது பெரிய மகாராஜாவை அநியாயமாய்க் கொன்ற பழிக்குப் பழியாகக் கோட்டை வாசலில் நிறுத்தி வேட்டை தீர்த்து விடுகி

றேன்; என் கையில் கொடுத்து விடுங்கள்; சிறையில் வைத்துக் கொண்டு இந்த வெள்ளையனுக்கு இரைபோடவேண்டாம்; நானே வெளியில் கொண்டு வந்து பருந்துகளுக்கு இரைபோட்டு விடுகிறேன்" என இவ்வாறு அவன் முறைபோட்டுக் கேட்டான் தன் பெயருக்கு ஏற்ப வாய்ச் சாலகமாக யாரிடமும் கூசாமல் பேசுகின்றவன் ஆதலால் அன்று அவ்வாறு பேச நேர்ந்தான்.

அவனைப் பார்த்து ஊமைத்துரை சிரித்தார்: "நீ பொல்லாத சூரன்; நிலை குலைந்து போய்க் கையில் அகப்பட்டுள்ளவனை நீ கொலை செய்யப் பார்க்கிறாய்! இனிமேல் போராட வருகின்ற வெள்ளைக்காரர்களிடம் உன் உள்ளக் கொதிப்பைப் போருகளத்தில் நேரே தீர்த்துக் கொள்!" என்று உல்லாசமாச் சொன்னார்.

"நல்லது; மகாராஜா! அப்படியே செய்கின்றேன்" என்று அவன் நளினமாய் அயல் ஒதுங்கிப் போனான். இந் நாட்டிலுள்ள படை வீரர்கள் வெள்ளைக்காரர் மீது கொண்டுள்ள வெறுப்பும் கோபக் கொதிப்புகளும் இடையிடையே அவர்களுடைய உரைகள் மூலம் உலகம் தெளிவா அறிய வெளி வருகின்றன.

பாளையகாரர் பலர் கும்பினியாருக்குப் பணிந்து ஒடுங்கினும் நாட்டு மக்கள் எல்லாரும் தேசப் பற்றுடையராய் ஈட்டமுற்றிருந்தனர். பொது சனங்கள் ஆட்சிப் பொறுப்புகளை நன்கு உணராது போயினும் அன்னியர் புகுந்து அதிகாரம் செய்வதை யாண்டும் அவலமாகவே கருதி எவ்வழியும் வெறுத்து நின்றனர்.

சுதந்திர வுணர்ச்சியும் சுயமரியாதையும் எந்த மனிதனுக்கும் இனிமையாய் இன்பம் சுரந்து வருதலால் இவை சீவ அமுதங்களாய் மேவியுள்ளன; ஆகவே யாவரும் அவற்றை இயல்பாகவே விரும்பி உயர்வா மதித்து உவந்து போற்றுகின்றனர்.

## பெண்கள் இரங்கியது.

ஒரு வெள்ளைத் துரையைப் பிடித்துக் கொண்டு வந்து ஊரினுள்ளே சிறை வைத்திருப்பதை அறிந்து அந்தப்புரத்து மங்கையர் அனைவரும் வருந்தினர். மன்னன் மனைவி சவுந்தர வடிவு பெரிதும் இரங்கித் துரையைச் சிறை நீக்கி விடும்படி கணவனிடம் மறுகி வேண்டினாள். "எதிரிகள் செயலை எதிர்பார்த்திருக்கிறேன்; விரைவில் இவனை விடுதலை செய்து விடுவேன்"

என்று அவர் உரிமையோடு உறுதி கூறினர். பெண்கள் மனம் யாண்டும் இரக்கமும் தயையும் பெருகியிருத்தலை ஈண்டு உணர்ந்து உவகையுறுகின்றோம். உள்ளப்பரிவு உரையில் வருகிறது.

விடுதலையாகும் வரையும் அந்த வெள்ளைத்துரைக்கு நல்ல உணவுகள் கொடுத்து வரும்படி காவலாளிகளுக்கு அரசி கட்டளையிட்டருளினள். அவ்வாறே யாவரும் அவருக்கு ஆதரவு செய்து வந்தார். அந்தப் புரத்தின் அளியுடைமையால் எந்தப் புரமும் தெளிவடைந்து எவ்வழியும் இதமுடன் நடந்து வந்தது.

### வந்தவருக்கு உதவி புரிந்தது.

பெண்களுடைய உள்ளம் எவ்வழியும் இளகியருளுகிறது. தாய்மை அன்பு அவர்களிடம் தழைத்து நிற்கிறது. கும்பினியார் வம்பாகப் பகையை வளர்த்துத் தமக்கு அல்லல் பல செய்திருந்தும் ஒரு வெள்ளைக்காரனிடம் உள்ளம் இரங்கி இவ்வாறு உதவி புரிந்திருப்பது அவரது இயல்பான இனிய நீர்மையையும், உயர்வான தகைமையையும் உலகம் அறியச் செய்துள்ளது.

போர் வீரர்கள் ஆயினும் இந்த மரபினர் யாரிடமும் பேரிரக்கமுள்ளவர் கால வேற்றுமையால் கடும் பகைகள் மூண்டு நெடுந்துயர்கள் நீண்டன. நீண்டாலும் நீதிகள் நிலைத்து நின்றன.

ஆங்கிலேயருக்குப் பாஞ்சாலங்குறிச்சியாரோடு நேர்ந்த விரோதம் எல்லாம் ஆட்சித் திமிரால் மூண்ட அவலமேயாம். மாறுபட்ட மனக்கடுப்புகள் இருமரபுகளுக்கும் கொடிய இன்னல்களை விளைத்து நெடிய கேடுகளை வளர்த்தன. அழிதுயரங்கள் நேர்ந்தாலும் யாதும் தளராமல் இவ் வீர மரபினர் வீறோடு வாதாடி யாண்டும் தீரமாய் அடலாண்மை புரிந்து வந்தனர்.

"நாளினும் திறைநுமக்கு உவப்பத் தந்துநாடு
ஆளுதும் அன்றெனில் அழிதுமேல் எம
தோளினும் தொடுகழல் வலியினும் இவ்
வாளினும பயன்எனோ மரீஇய மாந்தர்காள்!"

இந்த மான வீரங்கள் மருவியே ஊமைத்துரை சீமைத் துரைகளைச் சீறி எதிர்த்து யாண்டும் மூண்டு நீண்ட திறலோடு போராடி நின்றனர். அந்த நிலையில் இந்த வென்றியும் வந்தது.

# பதின்மூன்காவது அதிகாரம்

## கருணை புரிந்து விட்டது.



அதிகார நிலையில் தானைத் தலைவராய்த் தூத்துக்குடியில் சிறந்திருந்த அந்த வெள்ளைத்துரை பாஞ்சாலங்குறிச்சியில் வந்து இழிந்து கிடப்பது ஆங்கிலேயர் எல்லாருக்கும் கொடிய அவமானமாய் நீண்டு நின்றது; ஆயினும் அந்த நிலை நெடிது நீளவில்லை. அத்துரையின் மனைவி மறுகி விரைந்தாள். தன் கணவனைப் பாஞ்சை வீரர் பிடித்துக் கொண்டு போகவே அவள் துணையிழந்த அன்றில்போல் துடித்து அலறினாள். யாது செய்வது என்று தெரியாமல் அயர்ந்து அலமந்து நின்றாள். மேரி வினோலா (Mary Vinola) என்னும் பேரினையுடைய அவள் பெரிதும் வருந்தி இறுதியில் நேரே பாஞ்சைக்கு வரத் துணிந்தாள். தன்னோடு துணைக்கு வரும்படி சில துரைகளை அழைத்தாள். கோட்டைக்கு வர அஞ்சினமையால் அவளுடைய வேண்டுகோளுக்கு யாரும் இசையவில்லை. முடிவில் தனியாகவே துணிந்து புறப்பட்டாள்.

### துரைச்சி வந்தது.

வாகன வசதிகள் யாதும் இல்லாமல் தன்னந் தனியளாய் அந்த வெள்ளைக்காரி உள்ளம் கவன்று தூத்துக்குடியிலிருந்து புறப்பட்டு பாஞ்சாலங்குறிச்சியை நோக்கி நடந்து வந்தாள். எமன் கையில் அகப்பட்ட கணவனைச் சாவித்திரி மீட்டத் தொடர்ந்ததுபோல் அவள் காட்டுவழியே கடுகி நடந்தாள். ஊமைத்துரையின் ஊரை நோக்கிச் சீமைத்துரைச்சி சென்றது எல்லாருக்கும் ஓர் அதிசயமாயிருந்தது. வழிகளில் கண்டவர் விழிகள் மலர்ந்து நோக்கி அளி புரிந்து நின்றனர். "எங்கள் நாட்டு வீர மன்னருடைய தீர நீர்மைகளை யுணராமல் கும்பினியார் கோரங்கள் செய்தமையால் உங்களுக்கு இந்த அலங்கோலங்கள் நேர்ந்தன" என்று சிலர் அசதிகள் ஆடினர். இந்த நாட்டு மொழிகள் யாதும் தெரியாது ஆதலால் அந்தக் காட்டு வழியே ஒன்றும் கேளாதவளாய்த் தன் கேள்வனையே கருதிக் கொண்டு ஆவலோடு அவள் மேவி வந்தாள். பாஞ்சையை அடைந்தாள்; தெற்குக் கோட்டை வாசலை அணுகினாள். வேல்களோடு வீறு

கொண்டு நிற்கும் காவலாளிகளைக் கண்டதும் சிறிது கலங்கினாள்; ஆயினும் உறுதிமிக வுடையளாய் அரசரைக் காணவேண்டும் என்று கைகளால் சைகை காட்டினாள். காவலர் இரங்கி அயலே நின்ற ஏவலரிடம் இசைத்தார். அவருள் ஒருவன் உள்ளே போய் ஊமைத்துரையை வணங்கி "மகாராஜா! ஒரு வெள்ளைக்கார அம்மா வந்திருக்கிறாள்" என்று சொன்னான். "வரச் சொல்லு" என அவர் குறித்தார். அவ்வாறே அவன் விரைந்து வெளியே வந்து மன்னன் அளியோடு சொன்னதை உரைத்தான். துரைச்சி வழியோடு உள்ளே துணிந்து புகுந்தாள்.

### மறுகி நின்றது

கொழுநனைப் பறிகொடுத்துக் குலை துடித்து வந்த அந்தக் குலமகள் இக்கோமகனைக் கண்டதும் தலைவணங்கி நின்று, தனக்கு மங்கலப் பிச்சை தந்தருளும்படி மறுகி வேண்டினாள். அவள் தமிழ் அறிந்திலள் ஆயினும் தனது இனிய மொழியைக் கனிவு தோன்ற மிழற்றிக் கண்ணீர் ததும்பிப் பெண்ணீர்மையோடு பேதுற்று நின்றாள். அவளது நிலைமையை நோக்கி இவர் நெஞ்சம் இரங்கினார். "அஞ்சாதே அம்மா!" என்று அருள் புரிந்து அயலே இருந்த ஆசனத்தில் இருக்கச் செய்தார். அலமந்து நின்ற அவள் சிறிது ஆறுதலாய் அதில் அமர்ந்திருந்தாள். உடனே சிறையிலிருக்கிற துரையைக் கொண்டு வரும்படி அருகில் நின்ற உறவினரிடம் ஊமைத்துரை உரைத்தார். விரைந்து போய் அவரை அழைத்து வந்தார். வந்த துரை அங்கே தனது மனைவியைக் கண்டார் காணவே கண்ணீர் மல்கி மனம் மிக மகிழ்ந்தார் ஆயினும் மானமும் நாணமும் மண்டி மறுகி நின்றார்.

### மரியாதை செய்தது.

எமன் வாய்ப்பட்ட உயிர் எனத் தன் நாயகனை எண்ணி மயங்கியிருந்தவள் அவரை நேரே பார்த்ததும் உள்ளம் குளிர்ந்து விரைந்து எழுந்து போய்த் தழுவிக் கொண்டு உவந்து நின்றாள். அந்தத் தம்பதிகளை ஒரே மஞ்சத்தில் இருக்க வைத்து அரிய கனிகளும் இனிய பாலும் கொடுத்துப் பருகச் செய்தார். ஒரு உயர்ந்த பட்டாடையைத் துரைச்சிக்கு உதவி "உனக்காகத்தான் இவரை இன்று மன்னித்து விடுகிறேன்; அழைத்துக் கொண்டு போ" என்று அருள் புரிந்து பொருளும் தந்து விடுத்தார்.

## அதிசயம் அடைந்தது.

அல்லலடைந்து வந்து உள்ளம் உடைந்து நொந்து சிறையில் இருந்து மறுகிய அந்தத் துரை இந்தத் துரை செய்த உபசாரங்களையும் அன்புரிமைகளையும் கண்டு அதிசய பரவசராய் மதி மயங்கி நின்றார். கொன்று விடுவான் என்று குலை நடுங்கி யிருந்த அவர் இன்று புரிந்த இத நலங்களைக் காணவே இவரது இயல்பான இனிய நீர்மைகளை எண்ணி மகிழ்ந்தார். "இத் தகைய உத்தமமான நல்ல கோமகனோடு நம்மவர் பகைமையை விளைத்துத் துயர் இழைத்திருப்பது பரிதாபமே!" என அச்சீமைத்துரை சிந்தை நொந்துகொண்டார். நேரில்கண்டவர் நெஞ்சுருக நேர்ந்தார்.

## ஆதரவுடன் அனுப்பியது

துரையைச் சிறை பிடித்தபொழுது கவர்ந்து வந்த பொருள்களையெல்லாம் மீளவும் அவரிடம் கொடுத்து ஒரு நல்ல பெட்டி வண்டியில் மனைவியையும் கணவனையும் ஏற்றித் தூத்துக்குடிக்கு அனுப்பி வைத்தார். இடைவழியில் யாதொரு இடையூறும் நேராமல் பாதுகாப்போடு கொண்டு போய்ச் சேர்த்து வரும்படி காவலர் நால்வரைத் துணையாக அனுப்பியருளினர் அக்காட்சியை யாவரும் ஆவலோடு பார்த்து நின்றனர். கொடை பெற்ற பொருள்களுடன் அவர் இவரிடம் விடைப்பெற்றுப் போயினர்.

அந்தச் சதிபதிகள் இருவரும் இந்த அதிபதியின் பெருந்தன்மையை நினைந்து நினைந்து வழி முழுவதும் வியந்து புகழ்ந்து மகிழ்ந்துசென்றார். உதவிநலங்கள் உள்ளங்களை உருக்கி நின்றன.

## வெள்ளையரும் வியந்தது

சண்டைகள் மூண்டு எங்கும் கோபதாபங்கள் மண்டி யாவரிடமும் மாறுபாடுகள் மீறி வேறுபாடுகள் விரிந்து நிற்கும் இந்தச் சமையத்தில் பகைவர் இனத்தில் ஒருவனைச் சிறையாகப் பிடித்து வந்தும் யாதொரு இடரும் இழைக்காமல் யாவும் கொடுத்து இனிது உபசரித்து விடுத்த இவரது உள்ளப்பான்மையை அறிந்து வெள்ளைக்காரர் எல்லாரும் வியந்து புகழ்ந்தார்.

இத்தகைய நேர்மையான போர் வீரரிடம் கும்பினியார் கொஞ்சம் ஆதரவாக நடந்திருந்தால் இவ்வாறு மாறுபட்டு வீறு கொண்டு வெவ்விய நிலையில் இவர் மீறியிரார் என ஆங்கிலேயர்

பலரும் தேறி நின்றார். ஆட்சி மமதையில் அதிகார வெறி கொண்டவர்களைத் தவிர, பொதுவான வெள்ளைக்காரர் எல்லாரும் இவர்பால் நல்ல மதிப்பும் மரியாதையும் பிரியமும் மருவி யிருந்தனர். அளவுக்கு மிஞ்சித் தந்நலம் கருதுகிறவர்களாலேயே உலகிற்கு இன்னல்களும் இழவுகளும் நேர்கின்றன. பேராசைகள் பெரிய நாசங்களாய் மாறிக் கொடிய நீசங்களை விளைத்துக் குடிகேடுகள் செய்து நெடிய துயரங்களை நீட்டி விடுகின்றன.

சிறையில் வைத்திருந்த துரையை அவருடைய மனைவியின் வேண்டுகோளுக்கு இரங்கி விரைவில் விடுதலை செய்து பரிவோடு இவர் அனுப்பி யருளிய பான்மை எங்கும் மேன்மையாக வியந்து பேசப்பட்டது. ஆங்கில தளபதிகளும் இந்த நிகழ்ச்சியை உவந்து புகழ்ந்து உணர்ச்சியோடு விழைந்து எழுதியுள்ளனர். அயலே வருகிற குறிப்பு இங்கே கூர்ந்து அறிய வுரியது.

"His wife immediately followed them into the fort and petitioning for her husband's life, he was instantly set at liberty, and his property ordered to be restored." R. G.

"அந்தத் துரையினுடைய மனைவி உடனே பின் தொடர்ந்து பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்கு வந்தாள்; தனது கணவன் உயிரைக் காத்தருளும்படி முறையிட்டு வேண்டினாள்; உடனே ஊமைத்துரை அவரை விடுதலைசெய்து அவருடைய பொருளையும் அவரிடம் திருப்பிக் கொடுத்தருளினார்" என்பது மேலே குறித்துள்ள ஆங்கில வாசகத்தின் பாங்கான மொழி பெயர்ப்பு.

இதனால் இவரது ஆண்மையும் கேண்மையும் தண்ணளியும் கண்ணியமும் எண்ணி யுணரலாகும். கொடிய பகைமைக்காலத்தும் நெடிய நீதியும் நீர்மையும் இவரிடம் நிறைந்துள்ளமையைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ளுகிறோம். ஒரு மனிதனுடைய உண்மையான நிலைமையை அவன் அல்லல் அடைந்துள்ள போது தான் யாதும் ஒளியாமல் தெளிவாக அது வெளியாக்கியருளுகிறது. இவரது சிறந்த பெருந்தகைமை ஈண்டு விளங்கியுள்ளது.

பாஞ்சைப் படைவீரர் தூத்துக்குடியைக் கைப்பற்றி அங்கிருந்த துரையைப் பிடித்துக் கொண்டு வந்து கோட்டையில் சிறை வைத்திருந்த செய்தியை (History of Tinnevelly) திருநெல்வேலிச் சரித்திரம் எனத் தாம் எழுதியுள்ள நூலில் கால்டுவெல் துரையும் (R. Caldwell) குறித்திருக்கிறார். அயலே வருகிறது.

**"During the last Poligar war Tuticorin was taken from the English and held for a short time by the Poligar of Panjalamkurichi. This was in the beginning of 1801. They found an Englishman, Mr. Baggott, who was Master Attendant of Tuticorin, and carried him off a prisoner." [H. O. T.]**

"இரண்டாவது போர் நடந்தபொழுது பாஞ்சாலங்குறிச்சிப் பாளையகாரர் தூத்துக்குடியை இங்கிலீஷ்க்காரரிடமிருந்து கைப்பற்றிக் கொண்டார். சிறிது காலம் அது அவரது கைவசமிருந்தது. இது கி.பி. ஆயிரத்து எண்ணூற்றுஒராம் வருடம் ஆரம்பத்தில் நிகழ்ந்தது. அப்பொழுது அங்கே தலைமைத் தளபதியாயிருந்த பக்கட் துரையைப் பிடித்துக்கொண்டுபோய்க் கைதியாகச் சிறையில் வைத்திருந்தனர்" என்னும் இது இங்கே அறியவுரியது.

## உலாந்தாக்காரரின் உறவு

தூத்துக்குடியை ஆங்கிலேயரிடமிருந்து பாஞ்சாலங்குறிச்சியார் கைப்பற்றிய பொழுது அங்கே ஹாலந்து தேசத்தவரான உலாந்தாக்காரர் பெரிய வியாபாரிகளாய் நிறையக் குடியேறியிருந்தனர். அந்த டச்சுக்காரர் பாஞ்சாலங் குறிச்சியாரோடு என்றும் உறவுரிமையாளராய் இருந்து வந்துள்ளனர். ஆகவே அவருக்கு யாதொரு இடையூறும் இவரால் நேரவில்லை.

பெரிய துறைமுகமுடைய அந்த நகரம் இவர் வசம் வந்தது அவர்க்கு மிகவும் உவகையாயது. இந்த ஜமீனுடைய பழமையையும் கிழமையையும் பெரிதும் மதித்து அவர் உரிமை கூர்ந்து வந்தனர். அவர்பால் இவர் யாண்டும் ஆதரவு புரிந்து நின்றனர்.

## போர்த்துக் கேசியர் நட்பு.

போர்த்துக்கேசியர், டச்சுக்காரர் முதலிய அயல்நாட்டார் எவரும் இவர்பால் ஆர்வம் காட்டி உறவாகவே யிருந்தனர். ஆங்கிலேயரும் முதலில் இனியராகவே யிருந்தார். நபாவினிடமிருந்து இந்நாட்டின் ஆட்சியுரிமையை அடைந்தபின்பே இவரிடம் பகைமை தொடர்ந்துவந்தது பொருள்வர மருள்வளர்ந்தது.

## ஆங்கிலேயர் ஆங்காரம்.

இத்தேசத்திலிருந்த எல்லாப் பாளையகாரரும்போல் அடங்கி ஒடுங்கி வணங்கி இணங்கி யிராமல் யாண்டும் வணங்கா முடி மன்னனாய் நிமிர்ந்து நின்றார் என்றுதான் இவர் மேல் அவர்

பிணங்கி மூண்டு பெருங் கேடுகள் செய்ய நேர்ந்தனர். நெல்லை மண்டலம் முழுவதும் தன்னுடைய எல்லையாக்கொண்டு தறுகண்மையோடு பெருகி வருகின்றானே என முறுகி முனைந்து அவர் கறுவுகொண்டு கடுங்கேடுகள் கருதிக் கொடுமைபுரிந்து வந்தார்.

“தூத்துக் குடிமுதலாத் தேர்க்கலவான் பாளையப்பட்டு
ஏத்துக் குடியாய் இருந்ததே---மூத்த
குடியா யிருந்ததைக் கும்பினியார் கும்பல்
முடிவாகச் செய்ததே மூண்டு”

என்றதனால் இவர் நீண்டு நிலைத்திருந்த நிலையும், அவர் மூண்டு வந்து குலைத்துள்ள குலைவும் கூர்ந்து தேர்ந்து கொள்ளலாம். மண்ணாசையால் எல்லாரும் மதி மருண்டு போகின்றனர்; விதிமுறைகளை மறந்து விடுகின்றனர்; வெந்துயரங்கள் விரைந்து புரிகின்றனர். நசை ஏற நாசங்கள் நீசங்களாய் ஏறுகின்றன.

அன்புரிமை இன்ப நலங்களை வளர்த்து வருகிறது; ஆசைப் பேய் துன்பங்களை விளைத்துத் தொல்லைகளாய் நீண்டு நிற்கிறது.

ஆங்கிலேயரைப் போலவே டச்சுக்காரரும் அயல் நாட்டிலிருந்து வந்தவரே ஆயினும் அவர் இந்த மரபினரிடம் வழிமுறையாக அன்புபாராட்டி நண்போடு ஒழுகி வந்துள்ளனர்; அதனால் அவரை அந்நியநாட்டினர் என்று கருதாமல் எவ்வழியும் ஆதரவு காட்டி அவரிடம் இவர் இதமாகவே நடந்து வந்திருக்கின்றனர்.

வாணிக முறையில் அவர் இங்கே குடியேறி வந்தபோதே இவரோடுபேணிய உறவாப் படிஏறிப்பணிவுடன்வந்திருக்கிறார்.

அத்துடன் அரசு முறையில் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்துவர வேண்டும் என இருவருக்கும் ஓர் உடன்படிக்கை ஆயது. அந்த ஒப்பந்தம் கி. பி. 1756-ல் அமைந்தது. அதுமுதல் டச்சுக்காரர் பாஞ்சாலங்குறிச்சியாருடன் வாஞ்சை கொண்டு உள்ளன்பான உரிமையோடு எவ்வழியும் ஒழுகி வந்துள்ளனர்.

“The original of a treaty between the Dutch Government of Colombo and Kattaboma Nayaka was found in his fort.”

[H. O. T.]

“கொழும்பிலுள்ள டச்சு அரசுக்கும் கட்டபொம்முநாயக்கருக்கும் அமைந்துள்ள உறவு ஒப்பந்தத்தின் மூல பத்திரத்தை

அவரது கோட்டையில் கண்டேன்" என கர்னல் புல்லர்ட்டன் (Colonel Fullarton) என்பவர் இங்ஙனம் குறித்திருக்கிறார்.

பாஞ்சை மரபினர்பால் டச்சுக்காரர் கொண்டுள்ள வாஞ்சையும் உறவும் இதனால் உணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு பரம்பரையாகவே உரிமை உரம்பெற்று வந்திருத்தலினாலேதான் அன்று தூத்துக்குடியில் இருந்த அந்த இனத்தவர்க்கு யாதொரு இடரும்நேராமல் அன்புரிமையுடன் இவர் ஆதரவாற்றி வந்தனர்.

"There were many Dutch residents in Tnticorin, but these were unmolested by the Poligar."

"டச்சுக்காரருடைய குடியிருப்புகள் தூத்துக்குடியில் பல இருந்தன; அவற்றிற்கு யாதொரு இடரும் பாளையகாரர் செய்ய வில்லை" எனக் கும்பினியார் இவ்வாறு சுட்டிக் காட்டியிருக்கின்றனர். பகைமையின் வகைமைகள் நன்கு துலங்கியுள்ளன.

தங்கள் நிலையங்களைக் கொள்ளையடித்துத் தம் இனத்தவரைச் சிறை பிடித்துப் போயினரே அன்றி அயலே வேறு எவர்க்கும் பாஞ்சாலங்குறிச்சியார் அல்லல் செய்யவில்லை என்று கும்பினியாரே கூறியிருத்தலால் இவருடைய நிலைமை நீர்மைகளை நினைந்து தெளிந்து கொள்ளுகிறோம். உறவாய் இணங்கினவர்க்கு உரிமையாய் உதவி புரிகின்றார்; மறமாய் மாறுபடின் அவர் மேல் கடுவேகமாய்ச் சீறியேறி நேரே வீறோடு போராட நேர்கின்றார்.

"இனிய அன்பருக்கு என்றுமே இனியராய் இருப்போம்;
துனிசெய் தாள்வலி தோள்வலி யுண்டெனச் செருக்கி
முனிவு கொண்டெதிர் மூண்டவர் எவரே எனினும்
நினைவு கொண்டவர் நீறுபட் டழியவே நேர்வோம்."

என இன்னவாறு இவர் நீண்டு வாழ்ந்து வந்திருத்தலைச் சரித்திரம் யாண்டும் சூழ்ந்து காட்டித் தொடர்ந்து விளக்கி வருகிறது.

இங்கே சில உண்மைகள் சிந்திக்கத் தக்கன.

முதலில் பிடித்த தளகர்த்தனை இரக்கம் காட்டி வெளியே அளி செய்து விடுத்தார். இரண்டாவது கைப்பற்றிய துரையைச் சிறைப்படுத்தி யிருந்தாலும் மனைவி வந்து மறுகிய வுடனே யாதொரு தாமதமும் செய்யாமல் விடுதலை செய்து பொருளையும் திரும்ப உதவி நிரம்ப மரியாதைகள் புரிந்து அனுப்பியுள்ளனர்.

இந்தச் செயல் நிலைகளைச் சிந்தனை செய்து பார்ப்பவர் இவரது இயல்பான உயர் பெருந்தகைமைகளை உணர்ந்து உற்றுள்ள துயர நிலைகளுக்கு இரங்கி உய்த்து உணர்ந்து வருந்துவர். கரும காரியங்கள் அதிசய மருமங்களாய் மருவி நிகழ்கின்றன.

ஊழ்வினை உருத்து மூண்டபோது வாழ்வினை வருத்தி மூளுகிறது. மன மாறுபாடுகளால் மக்கள் அளவிடலரிய துயரங்களை அனுபவிக்க நேர்கின்றனர். வினை விளைவுகள் யாராலும் முடிவு காணாதபடி நெடிது நீண்டு வருகின்றன. இன்ன காலத்தில் இன்ன இடத்தில் இன்னாருக்கு இன்னபடி இன்னது நேரும் என முன்னமே முன்னவன் முடித்து வைத்துள்ளபடியே என்னவகையிலும் யாண்டும் முடிந்து நடந்து வருகிறது. அனுபவ நிலைகளைக் கண்டு அவலமும் ஆறுதலும் அடைந்து மனிதர் எவ்வழியும் கவலையுடையராய் அவலவாழ்வுகளை நடத்தி வருகின்றனர்.

இன்பமும் துன்பமும் பகலும் இரவும்போல் ஓயாமல் மாறி மாறி மாறாமல் வருவது மாயா விநோதமாய் மருவியுள்ளது.

செல்வ நிலையில் சிறந்து யாரும் வெல்லுதலரிய போர் வீரராய் விளங்கி நின்ற ஊமைத்துரை கும்பினியார் கையில் அகப்பட்டுப் பதினாறு மாதம் சிறையில் பரிந்து கிடந்து முடிவில் வீறுடன் சீறி எழுந்து விரைந்து வந்து பதியடைந்து அதிசய நிலையில் கோட்டை அமைத்து அரிய அரண்வலியோடு பெரிய படைகளைச் சேர்த்து எதிரிகளுடைய இடங்களையெல்லாம் முதிர்வேகமாய்க் கவர்ந்துகொண்டு போருக்கு ஆவலாய் நேருக்கு நேர் மூண்டு உக்கிர வீர பராக்கிரமத்தோடு உருத்து நீண்டு கடுத்து நிற்கிறார்.

சீமையில் பிறந்த துரை ஊமையன் நகரில் வந்து சிறைவாயடைந்து உயிர்போய் விடும் என்று பரிதாப நிலையில் மறுகியிருந்தவர் விரைந்து விடுதலை பெற்று வெளியே போயிருக்கிறார்.

"வங்காளம் முதல் எங்கும் எதிர்ப்பின்றி எல்லா மண்டலங்களையும் எளிதே கைக் கொண்டு யாண்டும் வெற்றி வீறோடு விளங்கி வந்த நம்மை ஈண்டு இத் தென்னாட்டு மூலையிலுள்ள ஒரு சின்ன அரசன் சீறி எதிர்த்துச் சிறுமைகள் பல செய்து முடிவில் நம்முடைய இனத்தில் ஒரு தளகர்த்தனைப் பிடித்துக் கொண்டு போய்த் தன் ஊரில் சிறைவைத்துத் தன்னுடைய சீர்த்திக்கு ஒரு பெரிய முறை வைத்தானே!" என்று சீறிச் செயிர்த்து நீண்ட

படைகளை நிலைகள் தோறும் சேர்ந்து திரட்டிக் கும்பினியார் மூண்டு மூண்டு மீண்டும் போருக்கு விரைந்து நிற்கின்றார்.

ஆங்கிலேயர் யாண்டும் அதிசயமான சாதுரிய சாகசங்களுடையவர். எவ்வழியும் உறுதியும் ஊக்கமும் வாய்ந்தவர். நீண்ட கடல் கடந்து பிழைக்க நாடி வணிக நோக்குடன் ஈண்டு வந்தவர். நாட்டின் நிலைமைகளை நாடியறிந்தும் தலைமையாளராய்த் தழைக்க நேர்ந்தனர். எங்கும் எதிர்ப்பின்றிப் பொங்கிய களிப்போடு பொலிந்து வந்தவர் பாஞ்சைவீரர் எதிரே படுதுயரடைந்தார். சுதந்தர நிலையில் நிரந்தரமாய்ப் பழகி வந்துள்ள ஒரு சீமை வெள்ளையனைப் பிடித்துக் கொண்டு போய் ஊமையன் சிறை வைத்தானே என்ற உள்ளக்கொதிப்பு அவர்எல்லாரையும் கொள்ளித் தீபோல் வாட்டி வரவே சேனைகளை நீட்டி வந்தார். இவ் வீர மன்னனும் ஆனவரையும் தன் படைகளை ஆக்கி நின்றான்.

இருதிறத்தார் நிலைகளையும் பொருதிறத்தோடு எதிர்நோக்கி மேலே என்ன விளையுமோ? என்று உன்னி உளைந்து போர் நிலையை ஆவலோடு காண அவாவி நாமும் ஆர்வம் மீதூர்ந்து நிற்கிறோம். வீரப் போர்க் காட்சி யார்க்கும் வியப்பாகின்றது.

ஆங்கிலேயர் அடுபடை சேர்த்தனர்;
ஓங்கி எங்கணும் ஊக்கி உருத்தனர்;
பாங்கி னோடு பகைவலி பார்த்தனர்;
வாங்கி ஏகும் வழிகளை வார்த்தனர்.

இன்னவாறு வெள்ளையர் மூண்டுமுயன்று வருவதைப் பாஞ்சை வீரர் ஓர்ந்து தேர்ந்து உறுநிலங்களைச் சூழ்ந்து ஊக்கி வந்தனர்.

வீர வினையாளர்களுடைய ஆயத்தங்கள் யாண்டும் நீண்ட வியப்புகளை விளைத்து ஆண்டகைமைகளை விளக்கி வருகின்றன

வீர ஊமையன் வேகமும் யூகமும்
தீர நீர்மையும் சீர்மையும் நேர்மையும்
பார காரியம் பார்த்தருள் பான்மையும்
வார மோடு வளர்ந்து கிளர்ந்தன.

அவ் வளர்ச்சியின் கிளர்ச்சிகளை அயலே காண வருகிறோம்.

# பதினைந்தாவது அதிகாரம்
## ஆட்சி ஆய்ந்தது



தம்முடைய படைகளை ஏவிக் கைப்பற்றிய இடங்களை எல்லாம் தக்க சதுரர்களை நிறுத்தி மிக்க எச்சரிக்கையுடன் ஊமைத்துரை பாதுகாத்து வந்தார். அந்தப் பாதுகாப்பு முறை நீதிபரிபாலனமாய் நிலவி நின்றது. குடி சனங்களுக்கு யாதொரு இடையூறும் நேராமல் கும்பினி அதிகாரிகளை மாத்திரம் கடுமையாக ஒதுக்கிக் காரிய விசாரணைகளை எவ்வழியும் செவ்வையாய்க் கருதிச் செய்யும்படியான உரிமையாளர்களை ஊக்கி நிறுத்தினார். தலங்களுக்கும் நிலங்களுக்கும் தக்க அறிஞர்களை பக்குவமாகத் தேர்ந்தெடுத்து ஆங்காங்கு பாங்கோடு ஆராய்ந்து அமைதிகளை நிலைநாட்டி யாண்டும் மக்களுக்கு இதமாய் மருவி வரும்படி உறுதி கூறி அறுதி செய்து விடுத்தார். அரசுக்குரிய காரியங்களை விரைந்து செய்ய வல்ல வினையாளர்களைத் தெரிந்து தேர்ந்து அமைத்தது உயர்ந்த பண்பாடாய் ஒளிசெய்து நின்றது

* "இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்." (குறள், 517)

என்னும் இப் பொய்யா மொழிக்கு ஊமைத்துரை அன்று செய்த செயல்கள் மெய்யான இலக்கியங்களாய் மேவி நின்றன. கருமங்களைக் கருதி ஆராய்ந்து மருமங்களாய்ச் செய்து வந்தது அவரது மதியூகத்தையும் மனவுறுதியையும் தெளிவாக்கி நின்றது

பாஞ்சாலங்குறிச்சி ஜமீன் எல்லையைப் பல பாகங்களாக வகுத்து வகை தொகையாய் வரம்பு செய்தார். அந்த நிலையங்களுக்குத் தகுந்த தலைவர்களை மிகுந்தபொறுப்போடு நியமித்தார்.

---

*இந்தக் காரியத்தை இவ் வுபாயங்களால் இந்த மனிதன் முடிக்க வல்லவன் என்று நன்கு ஆராய்ந்து அவ் வினையை அந்த மனிதனிடம் சொந்தமாக அரசன் விட்டு வைக்க வேண்டும். உறவினன் என்று உரிமை பாராட்டியோ, அபிமானங் கருதியோ எவனையும் அதிகாரங்களில் அமர்த்தக் கூடாது; வினையாண்மையின் தகுதி யறிந்தே கருமங்களை அவரிடம் கருதித் தருக என்பது கருத்து. அரச காரியங்கள் மனித சமுதாயத்துக் கெல்லாம் தனியுரிமை யுடையன ஆதலால் அவை எவ்வழியும் செவ்வையாக ஆராய்ந்து செய்யவேண்டும் என்க.

பசுவந்தனை வணிதம். (1)
பட்டணமருதூர் வணிதம். (2)
புதியம்புத்தூர் வணிதம். (3)
ஆதனூர் வணிதம். (4)
கெவுனகிரி வணிதம். (5)
வேடநத்தம் வணிதம். (6)
தூத்துக்குடி வணிதம். (7)
புதுக்கோட்டை வணிதம். (8)
பேரூரணி வணிதம். (9)
ஆத்தூர் வணிதம். (10)

இவ்வாறு பத்து வகையாகப் பகுத்த நில மண்டலங்களுக்குத் தக்க தலைவர்களைத் தேர்ந்து விடுத்து ஓர்ந்து பேணி உறுதி புரிந்து வந்தார். வினையாளரை விதந்து தெரிந்து விரைந்து புரிந்து வந்த இவரது வினைத் திட்பமும் மனத் திட்பமும் விசாரணைத் திட்பமும் வீறு கொண்டுநின்றன. கரும வீரமும் கருத வந்தது.

சின்ன பொம்மையா, முத்தையா, முத்துக் குமாரசாமி, பால்ராஜா, வீரதளவாய், ரணவீரமுத்து, ஜகவீர ராமு, பராக்கிரம பாண்டியன், பால் பாண்டியன், பூலோக பாண்டியன் என்னும் இந்தப் பத்துப்பேரும் மேலே குறித்த நில மண்டலங்களுக்கு முறையே தலைமையான மேலதிகாரிகளாய் நிலவி நின்றனர்.

கால நிலை கருதி இட நிலை தெரிந்து பகைவலி ஓர்ந்து கரும விளைவுகளைத் தேர்ந்து யாவரும் காரியங்களை உறுதியோடு புரிந்து வந்தனர். நேர்ந்து நிற்கிற நிலைகளை எல்லாம் கூர்ந்துணர்ந்து குறிக்கோள்களோடு வினைகளை எங்கும் சிறப்பாகச் செய்தனர்.

கருவிகள் வந்தது.

தெவ்வர்களுடைய வரவையே எவ்வழியும் எதிர் பார்த்துச் செவ்விய திட்டங்களை வகுத்திருந்தனர் ஆகலால் அவ் வழியிலேயே யாவரும் ஆவலோடு முயன்று வந்தனர். மாற்றாரோடு மார் ஏற்றுப் போராடவுரிய போர்க்கருவிகள் இடங்கள் தோறும் வார்க்கப்பட்டன. வாள்கள் வேல்கள் வல்லயங்கள் பிண்டி பாலங்கள் கண்ட கோடாலிகள் சக்கரப் பூண்கள் அமைந்த கம்புகள் நாள்தோறும் பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து கொண்டி

ருந்தன. தலைமை நிலையங்களிலிருந்து தலைவர்கள் எதிரிகளுடைய நிலைமைகளை நெடிது நோக்கி யாவும் கடிது ஊக்கி வந்தனர். காரியங்கள் எல்லாம் வீரிய சிந்தனைகளோடு விரைந்து நடந்தன. தங்கள் தானங்களைப் பலப்படுத்திக் கொண்டு சத்துருக்களை அழித்து ஒழிப்பதிலேயே கண்ணும் கருத்துமாய் உழைத்து எவ்வழியும் விழிப்புடன் யாவரும் எதிர்நோக்கி நின்றனர்.

## தேவியை வணங்கியது.

மாசி மாதம் சிவநிசி தோறும் தங்கள் குல தெய்வமாகிய ஜகதேவியை அன்புரிமையோடு தொழுது பூசனை புரிவது பாஞ்சாலங்குறிச்சி மரபினருடைய வழக்கம் ஆகலால் முறைப்படி அந்த வழிபாடுகள் நேர்ந்தன பயபத்தியோடு பூசித்து வருகிற அத் தெய்வ வழிபாட்டுக்கு உறவினர் பலரும் பாஞ்சைக்கோட்டைக்கு வாஞ்சையுடன் வந்திருந்தனர். மூன்று நாளும் முறையே பூசனைகள் நடந்தன. நான்காவது நாள் தலைமையாளர் யாவரும் ஒருங்கு கூடினர். தங்கள் அரசுக்கு நேர்ந்துள்ள நிலைமைகளை நினைந்து நெடிது சிந்தித்தனர். முடிவில் அரங்கமால் என்னும் அரச மாளிகையில் சபை கூடியது. அந்தச் சபைக்குத் துரைச்சிங்கம் தலைமை வகித்தார். தளபதிகள் பலரும் எதிரிகளுடைய உளவுகளையும் சேனைகள் திரட்டி வருகிற அளவுகளையும் செய்ய மூண்டுள்ள செயலையும்குறித்துத் தெளிவாகப் பேசினர்.

## சங்குப்பிள்ளை பேசியது.

இவர் முன்னம் ஜமீனில் சம்பிரதியாயிருந்த பொன்னப்ப பிள்ளையின் தம்பி. காரிய விசாரணைகளில் நல்ல பயிற்சியுள்ளவர். உறுதியும் ஊக்கமும் வாய்ந்தவர். எதையும் ஆய்ந்து செய்யும் இயல்பினர். பாஞ்சை மரபினர்பால் மிக்க வாஞ்சையுடையவர். பகை மூண்டிருக்கும் வகையையும் படைகளின் நிலையையும் குறித்து அன்று இவர்பேசினர்: "இந்த ஆதீனம் நீண்டகாலமாகப் பேரும் புகழும் பெற்றுச் சீரும் சிறப்பும் நிறைந்து சிறந்து வந்துள்ளது. இப்பொழுது இரண்டு ஆண்டுகளாய் அவல நிலையில் அழுந்தி யிருக்கிறது. கவலைகள் பெருகி நிற்கின்றன. மூத்த அரசை இழந்தோம். இளைய அரசு இழி சிறையிலிருந்து மீண்டு வந்து ஆண்டகைமையுடன் வேண்டிய ஆயத்தங்களை விளைத்திருக்கிறது. மூண்டுவந்த பட்டாளங்கள் முரிந்து உடைந்துபோயின.

போனவர்கள் அப்படியே பயந்து தொலைந்து போகவில்லை. பல இடங்களிலிருந்தும் பெரிய சேனைகளைப் பலமாகத் திரட்டி வருகின்றனர். இங்கு நடக்கிற இரகசியங்களை யெல்லாம் உளவறிந்து சொல்லும்படி சில துப்பர்களையும் சேர்த்திருக்கின்றனர். முன்னம் மூன்று ஒற்றர்கள் கோட்டைக்குள் வந்து கரவாகத் திரிந்து ஈண்டுள்ள நிலைமைகளை யறிந்து போய்க் கும்பினித் தளபதிகளிடம் சொல்லியுள்ளனர். அந்த வஞ்சனைகளை அப்பொழுது யாரும் இங்கே அறியவில்லை. கள்ளம் கபடுகள் தெரியாமல் வெள்ளை உள்ளத்தராயுள்ள இந்த வீர மரபினரை வஞ்சச் சூழ்ச்சிகளால் வெள்ளையர்கள் வென்று கொள்ளலாம் என்று விரகு புரிந்து வீறு கொண்டு திரிகின்றனர். நம்மிடம் வெறும் வீரம் மாத்திரம் இருந்தால் போதாது; எதிரிகளுடைய கரவாடல்களையும் தந்திரங்களையும் எதிரறிந்து கால நிலைகளைத் தெரிந்து கருத்தோடு காரியங்களைச் செய்ய வேண்டும். சுடு வெடிகளும் பீரங்கிகளும் கொடிய கொலைக்கருவிகளும் பகைவரிடம் நெடிது நிறைந்திருக்கின்றன. தேச உரிமையைத் தம் வசப்படுத்திக் கொண்டு ஆசை மீதூர்ந்து யாண்டும் ஆட்சியை நிலை நாட்டமூண்டு திரிகிற கும்பினியார் ஈண்டு இந்த ஆதீனத்தின் மீது நீண்ட பகைமையைப் பூண்டு நிற்கின்றனர். தங்கள் நிலைமைக்குத் தடையாய் இருத்தலால் இதன் தலைமையை அடக்கி விட வேண்டும்என்று படைகளைத்திரட்டி அடுதிறல்களோடு ஆர்த்து அலைகின்றார். கொடிய கொலைகளை விளைக்க நெடிது நீண்டு வருகிற பெரிய பகைப் பேயை நாம் எதிர்த்து நிற்றலால் நமது நிலை மிகவும் அபாய முடையது. அரிய பல உபாயங்களை முன்னதாகவே நாம் மருவிக் கொள்ளவில்லையானால் கொடிய அல்லல்கள் பெருகிக் கடுமையாக நெடிய குடிகேடுகள் நேர்ந்துவிடும்.

"ஏற்றெழு வன்னிமேல் இனிது துஞ்சலாம்;
தோற்றிய வெவ்விடம எனினும் துய்க்கலாம்;
மாற்றலர் அலைத்திட வந்த வெந்துயர்
ஆற்றரிது ஆற்றரிது அலமிப் புனமையே."

பகையாளி செய்கிற துயர் நஞ்சினும் கொடியது; தீயினும் தீயது என இதனால் அறிந்து கொள்ளுகிறோம். மாற்றலர் = பகைவர். வன்னி = தீ விடமும் தீயும் கிட்ட நெருங்கிக் குடித்தவனையும் தொட்டவனையும் மாத்திரம் கொன்று தொலைக்கும்;

பகைத் தீ தூர நின்று எதிர்த்தவரெல்லாரையும் எரித்தழித்து உயிர் வாழ்க்கையை நாசப்படுத்தும் ஆதலால் தீய அவற்றினும் பகை தீயதாய் நின்றது பகை ஒழிய வகை தெளிய வேண்டும்.

இத்தகைய பகைப் புகை மண்டிக் கொதித்தெழுகின்ற கொடிய குப்பினித் தீயை நேரே முடிய அவித்து மடிய நூறி விடிவு காணும்படி வீறு கொண்டு நாம் விரைந்து நிற்கிறோம்; எல்லாரும் ஒரு முகமாய் ஒத்துழைத்து இந்நாட்டின் மானத்தையும் நம் இடத்தின் வீரத்தையும் நிலைநாட்டி நாம் தலைமையோடு தழைத்து வாழ வீர மூர்த்தியான முருகப் பெருமான் அருள் புரிய வேண்டும்" என்று இவ்வாறு அவர் கூறி நின்றார்.

## இராஜ பொம்மு கூறியது.

இவர் சிறந்த சேனைத் தலைவர். மான வுணர்ச்சி மிக்கவர்; மதிவலி யுடையவர். பகை நிலைமையைக் குறித்துப் பின்னை பேசி முடித்தபின் இவர் பேச நேர்ந்தார். "இங்கே நாம் தேவியைத் தொழுது வணங்க வழி முறையின்படி உரிமையோடு கூடியிருக்கிறோம். மீண்டும் அடுத்த ஆண்டில் ஈண்டு வந்து இவ்வாறு நாம் கூடியிருக்க முடியுமா? இந்தக் கேள்வி நம்முள் ஒவ்வொருவர் நெஞ்சிலும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. நமக்குக் கொடிய ஒரு சோதனைக் காலம் இது. அரிய பெரிய சாதனைகளைச் சாதிக்க வேண்டியவர்களா யிருக்கிறோம். நமது வாழ்வும் சூழ்வும் வலிய போராட்டங்களாய் மருவி நிற்கின்றன. இரண்டு ஆண்டுகளாக நாம் அடைந்து வருகிற அல்லல்களும் தொல்லைகளும் எல்லையில்லாதன. அந்நிய நாட்டாரான வெள்ளையர்கள் அதிகார வெறியால் இந்நாட்டின் தலைமையை நிலை குலைத்துத் தாழ்த்தி வருகின்றனர். தாழ்வு நிலையை யாதும் உணராமல் கொடிய கோளர் சிலர் அவரோடு உறவாய்க் கூடிக் கொண்டு நமக்குக் கரவாய்க் குடிகேடுகள் செய்து நிற்கின்றனர். உளவு கூறி அளவு மீறி வலைவு காட்டி இழவு கூட்டி வருகிற இழிவான சதிகாரரை முதலில் அடியோடு அழித்து ஒழித்து அதன்பின் நெடிய பகை மேல் நேரே மூண்டு போய்ப் போராடி அவரை வேரோடு களைந்து ஒழிக்க வேண்டும். நமக்குச் சிறந்த ஆண்வலி யிருக்கிறது; நம் மீது படையெடுத்து வந்தபின் பகைவரைப் பொருது தொலைப்போம் என்று நாம் பொறுத்திருப்பதினும் விரைந்து

புகுந்து எதிரிகளை அழித்தொழிப்பது நல்லது. நாம் பொறுமையாய் நாளை வீணே கழித்து வந்தால் அவர் பெருமையாய்ப் படைகளைப் பெருக்கி மேலே செழித்து வருவர். நம் மேல் ஏறி வரு முன்னரே நாம் அவர்மேல் சீறிச் சென்று வேட்டையாடி வெற்றி பெற வேண்டும். நோயினும் தீயினும் பகை மிகவும் தீயது ஆதலால் அதனை வளர வளர விட்டுக் கொண்டிருப்பது பெரிய கேடாம். நாம் பிடித்துள்ள இடங்களையெல்லாம் மேலும் பலப்படுத்திக் கொண்டு பாளையங்கோட்டை மேல் உடனே படையெடுத்துச் செல்ல வேண்டும். முன்னம் சிறையை உடைத்து எழுந்தபொழுதே அங்கே கும்பினிக் கோட்டையைத் தகர்த்தெறிந்து வெள்ளையரைத் தொலைத்திருக்க வேண்டும். அன்று அவ்வாறு தொலைத்திருந்தால் இன்று இவ்வாறு தொல்லை நேர்ந்திராது. முள்ளுச் செடியை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும்; இல்லையானால் அது தொல்லையாய் வளர்ந்து விடும். தீயை வளர விட்டது போல் வெளியே பகையை வளரவிட்டுக் கொண்டு நாம் இங்கே கோட்டை கொத்தளங்களை அமைத்து அரண்கள் ஆற்றி நிற்பது அரிய வெற்றிக்குப் பெரிய முரணும்.

"எரியும் தீத்திரள் எட்டுணைத் தாயினும்
கரியச் சுட்டிடும் காந்திக் கனலுமேல்
தெரியின் தொல்பகை தான் சிறிதாயினும்
விரியப் பெற்றபின் வென்றிடு கிற்குமே. (1)

முட்கொள் நச்சு மரம் முளையாகவே
யுட்கி நீக்கின் உகிரினும் கொல்லலாம்;
வட்கி நீண்டதன் பின மழுவும் தறு
கட்குடாரமும் தாம்களை கிற்பவோ?" (2)

என அரசர் பகை களைந்து வாழும் முறைகளை இவை காட்டியுள்ளன. கருத்துக்களைக் கருதி நோக்கி உறுதி நலங்களை ஓர்ந்து உரிய வினைகளை விரைந்து செய்து கொள்ள வேண்டும்.

நாம் இங்கே கால தாமதம் செய்து நில்லாமல் மேலேறிப் போருக்குப் போவதே நல்லது. பகைவரை அங்கே பொருது வென்றால் மீண்டு வந்து கண்டு அரச வாழ்வைக் காண்போம்; வெல்ல வில்லையானால் ஆண்டே மாண்டு மடிந்து போவோம். கோட்டையில் இருந்து செத்தார் என்பதைவிட வேட்டை மேல் நடந்து செத்தார் என்பதே நன்று" என இங்ஙனம் அவர் பேசி முடித்தார். அவருடைய வீரவுரைகள் கார சாரங்களாயிருந்தன.

## வீர தளவாய் விளம்பியது.

முன்னவர் கூறிய மொழிகளை முழுவதும் கவனித்து வந்த இவர் பின்னர் எழுந்து பேசினார்: "நமக்கு நேர்ந்துள்ள நிலைமைகளை நாம் நன்கு அறிந்திருக்கிறோம். நெடிய கொடிய ஆபத்துகள் நேரே மூண்டு நிற்கின்றன. முடிவுகள் எவ்வாறு ஆகுமோ என்பதை இதுபொழுது யாரும் முடிவுகூற முடியாது. சாவதா, வாழ்வதா என்ற நிலைமையில் ஆவதை நாம் எதிர்பார்த்திருக்கிறோம். எல்லாரும் ஒருங்கே திரண்டு நம் தலத்தில் நிலைத்திருந்தே எதிரிகளைத் தொலைத் தொழிக்க வேண்டும். இடம் விட்டுப் பெயர்ந்து தெவ்வர்மேல் ஏறி எவ்வழியும் நாம் செல்லலாகாது. தண்ணீரில் விரைந்து செல்லுகிற மீன் தரையில் வந்தால் தளர்ந்து சாதலை நாம் கண்ணாரக் கண்டிருக்கிறோம். அந்தக் காட்சி இடத்தின் மாட்சியை யாரும் தெளிவாக அறிய உணர்த்தி நிற்கிறது. நீரில் இருக்கும் பொழுது பெரிய யானையையும் இழுத்துக் கொல்ல வல்ல முதலை நிலத்தையடைந்தால் சிறிய நாயாலும் கடித்துக் கொல்லப்படுகிறது. தன்னுடைய தானத்தில் யாருக்கும் உறுதியும் ஊக்கமும் அரிய திண்மையும் பெருகி வருதலால் அது பேரரண் எனப் பாரறியப் பெருமகிமை பெற்றுள்ளது.

"தன்னிலத்தினில் குறுமுயல் தந்தியின் வலிதென்று
இந்நிலத்தினில் பழமொழி அறிதிநீ இறைவ!
எந்நிலத்தினும் உனக்கு எளிதாயினும் இவர்நம்
நன்னிலத்தினில் வர அமர் தொடங்குதல் நன்றால்."

அயலிடம் புகுந்து அமர் தொடங்கித் துரியோதனன் செயமிழந்து நின்றபோது அம் மன்னனை நோக்கி விதுரன் இன்னவாறு கூறியிருக்கிறான். இடத்தின் தன்மையும் வன்மையும் இதனால் நன்கு தெரிகின்றன. தானத்தை விட்டு முன்னம் வெளியேறியதனாலேதான் மானத்தையிழந்து நம் மன்னர் மடிய நேர்ந்தார். காலமும் இடமும் கருதிச் செய்யாவழி அது சாலவும் பிழையாம். ஈண்டு நாம் நிலைத்திருந்தே மூண்டு வருகிற படைகளை முறியடிக்க வேண்டும். யுத்த தளவாடங்களும் படைச் செருக்கும் நிறைந்திருக்கிற சத்துருக்கள் மூண்டு திரண்டு நீண்டு வருதலால் நாம் வேண்டிய ஆயத்தங்களை விரைந்து

செய்து சிறந்த அடலாண்மைகளோடு உயர்ந்து நிற்க வேண்டும்'' என இவ்வண்ணம் அவர் துணிந்து மொழிந்து நின்றார்.

### துரைச் சிங்கம் உரைத்தது.

முந்திய மூவர் பேசிய உரைகளையும் ஆவலோடு கேட்டு வந்த இவர் பின்பு பேசினர்: "இந்த ஆதினத்தின்பால் நீங்கள் கொண்டுள்ள அன்புரிமையையும் ஆதரவையும் எண்ணி எண்ணி இன்பம் மிக அடைகின்றேன். துன்பங்கள் தொடர்ந்து அடர்ந்துள்ள கொடிய சோதனைக் காலத்தில் சாதனையாய்த் திரண்டு வந்து உறுதியோடு கருதிச் செய்திருக்கிற உங்களுடைய உதவி நலங்கள் அரிய பெரிய ஆறுதல்களை அளித்து வருகின்றன. சிறையில் மறுகிக் கிடந்த எங்களை விரைவில் மீட்டிக் கொண்டு வந்து கோட்டை அமைத்துக் கொத்தளங்கள் சமைத்துக் கொற்றவன் என வெற்றி முடி சூட்டிப் பற்றலரோடு வீரப்போர் புரிய வீறு கொண்டு நிற்கிற உங்களுடைய சீரும் சிறப்பும் திறனும் தீரமும் யார் அளந்து கூற வல்லார்? அரச செல்வத்தை இழந்து அல்லலுழந்து கிடந்தவர்களிடம் பழமை பாராட்டிக் கிழமை கொண்டாடி உழுவலன்போடு உபகரித்திருப்பது ஒருமைக் கடமை தோய்ந்த விழுமிய நீர்மையாய் விரிந்து விளங்கி நிற்கிறது.

"பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள." (குறள், 521)

என்னும் பொய்யாமொழியின் பொருளுண்மையை உங்களிடம் மெய்யாகக் கண்டு வையம் வாழ்த்தி நிற்கிறது. உரிய சுற்றம் அரிய கோற்றம் என்பது பழமொழி. அநுபவ மொழிகள் யாண்டும் உண்மைகளை உணர்த்தி வருகின்றன. நம் முன்னோர் தெலுங்கு நாட்டிலிருந்து எழுந்து எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஈண்டு வந்து சேர்ந்தனர். ஆண்டவன் அருளால் பாண்டிய மன்னனிடமிருந்து அரசுரிமையைப் பெற்றனர். வரிசையோடு நாட்டை ஆண்டு வந்தனர். குடிசனங்களின் மகிழ்ச்சியே கோன் வளர்ச்சியாய் நெடிது வளர்ந்து வந்துள்ளது. நாற்பத்தேழு தலைமுறைகளாய் நடந்து வந்திருத்தலால் இந்த அரசின் நிலைமையை நினைந்து கொள்ளலாம். அரசு கோடுமையாயின் அழிவு கடுமையாம் எனத் தருமதேவதை உறுதி கூறியுள்ளது. நெறிமுறையே நெடிது வாழ்ந்து வந்துள்ள அரச குடிக்கு

இடையே கொடிய இடையூறுகள் வந்து மூண்டன. அண்ணு அநியாயமாய் மாண்டார். நாங்கள் அவலச் சிறையில் வீழ்ந்து கிடந்தோம். நீங்கள் புரிந்த ஆண்டகைமையால் மீண்டு வந்து இந்த நிலையில் ஈண்டு எழுந்து நிற்கிறோம் மூண்டு திரண்டு வந்த கும்பினிப் படைகள் மீண்டு புரண்டு போயுள்ளன. இங்கே மீண்டும் வந்து போராட அங்கே வேண்டிய ஆயத்தங்களைக் கும்பினியார் விரைந்து செய்து கொண்டிருக்கின்றனர். அந்நிய நாட்டிலிருந்து வந்த அவர்களால் இந்நாட்டில் நமக்கு இன்னல் பல விளைந்தன. சுதந்திர உணர்ச்சி யிழந்து மானமழிந்து ஈனமாய் வாழ நாம் இசைந்துகொள்ளாமையால் நம்மைக் கொடிய எதிரி என்று அவர் முடிவு செய்து கொண்டு எவ்வழியும் வெவ்விய துயரங்களை விளைத்து வெம்பகை வளர்த்து வம்புகள் புரிந்து கும்புகள் கூடிக் கொலை நோக்கோடு தலை நிமிர்ந்து நிற்கின்றார். யாண்டும் தந்நலமே கருதி எவ்வழியும் வரவுகளையே எதிர்பார்த்து அல்லும் பகலும் கரவுகளையே நாடியலையும் அவ் வெள்ளையர்களோடு உறவாய் ஒட்டி நின்று நமக்கு விரோதமாய்க் கோளும் குறும்பும் நாளும் கூறிக் குடிகேடுகள் செய்து வருகிற பழிகேடர்களையும் நாம் விழியூன்றி நோக்கி வழிகோலி நிற்கிறோம் அரச போகங்களை அனுபவித்து இங்கே நாம் சுகமாய் வாழ வரவில்லை; தொகையாத் திரண்டு மிகை செய்து வருகிற பகைவரை அடியோடு களைந்து வென்று வாழுதல், அல்லது குடியோடழிந்து பொன்றி வீழுதல் ஆகிய இந்த இரண்டில் ஒன்றையே எதிர்பார்த்திருக்கிறோம். ஆண்டவன் அமைத்தபடி ஆவது ஆகட்டும்" என்று அவர் கூறி முடித்தார். கூட்டம் கலைந்தது.

மேலே குறித்த நிகழ்ச்சிகளால் பாஞ்சாலங்குறிச்சியாருடைய உணர்ச்சிகளும் உள்ளத்துணிவுகளும் உறுதிப்பாடுகளும் உணரலாகும். உலக வாழ்வை வெறுத்து எவ்வழியும் பகையை வெல்லும் நோக்கமாய் இவர் ஊக்கி நிற்றலை யாண்டும் செவ்வையாய்க் கண்டு நிலைமைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

### பாஞ்சை மரபினர்.

இந்த அரச மரபினர் திருநெல்வேலி ஜில்லாவில் மாத்திரம் உள்ளனர். பாஞ்சாலங்குறிச்சியிலும் அதனைச் சூழ்ந்துள்ள கிராமங்களிலும் அன்று பரவியிருந்தனர். யாவரும் உறவுமுறை

யினர். குடிப் பெயரும் கோத்திர வகைகளும் உடையவர். சுருங்கிய தொகையினர். அக் காலத்தில் எண்ணிக் கண்ட கணக்குப் படி ஆறுயிரம் பேர்களே இளைஞர் உள்பட அமர்ந்திருந்தனர். எல்லாரும் உள்ளத் துணிவும் உறுதியும் ஊக்கமும் உடையவர். கசரத்து முதலிய தேகப் பயிற்சிகளை இளமையிலிருந்தே பழகி வலி நிலையில் வளமைபெற்று வந்துள்ளார். மல்லமர் புரிவதிலும் வில் எய்வதிலும் வல்லவர். சிலம்பக் கலையில் மிகவும் தேர்ந்தவர். ஏறுதல், இறங்குதல், இருத்தல், எழுதல், பதுங்கல், பாய்தல், வலம் இடமாகச் சாரி திரிதல், இடையிடை மறிந்து எதிர் நேர் போதல், கடை நிலை தெரிதல், கதி நிலை தருதல், ஆறியகலல், மாறி மோதல், மீறி விரைதல் முதலிய வீர ஆடல்களில் யாரும் நேரில்லாதபடி வீறு கொண்டவர். இவர் கப்பு வரிசை பழைய காலத்து அப்பு வரிசை போல் ஆற்றல்மிக வுடையது. ஒருவன் கையில் கப்பு இருந்தால் பலர் திரண்டு சூழ்ந்தாலும் அவன் அருகே அணுக முடியாது. கிட்ட நெருங்காமல் எதிரிகள் எட்ட நின்று வெருண்டு எறிகிற கல்லுகளையும் விரைந்து தட்டி அவரை அறைந்து வீழ்த்தி விடுவன். இவர் கம்பு கைக் கொண்டால் அம்பு கைக் கொண்ட பேரையும் அடர்த்து வென்றெழுவார் என ஆண்மையாளர்கள் இவரது சிலம்பப்போரை வியந்து போற்றியுள்ளனர். யாண்டும் யாதும் அஞ்சா நெஞ்சினர். பரம்பரையாகவே இவ்வாறு உரம்பெற்று வந்திருத்தலால் வீர வுணர்ச்சி இவர்களிடம் இயற்கையாய் மிகுந்திருந்தது. பண்டைக் காலத்துப் போர் வீரர்களுடைய வீரப் பிரதாபங்களையும் வெற்றிப்பாடுகளையுமே பொழுது போக்காக இவர் பேசி மகிழ்வர். அது தொன்று தொட்ட வழக்கமாய் ஒன்றி ஒட்டி வந்துள்ளது. இன்றும் இம் மரபினர் நாலுபேர் ஓரிடத்தில் கூடினால் வீரத் திறல்களையே விழைந்து பேசுகின்றனர். கல்வி செல்வங்களைக் கருதிப் பேணுமல் வீர வாழ்க்கையையே விரும்பி வந்திருத்தலால் அந்த இருவகைநிலைகளும் இவரை ஒருவி நிற்கின்றன. கல்வியறிவும் செல்வ வளமும் மருவி வந்தால் இவரது பெருமை பெரிதும் உயர்வாய் ஒளிமிகுந்து விளங்கும். இழிந்த நிலையில் இருந்துகொண்டே தங்களை உயர்ந்தவர்களாகக் கருதிக் களித்து வருதலால் இவர்களிடம் வீண் பெருமை இதுபொழுது விரிந்து நிற்கிறது. கம்பளன் என்று சந்திர குலத்தில் முன்னம் ஓர் அர

சன் இருந்தான் என்றும், அவன் வழிமுறையில் வந்தவர் என்றும், உத்தமச் சத்திரியர்கள் என்றும் தங்களை எண்ணி மகிழ்ந்து இந்த மரபினர் கண்ணியம் கொண்டாடுகின்றனர். ஆதிநிலையும் சாதியுயர்வும் எவ்வாறிருந்தாலும் இவர் தெலுங்குநாட்டிலிருந்து இந்நாட்டுக்குப் பிழைக்க வந்தவரே; வந்த இடத்தில் அரசகுடியாய்த் தழைக்க நேர்ந்தனர். வீரத் திறலோடு நல்ல சுபாவங்களும் இவர்களிடம் இயல்பாகவே இனிது பொருந்தியிருந்தன.

தெலுங்கு நாட்டினில் இருந்திவண் வந்தவர்; தெலுங்கே
இலங்கு தாய்மொழி யாய்வழங் கியல்பினர்; என்றும்
கலங்கு றாதநெஞ் சுறுதியர்; அமரையே கருதித்
தலங்கள் தோறும்தந் திறலினை நிறுவுறும் சதுரர். (1)

பழகி னோர்க்குத்தம் உயிரையும் பரிந்துகைக் கொடுப்பார்;
விழைவு மாறியே வஞ்சராய் விரகுடன் நிமிர்ந்தால்
கழைகொல் யானைபோல் கடுத்தவர் உயிரினை எடுப்பார்;
உழைய ராயினோர்க்கு என்றுமே உரியராய் உழைப்பார். (2)

வீர வெஞ்சமர் வாழ்வினை விழைந்தவ ரேனும்
ஈர நெஞ்சமும் ஈகையும் உடையவர்; என்றும்
வார மொன்றிடார்; வஞ்சகம் பேசிடார்; நேரே
தீர மாய்நின்று செம்மையே செய்குவர் தெரிய. (3)

உழைத்து வாழ்வதை ஒருபொரு ளாகவுட் கொள்ளார்;
தழைத்த செல்வமும் தரணியும் வேண்டுமென் றெண்ணார்;
இழைத்த போரிவண் உண்டென வந்தெவ ரேனும்
அழைத்தபோதுளம் களித்தெழுந் தார்த்துமேல் வருவார்.

உள்ளத் திண்மையும் உறுதியும் ஊக்கமும் பெருகி
கள்ளத்தன்மையொன் றின்றியே கருத்தெலாம் வெளுத்த
பள்ளத் தண்புன லென்னவே படிந்தினி திருந்தார்
வெள்ளத் தன்மையிற் பகைதிரண் டேறினும் வெருவார்.

வஞ்சம் சூதுகள் யாதொன்றும் அறிந்திடா வகையால்
நெஞ்சம் தீதில ராகியே நேர்மையில் வாழ்ந்தார்;
கொஞ்சம் தீதுடை யாரெனத் தெரியினும் அவரை
நஞ்சம் என்னவே இகழ்ந்தொழித் தகலுவர் நலத்தே.

(வீரபாண்டியம்)

இந்த மரபினருடைய வரன்முறையும் நிலைமைகளும் செயல் இயல்களும் இதனால் ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு

தலைமை நிலையில் தழைத்திருந்தவர் ஆதலால் தம் குல முதல்வனுக்கு நேர்ந்துள்ள இடையூற்றை நீக்கி இதம் புரிய வேண்டி யாவரும் ஆயுதபாணிகளாய் ஆவலோடு விரைந்து வந்துகூடினர்.

## அமர் புரியத் தமர் வந்தது

பல ஊர்களிலும் உள்ள தமது இனத்தவர் எல்லாரும் வந்து சேர வேண்டும் என்று ஊமைத்துரை ஓலைகள் அனுப்பியிருந்தார் ஆதலால் அனைவரும் ஆயுதங்களோடு வந்து சேர்ந்தனர். பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட இளைஞரும் முதிர்ந்த கிழவரும் தவிர மற்று எல்லாரும் ஒருங்கே வந்து திரண்டனர். எண்ணி நோக்கியதில் நாலாயிரத்து எண்ணூறு பேர் நண்ணி இருந்தனர்.

பரிவாரத்தார், மறவர், கவுண்டர், கவரையர், வேளாளர் முதலிய இனங்களிலிருந்து இரண்டாயிரம் பேர் சேர்ந்து நின்றனர். ஆக ஆறாயிரத்து எண்ணூறு போர் வீரர்கள் ஆயத்தமாயினர். இன்ன சமையத்தில் இன்னபடி நடக்கவேண்டும் என்று இப் படைகளுக்கெல்லாம் பயிற்சி கொடுக்க முந்நூறு குறிகாரர்கள் படைத் தலைவர்களாய் அமைந்தனர். வந்த போர் வீரர் யாவருக்கும் உணவு முதலிய வசதிகள் நாளும் நன்கு கொடுக்கப்பட்டன. சின்னப்ப ரெட்டியார் என்னும் பெருஞ் செல்வர் இந்த வீர விருந்துக்கு ஆர்வம் மீதூர்ந்து பேருதவி செய்தார்.

## யுத்த ஆயத்தம்

தூத்துக்குடி முதலிய இடங்களிலிருந்து வாரி வந்த ஆயுதங்களுள் ஆயிரத்தெண்ணூறு துப்பாக்கிகளும், மூன்று பீரங்கிகளும் கிடைத்திருந்தன. அம் மூன்றும் மிகப் பழமையானவை பழுதுபாடுடையன. மருந்து நிறைத்துக் குண்டுகள் இட்டுச் சுடுவதற்குப் பெரிதும் தகுதியற்றன; ஆயினும் அந்த மூன்று பீரங்கிகளையும் கோட்டை மதிள்மேல் கொத்தளங்களில் ஏற்றித் தெற்கு முகமாகவும் மேற்கு முகமாகவும் திருப்பி வைத்து, "எங்களுக்கும் பீரங்கிகள் உண்டு; உங்கள் உயிர்களை வாங்கி விடுவோம்" என்று எதிரிகளுக்கு அறிவிப்பது போல் நேரே கதிவேகமா இருத்தி யிருந்தார். போராவல் பொங்கி நின்றது.

உக்கிர வீர பராக்கிரமங்களோடு பக்கம் எங்கும் படை வீரர்கள் நின்று பகைவரைப் பாடழித்து ஒழிக்கும்படி தளபதி

கள் பணித்திருந்தார். வில்லாளர் வேலாளர் வாள்வீரர் வல்லயக் காரர் எல்லாரும் அமராடலை ஆவலோடு கருதி யாண்டும் எதிர்பார்த்து நின்றார். நாளும் போர் வரவை நாடி வந்தார்.

பகை நிலை தெரிந்தது.

நாற்பது நாளாகியும் எதிரிகள் போர் மேல் ஏறிவராமை யால் ஊமைத்துரை சேனைத்துரைகளின் சிந்தனைகளையும் தந்திர வுபாயங்களையும் குறித்துச் சிந்திக்க நேர்தார். நிலைமைகளைத் தெளிவாகத் தெரிந்து வரும்படி ஒற்றர்களை ஒளிவாக உய்த்தார். அவர் போய் உசாவி ஓர்ந்தார். பல பாகங்களிலுமிருந்து பட்டாளங்கள் வந்து சேர்ந்து படையெழுச்சிக்கு ஆயத்தம் செய்து கொண்டிருத்தலையும், உள் நாட்டில் கும்பினிக்குத் துப்பனாய் நின்ற எட்டப்ப நாயக்கர் ஒட்டுப்படை சேர்த்து நிற்றலையும் உணர்ந்து வந்து ஒற்றர் உரைத்து நின்றார். அதனைக் கேட்டதும் வெள்ளையரை வெகுண்டு ஒன்றும் சொல்லாமல் உட்பகையையே எள்ளலாக இகழ்ந்து சிரித்தவர்: "பதினாறு கல் தொலையில் எட்ட நின்று கொண்டு எட்டன் அட்டகாசம் செய்கிறான்; கிட்ட வரட்டும் பார்ப்போம்" என்று உருத்துச் சொல்லி ஊக்கி நின்றார்.

"வாள்களை ஏந்தியே வலிந்து நேரெதிர்
ஆளடர் படையினும் அகம் கரிந்துள்
கோளர்கள் கொலைபுரி கொடியர் ஆதலால்
நாளுமே அவர் தமை நாடிக் காக்கவே."

என்றபடி இவர் காவாமல் நின்றமையினாலேதான் வெளி நாட்டார் பகை கொலை நாட்டமாய் மூண்டது. புலையாட்டங்கள் பொங்கி நீண்டன. கபட சிந்தனைகளின்றி வெள்ளையுள்ளத்தராயிருந்து வந்த பாஞ்சைவீரர் உள்நாட்டு வஞ்சக் கோளரால் ஊறுபட நேர்ந்தார். அந்த மாறுபாடுகளைக் கூர்ந்து ஓர்ந்து இப்பொழுது இவர் சீறிஎழுந்தாலும் அவர் எப்பொழுதும்போலவே மறைவாய் நின்று சதிகளை அதி வேகமா இழைத்து வந்தார்.

பொல்லாத கோளர் புலைநர பலகொலைகள்
சொல்லாலே செய்யும் துணிந்து.

நீசக்கோளர் புரியும் நாசங்களை இது நயமாக் காட்டியுளது.

சதியாய் ஒட்டி நின்ற பகையை அயலே காண வருகிறோம்.



# பதினொருவது அதிகாரம்

## தப்பன் தோய்ந்தது.



எட்டையாபுரம் ஜமீன்தாராகிய எட்டப்ப நாயக்கர் பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்மீது எப்பொழுதும் பகைமையுடையவர் ஆதலால் ஊமைத்துரை சிறைமீண்டு வந்தது அவருக்கு நெடிய திகிலாய் நீண்டு நின்றது. கொடிய பல கவலைகள் அவருடைய உள்ளத்தில் அப்பொழுது குடிபுகுந்து கொண்டன "முன்பு கும்பினியாரோடு உடனிருந்து கட்டபொம்முதுரையைப் பிடித்துக் கொடுத்து அடுத்து நின்று கொன்ற அந்தச் சதிக் கொலைக்குப் பதிலாகப் பல கொலைகளை விளைத்து ஊமையன் படுநாசம் செய்து விடுவானே!" என்று அவர் நெடிது நினைந்து நெஞ்சம் கலங்கி இரவும்பகலும் மறுகி உளைந்தார். சிறை கடந்து வந்ததோடு அமையாமல் ஐந்தே நாளையில் அரிய பெரிய கோட்டையைக் கட்டிக் கொத்தளங்கள் அமைத்து ஆயிரக் கணக்கான போர்வீரர்களைத் திரட்டி நிறுத்தி அடலாண்மையோடு நிற்கின்றானே! என ஊமைத்துரையினுடைய நிலைமையை எண்ணி எண்ணி அவர் ஏங்கித் தவித்தார். பகைமையும் பொறாமையும் நெருப்பும் காற்றும் போல் அவருடைய நெஞ்சைக் கடுமையாக எரித்து வந்தன.

### திகில் மிகுந்தது.

உறவினருடைய உதவியால் சிறைச்சாலையைத் தப்பி வந்திருக்கிறான்; எப்படியும் கும்பினியார் வந்து பிடித்துக் கொண்டு போய்விடுவார் என்று ஓரளவு முதலில் அவருக்கு நம்பிக்கையிருந்தது. கும்பினிப் பட்டாளம் மூண்டுவந்து மீண்டு உடைந்து போனதைக் கண்டதும் அந்த நம்பிக்கையும் நாசமாகியது. தன்னையும் தன் பாளையத்தையும் ஊமையன் அடியோடு அழித்து ஒழித்தே விடுவான் என்ற அச்சமும் திகிலும் உச்ச நிலையில் அவருள்ளத்தில் ஓங்கி நின்றன. பலவகையான உபாயங்களை நாடி உளைந்தார். முடிவில் ஒரு முடிவிற்கு வந்தார். பொல்லாத அல்லல்களும் அபாயங்களும் நேர்ந்ததாக உள்ளம் கலங்கி உளைந்து வந்த அவர் வெள்ளையர்களுடைய ஆதரவை நினைந்து சிறிது ஆறுதலடைந்தார். வஞ்சனைகளை வகையாச் செய்ய நேர்ந்தார்.

சிந்தை துணிந்தது.

அவருடைய சதியாலோசனைகள் அதிவேகமாய் வேலை செய்தன. உள்ளக் கவலைகள் உள்ளே ஓங்கி நின்றாலும் பாங்கே சூழ்ந்துள்ள உறுதி நிலைகள் அவரைப் பெரிதும் ஊக்கி வந்தன. "ஊமைத்துரை எவ்வளவு அதிசய ஆற்றல்களை உடையவனாயினும் சீமைத்துரைகள் மிகுந்த தந்திரசாலிகள்; எந்தவகையிலும் எதிரியை அடக்கிவிடுவர். இந்தச் சமையத்தில் நாம் அவரோடு சேர்ந்து சிறந்த ஆதரவை அடைந்துகொள்ள வேண்டும்; இல்லையானால் நமக்கு அல்லலும் அழிவும் நேர்ந்துவிடும்" என்று ஓர்ந்து உணர்ந்து அவர் தேர்ந்து கொண்டார். கொள்ளவே குறிக்கோளோடு கூர்ந்து முயன்றார். நீண்டு மூண்டிருந்த நெடிய கொடிய பகைமை அவரை யாண்டும் அடலோடு நன்கு தூண்டி வந்தது.

"The Panjalamkurichi poligar's great rival was the poligar of Ettaiyapuram, whose palaiyam was situated a little to the north." [H. O. T.]

"பாஞ்சாலங்குறிச்சிக்கு வடக்கே சிறிது தூரத்தில் உள்ள எட்டையாபுரம் பாளையகாரன் பாஞ்சைசை ஜமீன்தாரின் பெரிய விரோதி" என்று ஆங்கிலேயர் இங்ஙனம் குறித்து வைத்திருத்தலால் இவருடைய குரோதத்தையும் விரோதத்தையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளலாம். இவ்வாறு கொடிய பகை மண்டியுள்ள இவர் வகையோடு வஞ்ச வினைகளை நெஞ்சம் துணிந்து செய்தார். கும்பினியாருடன் கூடி நம்பகமாய் நின்று உழைத்து வெம்பகையை வேரோடு களைய வேண்டும் என்று விரகு புரிந்து வந்தார். கரவு வழியில் துறை தெரிந்து முறையோடு முயன்றார்.

துரையைக் கண்டது.

முன்பு பழக்கமாயிருந்த கலெக்டர் லஷிங்டன் (S. Lushington) துரையைக் காண வேண்டும் என்று எட்டப்ப நாயக்கர் வேணவாவுடன் விரைந்து நின்றார். அப்பொழுது அவர் நாகலாபுரத்தில் தங்கியிருந்தார். அந்த ஜமீனைக் கும்பினியார் கவர்ந்து கொண்டபின் கலெக்டர் மேல் பார்த்து வந்தார் ஆதலால் அதன் காரிய விசாரணைக்காக அப்பொழுது அவண் அமர்ந்திருந்தார். எட்டப்ப நாயக்கர் அங்கே போய் அவரைக் கண்டார். கும்பினியாருக்கு இதமாய் நின்று முன்னம் உதவி செய்தவர் ஆதலால் இவரைக்

கண்டதும் அவர் உவந்து உபசரித்தார். அந்த வெள்ளைத்துரை யைப் பார்த்த பின் இவருடைய உள்ளத்தில் உறுதி ஊக்கங்கள் பிறந்தன. பெரிதும் தைரியமடைந்து இனிய மூகமன்கள் கூறி அரிய ஆதரவுகளை நாடினார். உள்ளம் மறுகி வந்துள்ள இவரிடம் வெள்ளைத்துரை சில விசாரணைகளை விநயவிவேகமாச் செய்தார்.

துப்பு விசாரித்தது

"பாளையங்கோட்டைச் சிறையை மீறி ஊமையன் வெளி யேறிப் போய்விட்டதாகச் சிறையதிகாரியிடமிருந்து எனக்குத் தகவல் வந்துள்ளது. சேனாதிபதியும் வருந்தி எழுதியிருக்கிறார். அவன் எப்படித் தப்பினான்? பதினாறு மாதங்களாக அடங்கிக் கிடந்தவன் இப்பொழுது இப்படித் துணிந்து எழுந்ததற்குக் காரணம் என்ன? காவலாளிகள் முதலிய படை வீரர்களுடைய தடைகளையெல்லாம் எவ்வாறு அவன் கடந்து போனான்? தலத் தில் சேனைத்தளபதியிருந்தும் இந்த மானக்கேடு நிகழ்ந்துள்ளது. வெள்ளையர்களை எள் அளவும் அவன் மதிக்கவில்லை. உறுதியும் ஊக்கமும் பொருதிறனும் அந்த மரபினரிடம் அதிசய நிலையில் மருவியிருக்கின்றன. யாரையும் எதிர்பாராமல் எதையும் துணிந்து செய்துவிடுகின்றனர். முன்னம் கும்பினியைப் படாத பாடுகள் படுத்தி முடிவில் கட்டபொம்மு வம்பாக மாண்டு மடிந்தான். இப்பொழுது தம்பி தலையெடுத்திருக்கிறான். எவ்வளவு வம்புகள் விளையுமோ தெரியவில்லை. புதிதாகக் கிடைத்துள்ள தேசத்தை இதமாக நாங்கள் பரிபாலனம் செய்து உரிமைகளை உறுதியாக நிலை நாட்ட ஒட்டாதபடி பாஞ்சை மரபினர் எங்களுக்குப் படு துயரங்களைச்செய்துபலவகையிலும் இடர்விளைத்துவருகின்றனர்.

வங்காளம் முதல் எங்கும் எதிர்ப்பின்றி எல்லா நாடுகளும் கும்பினிக்கு உரிமையாய் வந்துள்ளன. இங்கும் யாவரும் பணிந்தனர். இந்தத் தென்னாட்டு மூலையிலுள்ள சின்ன ஒரு பாளையகாரனைகட்டபொம்மு கட்டாண்மையுடன்எதிர்த்தான். கட்டப்பட்டுத் தேறினோம். மீண்டும் அவன் தம்பி மூண்டு நிற் கிறான். சிறையை உடைத்து வந்த அவன் இப்பொழுது என்ன நிலையில் இருக்கிறான்? நீர் உன்நாட்டில் அயலே இருப்பவர் ஆத லால் அவனுடைய செயல் இயல்களையெல்லாம் தெளிவாகத் தெரிந்திருப்பீர்! முன்பு கும்பினிக்கு அனுகூலமாய்நின்று உதவி

செய்தது போலவே இதிலும் நீர் உறுதியாய் நின்று துணைபுரிய வேண்டும். அவனுடைய நிலைமைகளையும் இரகசியங்களையும் உள வறிந்து வந்து அடிக்கடி நமக்கு அறிவிக்க வேண்டும். கும்பினி யாரால் நீர் முன்னம்பெற்ற வெகுமதியைவிட அதிகமாக இன் னமும் பெறலாம்" என இன்னவாறு தமக்குத் தெரிந்த கொச் சைத் தமிழில் லஷிங்டன் எட்டப்பநாயக்கரிடம் சொன்னர்.

வெள்ளைத்துரை சொல்லிய இந்த உரைகளைக் கேட்டதும் எட்டப்பநாயக்கருடைய உள்ளத்தில் உவகை வெள்ளம் பொங் கியெழுந்தது. ஊமைத்துரையால் என்ன நேருமோ? என்று முன்னம் இவர் எண்ணிக் கலங்கிய அந்த அச்சமும் இதிலும் கொஞ்சம் அடங்க நேர்ந்தன. அரிய ஆதரவு அமைந்ததென்று பெரிய உறுதி பெருகி வந்தது. கும்பினியாருக்குப் பக்கபலமாய் நின்று உழைத்து வரவேண்டும் என்று தனக்கு இட்ட கலெக்ட ருடைய கட்டளையைப் பெறலரும் பேருக இவர் கருதி மகிழ்ந் தார். இச்சகம் பேசுவதில் நல்ல பழக்கம் உள்ளவர் ஆதலால் தக்க சூழ்ச்சியுடன் பக்குவமாய்ப் பணிந்து பேச நேர்ந்தார்.

### எட்டப்பன் இசைத்தது.

தனக்குக் கொடிய அபாயம் நேர்ந்தது என்று நெடிது பயந்து ஆதரவு நாடி வந்தவர் சாதுரிய உபாயங்களோடு கலெக்டரிடம் பேசினர்: "துரைகளே! கும்பினிக்கு ஊழியம் செய்ய நான் என்றும் கடமைப்பட்டிருக்கிறேன். யாண்டும் உரிமையுடன் அதனைச் செய்து வருவேன். மீண்டும் ஈண்டு மூண்டிருக்கிற பகைநிலை அதிக பயங்கரமானது. முன்னம் இருந்த கட்டபொம்மைவிட இப்பொழுது உள்ள ஊமையன் மிகவும் பொல்லாதவன். எல்லா வகையிலும் வல்லவன். யாதும் அஞ்சா நெஞ்சினன். சிறையைத் தகர்த்து வெளிவந்தவன் தலை மறைவாய் ஒளிந்திருக்கவில்லை அரிய அரணை பெரிய கோட் டை கொத்தளங்களை அமைத்து நேரே போருக்கு மூண்டு நிற் கிருன். தன் அண்ணனைக் கொன்ற பகைவகையினரைப் பழிக் குப் பழியாப் படுகொலைகள் செய்ய அடுதிறலோடு ஆர்த்துள் ளான். பெரும் படைகள் திரண்டிருக்கின்றன. அடும்போர் கருதி என்மேல் கடும்பார்வையாய்க் கனன்றிருக்கிருன். முன்பு துரைகளுக்கு இங்கே நான் உதவியா யிருந்தமையால் கும்பினி

மேலிருப்பதைவிட என் மீது மிகவும் கோபமாய் அவன் கொதித்து மூண்டு கதித்து நிற்கிறான். எனக்கும் என் பாளையத்திற்கும் எந்த வேளையில் என்ன ஆபத்து நேருமோ தெரியவில்லை. எனது உறவினர் எல்லாரும் உள்ளம் கலங்கி உளைந்திருக்கின்றனர். வெள்ளையருக்கு ஊழியம் செய்கிற சோள்ளையன் என எள்ளலாக என்னை அவனுடைய மரபினர் எல்லாரும் இகழ்ந்து வருகின்றனர். உள்நாட்டில் அவனுக்குச் செல்வாக்கு அதிகம் ஆகலால் எனக்கு யாரும் உரிமையுடன் நேரே உதவி செய்ய வர மாட்டார். அயல்நாட்டாருக்கு வழிகாட்டியாய் நின்று நாட்டைக் காட்டிக் கொடுத்த நயவஞ்சகன் என என்மேல் வசையாகப் பாட்டுகளும் பாடியுள்ளனர். தேசத் துரோகி, இனத் துரோகி, குலத் துரோகி, குடித் துரோகி என இப்படி என்னைப் பலவாறு இழித்துப் பழித்து நாட்டில் என்மீது எல்லாருக்கும் வெறுப்பை விளைத்திருக்கின்றனர். அயலே எனக்கு யாரும் ஆதரவில்லை. கும்பினியாரே தஞ்சம் என்று நான் நம்பியிருக்கிறேன். இப்பொழுது சரியான ஆயுதங்கள் ஒன்றும் என்னிடத்தில் இல்லை. இருந்தவற்றையெல்லாம் கும்பினியாரிடம் முன்னமே ஒப்பித்துவிட்டேன். யாதொரு கதியுமில்லாமல் * நிராயுதனாயிருக்கிறேன். ஆகவே என் பாளையத்தையும் என்னையும் இச் சமயம் பாதுகாத்தருள வேண்டிய பொறுப்பு முழுவதும் கும்பினிக்கே யுரியதாம்; படைக்கலம் யாவும் இழந்து அடைக்கலம் புகுந்துள்ளேன்" என இவ்வாறு அவர் குழைந்துமொழிந்தார். வணக்கமும் இணக்கமும் கணக்கோடு கதித்து வந்தன.

---

* கட்ட பொம்மைத் தூக்கிய வுடனே மற்றப் பாளையங்களிலுள்ள கோட்டை மதில்களையெல்லாம் தட்டி விடவேண்டும்; திரும்ப யாரும் கட்டலாகாது; ஆயுதங்களை ஒருவரும் கைவசம் வைத்திருக்கக் கூடாது; வேல் வாள் வல்லையம் முதலிய படைக்கலன்களை எல்லாம் அடைக்கலமாக் கொண்டுவந்து பாளையங்கோட்டையில் சேர்த்துவிட வேண்டும்; மீறி வைத்திருந்தால் மரண தண்டனை கிடைக்கும் என்று கும்பினித் தளபதியான பானர் மேன் கயத்தாறு என்னும் ஊரில் இருந்து கொண்டு (21—10—1799) ல் உத்தரவிட்டிருந்தார் ஆதலால் அவ்வாறே ஆயுதங்கள் யாவும்இழந்து பாளையகாரர் எல்லாரும் நிராயுதபாணிகளாய் நிற்கலாயினர். அந்த வுத்தரவின் மூல நிலையைப் பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் முதல் பாகம் 358-ம் பக்கம் அடிக்குறிப்பிலுள்ள ஆங்கிலத்திலும் அதன் மொழிபெயர்ப்பிலும் பார்க்க.

## ஆறுதல் அளித்தது.

அவருடைய முறையீடுகளையெல்லாம் கவனமாக் கேட்டு வந்த லஷிங்டன் துரை அவருக்கு மிகவும் ஆறுதல் கூறி அஞ்சாதீர்; மலையாதீர்! என்று நெஞ்சம் தேற்றினார். "உமக்கு யாதொரு அல்லலும் நேராதபடி கும்பினியார் உம்மைப் பாதுகாத்தருளுவார்; இதனை உண்மையாக நம்பிக் கொள்ளும். உமக்கு வேண்டிய ஆயுதங்களை உடனே கொடுத்து உதவும்படி பாளையங்கோட்டையிலுள்ள சேனைத் தலைவருக்கு இன்றே எழுதுகிறேன். மூன்று தினத்துள் உமக்குப் போர்க் கருவிகள் கிடைத்து விடும். பட்டாளங்கள் பாஞ்சைக் கோட்டை மேல் படை எழுச்சி செய்யும் பொழுது நீரும் உடன் சேர்ந்து கடமைகளைத் திடமாகக் கருதிச் செய்ய வேண்டும்" என்று கட்டளையிட்டார்.

அந்தக் கட்டளையைக் கேட்டதும் எட்டப்ப நாயக்கர் உள்ளம் களித்தார். "கும்பினிக்கு என்றும் உரிமையாய் நின்று நான் உழைத்து வருவேன். என்னுடைய உடல் பொருள் ஆவி யாவும் கும்பினியின் உடைமைகளே" என்று உறுதி கூறிக் கலெக்டரிடம் விடைபெற்றுக்கொண்டு அவர் எட்டையாபுரம் வந்து சேர்ந்தார். அவ் வரவிலிருந்து அவருடைய உள்ளத்தில் புதிய ஒரு உறுதியும் ஊக்கமும் பெரிதும் பெருகி நின்றன.

## நிருபம் எழுதியது

தான் எட்டப்பநாயக்கரிடம் உறுதிகூறியபடியே உடனே படைத் தலைவருக்கு லஷிங்டன் துரை கடிதம் எழுதினார். அரிய உளவுகள் தெரிந்த பெரிய உதவியாளராக அவரை விரைவில் தழுவிக் கொள்ளும்படி விரகோடு குறித்தார்: "எட்டையாபுரம் பாளையகாரரை இப்பொழுது உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். அவர் கும்பினிக்கு மிகவும் வேண்டியவர். முன்பு இங்கே தளபதியாயிருந்த பானர்மேனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தவர். கட்ட பொம்மை நாம் வெற்றிகரமாய் அடக்கியதற்கு உற்ற துணையாய் உடன் நின்று அவர் செய்த உபகாரங்கள் பல. உள் நாட்டில் இப்படி உரிமையான ஒரு துப்பன் அமைவது அரிது. நமக்குக் கொடிய பகையாய் மூண்டுநிற்கிற பாஞ்சாலங்குறிச்சியாருக்கு அவர் நெடிய விரோதி. நம்பால் மிக்க அன்பும் நம்பிக்கையும் உடையவர். அவரை இப்பொழுது

நாம் துணையாக அணைத்துக்கொள்ள வேண்டும். அவர் கைவசம் நல்ல படைவீரர்கள் இருக்கின்றனர். அவருக்குச் சில யுத்த தளவாடங்களை அனுப்பிப் படைத்துணையாகச் சேர்த்துக்கொள் ளுவது நல்லது; என்னை நேரே வந்து கண்டு எதிரியினுடைய இரகசியங்களைச் சொல்லியிருக்கிறார். நிலைமையைத் தெளிந்து எழுதியிருக்கிறேன். விரைவில் கவனியுங்கள்" என இவ்வாறு குறித்து விடுத்த கடிதம் சேனைத் தலைவருக்கு வந்தது. அதனைக் கண்டதும் அவர் மகிழ்ச்சி கொண்டார். தக்க சமையத்தில் பக்க பலம் கிடைத்தது என்று மிக்க உவகையுடன் ஆயுதங்களை அனுப்ப அக்கணமே அவர் விரைந்து ஏற்பாடுகள் செய்தார்.

## தளபதி செய்தது.

கடிதத்தில் குறித்திருந்த குறிப்புகளைக் கூர்ந்து நோக்கி உடனே போர்க் கருவிகளைத் தொகுத்தார். மூந்நூறு வெடிகள், எழுநூறு வேல்கள், இருநூறு வாள்கள் சில கருமருந்துகள் ஆகிய ஆயுதவகைகளை அனுப்பினார். இடையே எதிரிகள் புகுந்து பறித்துக் கொண்டுபோய் விடாதபடி சரியான பாதுகாவலோடு அனுப்பி, அவை வருகிற விவரமும் அறிவித்து எட்டப்ப நாயக் கருக்குத் தெளிவாக ஒரு கடிதமும் அவர் எழுதியிருந்தார்.

## மேஜர் மெக்காலேயின் கடிதம்.

"எட்டையாபுரம் பாளையகாரராகிய எட்டப்ப நாயக்க ருக்கு எழுதியது: நீர் கும்பினியார் உத்தரவுக்கு எந்தவகையிலும் கீழ்ப்படிந்து எப்பொழுதும் விசுவாசத்துடன் நடந்து வந்திருப் பதை அறிந்து நாம் மகிழ்ந்திருக்கின்றோம் முன்னம் சேனாதிபதி யாயிருந்த பானர்மேனால் நீர் அடைந்திருக்கின்ற இலாபங்கள் உம்முடைய ஞாபகத்தில் இருக்குமென்று நம்புகின்றோம். இன் னமும் கும்பினியாரால் பல நன்மைகளை அடைந்து கொள்வீர். இப்பொழுது கொடும்பகையாய் மூண்டு நிற்கிற பொல்லாத ஊமையனால் உமக்கு யாதொரு அல்லலும் நேராதபடி நாம் பாதுகாத்தருளுவோம்; அது குறித்து நீர் யாதும் பயப்பட வேண்டாம். கையில் ஆயுதங்கள் இல்லை என்று கலெக்ட்டரிடம் நேரில் முறையிட்டுள்ள விவரம் தெரிய வந்தது. மூந்நூறு வெடி களும் வேறு பல ஆயுதங்களும் தக்க பாதுகாப்புடன் கோவில் பட்டிக்கு இன்று அனுப்பி யிருக்கின்றோம். இந்தக் கடிதம்

கண்டவுடன் உம்முடைய ஆட்களை அனுப்பி அங்கிருந்து அவற்றை எடுத்துக் கொள்ளும். பின்பு அந்த ஆயுதங்களை நம்மிடத்திலாவது அல்லது நாம் யாரிடத்தில் செலுத்தச் சொல்லுகிறோமோ அவரிடத்திலாவது முழுவதையும் வகை விவரத்துடன் செலுத்திவிட வேண்டும். இந்த ஒப்பந்தத்தில் நாம் உமக்கு அனுப்பியுள்ள படைக்கலன்களை நீர் எடுத்துக் கொண்ட வகைக்கு உடனே உம்முடைய கையெழுத்திட்டு இங்கே பதில் அனுப்பிவைக்கவும்; நானாவது, கலெக்ட்டராவது எந்த வேளையில் விரும்புகிறோமோ அந்தச் சமையத்தில் நீர் படைகளோடு அவசியம் வந்து சேர வேண்டும்" என இந்தவாறு பிப்ரவரி மாதம் பதினோராம் தேதி (11—2—1801) சேனைத்தலைவர் எழுதிவிட்ட கடிதம் உரிய பொழுதில் எட்டப்ப நாயக்கருக்குக் கிடைத்தது.

வெள்ளைத்துரையிடமிருந்து வந்த அந்தக் கடிதத்தைக் கண்டதும் அவர் உள்ளம் களித்தார். தமது பரிவாரங்களை அனுப்பிப் படைக்கலன்களை எடுத்துக்கொண்டார். தாம் பெற்றுக்கொண்டதற்கு வகை விவரமாகப் பதிலும் அனுப்பினார். கும்பினித் தோழமையை நினைந்து குதூகலித்திருந்தார். பின்பு சேனைகளைச் சேர்த்தார். ஆனவரையும் முயன்று ஆதரவாய்யாவும் செய்தார்.

### படைகள் சேர்ந்தது

கும்பினித் தளபதி தனக்கு ஆயுதங்கள் அனுப்பியுள்ளமையால் போரில் அவருக்குத் துணைபுரிய வேண்டித் துணிவு மிகுந்து படைகளைத் தனித் தனியே ஆராய்ந்து யாண்டும் தீவிரமாய் மூண்டு ஆவலோடு அவர் சேர்த்து வந்தார். தன் இனத்திலும் பரிவாரங்களிலும் போருக்குரிய குறிகாரர்களைச் சரியானபடி தேர்ந்தெடுத்தார். தன்னுடைய ஜமீன் எல்லையிலுள்ள குடிசனங்களுள் தேகதிடமுள்ளவர்கள் எல்லாரையும் சண்டைக்கு ஆயுதமாக் கொண்டுவரச் செய்தார். கும்பினியாருடைய ஆதரவு இருக்கின்றது என்ற துணிவினால் ஆங்காங்கிருந்து தைரியசாலிகள் சிலர் சேரலாயினர். ஆக மொத்தம் இரண்டாயிரத்து எழுநூறு போர் வீரர்கள் சேர்ந்தனர். அங்ஙனம் சேர்ந்தவர்களுள் சிறந்த படைத்தலைவனாய் விளங்கி நின்றவன் * கட்டாரங்குளம் அழகுமுத்து சேர்வை என்பவன். அவனுடைய முன்னோர் வட

*இவ்வூர் கழுகுமலைக்குத் தென்கிழக்கே 5கல் தூரத்திலுள்ளது.

மலையப்பபிள்ளை யின் உதவியைப் பெற்றவர். அதனால் இரண்டு மூன்று கிராமங்களோடு திரண்ட செல்வமும் அவன் அடைந்திருந்தான். நல்ல தீரன். குதிரை ஏற்றத்திலும் வல்லயப் போரிலும் அவன் மிகவும் வல்லவன். அவன் வசம் எப்பொழுதும் அறுநூறு படைவீரர்கள் இருந்து வந்தனர். எட்டையாபுரம் ஜமீனுக்கு உரிமையான பெரிய படைத்தலைவன் ஆதலால் தன் படைகளுடன் பரிமீது இவர்ந்து அவன் விரைவில் வந்து சேர்ந்தான்.

இராமனூத்தூர் வெள்ளைய மணியகாரன்,

அருங்குளம் காமணன் சேர்வை,

செமப்புதூர் சின்னணஞ் சேர்வை,

இளம்புனம் பெரியதளவாய்,

முதலிய குறிகாரர்கள் எல்லாரும் தத்தமக்குரிய கையாட்களுடன் எட்டையாபுரம் வந்து சேர்ந்தனர். திரண்டு வந்திருக்கிற படைகளைக் கண்டதும் எட்டப்ப நாயக்கர் உவகையுட்கொண்டு ஊக்கம் மீக்கூர்ந்தார். தன்னுடைய சேனைத்திரளையும் செல்வாக்கையும் நோக்கிக் கும்பினியார் பெருமகிழ்ச்சி யடைவர் என்று எண்ணி மகிழ்ந்து அங்கிருந்து வருகிற உத்தரவையும் பாஞ்சாலங் குறிச்சிமேல் படை எழுச்சி செய்கிற நாளையும் அவர் எதிர்பார்த்து உரிய வேலையை நோக்கி விழைந்திருந்தார்.

ஊமைத்துரையின் அடலாண்மைகளை எண்ணி முன்னம் அஞ்சி அலமந்திருந்த அந்த அச்சமெல்லாம் நீங்கி இப்பொழுது உறுதியும் ஊக்கமும் பெருகி உச்ச நிலையில் அவர் ஓங்கி நின்றார். வெள்ளைத்துரைகளுக்கு உரிமையான உதவியாளன் என்பதில் அவருக்கு ஓர் உள்ளக் களிப்பு வெள்ளமாய் விரிந்து நின்றது. முன்னம் உதவி புரிந்ததில் அவரிடமிருந்து சில ஊதியங்கள் பெற்றுள்ளமையால் இன்னமும் பல பெறலாம் என்று அவர் கருதி மகிழ்ந்தார். காரியங்களைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வந்தார். வீரியமும் புதிதாய் அவரிடம் விரிந்து நின்றது.

### தம்பி வந்தது.

பாஞ்சைமேல் போர் செய்ய மூண்டு தன் ஊரில் படைகளைத் திரட்டி வைத்துக்கொண்டு எட்டப்பநாயக்கர் இருக்கின்ற நிலை உறவினர் சிலர்க்குப் பிடியாதிருந்தது. அவருடைய தம்பி

குமாரமுத்து நாயக்கரும்,* மைத்துனர் சின்னமல்லு நாயக்கரும் ஒரு நாள் அவரிடம் உரிமையுடன் வந்தார்; தனியே வணங்கி நின்ருர். அவரைப் பார்த்து "வந்த காரியம் என்ன?" என்று எட்டப்ப நாயக்கர் கேட்டார். இளையவர் கிட்ட நெருங்கினர்.

"சமூகத்தில் ஒன்றைத் தெரியப்படுத்த வேண்டும் என்று வந்தேன். பிழையிருந்தால் மன்னித்தருள வேண்டும்" எனத் தம்பி விநயமாய் வேண்டி நின்றார். "என்ன அது? சும்மா சொல்லு!" என்று தம்பியை நோக்கி அவர் அன்புடன் சொன்ஞர். அந்த இளையவர் உரிமையோடு யாவும் கூற நேர்ந்தார்.

குமாரமுத்து: கும்பினியாருக்கு உதவியாய் நின்று கட்டபொம்மையும் தானபதிப் பிள்ளையையும் முன்னம் தாங்கள் பிடித்துக்கொடுத்ததைப்பற்றி நாட்டில் பலர் இன்னமும் உங்களைப் பழித்து இழிவாகத் தூற்றி வருகின்றனர். இப்பொழுதும் போனல் உலகம் நம்மை என்ன சொல்லும்? எப்படி எண்ணும்?

எட்டப்பன்: அந்தக் கட்டபொம்மு நமக்கு எவ்வளவு இடையூறுகள் செய்தான்! நம்மைத் தலையெடுக்க ஒட்டாமல் கிலையடக்கி வந்தான். நாம் தனியாக அதனை ஒன்றும் செய்ய முடியாமையால் மானமும் மதிப்பும் இழந்து மறுகிக்கிடந்தோம். காலம் வாய்த்தது; பழம் பகையைத் தொலைக்க உளம் துணிந்து எழுந்தோம். அவன் தொலைந்து ஒழிந்தான். தொல்லை நீங்கி நல்லபடியா யிருந்தோம்.

குமாரமுத்து; அவர்தான் தொலைந்து போனரே; நமக்குத்தொல்லையில்லையே; இனிமேல் நாம் ஒதுங்கி யிருந்தால் என்ன? இன்னமும் ஏன் வீணே இன்னலை விளைத்து இடராகப் பகை வளர்க்க வேண்டும்?

எட்டப்பன்: முன்னம் இருந்த அந்தக் கட்டபொம்மைவிட இப்பொழுதுள்ள இந்த ஊமையன் மிகவும் கெட்ட

* எட்டப்ப நாயக்கரோடு உடன் பிறந்தவர் நால்வர்: அவர் ஜெகவீர எட்டுநாயக்கர், குமாரமுத்து நாயக்கர், இராமசாமி நாயக்கர், வெங்கடேசுவர எட்டுநாயக்கர் என்னும் பேரினர். மூத்தவரது பட்டப் பெயர் ஜெகவீரராமக்குமார எட்டப்பன் என்பதாம்.

வன்; பொல்லாத வம்பன். அவன் பாளையங் கோட்டை ஜெயிலை உடைத்து வந்தவுடனே முதலில் நம்மைத் தொலைத்துவிட வேண்டும் என்று துணிந்து நின்றான்; நல்லவேளையாகக் கும்பினிப் பட்டாளம் வந்து அவனை வளைந்து கொண்டது; அதனால் அங்கே மூண்டு நின்றான்; இல்லையானால் இதற்குள் இங்கே அல்லல் பல நடந்திருக்கும். நமது பாளையத்தைப் பாழாக்க வேளையையும் பொழுதையும் அவன் எதிர்பார்த்திருக்கிறான். உற்ற துணையுள்ள பொழுதே காரியத்தை நாம் வெற்றியாக முடித்துக் கொள்ள வேண்டும்.

குமாரமுத்து: அவரைப் பிடிக்க வேண்டும் என்று மூண்டு வந்த கும்பினிப் பட்டாளமே அவருடைய பேராற்றல்களைக் கண்டு யாதும் ஆற்ற முடியாமல் மீண்டு போய்விட்டதே! மறுபடியும் படைதிரட்டி வந்தாலும் அவரை என்ன செய்ய முடியும்? அவர் சொன்னபடி யெல்லாம் செய்ய ஏராளமான படை வீரர்கள் எதிர்பார்த்திருக்கிறார்களே! கும்பினியார் ஆதரவு இல்லையானால் நம் கதி என்னாகும்? நாம் ஏன் இந்த வீண் பகையை மேலும் விரைந்து வம்பா வளர்த்துக் கொள்ள வேண்டும்?

எட்டப்பன்: வளர்த்துக் கொள்வதா? பகைதான் முன்னமே வளர்ந்து முகடு முட்டி யிருக்கிறதே; இனிமேல் நாம் ஒதுங்கி நின்றாலும் நம்மை அவன் விடப் போவதில்லை; எவ்வழியும் நமக்கு அழிவு செய்யவே அவன் வழிபார்த்திருப்பான்; தேசாதிபதிகளாகிய கும்பினியார் அவனை இலேசில்விட்டுவிட மாட்டார்கள்; இந்த ஓட்டோடு ஊக்கி நின்று அவனை அடியோடு தொலைத்து ஒழித்தாலொழிய நாம் வாழ முடியாது; நம் குடி நிலைத்திராது.

குமாரமுத்து: ஒரு சாதியினர்; அவரோடு ஓயாமல் நாம் ஏன் சலம்சாதித்துச் சஞ்சலங்களை விளைக்கவேண்டும்? தேசத் துரோகத்துடன் இனத் துரோகமும் நாம்

செய்து வருவதாக நம்மைக் குறித்து மனக் கடுப் போடு வெறுத்து மறைவாகப் பலர் இகழ்ந்து பேசியும் இளிவாக ஏசியும் வருகின்றனர். அவ ருக்கு இருக்கிற செல்வாக்கைப் போல் நாட்டில் யாருக்குஇருக்கிறது?சிறையிலிருந்து வெளிவந்து ஆறே நாளையில் யாரும் பிரமிக்கும்படியாகப் பெ ரிய கோட்டையைக் கட்டியிருக்கிறார்; அவ்வளவு அரிய பேராணை எளிதாக முடித்திருப்பதனால் பொது சனங்கள் அவரிடம் எவ்வளவு பிரியமும் அபிமானமும் வைத்திருக்கிறார்கள் என்பது தெளி வாகத் தெரிகின்றதே! நாட்டு மக்கள் அவர் பால் காட்டிவருகிற அன்பும் மதிப்பும் யாரும் வியக்கத் தக்கனவாய் எங்கும் விரிந்து நிற்கின்றன. நாவ சையாமலே நாடுஅசைகின்றது என்னும்பழமொழி அவரை நோக்கி எழுந்ததாக உலகம் போற்றிவரு கிறது. அவரிடம் ஏதோ ஒரு தெய்வீக சத்தி இருக்கிறது என்றே எல்லாரும் வியந்து சொல்லு கிறார்கள். கும்பினியின் அதிகார ஆற்றல்கள் தே சத்தில் இவ்வளவு தலையெடுத்திருந்தும் அவற்றை ஒரு சிறிதும் மதியாமல் பேருக்கத்துடன் போருக் கி நிற்கிறாரே! இது எவ்வளவு பெரிய பேராண் மை? இந்த அரிய நிலைகளையெல்லாம் சிறிது சிந் தனை செய்ய வேண்டும்; இந் நாட்டிலுள்ள எல் லாப் பாளையகாரர்களும் போல இருவகையாருக் கும் நாம் பொதுவாக இருந்துவிடலாம்; சிறியேன் பரிவோடு கூறுவதைச் செவியேற் றருளுங்கள்.

எட்டப்பன்: மற்றப்பாளையகாரர்களைக் கும்பினியார் ஒருபொரு ளாக மதிக்கவில்லை. நம்மையே உண்மையான உதவியாளன் என்று நன்றாக நம்பியிருக்கிறார். அவரால் நாம் அடைந்துள்ள மதிப்பும் மாண்பும் ஊதியங்களும் பல. அடுத்தவர்களை அவர் கைவி டார்; எவ்வழியும் ஆதரித்தே அருளுவர். நன்றி யறிவுடன் ஒன்றிநின்று நாம் அவருக்கு உழைத்து வரின் நமக்கு நலம் பல வரும். கும்பினியார்

ஊமையனை எளிதில் விடமாட்டார்; கோட்டையைத் தட்டிக் கொட்டமுத்துப் போட்டுவிடுவார்கள். நமக்கு அபாயம் நேருமோ என்று நீ யாதும் அஞ்ச வேண்டாம்; ஜமீனைப் பார்த்துக் கொண்டு நீ இங்கேயே இரு; நான் பாஞ்சாலங்குறிச்சிக்குப் படைகளோடு நேரே போய் வருகிறேன்.

இவ்வாறு உறுதியாக அவர் கூறவே குமாரமுத்துநாயக்கர் வேறு யாதும் பேசாமல் விலகிப் போனார். மைத்துனரும் மாறு கூறாமல் மறுகிச் சென்றார். ஊமைத்துரைமேல் பகைகொண்டு சீமைத்துரைகளுக்கு உறவாய் எட்டப்ப நாயக்கர் ஊணே புரிந்து நிற்பதை இனத்தவர் சிலர் வெறுத்திருந்தாலும் எதிர் ஒன்றும் பேசாமல் ஒதுங்கி நின்றார். அவர்முநிர்வேகமாமுயன்றுவந்தார்.

போருக்கு வேண்டிய ஆயத்தங்களை எவ்வழியும் தொகுத்து ஊருக்குரிய பாதுகாப்பையும் செய்து நேருக்கு நேர் செல்லக் கும்பினியார் ஆணையை அவர் ஆவலோடு எதிர்பார்த்திருந்தார்.

கட்டளை வந்தது.

முன்பு போர்க்கருவிகள் அனுப்பியிருக்க மேஜர் மெக்காலே துரை யுத்தத்திற்கு உதவியாய் உடன்வந்து சேரும்படி எட்டப்ப நாயக்கருக்கு ஒரு உத்தரவு அனுப்பினர். "மாட்சிமை தங்கிய கும்பினியாரிடம் என்றும் விசுவாசமுள்ள எட்டப்ப நாயக்கருக்கு எழுதியது: நாம் உமக்கு முன்னம் பிப்ரவரி மாதம் பதினோராம்தேதி அனுப்பிய கடிதமும், வெடிகள்முதலிய யுத்த தளவாடங்களும் நீர் பெற்றிருப்பீர்; குறித்துள்ள குறிப்புகளை எல்லாம் கவனித்திருப்பீர்; உம்முடைய படைகளோடு பாஞ்சாலங்குறிச்சிக்கு நேரே மார்ச்சுமாதம் 30ந்தேதிநீர் வந்துசேரவேண்டும்; உமது படைகளை நடத்திவர நன்கு பயிற்சி பெற்ற இருநூறு சிப்பாய்களையும், படைத்தலைவர்களாக இரண்டு துரைகளையும் இன்று அனுப்பி யிருக்கிறேன்; மிக்க எச்சரிக்கையுடன் குறித்த தினத்தில் நீர் என்னை அங்கே வந்து சந்திப்பீர் என்று நம்பியிருக்கிறேன்" என அவர் எழுதியனுப்பிய கடிதம் மார்ச்சு மாதம் 25ந் தேதி கிடைத்தது மறுநாளே சிப்பாய்களும், துரைகளும் வந்து சேர்ந்தனர். சார்லெஸ் ட்ராட்டர் (Captain Charles Trotter) கிளாசன் (Lieutenant Clasan) என்னும் அந்தச்

படைத் தலைவர் இருவரையும் வரவேற்று எட்டப்ப நாயக்கர் மிக்க மரியாதையுடன் தக்கவாறு உவந்து உபசரித்தார்.

தன் படைக்குத் தளபதிகளாய்த் துரைகள் வந்திருப்பதைப் பெரிய மதிப்பாகக் கருதி மகிழ்ந்தார். படை எழுச்சிக்குரிய ஆயத்தங்களைத் தளபதிகளோடு கலந்து ஆலோசித்து விரைந்து செய்தார். பாஞ்சாலங்குறிச்சி மேல் தான் படையெடுத்துச் செல்வதால் இடையே பகைவர் வந்து புகுந்து தன் நகரைக் கவர்ந்து கொள்ளாதபடி அறுநூறு போர்வீரர்களைப் பாதுகாப்புக்காக எட்டையாபுரத்தில் நிறுத்திவிட்டு மீதமுள்ள படைகளை ஒருங்கே சேர்த்து நடத்துமாறு சொந்தப் படைத் தலைவனை அழகுமுத்து சேர்வையிடம் கூறினார். அவன் எல்லா ஆயத்தங்களையும் எதிரிந்து ஆக்கி ஒல்லையில் ஊக்கி உறுதியுடனின்றான்.

நல்ல வேளை நாடியது.

கும்பினியாருக்கு உதவியாகப் பாஞ்சைக் கோட்டைமேல் படையெழுச்சி செய்ய நேர்ந்த எட்டப்பநாயக்கர் நல்ல வேளையில் செல்ல வேண்டும் என்று கருதி அனுகூலமான இராசியை ஆராய்ந்தார். அவ்வூரிலிருந்த முத்துசாமி ஐயர் என்னும் சோதிட வித்துவானை அழைத்தார் அவர் வந்தார். பிரயாணத்துக்குரிமையாகச் சுபமான முகூர்த்தம் ஒன்றைத் தெளிந்து குறிக்கும்படி உரைத்தார். நாள்களையும் கோள்களையும் நன்கு ஆராய்ந்து பார்த்து வியாழ ஓரையில் செல்லலாம் என்று அவர் சொல்லினர்.

ஓரை என்பது ஒரு காலக்கூறு. ஒவ்வொரு தினமும் உதய காலத்தில் அந்தந்த நாளுக்கு உரிய கோளே நாயகமாய் வரும். ஞாயிற்றுக் கிழமை காலை இரண்டரை நாழிகை வரையும் அருக்கன் ஓரை. அதற்குமேல் ஐந்து நாழிகை வரை சுக்கிரன் ஓரை. அதிலிருந்து ஏழரை நாழிகை வரையும் புதன் ஓரை. அதன் பின் சந்திரன், சனி, வியாழன், செவ்வாய் என முறையே வரும். ஒவ்வொருவருக்கும் இரண்டரை நாழிகை அளவே அதிகாரம் உண்டு. அக்கோள்களின் பலன்கள் நாளும் சுழன்று நிகழும்.

அருக்கன் ஓரை மரணம் தரும்.
சுக்கிரன் ஓரை மங்களமாம்.
புதன் ஓரை மாட்சி வரும்.

சந்திரன் ஓரை மகிழ்ச்சி யுண்டாம்
சனி ஓரை சிறை நேரும்.
வியாழன் ஓரை செல்வம் சேரும்.
செவ்வாய் ஓரை போர் மூளும்.

"அருக்கன் புகர்புந்தி இந்துதுன் மந்தனோடு அந்தணன்சேய்
இருக்கும் கடிகை இரண்டரையாம்; இந்த ஓரைகளில்
மரிக்கும் மணம்செய்யும் மாட்சியுண்டாகும் மகிழ்வுதரும்
சிரிக்கும் சிறையிடும் செல்வமும் போரும் செறிந்தெழுமே."

இதில் வியாழ ஓரை செல்வம் தரும் என்று குறித்துள்ளமையால் அது நல்ல காலம் என்று அவர் உவந்து எழுந்தார்.

"யாருடன் சண்டைக்குப் போனாலும் கட்ட
பொம்முடன் சண்டைக்குப் போக மாட்டேன்"

என்று நாட்டில் யாரும் அஞ்சி நின்ற வீரனோடு போராட அன்று அவர் எழுந்து வந்தது பெரிய அதிசயமாயிருந்தது.

## படை எழுப்பியது

வெடிகள் வாள்கள் வேல்கள் வல்லயங்கள் முதலிய கொடிய ஆயுதங்களுடன் இரண்டாயிரத்து முந்நூறு போர்வீரர்கள் எழுந்தனர். கும்பினிக்குரிய சிப்பாயிகள் படையை அணி வகுத்து ஒழுங்காக நடத்தினர். வீரசின்னு, குமாரஎட்டு, பெரிய தளவாய், பெத்தணன்காளை முதலிய குறிகாரர்கள் எல்லாரும் உரிய ஆடம்பரங்களோடு உடன் தொடர்ந்து வந்தனர்.

எல்லா வகையான ஆயுதங்களையும் செய்துகொண்டு சகுனம் பார்த்து நிமித்தம் நோக்கிப் படு பட்சி முதலிய கெடு நிலைகள் யாதும் இல்லாதபடி ஓர்ந்து பஞ்சகம் தேர்ந்து சரியான வேளைவரவும் வியாழ ஓரையில் எட்டப்பநாயக்கர் புறப்பட்டார். தளபதிகளாய் வந்த துரைகள் இருவரும், ஜமீன்தாரும், அழகு முத்து சேர்வையும் சிறந்த குதிரைகளில் இவர்ந்து சென்றனர்.

சேனாதிபதியின் கட்டளைப்படி எட்டையாபுரத்திலிருந்து எட்டப்பநாயக்கர் ஒட்டுப் படைகளோடு ஊக்கியெழுந்த காட்சியை மேலே பார்த்தோம்; கும்பினியார் திரட்டிய மூலபலப் படைகளின் மாட்சிகளை அயலே இயல்பாய்ப்பார்க்க வருகிறோம்.

# பதினேமூாவது அதிகாரம்

## படைகள் திரண்டது



முன்பு பாஞ்சை மேல் படையெடுத்து வந்த கும்பினிப் பட்டாளங்கள் இடைமுறிந்து உடைந்து மீண்டு போய்ப் பாளை யங்கோட்டையை அடைந்தபின் மறுபடியும் போருக்கு வேண் டிய ஆயத்தங்களைத் தளபதி விரைந்து செய்தார். மேலே கும்பி னித் தலைவருக்கு இங்குள்ள நிலைமைகளை விவரமாகத் தெரிவித் துப் பல இடங்களிலும் இருந்து படைகள் வந்து சேரும்படி உத்தரவுகள் அனுப்பியிருந்தார் ஆதலால் அவ்வாறே யாண்டும் மூண்டு திரண்டன. திரிசிரபுரம், மதுரை, இராமநாதபுரம், பெங் களூர், ஆர்க்காடு முதலிய இடங்களிலிருந்து படைகள் வந்து சேர்ந்தன. பிப்ரவரி மாதம் பத்தாந்தேதியிலிருந்து மார்ச்சுமாதம் இருபத்தைந்தாம் தேதி வரையும் பட்டாளங்கள் கட்டாகச் சேர்க்கப்பட்டன. சில சேனைகள் பாளையங் கோட்டையை அடைந்திருந்தன. பல பட்டாளங்கள் ஆங்காங்கிருந்து விரைந்து கயத்தாற்றுக்கு வந்து சேருமாறு தளபதி கட்டளையிட்டிருந்தார் ஆதலால் அவ்வண்ணமே ஆண்டு வந்து சேர்ந்து நின்றன.

### கயத்தாறு

இவ்வூர் பாஞ்சாலங்குறிச்சிக்கு நேர் மேற்கே இருபத்தி ரண்டு கல் தூரத்தில் உள்ளது. சென்னை முதலிய இடங்களிலி ருந்து நடந்து வருதற்குரிய பெரிய சாலைப்பாதை இவ்வூர் அரு கே செல்லுகின்றது ஆகலால் சேனைகள் எல்லாம் அங்கே வந்து சேருதற்கு வசதியா யிருந்தது. நாளடைவில் வந்து சேர்ந்த படைகள் யாவும் அங்குத் தங்கி நின்றன. மார்ச்சு மாதம் இரு பத்தேழாம் தேதி (27–3–1801) பெரிய படைகளோடு சேனைத் தலைவர் மெக்காலே துரை பாளையங்கோட்டையிலிருந்து புறப் பட்டுக் கயத்தாற்றுக்கு வந்து சேர்ந்தார். பட்டாளங்களையும் படைத் தலைவர்களையும் கண்டு மகிழ்ச்சியடைந்தார். தனித்தனி யே சென்று பார்த்துத் தளபதிகளை உசாவி உளவுகள் ஓர்ந்து அளவுகள் தேர்ந்து மேல் ஆக வேண்டியதை ஆலோசித்திருந்

தார். ஆலோசனைகள் யாவும் அரிய கரும சாதனங்களாகக் கலித்து நின்றன. சேனைத்திரள்கள் மானவீரங்களாய் மருவிவந்தன.

தானை நிலை

புதிதாய் வந்து சேர்ந்துள்ள சேனைகளின் வகைகளையும் தலைவர்களின் பெயர் நிலைகளையும் அயலே காண வருகின்றோம்.

| | |
|---|---|
| பயனீயர்ப் பட்டாளம் | 1 |
| வங்காளம் பீரங்கிப் படை | 2 |
| ஆங்கில அரசின் 74-வது சேனை | 3 |
| கவர்னரின் பாதுகாப்புப் படை | 4 |
| சுதேசக் குதிரைப்படை | 5 |
| சுதேசக் காலாட்படை | 6 |
| நேசக் காலாட்படை | 7 |
| நாட்டுக் காலாட்படை | 8 |
| சுதேசத் துப்பாக்கிப் படை | 9 |
| தேசத் தனிப்படை | 10 |
| சுதேச முதல்படை | 11 |

மேலே குறித்த சேனைகளுக்கு உபதளபதிகளாய்ப் பலர் அமர்ந்திருந்தனர். போர்க்கருவிகளோடு தானைத்தலைவர்கள் தருக்கிநின்றனர். தலைமைத்தளபதிகளின் பெயர்கள் அயலே வருகின்றன.

தானைத் தலைவர்.

| | |
|---|---|
| பாங் ஷா | (Captain Bagshaw.) |
| கிரேஹாம் | [Lieut. Graham.] |
| ஜாண் கேம்பல் | [Captain John Campbell.] |
| ஜேம்ஸ் கிரேண்ட் | [Lieut. James Grant.] |
| லயன் | [Lieut. Lyne.] |
| மேஜர் ஷெப்பேடு | (Major Sheppard.) |
| நேங்கிள் | (Captain Nagle.) |
| ஸ்மித் | [Captain N. Smith.] |
| ஹாசேடு | [Captain Hazard) |
| மேக்ஞல்டு | (Captain D. Macdonald.) |
| லாங் | (Captain G. Lang.) |

இந்தப் பதினொரு பேரும் முன்னே குறித்துள்ள படைகளுக்கு முறையே சிறந்த சேனைத் தலைவர்களாய் அமைந்திருந்தனர். வெசி, வெல்ஷ், ஸ்மார்ட் முதலான வேறு பெரிய தளபதிகளும் மேவி நின்றனர். போர் முறைகளில் கைதேர்ந்த ஐரோப்பியர்கள் நூற்றிருபத்து நாலு பேர் இந்தப் படையில் கலந்திருந்தனர். குதிரைப் படைவீரர்களைத் தவிர காலாட்படையுள் மாத்திரம் நாலாயிரத்து எண்ணூறு போர் வீரர்கள் கூடி நின்றனர். பெரிய பீரங்கிகள் அரிய வெடிகள் கொடிய குண்டுகள் நெடிய கருமருந்துகள் முதலிய போர்க் கருவிகள் யாவும் நிறைந்திருந்தன. பீரங்கிகளைக் கொண்டு வருதற்குரிய வண்டிகளும் பொதி மாடுகளும் அங்கங்கே ஆயத்தமாய் மண்டி நின்றன.

ஊருக்கு மேற்கே பெரிய சமவெளியில் பட்டாளங்கள் அணிவகுப்பு முறையில் வகை வகையாய் மருவியிருந்தன. பல வகையான கூடாரங்களைத் தலைமையாக நன்கு அமைத்துக் கும்பினித் தளபதிகள் கும்பல் கும்பலாய்க் குலாவியிருந்தனர்.

## வெசி வியந்தது

படைகள் வந்துள்ள நிலைகளைப் பார்த்து வெசி துரை வியந்தார். புதிதாய் வந்து சேர்ந்துள்ள லயன் என்னும் தளபதியும் அதிசயமடைந்து எதிரியினுடைய நிலைமையைக் குறித்து வெசியிடம் விசாரித்தான். பாளையங்கோட்டைச் சிறையிலிருந்து தப்பியோடிய ஒரு சின்னப் பாளையகாரனைப் பிடிக்க இன்னவாறான ஆயத்தங்கள் என்று அவர் இன்னலுழந்து சொன்னார். அதனைக் கேட்டதும் லயன் திகைத்தான்; பின்பு நகைத்தான். "உண்மைதானா?" என்றான். அவனை அழைத்துக் கொண்டு வெசி பிற்கட்டிடம் வந்தார். நிகழ்ந்ததைச் சொன்னார். தன் உள்ளத்தில் நினைந்து வந்ததையும் அந்த வெள்ளைத்துரை நேரே கூறினார்.

"இந்தப் பொட்டல் காட்டில் இருக்கின்ற ஒரு குட்டி ஜமீனைப் பிடிப்பதற்கா இவ்வளவு ஆயத்தங்கள்? எவ்வளவு படைகள்! எவ்வளவு குதிரைகள்! எவ்வளவு தளபதிகள்! எவ்வளவு பீரங்கிகள்! எவ்வளவு வெடிகள்! எவ்வளவு குண்டுகள்! எவ்வளவு கருமருந்துகள்! எவ்வளவு ஆலோசனைகள்! எவ்வளவு திகில்கள்!" என இவ்வாறு அவர் தெவ்வளவு தெரியாமல் சிந்தை வியந்து திகைத்துக்கூறினார். வெள்ளையர்களுடைய பெருமைக்கு

எள்ளல் மிக நேர்ந்ததாக அவர் எண்ணி மறுகி இனைந்து மொழிந்தது உன்னி யுணர வந்தது. உரைகள் பெருகி எழுந்தன.

### வேசி உரைத்தது

எந்நாட்டும் ஆங்கிலரோடு எதிர்ப்பார்நேர் இல்லையென்றே
தந்நாட்டம் தடையின்றித் தனிச்செலுத்தித் தழைத்திருந்தோம்;
இந்நாட்டும் எல்லாரும் எதிர்பணிந்தார்; இம்மூலைத்
தென்னாட்டில் உள்ளஒரு சிற்றரசோ செயிர்த்தெதிர்த்தான்.

வெட்டவெளி யாயடர்ந்து விரிந்துள்ள இக்கரிசல்
பொட்டல்நிலத் துள்ளஒரு புல்லியபா ளையப்பட்டில்
கட்டபொம்மன் என்னும்ஒரு கருமனிதன் வெள்ளையரைத்
தட்டழியச் செய்துதான் தனியரசு செய்கின்றான். [2

எவ்வளவு பீரங்கி! எவ்வளவு வெடித்திரள்கள்!
எவ்வளவு படைக்கலன்கள்! எவ்வளவு போர்ப்படைகள்!
எவ்வளவு துரைமார்கள்! எவ்வளவு திகில்! இதற்குத்
தெவ்வளவோ எவ்வளவோ சிற்றளவே எனச்சிரித்தான். [3

தேசமன்னர் பலர்திரண்டு சேர்ந்துபொரும் பெரும்போர்க்கும்
ஓசையுறும் இப்பெரிய படைஎழுச்சி யுரியதன்றே;
ஈசல்எனத் தமிழ்நாட்டில் இங்கிருக்கும் ஒருதெலுங்கப்
பூசைதனைப் பொருதிடவோ இத்தனைபேர் புறப்பட்டோம்! [4

நாடெல்லாம் திறைசெலுத்தி நமைப்பணிய நாமிந்தப்
பாடெல்லாம் படும்படிக்குப் பகைநீட்டிப் படைகூட்டிப்
பீடெல்லாம் மிகப்பெருக்கிப் பெருகினன் இக்கரிசல்
காடொன்றே கைக்கொண்டு கடலெல்லாம் கலக்கின்றான்.

நன்றுநன்றென் றவனுரைத்து நகைத்தபொழுது அயலிருந்த
துன்றுதிறல் பிற்கட்டு சொன்னவனை முகம்நோக்கி
இன்றுநீ மனந்துணிந்திங் கிசைத்தவெலாம் இனந்தெரியாக்
கன்றுரையே அல்லாமல் கருத்துரையன் றெனக்குறித்தான்.

### பிற்கட்டு எதிர் மொழிந்தது

தென்னாட்டின் சிங்கமெனச் சிறந்திருந்து செயக்கொடியை
எந்நாட்டும் இனிதாக எதிர்நாட்டித் திசைகள்தொறும்
முன்னாட்டித் தனதிசையை மூட்டிநிற்கும் இவனுடைய
தன்னாட்டம் தெரியாமல் தனியாட்டம் செய்கின்றாய்! [7

வங்கம்கைப் பிடித்ததுவும் வடதிசையை வென்றதுவும்
அங்கமுதற் கங்கமெலாம் அமைந்துநாம் கொண்டதுவும்

எங்குமே பொருளீட்டி இசைநீட்டி நின்றதுவும்
இங்கிவனால் எல்லாமே இல்லையென இழந்தனமே. [8

வெள்ளையர்கள் எல்லாரும் விரைந்தோட வேரறுத்தே
எள்ளளவும் இந்நாட்டில் இடமில்லை எனத்தெரித்துத்
தள்ளரிய பேரிடரைத் தடையின்றிச் செய்துள்ளே
எள்ளியிளித் திங்குநமக்கு எமனாகி நிற்கின்றான். [9

மூண்டபோர் தொறும்புகுந்து முரணுற்றிப் பகைவென்று
தாண்டரிய பலஅரணும் தான்கொண்ட தறுகணுயர்
ஆண்டகையாம் *காலனுமே அமர்செய்ய் இங்குவந்து
மாண்டொழிந்து போனானே! மற்றினிநான் சொல்வதென்னே?

போரமர்ந்து பாஞ்சைமேல் போனவர்கள் இதுவரையும்
ஊரமர்ந்து மீண்டவர்கள் ஒருவரையும் நான்காணேன்;
நேரமர்ந்திங் கவ்வூரை நினைந்தாலும் நெஞ்சமெலாம்
நீரமர்ந்த உப்பாகி நிலைகுலைந்தால் நிலையென்னும்? [11

முன்னவன்முன் மூண்டுநின்று முடிவரிய போராற்றிப்
பன்னரிய படைதொலைத்துப் படுவஞ்சத் தால்பட்டான்;
பின்னவன்இப் போதெழுந்தப் பெருமபழியை நினைந்தோங்கி
வன்னியென வளர்ந்துள்ளான் வாழ்வுநமக் கெனுமோ? [12

வாய்பேசா ஊமையென வாய்ந்திருக்கும் பாஞ்சைமன்னைப்
போய்வீசி வென்றுவரப் போர்ப்படைகள் மிகத்திரட்டிப்
பேய்பேசி வந்தாலும் பெரெதிரே கேட்டவுடன்
வாய்பேசா தோடுமெனின் வாய்பேசி யாவதென்னே? [13

---

* காலன் என்றது காலின்ஸை. [Collins] 1799 செப்டம்பர் மாதம் 5ந் தேதி பாஞ்சாலங்குறிச்சிப் போரில் இறந்தவன். சிறந்த தளகர்த்தன். முன்னம் பல போர்முனைகளில் வென்று கும்பினியாருக்கு உதவிபுரிந்து வந்தவன். ஈண்டு வந்து பொருது மாண்டு மடிந்து போனான் ஆதலால் அவனை இங்கே எடுத்துக் காட்டினார். காலனுக்கும் காலன் ஆனமையால் காலகாலன் எனக் கட்டபொம்முக்கு ஒரு பட்டப் பெயர் இந் நாட்டில் எங்கணும் இசையோடு வழங்க நேர்ந்தது.

காலனை வென்றவன் கண்ணுதலே---இந்தக்
காலனை வென்றவன் கட்டபொம்மே
மூலபலம்போல வந்த படைஎல்லாம்
மூடுபனிபோல் முடிந்தனவே.

என்னும் நாட்டுப் பாடல் பாஞ்சை மன்னனுடைய வீரப்பிரதாபத்தை விளக்கிக் காட்டி வெற்றிநிலையைத் துலக்கி வருகின்றது.

கல்லெதிர்ந்த தேங்காய்போல் கருதலர்கள் பாஞ்சையின்மேல்
மல்லெதிர்ந்து வந்துவந்து மாண்டார்க ளேயன்றி
வெல்லும்வகை கண்டார்கள் என்னுமந்த வெற்றுரையைச்
சொல்லும்வகை கேட்டறியேன் தொல்லுலகில் இதுவரையும்.

பகைவீரம் உளநிலையைப் பகுத்தெண்ணிப் பாராமல்
தொகைவீரப் படைஅயலே சூழ்ந்திருக்கும் துணிவினால்
நகைவீரம் புரிவதெலாம் நவைமீறும் இப்போரில்
தகைவீரம் பெற்றவரே தனிவீரம் பெற்றவரே. [15

இன்றெதிர்ந்து போகும்நாம் எவ்வாறே இகல்கடந்து
வென்றுவரப் போகின்றோம் விதிநிலையின் விளைவென்னே
என்றுபல நினைந்துநினைந் தினைகின்றேன்; எதிரிநிலை
நன்றறியா திசைப்பதிது ஞாயமல வென்றுரைத்தான். (16)

(வீரபாண்டியம்)

இந்தப் பாசுரங்களைக் கூர்ந்து நோக்கின் வெள்ளைத்துரைகளுடைய உரையாடல்களையும் உள்ளக் குறிப்புகளையும் அல்லல் நிலைகளையும் அச்சங்களையும் ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு எதிரி நிலையை நடுவு நிலைமையோடு நின்று பிற்கட்டு தெளிவாக எடுத்துச் சொல்லவே முன்னம் எள்ளலாக எண்ணி மொழிந்த அவர் உள்ளம் கனன்று “வெள்ளையர்க்கு இவன் வினைப் பூடாகவா நினைந்து நிற்கிறான்!” என்று மறுகி நினைந்துமனம் புழுங்கிக் கோபதாபங்கள் பெருகினர்

பிற்கட்டு நீண்ட காலமாக நெல்லை மண்டலத்திலிருந்து பாஞ்சை மன்னருடைய எல்லா நிலைமைகளையும் நன்கு தெரிந்தவர் ஆதலால் அன்று அவ் வண்ணம் உண்மையை உறுதியாக வுரைத்தார். பகையாளி என்று இகழ்ந்து கூறாமல் உள்ளதை உள்ளபடியே உரைத்தது, அவரது பெருந்தகைமையையும் பரந்த நோக்கத்தையும் சிறந்த நேர்மையையும் வெளிப்படுத்தி நின்றது.

பட்டவனுக்குத் தெரியும் பாடு என்பது பழமொழி ஆதலால் அவர் பலமுறையும் நேரில் கண்டு அனுபவித்துள்ள நிலை தெரிய வந்தது. சுயமரியாதையும் மானவீரமும் மருவியுள்ள ஒரு மரபினரோடு மாறுபட்டு மறுகியிருந்தாலும் உறுதியுண்மைகளை உரிமையோடு நேர்மையா ஆங்கிலேயர் ஈங்கு உரைசெய்துள்ளனர்.

வங்காளம் முதல் எங்கும் எதிர்ப்பின்றித் தங்கள் ஆட்சியுரிமைகளை யாண்டும் தலைமையாக நிலைநாட்டி மாட்சிமையடைந்து வந்த கும்பினியார் இத் தென்னாட்டில் வந்து பாஞ்சை மன்னரிடம் படாதபாடுகள் பட்டுப் படுதுயரடைந்து நெடிய திகில் கொண்டு நிற்றலை உரைகள் தோறும் நாம் கண்டு வருகிறோம். வீரக் காட்சிகள் வியத்தகு நிலைகளாய் விளங்கியுள்ளன.

## துணிவு கொண்டது.

படைகள் திரண்டு வந்திருக்கிற திறங்களை நினைந்து நோக்கி இந்த முறை எப்படியும் பாஞ்சைக் கோட்டையைப் பிடித்து விடலாம், பகையை அடியோடு தொலைத்து விடலாம் என்று வெள்ளையர் எல்லாரும் உள்ளம் துணிந்து ஊக்கி நின்றார். உறுதி நலங்களை ஆக்கி எவ்வழியும் பொரு திறங்களையே நோக்கி வந்தார். அயலிடம் என்ற அச்சம் சிறிது இருந்தாலும் செயல்கள் எல்லாம் உச்ச நிலைகளில் ஓங்கி உரமாய் நீண்டு நின்றன.

பாளையங்கோட்டையிலிருந்து வந்த தலைமைச் சேனாபதி இரண்டு தினங்களாகக் கயத்தாற்றில் தங்கித் தளபதிகளோடு கலந்து பலவகை நிலைகளையும் குறித்து ஆலோசனை செய்தார். இந்த நாட்டின் இயல்புகளையும் எதிரியாய் நேர்ந்துள்ள ஊமைத்துரையின் ஆடலாண்மைகளையும் செல்வாக்குகளையும் குறித்துச் சீமைத் துரைகளுக்கு அவர் தெளிவாக உரைத்தார். பட்டாளங்கள் செல்லுதற்குரிய வழி விவரங்களையும் சொல்லினார். வெளியிலிருந்து தமக்குக் கிடைத்துள்ள உறுதி நலங்களையும், உள்ளே உளவு தெரிந்து வரும் ஆதரவுகளையும் அறிவித்து அடலாற்றி நின்றார்.

எல்லா ஆயத்தங்களையும் நன்கு கவனித்துப் படை எழுச்சி செய்ய வேண்டிய வேளையை எதிர்நோக்கி வழி இடையே அபாயங்கள் யாதும் நேராதபடி பல வகையான உபாயங்களையும் உன்னி ஓர்ந்து முன்னதாகவே நன்னயமா நாடிச்செய்தார்.

## வழி நாடியது.

காரியங்களை எவ்வழியும் கருத்தோடு ஆராய்ந்து வந்தார் ஆதலால் படை எழுச்சி செய்யு முன்பே பகை வகைகளின் தடைகளையெல்லாம் கருதி நீக்கி வழியிடையே இடையூறுகள் யாதும் ஏறாதவாறு சேனைத் தலைவர் சீரோடு எதிர் நோக்கியாற்றினர்.

போருக்கு அனுகூலமாக முதலிலும் இடை யிடையேயும் எப்பொழுதும் கைவேலைகளைச் செய்து உதவிபுரிந்து வருதற்குத் தனியே ஒரு படையைச் சேர்த்திருந்தார். அதற்குப் பயனீயர்ப் பட்டாளம் என்று பெயர். (A detachment of pioneers) என இந்தப் படை வகைகளுள் அது சுட்டப்பட்டுள்ளது. பயனீயர் (Pioneer) என்னும் ஆங்கில வார்த்தைக்குப் பாங்கோடு இராணுவ வேலைகளை நன்கு செய்வோர் என்பது பொருள்.

படைகள் செல்லுகிற வழிகளுள்ள தடைகளை நீக்கி முன்னதாக ஒழுங்கு செய்தல், கூடாரங்கள் அமைத்தல், பீரங்கிகளை நாட்டுதற்கு மேடுகள் சமைத்தல், பள்ளங்கள் தோண்டுதல், இரண களத்தில் விழுந்த பிணங்களை எடுத்தல் முதலிய தொழில்களை எவ்வழியும் விரைந்து செய்யவுரிய உழைப்புப் படையைத் தலைமையாக இதில் இணைத்திருந்தார் ஆதலால் அந்தப் பட்டாளம் எந்த வேலையும் கட்டாக மூண்டு வேலை செய்து வந்தது.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை மேல் படை எடுத்து முன்னம் சென்ற வழியே இப்பொழுது செல்லலாகாது என்று முடிவு செய்தார். அப்பொழுது இடை வழியில் *குலைய நல்லூர் அருகே கொடிய கொலைகள் நேர்ந்தது ஆதலால் அதனை நினைந்து தானைத் தலைவர் இச் சமையம் மிக்க எச்சரிக்கையுடன் சேனைகளை நடத்தத் தீர்மானித்துத் தீரமான ஆலோசனைகளை வாரம் முழுவதும் யோசித்து வந்தார். சரியான வழிகளைக் குறியாகக் கூர்ந்து ஓர்ந்தார். நடைபாதைகளை நன்கு கவனித்துத் தடைகளையெல்லாம் சிந்தித்துப் படைகளைத் திடமா நடத்த எண்ணினர்.

"இடங்காலம் இனிதறிந்தான்; எதிரிநிலை
எதிர் தெரிந்தான்; என்றும் எங்கும்
திடங்காலப் பொருகின்ற சேனைகளை
மிகத்தெளிந்து சேர்த்து வந்தான்;
அடங்காலும் அமர்நிலையை அனுதினமும்
நனி ஆய்ந்தான்; அயில்வா ளாதி
விடங்காலும் வெம்படையை விரிவாக
அடைந்து கொண்டான் வீறு கொண்டான்."

என்றமையால் பாஞ்சைமேல் போர் செய்ய மூண்டுநின்ற

---

* இந்நூல் 80வதுபக்கம் பார்க்க.

சேனைநாதனுடைய சிந்தனைகளையும் திறல்களையும் தெரிந்துகொள் ளலாம். கொடிய அபாயங்களைக் கடந்து புகுந்து அரிய வெற்றி அடைந்துகொள்ள நெடிய உபாயங்களை யாண்டும் நினைந்து புரிந்தார். கூரிய ஆலோசனைகள் யாவும் வீறோடு விரிந்து வந்தன.

நினைந்து நின்றது.

இந்த முறை எந்த வகையிலும் எதிரியை வென்று கைக் கொண்டு மீண்டுவர வேண்டுமென்று மூண்டு நின்றார் ஆதலால் அந்தச் சீமைத்துரை ஊமைத்துரையின் உறுதிநிலைகளையெல்லாம் கருதி ஓர்ந்து பெரிய துணைவலிகளைத் தொகுத்துக் கொடிய போர்க் கருவிகளைப் பெருக்கி முடிவுகளை முன்னறிந்து முடித்துக் குறிப்போடு காலத்தைக் கண்ணோக்கி நின்றார். தான் பாளை யங்கோட்டையிலிருந்து புறப்பட்டுக் கயத்தாற்றுக்கு வருதற்கு மூன்று தினங்களுக்கு முன்னதாகவே பகைவன் நிற்கும் நிலை மையைத் தொகையாய் அறிந்து வரும்படி பாஞ்சைக்கு ஒற்றர் இருவரைக் கரவாக அனுப்பியிருந்தார் ஆதலால் அவரது வரவை எதிர்பார்த்து உறவினர்களோடு உசாவியிருந்தார். போன அவர் வந்து கோட்டையிருக்கும் திறலைக் குறித்துச் சொன்னார். துரை கூர்ந்து கேட்டு ஓர்ந்து கொண்டார். சேர்ந்துள்ள சேனைத்திரள் கள் அவருக்கு உறுதியும் ஊக்கமும் உதவி நின்றன. எல்லா நிலைகளையும் எதிர்நோக்கிக் காலம் குறித்துக் காத்து ஞாலம் கைக்கொள்ள நயந்து சாலவும் சூழ்ந்து சதுருடன் ஆராய்ந்தார்.

தளபதிகளோடு சூழ்ந்தது.

தனது ஆங்கிலத் தளபதிகள் எல்லாரையும் தலைமைச் சேனா திபதி தன்பால் அழைத்து வைத்து எதிரியினுடைய நிலைமை தலை மைகளைத் தெளிவாக விளக்கி உரைத்தார். மார்ச்சு மாதம் 29-ந் தேதி (29—3—1801) கயத்தாற்றின் மேல்புறம் அமைந்திருந்த பாசறையில் அமர்ந்து பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை வென்று கைக்கொள்ளும் விதங்களை நன்கு ஆய்ந்து முடிவு செய்து யாவரும் பொங்கிய யோசனைகளோடு தங்கியிருந்தார்.

தலைமை அதிபதி நிலைமைகளை நெடிது நோக்கி நின்றார்.

# பதினெட்டாவது அதிகாரம்

## சேனை எழுந்தது



அரிய பல கருவிகள் அமைந்துள்ளமையை நினைந்து பெரிய மகிழ்ச்சி யடைந்திருந்த சேனாதிபதி உரிய பொழுது வரவும் பாஞ்சைமேல் படையெழுச்சி செய்தார். மார்ச்சு மாதம் 30ந் தேதி விடிய ஆறு நாழிகை யளவில் சேனைகளை நடத்தும்படி தளபதிகளுக்கு உத்தரவு கொடுத்தார். தானைகள் எழுந்தன. பீரங்கிகள் தாங்கிய வண்டிகள் முன்னே நடந்தன. குதிரைப் பட்டாளங்களும் காலாட்படைகளும் முறையே அணிவகுத்துச் சென்றன. சிறந்த குதிரைகளில் ஏறி வெள்ளைத் துரைகள் வீறு கொண்டெழுந்தனர். கயத்தாற்றிலிருந்து நேரே கிழக்குமுகமாய் நடந்து கடம்பூருக்குத் தென் புறங்கூடிக் இடங்கொண்டு வந்தனர். மேஜர் காலின் மெக்காலே துரை (Major Colin Macaulay, Commanding officer) தமது உபதளபதிகள் சூழ உயர்ந்த குதிரைமேல் இவர்ந்து வந்தார். பொழுதுவிடிந்து இரண்டு நாழிகையளவில் *ஒட்டாரம்பட்டி என்னும் ஊர் அயலே தங்கிக் காலை உண்டி கொண்டனர். பின்பு களித்து எழுந்தனர். படைகள் அடைவாய் நடைபுரிந்து அடர்ந்து தொடர்ந்து படர்ந்து வந்தன.

### இடையே எதிர்ந்தது

கும்பினிப் படை வரவை நாளும் பாஞ்சை வீரர் எதிர்பார்த்து நின்றார். கயத்தாற்றில் கூடியிருக்கிற பட்டாளங்கள் எப்பொழுது எந்த வழியாக வரும் என்று துப்பறிந்து வர ஒரு வாரத்துக்கு முன்னதாகவே இருவரை ஊமைத்துரை ஒருவரும் அறியாவகை மருவலரிடம் உய்த்திருந்தார். அரசமுத்து, வீர மணி என்னும் அந்த ஒற்றர் இருவரும் கரவாய் வந்து கயத்தாறு புகுந்தார். புல்லுக் கட்டுகள் விற்பவர் போலப் பாவனை காட்டிப் பட்டாளங்கள் தங்கியுள்ள பாடியுள் நுழைந்தார். நல்ல பச்சைப் பசும்புல்லை மாலையில் நாள்தோறும் குதிரைகளுக்குக் கொடுத்து வந்தனர் ஆகலால் அவரை யாவரும் பிரியமாகப் பேணி வந்தார்.

---

* இவ்வூர் கடம்பூருக்குக் கிழக்கே மூன்று மைல் தூரத்திலுள்ளது

கருமமே கண்ணாய் விரகோடு நாடித் துரைகள் கருதியுள்ள உறுதி நிலைகளையும் வருகிற பொழுதையும் வழி விவரங்களையும் முழுவதும் தெளிவாகத் தெரிந்து கொண்டமையால் முதல் நாள் இரவே வெளியேறி அவ் ஒற்றர் பாஞ்சை வந்து சேர்ந்தார். பற்றலர் வரநேர்ந்துள்ள வகையைக் கொற்றவனிடம் முற்றவும் உரைத்தார். அவ் வெற்றி வீரர் விரைந்து வேலை செய்தார். ஏறி வருகிற படைகளை இடைவழியில் வைத்தே அடியோடு அழிவு செய்ய வேண்டும் என்று முடிவு செய்து குறிகாரர்களிடம் குறித்தார். போருக்கு வீங்கி ஏங்கியுள்ள அவ் வீரர்கள் யாருக்கும் கிடையாத பாக்கியம் தமக்குக் கிடைத்ததென்று ஆர்வம் மீதூர்ந்து எழுந்தார். எழுநூறு போர் வீரர்கள் ஆயுத பாணிகளாய் அடர்ந்து படர்ந்து இரவு நடு நிசியில் இடைவழியில் வந்து பதிவிருந்தார். படைகள் வருவதை ஆவலோடு எதிர்பார்த்திருந்தும் அந்த இரவில் வந்து வாய்க்கவில்லை. மறுநாள் காலையில் கண்ணேக்கியும் காணமையால் கண்ணயர்ந்து கரந்திருந்தனர். முற்பகல் கழிந்தது; பிற்பகல் வந்தது; வரவே படைகள் வருவது தெரிந்தது. குதிரைக்குளம் என்னும் ஊருக்கு வடக்கே வழி அயலே ஒளி வைத்துப் பதிவிருந்த இவர் அந்தச் சேனைகள் அயல் வரவே மான வீரங்களுடன் மண்டியெழுந்தார். புதர்களிலிருந்து வெளியேறுகிற புலியேறுகளைப் போல் கலித்தெழுந்து ஒலித்துவந்து இவ்வீரர்கள் வளையவே கும்பினிப்படை திகைத்து நின்றது. சேனைத்தலைவர் தளபதிகளை நோக்கிப் பீரங்கிகளையும் கை வெடிகளையும் தொடுத்துச் சுடும்படி கடுத்துக் கூறினர். குதிரைப்படைகளையும் நேரே வேகமாய்ச் செலுத்தி வெட்டிவீழ்த்து மாறு கட்டளையிட்டார். யாவரும் வீறுடன் விரைந்தனர்.

### கடும் போர் மூண்டது.

இருதிறப் படைகளும் கைகலந்து பொருதிறலோடுமூண்டு முனைந்து யாண்டும் மூர்க்கமாய் மல்லாடின. கும்பினிச் சிப்பாய்கள் குண்டுமாரிகள் பொழிந்தனர். பாஞ்சை வீரர் வேல் வாள் வல்லயங்களை நாலா பக்கங்களிலும் விரைந்து வீசி யாண்டும் நாசப்படுத்தினர். நேருக்கு நேர் மூண்டு எதிர்த்தவர் போருக்கு மேல் நில்லாமல் பாருக்குமேல் வீழ்ந்து மாண்டனர். தீப்பொறிகளைக் கக்கி வந்த குண்டுகளை அஞ்சாமல் நெஞ்சுகளில்

ஏற்று இவர் அஞ்சாமல் செத்தனர். வேல் வாள் வீச்சுகளால் காலும் கையும் தலைகளும் இழந்து அவர் மேலும் கீழுமாய்ப் புரண்டு கிடந்தனர். சிப்பாய்களின் திரள்களிலிருந்து துப்பாக்கிச் சூடுகள் எப்பக்கங்களிலும் கிளர்ந்து புகைந்து வளர்ந்து எழுந்தன. உயர்ந்த செம்போர்க் குதிரையில் அமர்ந்துகொண்டு யாண்டும் படைகளை ஊக்கி ஏவி கிராண்டு துரை ஆர்த்துவந்தார். ஆதிராமு என்னும் சிறந்த போர்வீரன் விரைந்துபாய்ந்து அவரை வேலால் குத்தி வீழ்த்தினான். குதிரைப் பட்டாளங்களுக்கெல்லாம் உயர்ந்த படைத் தலைவராயிருந்த அவர் மாண்டு கீழே விழவே அந்தக் குதிரைமேல் அவ் வீரன் பாய்ந்து ஏறிப் பரியைக் கடாவி அரியேறுபோல் அமராடல் புரிந்தான். தன்னுடைய சொந்தத் தலைவனை இழந்து விட்டுப் புதிதாய் வந்த தலைவனைத் தாங்கிக் கொண்டு அந்தக் குதிரை யாதொரு இடக்கும் செய்யாமல் எந்தவழியும் பாய்ந்து எதிரிக்கு இதம் தோய்ந்து வந்தது. வீரவெற்றியோடு ஏறினவன் குதிரை யேற்றத்திலும் தீரன் ஆதலால் அவனது காலிடுக்கையும் மேலெடுப்பையும் கைக் குறிப்பையும் கடிவாள அசைப்பையும் கருதி யுணர்ந்து உரிமையாய் அடங்கி அப் பரி எப்பரிசிலும் எங்கும் உறுதி புரிந்து உலாவியது.

சுடுவெடிகளை எதிரிகள் கடுவேகமாகச் சுட்டனர் ஆதலால் இவர் நெடு நேரம் போர் செய்ய முடியாமல் படுதுயரங்களையடைந்தனர். அடைந்தாலும் யாதும் தளராமல் அடலாண்மைகள் புரிந்தனர். படு கொலைகள் விழுந்தன. அவர் நடந்து கொண்டே சுட்டனர்; இவர் அடர்ந்து தொடர்ந்து கொண்டே வெட்டினர். ஓட்டி வருகிற இவரை ஒதுக்கி ஒழிக்க மூண்டு அவர் குதிரைப் பட்டாளங்களைக் கட்டாகக் கடிது செலுத்தினர்.

பல போர்களிலும் பயிற்சி பெற்ற நெடிய குதிரைகள் கடிய வேகங்களாய்க் கதித்துப் பாய்ந்தன. அவை பாய்ந்து வருங்கால் இவர் காய்ந்து எதிர் நின்று வேல்களையும் வல்லயங்களையும் நேரே விரைந்து நீட்டி வெகுண்டு குத்தினர். நீண்ட வேல்களை நிலையாக ஓச்சி ஆண்டகைமையுடன் அன்று இவர் ஆடிய போரில் பதினாறு குதிரைகள் மாண்டு விழுந்தன. குடல் சரிந்தும் உடல் சிதைந்தும் உதிரம் பொழிந்தும் நெஞ்சம் பிளந்தும் நெடுஞ் சாக்காடாய் மடிந்து அவை நிலைகுலைந்து கிடந்தன.

## வீ ர ரா மு லு

குதிரைப் படைகளோடு இவர் போராடி வருங்கால் வீர ராமுலு என்னும் பேருடைய போர் வீரன் ஒரு பெரிய குதிரை மேல் ஏறிவந்த வெள்ளைத்துரையை வேலால் குத்தி வீழ்த்தி மேலேறிப் போனான். தன் படைகளை எவ்வழியும் ஊக்கி ஏவி உருத்து வந்த அந்தத் தளபதியை ஒரு நொடியில் இவன் உருட்டிப்போனது விசித்திர வேலையாயிருந்தது. வாள் வேல் முதலிய கை ஆயுதங்களைக் கொண்டு உள்ளத் துணிவோடு இவர் உருத்து அமராடினார். அவர் பல வகையான கொலைக் கருவிகளைக் கொண்டு அதிக தந்திரமாய்ப் பதிவு கண்டு போராடினார். எவ்வழியும் அபாயங்களைக் கடந்துபோகும் உபாயங்களையே அவர் நாடிச் சென்றார். இவர் யாதொரு உபாயமும் கருதாமல் வீரவெறியராய் வெகுண்டு பொருதார். சுடுகின்ற வெடிகளையும் குண்டுகளையும் கண்டு அஞ்சி ஒதுங்காமல் நெஞ்சு துணிந்து நேரே பாய்ந்து சீறிப் போராடினமையால் இவருள் அன்று தொண்ணூற்றாறு பேர் ஆண்டு மாண்டு விழுந்தனர். நூற்றிருபத்து நான்கு பேர் படுகாயங்கள் அடைந்தனர். இடையே சிலர் செத்தனர்.

கும்பினிப் படையுள் இரண்டு தளபதிகள், மூன்று ஜமேதார்கள், ஒரு அவுல்தார், அறுபத்துநான்கு சிப்பாய்கள் இறந்துபட்டனர். பதினாறு குதிரைகள் மடிந்து மாண்டன. பலகுதிரைகள் படு காயங்கள் அடைந்தன. அடலோடு அமராடியும் அடு துயரங்களும் படு கொலைகளும் அழிவுகளும் நெடிது நேர்ந்தன.

குண்டுகளை ஓயாமல் பொழிந்து கொண்டிருந்ததினாலேதான் அங்கே அவர் பலர் தப்பிப் பிழைத்தார். பீரங்கிகளும் வெடிகளும் கடுமையாக வேலை செய்யாதிருந்தால் அந்தப் படை முழுவதும் அன்று இவர் கையால் அடியோடு அழிந்து போயிருக்கும்.

## மீ ண் ட து

தீ வெடிகளின் முன் நெடிது நேரம் எதிர்நிற்க முடியாமையால் மாண்டவர்களைக் கைவிட்டு இவர் மீண்டுபோக நேர்ந்தார். கொடிய தீக் குண்டுகள் கும்பினியாரிடம் நிறைய உள்ளன என்று தெரிந்தும் இவர் ஒரு சிறிதும் அஞ்சாமல் உயிரைத் திரணமாக எண்ணி உறுதியோடு போராடி வருவது கருதி யுணர வுரியது. மாற்றாரோடு மாறேற்றுப் பொருவதில் ஏற்றம் மிகப்பெற்

றுள்ளனர். தங்கள் பால் இயல்பாய் அமைந்துள்ள வீரத் திற லோடு கொஞ்சம் தந்திரங்களும் சாதுரியங்களும் கலந்திருந்தால் இறந்துபடுதல் இவர்பக்கம் குறைந்து போயிருக்கும். உபாய மான சாகசங்கள் இல்லாமையால் கொடிய அபாயங்களில் அகப்பட்டு அடிக்கடி இவர் அதிகமாய்ச் சாக நேர்கின்றனர். எவ்வாறு யார் செத்தாலும் அந்தச் சாதலைக் குறித்து இவர் நோதலடைந்ததாகத் தெரியவில்லை. பிறந்த பொழுதே இறந்து படுவதும் உடன் பிறந்து வந்திருத்தலால் அந்த இறப்பைக் குறி த்து எண்ணிக் கவல்வது இழிந்த கோழைச் செயல் என்று இவர் இகழ்ந்து சொல்வது வழக்கம். இவர் படை திரண்டுவரும் பொ ழுது பாடி வருகிற வீரப்பாட்டுகள் வியப்புகளை யூட்டியுள்ளன. நாட்டு மக்கள் கேட்டு மகிழத்தக்கன. சில அயலே வருகின்றன.

மூண்ட பகைவரை வென்றுகொண்டால் இங்கே
ஆண்டவ ராகநாம் வாழ்ந்திருப்போம்;
மாண்டவர் கையால் மடிந்துபட்டால் அங்கே
வைகுண்டம் சேர்ந்து மகிழ்ந்திடுவோம். [1

இன்றைக் கிருந்தாலும் நாளைக் கிருந்தாலும்
என்றைக்கு மேஒரு நாள் இறப்போம்;
அன்றைக்குச் சாவதை இன்றைக்குப் போரினில்
ஆக்கி யமர்வதே பாக்கியமாம். [2

பாயும் படுக்கையு மாய்க் கிடந்து பல
நோயும் பிடுங்க மடிவதிலும்
காயும் பகைவரைக் காய்ந்து பொருதுநாம்
காயம் விடுவதே மேலாகும். [3

தொண்டைக் குழியிலே சீவன் கிடந்தாலும்
தோக்கல வார்குலம் அஞ்சாதென்று
பண்டைப் பழமொழி கூறி வருவதைப்
பாரினில் யாரும் அறிந்திருப்பார். [4

வீர மரபில் பிறந்துள்ள பாஞ்சையர்
வெற்றி நிலையை விழைவ தல்லால்
வாரமாய்க் கும்பினி யார்க்குப் பணிவரோ
வையகம் தன்னில் வழுவாக. [5

மானம் அழிந்திந்த மண்ணினில் வாழ்வதை
ஈனமென்றே பெரியோர் இசைப்பார்;

தானம் தவறாமல் நின்று பகைவென்று
வானம் புரந்துநாம் வாழ்ந்திடுவோம். [6

கண்ணு முழியிலே சீவன் இருந்தாலும்
கம்பளத் தார்நிலை குன்றார் என்று
மண்ணுல கெங்கும் புகழ்ந்திட வாழ்ந்தநாம்
மாறாகி வாழ்வது மாண்பாமோ? [7

குண்டுகள் உண்டுஎன உள்ளம் களித்தெழு
கும்பினிக் கும்பல்கொண் டாட்டம்எல்லாம்
பண்டு லங்காபுரி இராவணன் போல்பழி
பட்டே யழிந்திடும் பாஞ்சை முன்னே. [8

வீராதி வீரன் ரணவீரன் கட்ட
பொம்மு படைவீரர் மூண்டெழுந்தால்
யாரே எதிர்நின்று போராட வல்லவர்
ஆளிகள் நேர்வரும் ஆடுகளே. [9

மண்ணாசை மண்டியே வெள்ளையர் நம்மோடு
மாறாக வந்து மலைய நேர்ந்தார்
எண்ணமை யெல்லாம் இழந்தவர் மண்ணாக
ஏறியே வீறுடன் வென்றுகொள்வோம். [10

இத்தகைய பாடல்களைப் பாடி வருவதால் இவருடைய உள்ளங்களில் உறுதியும் ஊக்கமும் பெருகி வந்துள்ளன. ஆதி முதல் நீதியாய் இந்நாட்டில் அரசு புரிந்து வந்துள்ள தங்கள் முடியாட்சிக்குக் கும்பினியார் இடையே கொடிய கேடாய் வந்து மூண்டுள்ளார் என்று இவர் கொதித்திருப்பது உரைகள் தோறும் கதித்து வருகிறது. வீரசுதந்திரமாய் என்றும் சீருடன் வாழ்ந்து வந்தவர், வெள்ளையர் வந்து இந்நாட்டில் குடியேறிய பின் தங்கள் சீரும் சிறப்பும் அடியோடு மாறியவென உள்ளம் கவன்று உருத்து மூண்டு யாண்டும் கடுத்து நீண்டுள்ளார்.

### பசுவந்தனை சேர்ந்தது

எதிரிகளுடைய படை வருவதை ஒற்றியறிந்து இடைவழியில் எதிர்ந்து அடுசமராடிப் படுகளப்படுத்தி இவர் மீண்டு பாஞ்சை வந்து சேர்ந்தார். அவர் மாண்டு போனவர்களைப் புதைத்து விட்டுப் படைகளைத் திருப்பி நடத்திப் பசுவந்தனைக்கு வந்தார். பசுவந்தனை என்னும் இவ்வூர் பாஞ்சாலங்குறிச்சிக்கு

வடமேற்கே ஒன்பது கல் தூரத்தில் உள்ளது. மாலையில் அவ்வூரை அடைந்ததும் இரவு முழுவதும் பட்டாளங்கள் அங்கேயே தங்கியிருக்கும்படி சேனாதிபதி கட்டளையிட்டார். எல்லா வசதிகளையும் செய்து கொண்டு படைகள் ஆண்டு அமர்ந்திருந்தன.

### எட்டப்ப நாயக்கர் இணைந்தது.

கும்பினித் தளபதி முன்பு தமக்குக் கட்டளையிட்டிருந்தபடியே எட்டப்ப நாயக்கர் படைகளோடு புறப்பட்டு வந்தார். அவருடைய படையில் 2300 போர் வீரர்கள் அடங்கி யிருந்தனர். அந்தச் சேனையுடன் பாஞ்சையை நோக்கி எழுந்தவர் இடையே கும்பினியார் பசுவந்தனையில் வந்து தங்கியிருப்பதை அறிந்ததும் அங்கே வந்து சேர்ந்தார். மார்ச்சு மாதம் முப்பதாந்தேதி (30—3—1801) மாலையில் சேனாதிபதியைக் கண்டார். இடைவழியில் எதிர்ந்து பாஞ்சைப் படைகள் செய்து போன இடையூறுகளையெல்லாம் துரையிடம் சொல்லாமலே அவர் தெரிந்து கொண்டார். உள்ளம் பரிந்தார். வெள்ளைத் துரைகளுக்கு நேர்ந்த அல்லல்களுக்கு இரங்கினார். "கொஞ்சம் முந்தி வராமல் பிந்தி நின்றது பிழையாய் நேர்ந்தது" என்று தளபதிகள் உளமகிழும்படி அவர் முகமனுரை கூறினார். கும்பினியாருடைய படை வலிகளின் ஆதரவை நம்பித் துணிந்து வந்திருந்தாலும் பாஞ்சையை நினைந்த போதெல்லாம் அவர் நெஞ்சில் நெடுந்திகில்கள் நிறைந்து நின்றன. அந்த நிலையில் இருந்தும் தம்முடைய வல்லமையுதவிகளைக் குறித்து வெள்ளைத் துரைகள் உள்ளம் உவந்து கொள்ளும்படி இந்தவாறு பேச நேர்ந்தார். அவ்வளவோடு அவர் அமையவில்லை; எவ்வளவு கடுப்புகளை இவர் மேல் ஏற்ற வேண்டுமோ அவ்வளவும் செவ்வையா ஏற்றினார்.

### கோள் மூட்டியது.

"தேசம் எங்கும் அதிகார வுரிமைகளைப் பெற்று ஆட்சி புரிந்து வருகிற மாட்சிமை தங்கிய கும்பினியாரை யாதும் மதியாமல் இந்த ஊமையன் எவ்வளவு வம்புகள் பண்ணி வருகிறான்! ஜெயிலை உடைத்து வந்தான்; கோட்டை கட்டிக் கொண்டான்; ஆட்களைக் கூட்டமாகத் திரட்டினான்; கும்பினியிடங்களிலெல்லாம் புகுந்து கொள்ளையடித்து வெடிகளையும் பீரங்கிகளையும் அள்ளியடைந்தான்; வெள்ளையதிபதிகளை எவ்வழியும் எள்

ளலாக இகழ்ந்துள்ளான்; அல்லல் பல புரிகிறான்; இடை வழியில் தன்படைகளை ஏவி இன்று படுகொலைகள் செய்திருக்கிறான்; யாண்டும் அடுதுயரங்களையே ஆற்றிக் கெடு நிலைகளை விளைக்கிறான்; இவ்வாறு எங்கும் மூண்டு அடித்தால் கும்பினியார் பயந்து மீண்டு போய் விடுவார் என்றே மூர்க்கமாய் அவன் முனைந்து வேலை செய்து வருகிறான்; எங்களையே இவ்வாறு எள்ளி இகழ்ந்து வெங்கொலைகளை விளைத்து வருகிற அவன் எங்களைத் தனியேவிட்டால் என்னபாடு படுத்துவான்? அவனை அடியோடு தொலைத்தொழித்தாலன்றிக் கும்பினியாரை இந்நாட்டில் யாண்டும் அவன் குடியிருக்க ஒட்டான்; காரியத்தைக் கண்ணூன்றி வீரியமாய் விரைந்து முடிக்க வேண்டும்" என இங்ஙனம் அவர் தொடர்ந்து மூட்டினார். தளபதிகளும் மூண்டுநின்றார் உளவுகளை அறிந்து சொல்ல நல்ல உதவி கிடைத்துள்ளது என்று வெள்ளையர் உள்ளம் உவந்து கொண்டாலும் முழுதும் நம்பாமல் கள்ளமாகவே கருதிவந்தார். காரிய அளவில் அவரைக் கையணைத்துநின்றார்.

## இரவு நிலை.

உள்நாட்டுத் துப்பும் அயல்நாட்டு வெப்பும் மூண்டு வேலை செய்து வருகின்றன. அந்திப் பொழுது கழிந்தது; சிந்திப்புகள் மிகுந்தன. அன்று பகலில் போராடிய இடம் கரிசல் காடு. பங்குனி மாதம் ஆதலால் பருத்திச்செடிகள் நன்கு வளர்ந்திருந்தன. முதல் நாள் இரவு கொஞ்சம் மழையும் பெய்திருந்தது ஆதலால் அந்தச் செடிகளுக்கு இடையே சேறுகளில் மல்லாடி யிழிந்து வெள்ளைக்காரர் எல்லாரும் அல்லல் பல அடைந்து நொந்தார். அந்நோதலோடு அங்கே நேர்ந்த சாதல்களையும் நினைந்து வேதனை மிக அடைந்து இரவு கழிவதை எச்சரிக்கையோடு கருதிக் காத்து உறுதி சூழ்ந்து எதிரி நிலைகளை எண்ணி இனைந்திருந்தார்.

தளபதிகள் யாவரும் தங்கள் கூடாரங்களில் அமர்ந்து உணவுகள் அருந்தினர். பட்டாளங்களும் கட்டாக வுண்டு மிக்க பாதுகாப்புடன் அமர்ந்திருந்தன. கட்டப்ப நாயக்கருடைய படைகளும் அயலே ஒட்டிநின்று எதிரிகளால் யாதொரு ஊறும் நேராதபடி காவல் புரிந்து வந்தன. பாஞ்சைக் கோட்டை மேல் போராட மூண்டு வந்த பட்டாளங்கள் இடையே அங்ஙனம் தங்கியிருந்தன. பசுவந்தனை அன்று பெரிய பாசறையாயிருந்தது.

அந்த இருப்பில் தலைமைச் சேனாதிபதி உபதளபதிகளோடு கலந்து பலவும் ஆராய்ந்தார். மறுநாள் காலையில் செய்ய வேண்டிய வேலைகளையும் காரிய முடிவுகளையும் கருதி ஆலோசித்துக் கருமங்களை மருமங்களாக உறுதி செய்து கொண்டு விடிவை நோக்கி வினைகளை நினைந்து நினைந்து அனைவரும் விழி துயின்றிருந்தார்.

விடியுமுன் எழுந்தது.

கரும ஆலோசனைகளைக் கருதி ஆராய்ந்து உறுதியான முடிவுகளோடு படுத்திருந்த சேனாதிபதி விடிய ஏழு நாழிகைக்கு முன்னதாகவே எழுந்து கொண்டார். உடனே பட்டாளங்களை எழுப்பி நடத்தும்படி தளபதிகளுக்குக் கட்டளையிட்டார். படைகள் எழுந்தன. அணி செய்து நடந்தன. தென் கிழக்குத் திசை நோக்கிக் கதிகொண்டு விதிமுறையே விரைந்து நடந்து வந்தன. சூரியன் உதயமாகவும் பாஞ்சைக் கோட்டையை அடைந்தன.

கருதி நின்றது.

பரிதி வானவன் கீழ்த் திசையில் எழு முன்னே படைகள் விரைந்து வந்து சேர்ந்தன. இளவெயில் வெளியே ஒளி வீசவும் கும்பினித் தளபதிகள் பாஞ்சாலங்குறிச்சி நகரை நேரே ஆவலோடு பார்த்தார். தாம் எதிர் பார்த்து வந்ததற்கு யாவும் மாறாயிருந்தன. புறத்தே சூழ்ந்து வளைந்துள்ள கோட்டையை நோக்கியதும் புதிதாய் வந்துள்ள வெள்ளைத் துரைகளுக்குத் தம் உள்ளங்களில் பெரிய திகைப்புகள் உளவாயின. நகைப்புகளும் வரலாயின. யாரும் அஞ்சி அயரத் தக்க வகையில் ஊமைத்துரை பேரைச் சீமைத் துரைகள் கேட்டிருந்தார் ஆதலால் கோட்டையை அரிய பெரிய நிலையில் கருதி வந்தார். "உயர்ந்த கல்கோட்டையாய் அகழ் முதலியன அமைந்து நெடிது நீண்டு கொடிகள் நிவந்து அதிக ஆடம்பரங்களுடன் யாண்டும் போர்க் கருவிகள் நிறைந்து பேராரவாரமாய்ச் சீரிய நிலையில் வீரியம் பெருகி வீறு கொண்டு நகரின் அரண் சிறந்து நிற்கும்" என அவர் எண்ணி வந்தார் ஆதலால் அதற்கு மாறாக மண் மதிலைக் கண்டதும் "என்ன இது!" என அதிசயமடைந்து அனைவரும் ஆவலுடன் பார்த்துத் திகைத்து நின்றார். வியப்பும் நகைப்பும் விரிந்து நின்றன.

உறுதி நிலை யுரைத்தது.

அந்த மண் கோட்டையைக் கண் கொட்டாமல் நோக்கிய

கலித்து நின்ற படைத் தலைவர்களைத் தலைமைச் சேனாதிபதி விளித்து வைத்து அதன் நிலைமைகளை யெல்லாம் தெளிவாக விளக்கினார். உளவறியாமல் உளம் திகைக்கிறார் என அதன் அளவறிய விளைவுகளை யெல்லாம் விளக்கி வீரத்திறலை நேரே உணர்த்தினார்.

நெடிய கல் கோட்டைகளையும் அரிய பெரிய அரண்களையும் எளிதே பிடித்து யாண்டும் அசகாய சூரர்கள் என்று பேர் பெற்று நின்ற போர் வீரர்கள் எல்லாம் ஈண்டு வந்து மாண்டு மடிந்து போயிருக்கிறார்கள் என்னும் உண்மையைக் கேட்டதும் அந்த வெள்ளையர் வியப்பும் திகிலும் அடைந்து வெருண்டு நின்றனர். மேலே விளைவதை நினைந்து மருண்டு வெருவி மறுகினர்.

பாசறை அமைந்தது.

நேரே நெருங்காமல் கோட்டைக்கு வடமேற்கே ஒருமைல் தூரத்தில் படைகள் தங்கும்படி தளபதி குறித்தார். ஆத்தலோடை என்னும் இடத்தில் பாசறை அமைந்தது. கூடாரங்கள் குவிந்தன; பட்டாளங்கள் அமர்ந்தன. யுத்த தளவாடங்கள் எல்லாம் ஒருங்கே நிறைந்தன. யாவும் யுத்தி புத்திகளோடு உறைந்தன. எதிராளியின் வீர தீரங்களை இடங்கள்தோறும் கண்டு கொண்டமையால் அதிக எச்சரிக்கையாய் யாவரும் உறுதி கூர்ந்து பொருதிறல் ஓர்ந்து பெருவலி தேர்ந்து நின்றனர்.

முதல் நாள் இரவு பசுவந்தனையில் தங்கியிருந்து மறுநாள் மார்ச்சு மாதம் முப்பத்தோராம் தேதி (31—3—1801) மூண்டு எழுந்து காலையில்வந்து பாஞ்சாலங்குறிச்சியை அடைந்த சேனை தளங்கள் ஆக வேண்டிய ஆயத்தங்களை விரைந்து செய்தன.

கும்பினிப்படைகள் அன்று அங்கே வந்து சேர்ந்தநிலையைக் குறித்து ஜெனரல் வெல்ஷ்துரை எழுதியிருப்பது இங்கே அறிய வுரியது. அந்தக் குறிப்பு அரிய பல உறுதி நிலைகளைத் தெளிவா உணர்த்தியுளது. அயலே வருவதை ஆய்ந்து காணுக.

"The next day, the 31st of March, we advanced towards the Gibraltar of these insurgents." [M. R.]

"மறுநாள் மார்ச்சு மாதம் 31ந் தேதி பகைவருடைய கோட்டைக்கு வந்து சேர்ந்தோம்" என இங்ஙனம் குறித்திருக்கிறார்.

## ஜிப்ரால்டர்

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை இங்கே ஜிப்ரால்டர் என்று குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. ஜிப்ரால்டர் என்பது ஐரோப்பா கண்டத்தில் உள்ள ஓர் அரிய பெரிய வலிய மைந்த கோட்டை. ஸ்பெயின் [Spain] தேசத்தின் தென்கோடியில் அலைகடலருகே மலைகளோடு மருவியுள்ளது. திடமான நெடிய அரண். அதற்கு நிகரான அரண் உலகில் வேறு எங்கும் இல்லை எனப் பேரும் சீரும் பெற்றிருக்கிறது. அதனை ஒருவன் பிடித்துக் கொண்டால் மத்தியதரைக் கடலோடு இங்கிலாந்து முதலிய எல்லாத் தேசங்களையும் கைக்கொண்ட படியாம். மேல் நாட்டிலுள்ள அந்த அதிசய அரணை நேரே கண்டு அனுபவித்தவர் ஆகலால் அதனை இந்தப் பாஞ்சைக் கோட்டைக்கு உவமை கூற நேர்ந்தார். ஒப்பு என்று கூறுமல் உருவகமாகவே உரைத்துள்ள நுட்பம் உய்த்து உணரத்தக்கது. உண்மையான உறுதி நிலையைத் தளபதி வாய்மொழி நுண்மையாய் வெளியிட்டுள்ளது.

இந்தப் பாஞ்சைக் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டால் தென்னுடு மட்டுமன்று இந்நாடு முழுவதும் கும்பினியார் கைக்கு யாதொரு தடையுமின்றி வந்தபடியாம் என்பதைச் சிந்தை தெளிந்துகொள்ளுமாறு இந்தவாறு அவர் கூறியிருக்கிருர்

என்றும் பெரிய இராணுவ நிலையமாய் வென்றி வீறுடன் விளங்கியுள்ளது என இதனை யாவரும் வியந்து பாராட்டியுள்ளனர். வந்த படைத்தலைவர்கள் எல்லாரும் எதிரியினுடைய மான வீரத்தையும் தான பலத்தையும் அரண் வலியையும் நினைந்து தத்தளித்திருத்தலை உரைகள் தோறும் உய்த்துணர்ந்து வருகிறோம்.

சிங்கம் பதுங்கியுள்ள ஒரு பெரிய மலைக் குகையை மதகரிகள் சூழ்ந்து பார்த்தது போல் ஊமைத்துரை உறைந்திருக்கிற பாஞ்சைப்பதியைச் சீமைத்துரைகள் சேர்ந்து பார்த்து ஓர்ந்து நின்ருர். உதய காலத்தில் ஊன்றி நோக்கி இதயங்கள் வியந்து நின்றவர் பின்பு பாசறைக்குப் போயினர். காலை உண்டிகள் கொண்டனர். உடனே காரியங்களில் வீரியமாய் விரைந்தனர்.

## ஆயத்தங்கள்

வீரமாபுரி என விளங்கிநின்ற பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை முதலில் உடைத்தெறிய வேண்டும் என்று மூண்டார்

அதற்கு வேண்டிய சாதனங்களை ஆய்ந்து ஆக்கினர்: கோட்டைக்கு மேல்புறமும் வடபாலும் சிறிது தூரத்தில் இரண்டு மண் மேடுகளைத் திரண்டு இயற்றினர். இராணுவ காரியங்கள் புரிகிற பயனியர்ப் பட்டாளம் அந்த வேலையை விரைந்து செய்தது. மண் குன்றுகள் எண்குன்றுகளாய் எழுந்தன. பீரங்கிக்குண்டுகள் வேகமாய் வந்து பாயும்படி கணக்குப் பார்த்து ஆய்வோடு மேடுகள் அமைக்கப்பட்டன. நீளமாய் அமைத்த அந்த மேட்டுகள் மேல் பெரிய பீரங்கிகளை வரிசையாக ஏற்றி வைத்தனர். கரு மருந்துகளையும் குண்டுகளையும் அருகெங்கும் நிறைத்தனர். காலாட்படைகளும் குதிரைப் படைகளும் அணிவகுத்து அடர்ந்தன. சிப்பாய்கள் எல்லாரும் கைத் துப்பாக்கிகளுடன் கால் வரிசைகாட்டிக் கடுத்து நின்றனர். போரங்கிகள் தரித்து நெட்டு நெட்டாகப் பட்டாளங்களைமுறையே நிறைசெய்துநிறுத்தித் தளபதிகள் யாவரும் உளவுகள் ஓர்ந்து ஊக்கி எழுந்தனர். சேனைத் தலைவருடைய உத்தரவை எதிர்நோக்கிச் செருத்து நின்றனர்.

பாஞ்சை நகர் அயலே வெடிகளோடு படைகள் சூழ்ந்து நின்ற நிலை கொடிய கொலைகள் பல விரைந்து வீழ்ந்து படும் என்பதை விளக்கி நின்றது. வீர விளைவுகள் கோர இழவுகளைக் குறிசெய்து நின்றன. அந்நிலைகளை நேரே கண்டும் நாட்டுமக்கள் யாதும் கலங்காமல்பாஞ்சையர் வீரத்தைப் பாராட்டிநின்றனர்.

வீரமா புரிஎன விளங்கி நின்றமெய்ச்
சீருயர் பாஞ்சையைச் சேர்ந்து நோக்கினர்
போருயர் கருவிகள் பொருந்தி வந்துளார்
யாருயிர் மீள்வர்என்று அயல்மொழிந்தனர். (1)

சமர்செய வந்தவர் சாக நேர்ந்தனர்;
தமர்களைப் பிரிந்தனர்; தாயர் தந்தையர்
எமரையும் இழந்தனர்; இழிந்தழிந்தனர்;
அமரினைப் பாஞ்சையர் அணுகு முன்னரே. (2)

ஊரெங்கும் இவ்வகை உரைகள் ஓங்கின;
நேரங்கே போரினை நேர்ந்து வந்தவர்
பீரங்கி வகைகளைப் பெருக்கி வைத்தனர்
போரங்கி பூண்டனர் பொங்கி நின்றனர் (3)

கும்பினிப் படைகள் கொடிய கொலைக் கருவிகளோடு மூண்டு வந்துள்ளதைக் கண்டும் ஆண்டு நின்றவர் யாதும் அஞ்சாமல் உரையாடியுள்ள உறுதிநிலைகளை ஈண்டு உணர்ந்து கொள்கிறோம்.

# பத்தொன்பதாவது அதிகாரம்

## எயில் காத்து நின்றது



கும்பினியார் படைகளோடு திரண்டு வந்து கொடிய பீரங்கிகளை நாட்டிச் சுடுவெடிகளை நீட்டி அடுபரிகளை ஆட்டிப் படு திறங்களைக் காட்டிக் கடுமையாகப் போராட மூண்டு நிற்கும் நிலைகளை முன்னே பார்த்தோம். பாஞ்சாலங்குறிச்சியார் அங்கே கோட்டையைப் பாதுகாத்து வேட்டை வாய்ந்த புலிகளென்று வீறு கொண்டு விறலுடன் நின்ற நிலையை இங்கே பார்க்க வந்துள்ளோம்.

பாளையங்கோட்டையிலிருந்து சேனாதிபதி படைகளோடெழுந்து கயத்தாற்றுப் பாசறையை அடையுமுன்னரே பாஞ்சைக் கோட்டை பலவகையிலும் பலமடைந்து நின்றது. எதிரிகளுடைய நிலைமைகளை எல்லாம் எதிர்நோக்கி யாவும் நூதனமாய் ஓர்ந்து ஊமைத்துரை சேமங்களைச் செய்து வைத்தார். உள்ளே கோட்டை மதிலின் அருகெங்கும் போர்க்கருவிகள் நிறைக்கப் பட்டிருந்தன. மேலே கொத்தளங்களில் பீரங்கிகள் ஏற்றிக் கூரிய போர்க்கருவிகளும் குவித்து வைத்தனர். வெளியிலிருந்து வேலியைத் தாண்டி மீறி ஏறி வருகிற பகைவரை எறிந்து வீழ்த்துதற்குரிய கல்லின் கூட்டங்களும், கவண்களின் வைத்து வீசுதற்கு வேண்டிய இரும்புக் குண்டுகளும் மதில்மேல் இடங்கள் தோறும் பரப்பியிருந்தனர். நான்கு மூலைகளிலும் நெய்களையும் செம்புகளையும் காய்ச்சி உருக்கி அந்த நெருப்புக் குழம்பை வாரி வீசுதற்கு ஏற்ற இருப்புச் சட்டிகளும் கொப்பரைகளும் அண்டாக்களும் அடுப்புகளயலே அடுக்கடுக்காய் அடர்ந்து நின்றன.

நான்கு புறங்களிலும் மூன்று ஆள் உயரங்களுக்கு மேல் வளர்ந்திருந்த கோட்டை மதில் மேல் தெட்டு தெட்டாகப் படை வீரர்கள் நின்று ரணவேலைகள் செய்யவும், அவர்களுக்கு ஈட்டி வாள் வேல் கல் முதலியவைகளை வாரிக் கொடுத்து விரைந்து உதவி புரிதற்கு வசதியாக இடையிடையே பரண்கள் அமைத்து அரண்கள் ஆற்றி முரண்கள் நீட்டித் திறங்கள் கூட்டியிருந்தனர்.

மிளையும் கிடங்கும் வளைவிற் பொறியும்
கருவிரல் ஊகமும் கல்லுமிழ் கவணும்

பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய்பொன் உலையும் கல்லிடு கூடையும்
தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை அடுப்பும்
கவையும் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவும் சீப்பும் முழுவிறற் கணையமும்
கோலும் குந்தமும் வேலும் பிறவும்
ஞாயிலும் சிறந்து நாட்கொடி நுடங்கும்
[சிலப்பதிகாரம்]

எனப் பண்டைப் பாண்டிய மன்னனுடைய மதுரை மதில் அரணின் அதிசய நிலைகளை இந்தப் பாஞ்சை அரணும் அன்று ஓரளவில் ஒத்து நின்றது போரளவில் பெருவியப்பாயுள்ளது. சிற்றரசனாயினும் வீர பராக்கிரமங்களில் பேரரசரும் வியந்து புகழும்படி ஊமைத்துரை உயர்ந்து நிற்றலைச் சீமைத் துரைகள் யாண்டும் உணர்த்தி வருகின்றனர். அவருடைய அடலாண்மைகளையும் படை வலிகளையும் கண்டு யாதும் அஞ்சாமல் என்றும் நேரெதிர்த்து இவர் போராடி நின்றமையை வீரவுலகம் இன்றும் வியந்து பாராட்டி வருகின்றது. பாண்டி நாட்டு வீரம் யாண்டும் நீண்ட புகழோடு நிலாவி உலாவி வர இவர் குலாவி நிற்கின்றார்.

தீர நிலை

முதல்நாள் பகலில் இடைவழியில் மூண்ட போரில் பீரங்கிக் குண்டுகளால் தன்னுடைய குலவீரர்கள் பலபேர் மாண்டு போயினர். அதில் நல்ல குறிகாரர்கள் சிலரும் இறந்துள்ளனர். இருந்தும் யாதும் தளராமல் அன்று இரவே போருக்கு வேண்டிய எல்லா ஆயுதங்களையும் விரைந்து செய்து கொண்டு *"வெள்ளையரை இன்று வேரறுப்பேன்" என்று இவர் வீறுமண்டி நின்றது

*கொள்ளை புரியும் குறியொடு வந்துள்ள
கும்பினிக் கும்பல்கள் கும்பிவிழ
வெள்ளையர் யாரையும் வேரறுப்பேன் என்று
வீறுடு வீரன் வெகுண்டு நின்றான்.

சீமைத்துரைகளை வென்று தொலைக்க விரைந்து ஊமைத்துரை உருத்துள்ள நிலையை நாட்டுப் பாடல்கள் இவ்வாறு காட்டியுள்ளன. அக் காட்சியால் ஆட்சியான வீர மாட்சிகள் காண வருகின்றன.

இவருடைய இயல்பான மனவுறுதியையும் தீர தைரியத்தையும் பாராட்டிய செய்துள்ளது நாட்டுப்புறத்தில் தமக்குக் கிடைத்த சிறிய கருவிகளைக் கைக்கொண்டே அரிய காரியங்களை ஆற்றிப் பெரியசேனைகளை இவர் எதிர்த்திருப்பது பேரதிசயமாய்நிற்கிறது.

## முள் வேலி

தாங்கள் பட்டாளங்களைத் திரட்டிப் போராட வந்தபோது பாஞ்சைக் கோட்டை நேரே போருக்கு ஆயத்தமாய் நின்ற நிலையைக் குறித்துச் சேனைத்தலைவர் தெளிவாக எழுதியிருக்கிறார்.

"A few old guns were mounted in these bastions, and the whole was surrounded by a thick hedge of thorns, but no ditch."

"சில பழைய பீரங்கிகள் கொத்தளங்களில் ஏற்றப்பட்டிருந்தன; கோட்டையைச் சுற்றி முழுதும் முள்வேலி இடப்பட்டிருந்தது; அகழ்க் கிடங்குகள் இல்லை" என்று இங்ஙனம் சொல்லியிருத்தலால் அன்று அரண் அமைந்திருந்த நிலையையும், இவர் எதிர்ந்து நின்ற முறையையும் நன்கு அறிந்து கொள்ளலாம்.

எதிரிகள் கூசாமல் ஏறி வாராதபடி இடையே சிறிது தடை செய்து நிறுத்தும் ஆகலால் முள் வேலி மதிலுக்கு வெளியே வளைந்து ஓர் அரணாக அமைந்திருந்தது. கருவேலமுள்ளும் உடை முள்ளும் அடையடையாக அடுக்கியிருந்தனர். கொடியபீரங்கிக் குண்டுகளை நெடிய தொலையிலிருந்து கடிது சுடவல்ல வெள்ளையர் படைகளை உள்ளே நெருங்க ஒட்டாதபடி இவர் முள் வேலிகள் செய்திருப்பது உள்ளி யுணர வுரியது. அரிய வலியுடைய பெரிய பகைவரைப் பொருது தொலைப்பதற்கு எளிய நிலையில் முள்ளு களை அடுக்கி வைத்தது பட்டிக்காட்டுச் செயல் என்று எள்ளி இகழத் தோன்றுமாயினும் அதன் தத்துவத்தையும் யுத்த முறையையும் யுத்தி புத்திகளையும் ஓர்ந்து நன்கு உய்த்துணரவேண்டும்.

"குமரி மகளிர் கூந்தல் புரைய
அமரின் இட்ட அருமுள் வேலி" (புறம், 301)

பண்டு ஓர் அரசன் அரண் செய்திருந்த நிலையை ஆலூர் மூலங்கிழார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

கலியாணம் ஆகாத கன்னிப் பெண்ணின் கூந்தலை எந்த ஆடவனும் கிட்ட நெருங்கித் தொட முடியாது; அதுபோல்

அரணாக அமரின் இட்ட எனது முள்வேலியை எதிரிகள் எவரும் அணுக முடியாது என்பதை நுணுகி உணரும்படி அங்ஙனம் அவன் அமைத்திருந்தான் ஆகலால் குமரியின் கூந்தல் உவமையாய் வந்தது. புரைய=போல அடர்ந்து திரண்டிருப்பதையும் உவமானம் உணர்த்தி நின்றது. பண்டைக்காலப் போர் முறையைப் பாஞ்சை மரபினர் நேரே ஓர் முறையாகத் தழுவியிருப்பது உவகை சுரந்துள்ளது. "இந்த முள்வேலியைக் கடந்து உள்ளே வந்தீர்கள் ஆனால் என் கைவேலுக்கு நீங்கள் இரையாவீர்கள்" என்று சீமைத்துரைகளை நோக்கி ஊமைத்துரை சுட்டிச் சொல்லியதுபோல் அந்த வேலியை அங்கே இவர் வெற்றி வீறுடன் இட்டிருந்தார். வேலி முள் வெள்ளையரைக் கேலி செய்தது.

எவ்வழியும் செவ்வையாகத் தமது அரணைப் பாதுகாத்துப் போற்றிநின்ற இவரது அடலாண்மைகளும், அமர் முறைகளும் அருந்திறல்நிலைகளும் அதிசய மாட்சிகளாய்ப் பெருகி நின்றன.

"முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற்று ஆகும் என்ப." (தொல்காப்பியம்)

ஆசிரியர் தொல்காப்பியனார் உரைத்துள்ள இவ்வுரைகள் பண்டைக்காலம் தொட்டே இந்நாட்டில் நிகழ்ந்து வந்திருக்கிற போர் முறைகளை நன்கு காட்டியுள்ளன. ஒருவன் கோட்டையைப் பிறன்போய் முற்றுகையிடுதலும், உரியவன் அதனை வெற்றியோடு காத்தலும் வித்தக வினைகளாய் விளைந்து வந்துள்ளன.

தமிழர் போர் முறை.

இந்த நாடு சிறந்த அரசர்களை முன்னம் பெற்றிருந்தது ஆகலால் வீரம் கொடை நீதி முதலிய உயர்ந்த மாட்சிகள் யாண்டும் ஒளி சிறந்து ஓங்கி வந்தன. திருவுடைய மன்னர்கள் செருக்கு மீக்கொண்டு அடிக்கடி ஒருவரோடு ஒருவர் போர்செய்ய நேர்ந்தார். அந்தப் போர்முறைகள் சீர்மை நேர்மை கூர்மை முதலிய நீர்மைகளோடுஓர்மையாய்உலாவிமேன்மையாவிளங்கிநின்றன.

ஓர் அரசன் வேறு ஒருவன் மேல் போர் புரியச் சென்றால் எதிரியின் ஊரில் உள்ள நல்லவர்களுக்கு யாதொரு அல்லலும் நேராதபடி முதலில் வெளியேற்றியருளுவன். அவ்வாறு செய்யுங்கால் முன்னதாகப் படைவீரர் பசுக்களைக் கவர்ந்து வருவர்.

இத்தகைய முறைகளுக் கெல்லாம் நெறிமுறையே துறைகள் வகுத்துள்ளனர். பெயர் விவரங்கள் அயலே வருகின்றன.

| | |
|---|---|
| வெட்சி | 1 |
| கரந்தை | 2 |
| வஞ்சி | 3 |
| காஞ்சி | 4 |
| நொச்சி | 5 |
| உழிஞை | 6 |
| தும்பை | 7 |
| வாகை | 8 |

சுட்டியுள்ள இந்த எட்டும் போர் வகைக்குரிய திணைகளாம்.

நிரை கவர்தல், நிரை மீட்டல், போர்மேல் செல்லல், எதிர் நின்று தடுத்தல், மதிலைக் காத்தல், முற்றுகையிடுதல், போர் புரிதல், வெற்றி பெறுதல் என்னும் இவை போர்க்குரிய திணைகளுக்கு முறையே உரியனவாம். [illegible]

இங்கே பாஞ்சை வீரர் செய்து வந்துள்ள வீரச்செயல்கள் இருவகை நிலைகளில் மருவி நிற்கின்றன. தம்முடைய அரணைக் காத்தலும், ஏறி வருகிற பகைவரை எதிர்த்துத் தாக்குதலுமாம். ஆகவே இவரது இருப்பும் பொறுப்பும் குறிப்பும் விருப்பும் வெளியாய் நின்றன. காப்பு முறை நொச்சியாய் நீண்டுள்ளது.

எதிரிகள் மீறி ஏறி வாராதபடி அவ்வுறுதியுடன் வீறுகொண்டு நின்று ஆணித்து தீர தைரியங்கள் நிறைந்து செருமுனைகளில் குறிக் கொண்டு நோக்கி ஒரு முகமாய் இவர் நேரே தாக்கி நின்றனர்.

"மறனுடை மறவர்க்கு ஏற இடனின்றி
நெய்யோடு ஐயவி அப்பி எவ்வாயும்
எந்திரப் பாவை இயற்றின நிரீஇக்
கல்லும் கவணும் கடுவிசைப் பொறியும்
வில்லும் கணையும் பலபடப் பரப்பிப்
பந்தும் பாவையும் பசிவரிப் புட்டிலும்
என்றிவை பலவும் சென்றுசென் றெறியும்
முந்தை மகளிரை இயற்றிப் பின்றை
எய்பெருஞ் சகழி வாயிற் கூட்டிச்
சுட்டல் போயின்று தொலைவு...

தீப்பாய் மகளிர் திகழ்நலம் பேர
நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்கும்
தாக்கருந் தானை யிரும்பறை
பூக்கோள் தண்ணுமை கேட்டொறும் கலுழ்ந்தே."
(பொன்முடியார்)

இன்னவாறு அரிய ஆயத்தங்களை யாண்டும் மூண்டு செய்து அரணைப் பாதுகாத்து அமராடல்களை எதிர்நோக்கித் தமர்களோடு ஊக்கி நின்றனர். உரிய வுறவினர்கள் யாவரும் உறுதி புரிந்து பொரு திறலோடு பொங்கி நின்றுள்ளது பெரு மகிழ்வு தந்தது.

வெள்ளம் போல் திரண்டு வந்துள்ள வெள்ளையர் படைகளைக் கண்டும் எள்ளளவும் கலங்காமல் எல்லாக் காரியங்களையும் உல்லாசமாகவே ஊமைத்துரை கவனித்து வந்தார். கொன்னிக் கொன்னிப் பேசினும் இவருடைய இனியமழலை வார்த்தைகள் சில எவருக்கும் நகைப்பையும் வியப்பையும் விளைத்து வந்தன.

### வெள்ளை எலிகள்

புலி வேட்டை யானை வேட்டை பன்றி வேட்டைகளை ஆடாமல் இன்று நாம் எலி வேட்டைகள் ஆட நேர்ந்திருக்கிறோம் என்று பராக்கிரம பாண்டியன் என்னும் தன்னுடைய மைத்துனனிடம் அன்று காலையில் இவர் விநோதமாச் சொல்லியது என்றும் எவரும் சிந்திக்க நின்றது. "வெள்ளை எலிகள் பல இன்று நம் கோட்டை மதிலை அகழ்ந்து உள்ளே புக வரும்; அப்பொழுது நாம் அவற்றை விரட்டி ஓட்ட வேண்டும்; ஓடாமல் நின்றால் கொன்று தொலைக்க வேண்டும்" என இவர் வென்றி வீறோடு விளம்பி நின்றார். இவரது உள்ளத் துணிவும் உறுதிநிலையும் பொருதிறல் முறையும் அரிய அதிசயங்களாய்ப் பெருகிநின்றன.

வெள்ளைத் துரைகளை வெள்ளை எலிகள் என்று இவர் சுட்டிச் சொன்னது தம்மை அவர் திட்டி வந்ததை ஒட்டியேயாம். பட்டத்துக்கு வந்திருத்தலால் இவரையும் கட்டபொம்மு என்றே கும்பினியார் குறித்து வந்தார். அந்த முழுப் பெயரையும் சொல்லாமல் Cat என்று சுருக்கமாகவே சுட்டிச் சொல்வது அவரிடம் வழக்கமாய் இருந்தது. கேட் என்னும் ஆங்கிலச் சொல்லுக்குப் பூனை என்று பொருள் ஆதலால் இகழ்ச்சிக் குறிப்பாகவே கட்டபொம்மை இப்படி அவர் கடுப்போடு உரைத்து வந்தார்.

"The English sobriquet for Catabomma."

"கட்டபொம்மை கேட் என்று கெட்டபகைக் குறிப்பாகவே ஆங்கிலேயர் கூறி வந்தனர்" எனச் சரித்திரக்காரரும் இங்ஙனம் அப் பெயர் வழக்கைத் தெளிவாக விளக்கி எழுதி யிருக்கிறார்.

சோப்ரீகே என்னும் சொல் வக்கணையான வசைப் பெயர்.

உள்ளத்தில் பகை மூண்ட பொழுது உரைகளும் எள்ளல் களாய் வெளி வருகின்றன. மராட்டிர வீரனை சிவாஜியை மலை எலி (Mountain rat) என ஆங்கிலேயர் புலைமொழி புகன்றார். தமிழ் நாட்டு வீரனை கட்டபொம்மை பூனை என ஈனமாயிசைத்தார். புலியேறு போல் வலி மிகுந்துள்ள போர் வீரனைப் பூனை என்றது ஊனமான அவரது உள்ளக் கருப்பை உணர்த்தியுள்ளது. இருப்பினும் ஓர் அரிய உண்மையையும் அது விளக்கி நிற்கிறது. என்னே உண்மை? எனின், பூனையின் முன் எலிகள் படுகிற பாடுகளை ஊமைத்துரையிடம் சீமைத்துரைகள் பட்டிருத்தலை அவர் இட்டிருக்கிற பெயர் இயல்பாய்க் காட்டியுணர்த்தியுளது.

உள்ளக் கோதிப்பு.

இந் நாட்டில் வந்து சுதந்திரத்தை நிலை குலைத்து அதிகார முறைகளை வரம்பு மீறி வளர்த்து வெள்ளைக்காரர் செய்து வந்துள்ள செயல்கள் ஊமைத்துரையின் உள்ளத்தில் கொடிய கொதிப்புகளை மூட்டி யிருந்தமையால் தமது படை வீரர்களை இடைவழியிலும் ஏவிப் பகைவர் படைகளை அழித்து வரச் செய்தார். அந்தத் தடைகளைக்கடந்து எதிரிகள் நேரே கோட்டைக்கு வந்திருத்தலால் தம்முடைய சேனைகளை எம்மருங்கும் ஆயத்தம் செய்து எதிர் நிறுத்தினார். போர்வீரர்கள் யாவரும் ஆயுதபாணி களாய் யாண்டும் அடலாண்மைகளுடன் மூண்டு அமராடலை விழைந்து ஆவலோடு எதிர்பார்த்து நின்றார். சமர் புரிவதில் எவ்வழியும் எவரிடமும் கதிவேகங்கள் பெருகி நின்றன. அந் நிலைகள் அதிசயக் காட்சிகளாய்த் துதிகொண்டு தோன்றின.

ஊக்கி நின்ற நிலை.

உள்ளத்தில் உறுதி ஊக்கங்கள் பெருகிப் போராடலை ஓர் விநோதமான விளையாடலாகவே கருதிப் பாஞ்சை வீரர்கள் அன்று அடர்ந்து நின்றது அவரது இயல்பான வீரப் பான்மை

யையும் மேன்மையையும் விளக்கி விளங்கியது. பகைவரோடு பொருவது உவகை விருந்தாய் அவரிடம் மருவியிருந்தது. போர் என உவக்கும் பொருவரு திறலினர் என இருநிலம் வியக்க இசை பெற்று நின்ற அவர் மருவலரை வென்று தொலைக்க விசையுற்று வந்தார். வீராவேசங்கள் வெற்றி நோக்கில் விளைந்து நின்றன.

வேல் வாள் ஈட்டி வல்லயம் சூலம் பாலம் கண்டகோடாலி முதலிய கூரிய கருவிகளைக் கொண்டு இரண்டாயிரம் போர்வீரர் கள் கோட்டையருகிலும் நான்கு வாயில் புறங்களிலும் கூட்டம் கூட்டமாய்த்திரண்டுவேட்டையைஎதிர்நோக்கிவீறுடன்நின்றார்.

அறு நூறு போர் வீரர்கள் சுடு வெடிகளுடன் கோட்டை மதில்மேலும் கொத்தளங்களிலும் அமர்ந்து எதிரிகள் அறியாத படி குறிசெய்திருந்தார். அன்று அவர்களுடைய கைகளிலிருந்த வெடிகள் எல்லாம் மிகவும் பழமையானவை. பெரிதும் பிழை பாடுகளுடையன. அதுவும் தவிரக் குறி தவறுமல் சுடுவதில் அவர்களுக்குச் சரியான பயிற்சியும் உயர்ச்சியும் இல்லை.

கம்புச் சிலம்பங்களிலும் வாள் வீச்சிலும் வல்லையப் போரி லுமே எல்லாரும் என்றும் பயின்று வந்துள்ளனர். கும்பினியா ரிடமிருந்து வாரி வந்த பின்புதான் குறிகளைக் கூர்ந்து சுட வெடி களோடு சிறிது பழகிக் கொண்டனர். தேர்ச்சியான பயிற்சி யில்லாதிருந்தும் துப்பாக்கிகளை எப்போதும் சுட்டுப்பழகிக் கை தேர்ந்த சிப்பாய்களைப் போலவே காட்சி புரிந்திருந்தார். "எங்க ளுக்கும் வெடிகள் உண்டு;கிட்டவந்தால் சுட்டு வீழ்த்துவோம்" என்று எதிரிகளை அச்சுறுத்தி ஆடம்பரமாய் அவர் ஆர்த்து நின் றார். உள்ளத் துணிவுகள் உச்சநிலைகளில் எங்கும்ஓங்கி நின்றன.

வில் எய்வதில் வல்லவரான வில்லாளர்கள் இருநூறு பேர் வலிய கல்லுருண்டைகளை மடிகளில் வாரி வைத்துக் கொண்டு கொத்தளங்களின் அருகெங்கும் வில்லுகள் ஏந்திய கையராய் வீறு கொண்டு நின்றனர். போர் வெறிகள் பொங்கி நின்றன.

ஊமைத்துரை நின்றது.

எல்லா வீரர்களையும் இனிது சரிபார்த்து அங்கங்கே தக்க படைத் தலைவர்களைத் தலைமை செய்து நிறுத்தி எதிரிகளுடைய நிலைமைகளை ஆராய்ந்து இடையில் உடைவாளும் மார்பில் கவச

மும் கையில் நெடிய வேலும் பூண்டு தெய்வமே துணை என்று யுத்தசன்னத்தராய் ஊமைத்துரை உறுதியோடு அமர்ந்திருந்தார்.

வெள்ளையர்வெம் படைவீரர் வெடிகள்எங்கும்
கையேந்தி வீறு கொண்டு
கொள்ளைமண்டி உள்ளேறக் கொதிப்பேறி
அயல்நிற்கும் கோலம் கண்டும்
எள்ளளவும் தளராமல் யாதுமே
கலங்காமல் எதிர் ஏந்தித்
தள்ளரிய திறலோடு துரையவனும்
தலையரியத் தனியே நின்றான்

ஊமைத்துரை அன்று அங்கே நின்ற நிலையை இது நன்கு வரைந்து காட்டியுள்ளது. உறுதி பூண்டு இவர் ஊக்கி நின்றது அதிசய கம்பீரமாயிருந்தது. எதிரிகள் இடம் கொண்டு மதிலை வளைந்து வெளியே சூழ்ந்து மூடி ஆர்த்து நிற்க இவர் குகையுள் உள்ள சிங்கஏறுபோல் போர்வீறுடன் கோட்டையுள் இருந்தார்.

"பொருசின மாரும் புலிப்போத் துறையும்
அருவரை கண்டார்போல் அஞ்சி—ஒருவரும்
செல்லா மதிலகத்து வீற்றிருந்தான் தேர்வேந்தன்
எல்லார்க்கும் எல்லாம் கொடுத்து."

பண்டு ஒரு தேர்வேந்தன் இங்ஙனம் எயில் காத்திருந்தது போலவே பாஞ்சைவேந்தனும் அன்று அயில் ஏந்தி எயில்பேணி யிருந்தான். மூண்டு திரண்டு முனைந்து வந்துள்ள பெரிய கும்பினிப் படைகளைக் கண்டும் இவர் யாதும் அஞ்சாமல் ஏதும் கலங்காமல் எல்லாரையும் ஒல்லையில் வென்று விடலாம் என்று உள்ளம் துணிந்து ஊக்கி உறுவதை எதிர் நோக்கிப் பொருதிறலுடன் நின்றுள்ளார்.

சுத்த வீரர்களுடைய உள்ளத் துணிவு எத்தகைய நிலைகளிலும் தளராமல் இருப்பது வித்தக விசித்திரமாய் விளங்கி நிற்கிறது. தன் படைகளை எங்கும் நன்கு நிறுத்திச் சிங்கஏறு போல் இவ்வீரன் தங்கியிருக்கப் பொங்கி வந்த கும்பினிப் படைகள் போருக்கு எழுந்தன. அந்தப் போராட்ட நிலைகளையும் கொலைகளையும் அயலே மிடலோடு நாம் காண நேர்ந்துள்ளோம்.

# இருபதாவது அதிகாரம்

## பொருது மாண்டது

ஆங்கிலப் படைகள் அடலோடு அமராட நேர்ந்தன. 31—3—1801 காலையிலேயே வேலைகள் விரைந்து தொடர்ந்தன. சேனைத் தலைவர் கட்டளையிட்டதும் கும்பினிப் படைகள் பாஞ்சை மேல் போராட மூண்டு எழுந்தன. காலை ஆறு நாழிகை அளவில் அதாவது 8-30 மணிக்குப் பீரங்கிகளை நேரே திருப்பிக் குறி வைத்துக் கோட்டையை நோக்கிக் கொதித்துச் சுட்டனர். கோடை இடிகள்போல் முழங்கிக் குண்டுகள் வந்து பாய்ந்தன. குதிரைப் பட்டாளங்களும் காலாட் சேனைகளும் கோட்டையின் மேல் புறமும் தென் புறமும் ஈட்ட முற்று நாட்டமாய் வளைந்து நின்றன. வடபுறத்தில் எட்டப்ப நாயக்கர் படைகள் கட்டாப்புச் செய்து கதித்து அடர்ந்தன. இரண்டாயிரத்து முந்நூறு எண்ணங்களையுடைய அந்தப் போர்ச் சேவகர்களை அழகுமுத்து சேர்வை முதலிய குறிகாரர்களும், நான்கு ஆங்கில தளபதிகளும் ஆங்காங்கு ஊக்கிப் பாங்கோடு நடத்தி வந்தனர். கோட்டை மதில் உடைபட்டதும் உள்ளே பாய வேண்டும் என்று ஆயத்தமாய் எல்லாரும் உறுதி பூண்டு மூண்டு உருத்து ஊக்கி நின்றார்.

### பீரங்கிகள் சுட்டன.

அதி விரைவில் கோட்டையை உடைத்து விடலாம் என்று குண்டுகளைக் கண்டபடி வாரிப் பொழிந்தார். பதினெட்டு பீரங்கிகள் பன்னிரண்டு மணி வரையும் ஓயாது சுட்டன. தீயும், புகையும் கக்கிப் பீரங்கி வாய்களிலிருந்து குண்டுகள் வெளி வந்தனவே யன்றி யாதொரு பயனும் காணோம். எள் அளவு மண்ணும் இடிந்து விழவில்லை. வெள்ளைத் துரைகள் உள்ளம் திகைத்தார். வியப்பும் திகிலும் மிகுந்து வெட்கமும் அடைந்தார். "இது என்ன மந்திர சத்தியா? இந்திர சாலமா? எந்திரச் சூழ்ச்சியா? அல்லது பேய்கள் இடையே நின்று குண்டுகளை விலக்கி மாயங்கள் புரிகின்றனவா?" என்று அவர் மறுகி நின்றார். அதன்பின் அந்தப் பீரங்கிகளைப் பெயர்த்து எடுத்துக் கோட்டைக்கு அருகே கொண்டுவந்து நிறுத்திக் குண்டுகளைக் கடுமையாகப் பொழியும்

படி கருமச் சூழ்ச்சிகள் செய்தார். உதயம் தொடங்கி உச்சிப் பொழுது வரையும் கிட்ட நெருங்காமல் எட்ட நின்று சுடடுக் கொண்டே யிருக்கின்ற எதிரிகளை நோக்கிப் பாஞ்சை வீரர் எள்ளி இகழ்ந்தார். "தூரத்தில் நின்று பேடித்தனமாய்ச் செத்த குண்டுகளை வீசி ஏன் நேரத்தைக் கடத்துகிறாய்! விரைந்து வந்து செத்துத் தொலை" என்று கொத்தளங்கள் மேல் நின்று சிலர் இரைந்து கூவினர். அந்த இரைச்சல் இன்னதென்று தெளிவாக அவர்க்குத் தெரியவில்லை; ஆயினும் ஏதோ இகழ்ந்து அறைகூவிப் போருக்குவீறுடன் அழைக்கின்றார் என உணர்ந்துகொண்டார்.

வெள்ளைத்துரைகள் எல்லாரும் உள்ளம் கொதித்து ஊக்கிச் சுடும்படி பீரங்கிப் படைகளைத் துரிதப்படுத்தினர். மானமும் கோபமும் மண்டி ஆனவரையும் அவர் அடர்ந்து நின்று தொடர்ந்து சுட்டார். அதிர் வேட்டுகள் ஆர்த்தெழுந்தன; இடிகள் முழங்குவனபோல் எங்கும் பேரொலிகள் பொங்கிக் கிளம்பின.

பீரங்கி வாய்களிலிருந்து துள்ளியெழுந்த குண்டுகள் எல்லாம் கோட்டை மேல் வந்து பாய்ந்தன; ஒரு குண்டாவது மதிலைத் துளைத்து உள்ளே ஊடுருவிப் போகவில்லை. எல்லாம் சுவரில் எறிந்த பந்துகள்போல் துள்ளி மீண்டு அயலிடம் எங்கணும் சிதறுண்டு கிடந்தன ஒரு பிடி மண்ணையும் உதிர்க்காமல் மறுபடியும் மறுபடியும் அவை வந்து விழுந்து மாறி உதிர்ந்தன. மதில் மேல் விரைந்து பாய்ந்த இரும்புக் குண்டுகள் யாவும் மலை மேல் எறிந்த மண்ணுங்கட்டிகள் போல் கிலைகுலைந்து வீழ்ந்தன. அவ்வாறு மாயமாய் அவை இழிந்து போயினும் அவர் ஓயாது பொழிந்து கொண்டே யிருந்தனர். கல் மாரி போல் யாண்டும் குண்டு மாரிகள் மூண்டு பாய்ந்து வேகமாய் நீண்டு காய்ந்தன.

## கோட்டை உடைந்தது.

கிட்ட நெருக்கிக் கொண்டு வந்து நாட்டிய பின் பன்னிரண்டு மணியிலிருந்து இடைவிடாமல் பீரங்கிகளை விரைந்து சுட்டமையால் பிற்பகல் மூன்றரை மணிக்குக் கோட்டையின் வடமேற்கு நெட்டு மதில் பாதிக்கு மேல் உடைய நேர்ந்தது. கோட்டை உடைந்ததைக் கண்டதும் கும்பினிப் படைகள் ஆர்த்து எழுந்தன. கொடிய குண்டுகளைப் பொழிந்து வந்த பீரங்கிகளை நிறுத்திவிட்டுப் பட்டாளங்கள் கட்டாக நேரே பாய நேர்ந்தன.

தெற்கு மேற்கு வடக்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் கோட்டையைச் சூழ்ந்து சுடு வெடிகளோடு அணி அணியாய் மூண்டு நின்ற படை வீரர்கள் எல்லாரையும் ஒருங்கே திரட்டி உள்ளே புகுந்து கொள்ளை செய்யும்படி தலைமைத் தளபதியான வெள்ளைத்துரை கட்டளையிட்டார். உடனே எல்லாரும் ஒல்லையில் துள்ளி ஊக்கி வந்தார். கொடிய போர் கடிது மூண்டது.

போர் தொடர்ந்தது.

முள் வேலி யாகிய எல்லையைக் கடந்து கும்பினிப்படைகள் உள்ளே வரவும் பாஞ்சை வீரர்கள் நேரே பாய்ந்து எதிர்ந்தார். கூரிய வேல்களாலும் கொடிய வாள்களாலும் நெடிய வல்லயங்களாலும் இவர் சீறி ஏறிக் குத்தி வீசவே அவர் மாருய் அலறிச் செத்து வீழ்ந்தார். முதலில் புகுந்த திரள் முழுதும் மாண்டு விழவே மீண்டு பின்னே நின்றவர் சுடு வெடிகளைக் கடுமையாகத் தொடுத்துச் சுட்டார். மூண்டு நின்று சுட்ட அந்தக் குண்டுகள் பட்டு இவருள்ளும் பலர் துள்ளிவிழுந்து மாண்டார். வெடிகளின் ஒலிகள் யாண்டும் நெடிதெழுந்தன. கரும் புகைகள் எங்கும் படர்ந்து அடர்ந்தன. போர் வெறிகள் எங்கணும் வீறிட்டு விரிந்தன. தீக் குண்டுகள் பாய இவர் செத்து விழுவதும், வேல் குத்துகள் ஏற அவர் விளிந்து மடிவதும் யாண்டும் நெடிது நிகழ்ந்தன இரு பெரும் படைகளும் எதிர் எதிர் தாக்கவே முதிர் போர்கள் மூண்டன. குத்து வெட்டு கொல்லு ஏறி பறி அடி பிடி சுடு என்னும் கோர ஒலிகளே யாண்டும்மீறி எழுந்தன.

கொடிய சுடுவெடிகளைக் குறிகள் ஓர்ந்து அவர் கடிது விரைந்து சுட்டார். வாள் வேல் முதலிய கை ஆயுதங்களைக் கொண்டு கடுத்துப் பாய்ந்து எதிரிகளுடைய உடல்களைச் சிதைத்தும் குடல்களைச் சரித்தும் தலைகளைத் துணித்தும் கால்களைத் தறித்தும் கைகளை முறித்தும் மூளைகளைப் பிடுங்கியும் ஆளிகளைப் போல் சீறி இவர் அடலமர் புரிந்து வந்தார். படு கொலைகள் பல விழுந்தன. அடு பிணங்கள் அயலெங்கணும் நெடிது நிறைந்தன.

கருமருந்து செலுத்தி ஒரு முறை சுட்டு அவர் மறுமுறை தொடுமுன் இவர் நெறு நெறென நேர் ஏறி வல்லயங்களால் குத்தி ஒல்லையில் மாய்த்து உருட்டி வீழ்த்தினர். இறந்துபட்ட

சிதைந்தும் தலையிழந்தும் தாள் அழிந்தும் பலபேர் நிலைகுலைந்து மடிந்து நிலத்தில் கிடந்தனர். கண்ட இடம் எங்கணும் கடும் போர் மூண்டமையால் யாண்டும் பிணங்கள் நீண்டு குவிந்தன.

மண்டிமேல் அடர்ந்து வருந்தொறும் சினந்து
மடங்கலின் திரளெனப் பாய்ந்து
தண்டுகள் கொண்டு தாக்கியுட் புகுந்து
தாள்தலை தோள்உடல் துள்ளித்
துண்டுகள் ஆகத் துணிபட வெட்டிச்
சூறையின் சுழலெனச் சாரி
கொண்டெங்கும் திரிந்து கண்டங்கள் களத்தில்
குவிந்திடப் புரிந்தனர் கொதித்தே. (1)

கைவரு கவண்கல் எறியினால் விற்கள்
கடுத்துமிழ் கற்களால் குறியாய்
எய்வெடித் திரளால் எழுமழு முசலம்
ஈட்டிவேல் தோமரம் என்னும்
வெய்யவெம் படையால் வீரர்கள் கொதித்து
வீசலால் மேவல ருடைந்து
மொய்வலி இழந்து கைதலை சிதைந்து
முலையழிந் துருண்டனர் மடிந்தே. (2)

ஏறிமேல் வருவார் எவரையும் கோட்டை
யிடத்திருந் தெறும்வலி யோடு
சீறிமேல் பாய்ந்து செருப்புரிந் தேறிச்
சினந்து வல்லையங்களால் எறிய
மாறிமீண் டுடைந்து மறுத்துடன் திரண்டு
மானமும் தாபமும் மிகுந்து
வீறுடன் விழுந்தே ஈருட லாகி
விதிர்த்துயிர் மாண்டனர் பலரே. (3)

கொடிய பீரங்கி கொண்டவர் பொழியும்
குண்டுகள் கோட்டைமா மதிலின்
அடியிலே வீழ்ந்து பணிவன போல
அடலொழிந் துருண்டன்; இவர்கைப்
பிடியிலே அமைந்த வில்லுகள் உமிழ்ந்த
கல்லுகள் பேணல ருயிரை
கொடியிலே கவர்ந்து படியிலே உடல்கள்
நூக்கிமே லெழுந்தன விரைந்தே. (4)

விற்களில் வல்லார் கோட்டைமேல் நின்று
வீசிய கற்கள்வான் வழிநின்று
உற்கைகள் வீழ்வ போலமுன் துள்ளி
ஒல்லையில் ஓடியே ஒன்னார்
பற்களில் நுதலில் கண்களில் மூக்கில்
பட்டன படவுயிர் துடித்து
நிற்குமந் நிலையே தட்டழிந் தயர்ந்து
நெட்டுடல் விழுந்தன நெடிதே. (5)

பண்டைநாள் வில்லில் மந்திர முறையில்
பகழிகள் எய்துபற் றலரைக்
கண்டவா றழித்த கடுந்திற லாளர்
இருவரைக் கதைகளில் கேட்டோம்
மண்டிய இந்தப் பாஞ்சையம் போரில்
மாற்றலர்க்கு எமன்களாய் நின்று
கொண்டவில் வீரர் இரண்டுநூ றென்னில்
கொலைநிலை யாவரே குறிப்பார்? (6)

(வீரபாண்டியம்)

இவ்வாறு கொலைகள் பல விழவே கும்பினிப் படைகள் நிலைகுலைந்து அயர்ந்தன. அந்த நிலைமைகளை அறிந்ததும்சேனாதிபதி நெஞ்சம் கொதித்துச் சேனைகளை ஒரு புறம் ஒதுக்கிச் சதுருடன் மாற்றித் தகையாற்றி நிறுத்தி மறுபடியும் வேறு வகையாக அணிவகுத்து யாவரும் திரண்டு ஏககாலத்தில் வேகமாய் மூண்டு யாண்டும் அடர்ந்து பொரும்படி வெகுளிகளை மூட்டிவிடுத்தார்.

### படைத் தலைவர் பாடழிந்தது.

சேனைத் தலைவர்களாய் நின்ற வெள்ளையர்கள் எல்லாரும் மானக் கொதிப்போடு மூண்டு குதிரைப் பட்டாளங்களையும் காலாட்சேனைகளையும் கடுத்து ஏவி அடுத்து அடர்ந்துபொருதார்.

அவர் அவ்வாறு வெவ்வேறு திறல்களோடு வெகுண்டு வரவே பாஞ்சை வீரர்களுள் தலைவராய் நின்றவர் யாவரும் தம் முடைய படைகளை நடத்திக் கொலைக் கருவிகளோடு கொதித்து எதிர்த்தனர். அரசமுத்து, ஆதிராமு, அன்னகாமு, சின்னச்சாமி, வீரலக்கன், சிவத்தையா, முத்தையா, குமாரவீரு, மாதருமல்லு, நபாவு, கோதண்டராமு, இராமதளவாய், ரணவீரசின்னு, சூரசங்கு, தும்பிச்சி, துரைமல்லு, வீரணன், இராசபொம்மு, வீரதளவாய்,

கேட்டிபொம்மு, வீரப்பெருமாள், விஜயராமு முதலிய தளபதிகள் எல்லாரும் சீறி ஏறி வீறுடன் பொருதனர். எதிரிகள் சுடுகின்ற கொடிய வெடிகுண்டுகளை ஒரு சிறிதும் மதியாமல் வேல்களோடு விரைந்து பாய்ந்து கும்பினிப் படைத்தலைவர்களையே குறிசெய்து இவர் குத்தினர். இவ் வீரர்களுடைய வீர வேலைகள் வெள்ளையர் களைச் சூறையாடி யாண்டும்நீண்ட அழிவுகளை விளைத்து வந்தன.

வில்லால் எறிந்து, வாளால் வெட்டி, வேலால் குத்தி, வல்லையத்தால் நூக்கிக், கண்ட கோடாலிகளால் தாக்கி எங்கும் ஊக்கியேறி உருத்து அமராடவே கொலைகள்பல விழுந்தன. எவ்வழியும் வீர வெறியோடு அவ்வாறு அமராடி வருங்கால் 74வது ரெஜிமெண்டின் தளகர்த்தனை கேம்பல் (Campbell) என்பவனை ஒட்டநத்தம் மதாருமல்லு என்னும் சூரன் வெட்டி வீழ்த்தினான். நெடிய குதிரையிலிருந்து தலைகீழாக அவன் தரையில் விழுமுன் இவன் அப் பரிமேல் விரைவில் தாவி அரியேறு போல் கடாவி இடையில் எதிர்ப்பட்ட படைகளைத் தடையற வீசிக் கோட்டையுட் புகுந்து ஊமைத்துரை முன் வந்து நின்றான். சீமைத்துரையைக் கொன்று தொலைத்து வாளும் கையுமாய் வென்றி வீறுடன் சிங்க ஏறுபோல் வந்து நின்ற அத் தீரனைக் கண்டதும் இவர் விரைந்து பாய்ந்து உவந்து தழுவிப் புகழ்ந்து கொண்டாடினர்.

பண்டு தன் அண்ணனைக் கொன்ற பழிக்குப் பழியாகப் பலவெள்ளையரைக் கொள்ளை கொள்ளவேண்டும்என்று உள்ளம் துணிந்து உறுதி பூண்டிருந்த இவர்க்கு அன்று அவ் வீரன் செய்து வந்தது பெரிய ஆறுதலாய் நின்றது. தலைவர்கள் போரில் ஏறி வீர ஆடல்கள் புரிந்து வருவதை வியந்து நோக்கி உறுதி நலங்களை இவர் ஊக்கி நின்றார். யாவரும் பொருந்திறலில்மூண்டு அருந்திறலாண்மைகளோடு அமராடல்கள் புரிந்தார்.எவ்வழியும் கடும் போர்கள் மூண்டன. கொடுங் கொலைகள் நீண்டன. மத்தேயு ஸ்மித் (Mathew Smith) என்னும்பெரிய படைத்தலைவனை முத்தையா என்னும் வீரன் நெடிய வேலால் குத்திக் குலுக்கி நிலத்தில் நேரே உருட்டினான். அவன் உருண்டு புரண்டு கீழே விழும் பொழுது ஏறி வந்த குதிரை அயலே வெருண்டு ஓடியது.

மாக்னெல் (Magnell) என்னும் சிறந்த தளபதியைத் துரை மல்லு என்னும் வீரன் விரைந்து பாய்ந்து வெட்டி வீழ்த்தினான்.

ரணவீரசின்னு என்னும் சூரன் ரணவேட்டையாடி வருங்கால் ஷாங்ஸ் (Lieut Shanks) என்னும் சேனைத் தலைவனைக் கொன்று தொலைத்தான். ஈகன் (Egan) எல்லியட் (Elliot) என்னும் படைத்தலைவர் இருவரும் ஆதிராமு கையால் மாண்டுவிழுந்தனர். செப்பேடு(Sheppard)ஹாசேடு(Hazard) க்ரீவ்ஸ் (Greaves) ப்ளேச்சர் (Fletcher) டாரியானோ (Torriano) ப்ரௌண் (Brown) ரிட் (Wright) கே (Kay) முதலிய படைத்தலைவர்கள் பலர் மரணத்துக் கேதுவான காயங்களோடு ரண களத்திலிருந்து தப்பிப் போயினர். சமர பூமி எங்கணும் சாக்காடுகளாயின.

நிலைகள்தோறும் கொலைகள் பல விழவே கும்பினிப் படைகள் வெருண்டு நிலை குலைந்தன. யாவரும் மருண்டு வெருவினர்.

தலைமைச் சேனாதிபதி மிகவும் கலங்கிப் போரை நிறுத்தும்படி கட்டளையிட்டுப் படைகளை மீட்டினார். அவ்வாறு மீண்டு திரும்பும்பொழுது இவர் மூண்டு பாய்ந்து பின் தொடர்ந்து அடர்ந்து வெட்டி ஆர்த்து வீழ்த்தினார். பலர் மடிந்து செத்தார்.

படைகள் மீண்டது

எஞ்சியுள்ள படைகளை மீட்டிக் கொண்டு சேனாதிபதி மெக்காலே ஓக்கலோடு விரைந்து பாசறைக்குப் போயினார்.

ஒட்டுத்துணையாய் வந்த எட்டப்பநாயக்கர் படையும் உடைந்து பின் ஓடியது. தெற்கும் மேற்கும் திரண்டுவந்த கும்பினிப் படைகளோடே பாஞ்சை வீரர்கள் எதிர்த்துப் போராடி நின்றனர். கோட்டையின் வடபால் குதிரைப் பட்டாளங்களோடு கூடிநின்ற எட்டப்பநாயக்கர் படை ட்ராட்டர் [Charles Trotter] என்னும் ஆங்கில தளபதியின் பாதுகாப்பிலிருந்தது. கொடிய பீரங்கிகள் நெடிது சுடுதலால் கோட்டையின் வடக்கு நெட்டும் விரைந்து உடைந்து போம்; தன் படைகளை எளிதே உள்ளே செலுத்தி விடலாம் என்று அவ் வெள்ளைத்துரை எட்டப்பநாயக்கரோடு எதிர்பார்த்து நின்றார்; கருதியபடி யாதும் முடியாமையால் அவர் கருத்தழிந்து போனார். அவருடைய படை வீரர்களிலும் பலர் செத்து ஒழிந்தனர். மாண்டவர் உடலங்கள் கோட்டையைச் சூழ்ந்து கிடந்தன. மீண்டவர் யாவரும் பாடி வீடு போய்ச் சேர்ந்தனர். இருதிறத்தாரும் பொருது பட்டது கொடிய துக்கமாய்ப் பெருகி நின்றது. மூண்ட கொலைகளும்

நீண்ட புலைகளும் யாண்டும் துயரக் காட்சிகளாய்த் தொடர்ந்து நின்றன. உயிர் நீங்கிய உடலங்கள் உதிரங்களில் கிடந்தன.

## இறந்தவர் தொகை.

அன்று நடந்த போரில் பாஞ்சை வீரருள் பலர் இறந்து போயினர். பீரங்கிக் குண்டுகளையும் சுடு வெடிகளையும் கடுமையாக எதிர்த்து வீரவெறியோடு மேலேறிப் போராடினமையால் இவர்பால் இறப்பு அதிகமாயது. இடைவிடாது பொழிந்த குண்டுகளிடையே மூண்டு பாய்ந்தமையால் ஒருநாழிகை நேரத்துள் இருநூறு வீரர்கள் மாண்டு வீழ்ந்தனர். மூன்றரை மணியிலிருந்து ஆறு மணி வரையும் தொடர்ந்து நடந்த போரில் மொத்தம் முந்நூற்று முப்பத்தாறுபேர் இவர் பக்கம் செத்திருக்கின்றனர். பல வீரர்கள் படுகாயங்கள் அடைந்தனர். யாண்டும் அடுதுயரங்கள் மூண்டு மிடைந்து அவலங்கள் நீண்டு நின்றன.

## எதிரிகளின் இழவு

கும்பினிப் படையுள் பல சிப்பாய்கள் கைத் துப்பாக்கிகளோடு செத்துக் கிடந்தனர். கோட்டையைச் சுற்றியும் முள்வேலிக்கு வெளியேயும் இருநூறுக்கு மேலான பிணங்கள் சிதறிக் கிடந்தன. படைத்தலைவராய் வந்திருந்த வெள்ளைத்துரைகள் பலர் பிணக்குவியல்களின் இடையிடையே உடைமாறி உருக்குலைந்து கிடந்தனர். குடல் சரிந்தும் உடல் சிதைந்தும் எழு குதிரைகள் இறந்து கிடந்தன. மீண்டு போனவருள்ளும் பலர் படுகாயங்கள் பட்டிருந்தமையால் கூடாரங்களை அடைந்ததும் அங்கே சிலர் மாண்டு போயினர். தங்களுக்கு நேர்ந்த இழவுகளை நினைந்து கும்பினித் தளபதிகள் கும்பி கொதித்தனர். யாண்டும் அடையாத அல்லல்களை அன்று அவர் அடைந்திருந்தமையால் உள்ளம் கலங்கி உயிர் பதைத்து உளைந்தார். துயரங்கள் எல்லை மீறி எழுந்துநின்றன. மானக்கொதிப்புகள் வதைத்து வாட்டின.

பொட்டல் காட்டிலுள்ள ஒரு சிற்றரசன் என்று ஊமைத்துரையை எளிதாக எள்ளி வந்த சீமைத்துரைகள் பலர் துள்ளி விழுந்து செத்தார் ஆதலால் எஞ்சியிருந்த வெள்ளைக்காரர் எல்லாரும் நெஞ்சம் கலங்கி நெடுந்திகில் கொண்டு கடுங் கவலையோடு ஒடுங்கி யிருந்தார். செத்த இழவுகள் சித்தங்களைக் கலக்கின.

**"Of one hundred and twenty Europeans on the storming party, only forty six escaped unhurt."** **(M. R.)**

"போரில் மூண்டிருந்த நூற்று இருபது ஐரோப்பியர்களுள் நாற்பத்தாறுபேரே தப்பிப் பிழைத்தனர்" என்றமையால் அன்று செத்தவர்கள் தொகையை இங்கு உய்த்துணர்ந்துகொள்ளலாம்.

தந்திரசாலிகளாய் நின்று படைகளை நடத்தும் தலைவர்களே இவ்வாறு நிலைகுலைந்து மாண்டிருத்தலால் படை வீரர்கள் அழிந்துள்ள அழிவு நிலைகள் தெளிவாய் நின்றன. உள்நாட்டுச் சிப்பாய்களை எள்ளித் தள்ளி விட்டு வெள்ளையர்களையே பாஞ்சையர்கள் சீறி அழித்திருக்கின்றனர். மனப்பகையும் சினத் தீயும் மண்டியெழுந்துள்ளமையால் கண்ட இடங்களிலெல்லாம் படுகொலைகள் படிந்துள்ளன. யாண்டும் அடு துயரங்கள் அடர்ந்தன.

தலைமைத் தளபதி தவித்திருந்தது

நிலைமையை நேரே கண்ட சேனைத்தலைவர் நெஞ்சம் தளர்ந்து பட்டாளங்களைத் திருப்பிக் கொண்டு பாடி போய்ச் சேர்ந்தார். சேனை முழுவதும் யானை புக்க புலம்போல் அலமந்து வந்து அயர்ந்திருந்தது. புலிகளோடு பொருது மீண்டவர் போல் போர்ச் சேவகர்கள் யாவரும் மெலியடைந்து நெடுக் கலங்கி யிருந்தார்.

தலைமைத் தளபதியான மெக்காலே துரை எக்காலமும் காணாத இழிவும் இன்னலும் அடைந்து பழி அவமானங்களை நினைந்து பரிந்து நொந்தார். அவலக் கவலைகள் வெள்ளமாய்ப் பொங்கி உள்ளத்தில் ஓங்கி நின்றமையால் அவ் வெள்ளைத்துரை பல பல எண்ணிப் பகை வகையின் நிலைகளைக் கருதிப் படு துயருழந்தார்.

பாசறை அடைந்த பின்னர்ப் பரிந்துநொந் துடைந்து மீண்ட
நேசரை அயலே வைத்து நிலைகுலைந் துலைந்து வந்த
தேசுறு படையைச் சேரச் சீர்பெற நிறுத்தி அன்று
பூசலில்புகுந்த தெண்ணிப் புழுங்கியுள் ளுளைந்து நைந்தான்.

வந்ததன் நிலையை எண்ணும்; வருகின்ற வகையை எண்ணும்;
இந்திய நாட்டை எண்ணும்; இந்நகர் வீரம் எண்ணும்;
முந்தியிப் பகையை மூட்டி முடித்தவர் முறையை எண்ணும்;
சிந்திய புகழை எண்ணும்; சேர்ந்தவெம் பழியை எண்ணும். [2

மூண்டவெம் போரை எண்ணும்; மூட்டிய திறலை எண்ணும்;
மாண்டவர் தம்மை எண்ணும்; மானமும் மதிப்பும் விட்டு

மீண்டகன்று ஓடிப் போன வெள்ளையர் தம்மை எண்ணும்;
ஆண்டகை நிலையை எண்ணும்; ஆற்றிய ஆற்றல் எண்ணும்.
எய்திய இழவை எண்ணி எதிர்நிலை விளைவை எண்ணிச்
செய்திறம் இன்னதென்று தெரிகிலா தலமந் துள்ளம்
வெய்துயிர்த் தயலிருந்த வெம்படைத் துணைவர் தம்மோடு
உய்திறம் உசாவி நின்றான் உயர்திறம் உசாவி வந்தான். [4
(வீரபாண்டியம்)

சேனைத் தலைவர் மானத்தால் மறுகிப் பலவும் கருதிப் பரிந்திருந்த நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. உள்ளத் துயரங்களை உரைகளில் கண்டு உற்றவுண்மைகளை உணர்ந்துகொள்ளுகிறோம்.

## பொழுது அடைந்தது.

அந்திப் பொழுது நீங்கியது; அல்லிருள் ஓங்கியது ஓங்கவே அல்லல் அடைந்து வந்துள்ள படைகளை எல்லைசெய்து அமர்த்தியாண்டும் ஆறுதல் புரிந்தார். எல்லாரும் உணவுகள் உண்டார். இரவில் செய்ய வேண்டிய பாதுகாப்புகளையெல்லாம் இனிது கவனித்துச் சேனாதிபதி தனியே தனது கூடாரத்தில் அமர்திருந்தார். கொடிய மனக்கவலையுடன் மறுகியிருந்த அவரிடம் இரவு எட்டு மணிக்கு எட்டப்ப நாயக்கர் வந்தார். அவரைக் கண்டதும் துரை உவந்து அழைத்து அருகிருத்திப் பகலில் பட்டபாடுகளையெல்லாம் பரிந்து கூறினார். "நீர் மிகவும் உரிமையோடு பெரிய படைகளைக் கொண்டு வந்து எங்களுக்குத் துணை புரிந்து நின்றும் எதிரியை ஒன்றும் செய்ய முடியவில்லையே!" என்று இரங்கி நாணினார். "பாஞ்சாலங்குறிச்சியார் அதிசய வீரர் என உலகம் துதிசெய்து வருவதை இன்றுதான் நான் நேரே காண நேர்ந்தது" என்று அந்தச் சேனைத் தலைவர் நெஞ்சம் திறந்து சொன்னார். வெள்ளைத்துரை உள்ளம் கனிந்து சொன்ன அச் சொல்லைக் கேட்டதும் எட்டப்ப நாயக்கர் உள்ளத்தில் கொள்ளித் தீயை வைத்ததுபோல் கொடிய கொதிப்பாயது. "படைகளைப் பெயர்த்துக் கொண்டு முன்னம் மீண்டு போனது போல் பாளையங் கோட்டைக்குத் துரை போய் விடுவாரோ?" என்று அவர் பயந்துநின்றார். சில உபாயங்களை நயந்து பேசநேர்ந்தார்:

எட்டப்பன்: துரைகளே! இன்று நிகழ்ந்ததை நினைந்து யாதும் கவலை அடைய வேண்டாம்; போர் குறித்து நாம்

இங்கே புறப்பட்டு வந்த நாள் சரியில்லை.

**தளபதி:** நாளா! அது என்ன? தெளிவாச் சொல்லும்!

**எட்டப்பன்:** தாங்கள் சண்டைக்குத் தயார் செய்து எழுந்த தினம் புதன்கிழமை. அது நடுநாள் என்று சொல்லப்படும். தங்கள் பெயர் நிலைக்கு அது படுபட்சியுமாகும். அதனாலேதான் நமக்கு இந்தக் கெடு நிலை நேர்ந்தது. கெட்ட நாள் கேட்டை விளைத்தது.

**தளபதி:** என்ன! எட்டப்ப நாயக்கரே! மூட்டாள் தனமாய் உளறுகிறீர்! நாள் என்ன செய்யும்?

**எட்டப்பன்:** இல்லை துரைகளே! நாள் செய்வது நாட்டார் செய்யார் என்பது இந் நாட்டு வழக்கம். காலம் தான் எல்லாவற்றிற்கும் மூலமாயிருக்கிறது. எதையும் பருவம் அறிந்து செய்ய வேண்டும். சில காரியங்களுக்குச் சில தினங்கள் விலக்கப்பட்டுள்ளன. போருக்குப் புறப்படப் புதன் கிழமை பொருந்தவே பொருந்தாது. "புலியே ஆயினும் புதன் புடை பெயரின் எலியும் அதனை இழுத்துக் கோல்லும்" என்பது பழமொழி அந்த அவிநாளில் புறப்பட்டதனாலேதான் இந்த இழவெல்லாம் நாம் அடைய நேர்ந்தோம். நல்ல நாள் பார்த்து எழுந்திருந்தால் நமக்கு இவ் அல்லல் நேர்ந்திராது. பகையை முற்றும் தொலைத்து வெற்றி மிகப் பெற்றிருப்போம்.

**தளபதி:** நாளின் மேலும் ஊழின் மேலும் பழியைப்போடுவது மூட்டாள்தனமான உங்கள் நாட்டுவழக்கம். எங்களுக்கு அது தெரியாது. எதிரிகளின்வாள்களினாலேயே இப் பேரிழவாயது; இது தெளிவாகத் தெரிகிறது. அந்த வேலையும் வாளையும் விடுத்து ஊழையும் நாளையும் இழுத்து அவற்றின்மேல் பழியைச் சுமத்தித் தமது இழிவை மறைக்க முயல்வது கோழைகள் செயலேயாம். இன்று நாம் தோல்வியடைந்தது உண்மை. இனி வென்றி அடைய வேண்டிய விதங்களை ஆராய்ந்து வினை புரிய வேண்டுமேயன்றி நாளும் கோளும் என

வீணுரை பகர்ந்து வெறும்பொழுது போக்குவது
பெரும் பழியாம். பிழை வழியில் நுழைதலாகாது.

சேனைத் தலைவருடைய இந்த ஞான மொழிகளைக் கேட்டதும் எட்டப்ப நாயக்கர் வேறு ஒன்றும் பேசாமல் உள்ளம் நாணி எள்ளல் இழிவுகளை எண்ணி இனைந்து ஒதுங்கி யிருந்தார்.

வீரர்கள் யாரையும் இகழ்ந்து பேசார்; யாண்டும் நேர்மையாகவே நடந்து கொள்ளுவார். ஓர வஞ்சமாய் ஒண்டி ஒளிந்து கோளுரையாடுவதெல்லாம் நெஞ்சு பாழ் போன பேடிகள் செயலேயாம் என்பதை அன்று அங்கே நன்கு அறிய நேர்ந்தது.

வெள்ளைக்காரரிடம் சில நல்ல குணங்கள் அமைந்திருக்கின்றன. நேர்மை, சத்தியம், உண்மையான தகுதியைக் கண்ட இடத்தில் உவந்து பாராட்டுதல் முதலிய பெருந்தன்மைகள் நிறைந்திருத்தலினாலேதான் எவ்வழியும் அவர் உயர்ந்து வருகின்றனர்.

அன்று அவர் அடைந்த தோல்வியையும், பாஞ்சை வீரர்களுடைய அதிசய ஆண்மைகளையும் யாதும் ஒளியாமல் யாவரும் தெளிவாக அறியும்படி குறிப்புகள் எழுதி வெளியிட்டிருக்கிறார்.

"Our total failure of this day was perfectly inexplicable, and how the breach was defended, appeared almost miraculous"

"வெளியிட முடியாதபடி இன்று நாம் படுதோல்வியடைந்துள்ளோம்; எதிரிகள் கோட்டையைப் பாதுகாத்து வென்றது பெரிய அதிசயமாகவே தோன்றுகிறது" என்னும் இது இங்கே ஊன்றி உணர வுரியது. மிரேக்குலஸ் என்னும் ஆங்கிலப் பதம் அதிசயம், அற்புதம், தெய்வீகம் என்பவற்றை உணர்த்தி வரும்.

பீரங்கி முதலிய கொடுங்கருவிகளோடு பெரும் படைகளைத் திரட்டிக் கொண்டுவந்து போராடியும் எதிரியர்தம் அஞ்சாமல் நேரேறி வென்றிருப்பது அவர்க்குப் பெரிய வியப்பாய் நின்றது. எட்டப்பநாயக்கரிடம் நேரே அதைச் சுட்டியும் உரைத்தார்.

உன்படையும் என்படையும் ஒருமுகமாத்
தொகுத்தேற்றி யுருத்து எதிர்த்தோம்
முன்படையாய் நின்றுபல பீரங்கிக்
குண்டுகளை மூட்டி விட்டோம்

தன்படை ஒன்றேகொண்டு சமர்க்களத்தில்
அடர்ந்தேறிச் சார்ந்தா ரெல்லாம்
என்படைய ணிமடையப் பிணமலைகள்
ஆக்கினன் என்னே அம்மா!

இன்னவாறு இன்னலுழந்து உன்னியுளைந்து நொந்தார்.

தன் படைகளுக்கு நேர்ந்துள்ள புலையையும் எதிரியினுடைய நிலையையும் எண்ணி எண்ணி வியந்து கண்ணுறக்கம் கொள்ளாமல்சேனைத் தலைவர் மானத் துடிப்போடு மறுகிக் கிடந்தார்.

போரில் மாண்டவர் பாஞ்சை ஊரின் அயலே கிடக்க மீண்டு போனவர் யாவரும் அங்கே பாசறையில் படு துயருடையராய்ப் பரிந்திருந்தார். அவருடைய துயர நிலைகள் இவருடைய உயர் வீர வெற்றிகளை விளக்கி உறுதி உண்மைகளைத் துலக்கி நின்றன. பலவும் கருதி நிலைகுலைந்து மறுகினர்.

"This circumstance alone proves, how numerous the defenders must have been." [S. P. W]

"நாம் படு தோல்வி அடைந்துள்ள இந்த நிலைமை எதிரிகள் எத்துணை அளவில், எவ்வளவு திறலினராயிருந்துள்ளார்! என்பதை உய்த்துணரச் செய்துள்ளது" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி நோக்கி நன்கு உணரவுரியது.

## தோல்வியின் துயரம்.

பீரங்கி வெடிகள் முதலிய கொடிய கொலைக் கருவிகளோடு நெடிய படைகளும் கடிய வீறுடன் கடுத்து வந்து அடுத்து மூண்டு கடுமையாய்ப் போராடியுள்ளன. அடர்ந்து தொடர்ந்து பொருதும் படை வீரர்கள் மடிந்து மாய்ந்து இடங்கள் தோறும் பிணங்களாய்க் கிடந்தனர். இந்தக் கிடைகளை நினைந்து நினைந்து வெள்ளையர் உள்ளங்கள் வெந்து நொந்தன. இரவில் கண்களை மூடிப் படுத்திருந்தாலும் பகலில் நேர்ந்த போரும் படுசாவுகளும் அவருடைய எண்ணங்களில் தோன்றி இடர் புரிந்து நின்றன அன்று (31-3-1801) நடு நிசியிலும் நெடிய திகில் நிலவி நின்றது.

இருள் கழிவது மருளா யிருந்தது.

# இருபத்தோராவது அதிகாரம்

## படுகளம் துடைத்தது.



முதல் நாள் பகலில் பொருது தொலைத்து வெற்றி கொண்டுள்ளவர் இரவிலும் பாசறையுள் புகுந்து படுகொலைகள் செய்ய நேர்வர் என்று சேனைத் தலைவர் எவ்வழியும் எச்சரிக்கையாய்ப் பாதுகாத்து வந்தார். வெள்ளைத்துரைகள் பலரும் உள்ளம் கலங்கியிருந்தனர். படை வீரர்களும் இரவு நெடுநேரம் வரையும் கண் உறங்காமல் பகை நிலையை எண்ணி விழிப்பாகவே யிருந்தார். அவர் கருதி எதிர்பார்த்தபடி யாதொரு இடறும் நேரவில்லை. ஆகவே பாஞ்சையர் மீது சிறிது வாஞ்சையும் நேர்ந்தது. மூண்ட துயரங்களை நினைந்து யாவரும் கவலையோடு மவுனமாயிருந்தமையால் அந்தப் பாசறை முழுவதும் யாதொரு ஓசையுமின்றி யாண்டும் அமைதி நிலவி எவ்வழியும் இருளா யிருந்தது.

### இரவு கழிந்தது.

பொல்லாத எதிகளுடைய எல்லையில் இருக்கின்றோம்; கரிய இருளில் கொடிய அல்லல்கள் நேருமென நெடிய திகில்களோடு மறுகியிருந்த படைகள் விடிவுகண்டதும் பெருமகிழ்ச்சி கொண்டன. தளபதிகள் யாவரும் உளம் மிக மகிழ்ந்தனர். பகைவகையின் உயர்ந்த தகைமையை நினைந்து அவர் உவகைமீக் கூர்ந்தார்.

ஊமைத்துரை கருதியிருந்தால் அன்று இரவு எந்த இடரையும் எளிதே செய்திருக்கலாம்; அவ்வாறு யாதும் செய்யாமல் இதமாய் அமைந்திருந்தது, சீமைத்துரைகளுக்குப் பெரிய மதிப்பாய்ப் பிரியம் விளைத்து நின்றது. அந்த நிலையைச் சேனைத் தலைவர் குறித்துள்ள குறிப்பு தெளிவாக விளக்கி வெளி செய்துளது.

**"The enemy so far respected our grief, as to allow us it's unmolested indulgence." [R. G.]**

"எதிரி யாதொரு இடரும் செய்யாமல் தயை புரிந்து எங்கள் துயரத்துக்கு மிகவும் இரங்கி யிருந்தார்" என்னும் இந்த ஆங்கில வாக்கியம் ஈங்கு நன்கு நினைந்து சிந்திக்கத் தக்கது.

### எதிரியை எண்ணியது.

தன்மேல் பெரிய படையெடுத்து வந்து பொருது தோல்வி

யடைந்த படைகள் கோட்டையின் அயலே ஒரு மைல் தூரத்தில் கூடாரங்கள் செய்து கூடியிருக்கின்றன; இரவுவேளை; எதையும் எளிதே செய்யலாம்; அந்தப் பாசறை முழுவதையும் அன்று அடியோடு நாசம் செய்துவிடலாம்; அவ்வாறு யாதொன்றும் கருதவில்லை. நேரே வந்து மூண்டபோதே பகைவரோடு போராட வேண்டும் என்று ஆண்டகைமையுடன் உறுதி செய்திருத்தலால் ஊமைத்துரையினுடைய பெருமித நிலையையும் பெருந்தன்மையையும் நினைந்து சீமைத்துரைகளும் வியந்து கொள்ள நேர்ந்தனர்.

பகைமை மூண்டிருந்தாலும் தகைமை கண்டபோது யாரும் உவகை கொண்டாட நேர்கின்றனர். தம் படையை வென்று தொலைத்தற்கு இடமும் காலமும் இதமாயமைந்திருந்தும் அது செய்யாமல் நெறியோடு எதிரி அடங்கியிருந்தது அவர்க்குப் பெரிய நீதியாய்த் தோன்றியது. அதனை உலகம் அறிய ஓதினர்.

தம் படைகளின் பெருக்கையும் பீரங்கி முதலிய கருவிகளின் வலியையும் நினைந்து செருக்கிப் பாஞ்சையை எளிதே பிடித்துவிடலாம் என்று களி மிகுந்து வந்த கும்பினியார் அழிதுயரடைந்து பழி படிந்து நொந்து இரவு முழுவதும் மறுகியிருந்து மறுநாள் எழுந்ததும் முதல் நாள் விழுந்த இழவுகளையே எண்ணி இன்னலுழந்தனர். அழிவு நிலை அவலமாய் நீண்டு நின்றது.

## போர்க் களம்.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைச் சுற்றிப் பிணக்காடுகளாய்க் குவிந்து கிடந்தன. தன் படை வீரர்களுள் இறந்துபட்டவர்களை இரவே எடுத்து விரைந்து புதைத்துவிடும்படி ஊமைத்துரை உத்தரவு செய்திருந்தார் ஆகலால் அவ்வாறு யாவும் செய்யப்பட்டன. கும்பினிப் படைகளின் சவங்களே எங்கும் இழிந்து சிதைந்து அழிந்து கிடந்தன. அந்தப் படுகளக் காட்சி மிகவும் கோரமாயிருந்தது. குடல் சரிந்தும், உடல் சிதைந்தும், தாள் அழிந்தும், தோள் இழந்தும், தலை ஒழிந்தும், நிலைகுலைந்தும் இடங்கள்தோறும் பிணங்கள் விழுந்து கிடந்த நிலை கொடிய பரிதாபமாயிருந்தது. இரத்தச்சேறுகள் நிணங்களோடு செறிந்து பிணங்களின் அருகெங்கும் உறைந்திருந்தன. நாய்களும் நரிகளும் புலாலை நயந்து இரவிடை அயலே உலாவித் திரிந்தன. வேல்களும் வாள்களும் வெடிகளும் வல்லயங்களும் தொலை

யுருவழிந்து துண்டங்களாகி முண்டங்களோடு கண்ட இடங்கள் எங்கும் கலந்து கிடந்தன. அன்று இடை யாமத்தில் சிறிது வானம் இருண்டு கொஞ்சம் மழை தூவியதால் செத்துக்கிடந்த சவங்களெல்லாம் மெத்தவும் ஊதி விகாரமாய் வீங்கியிருந்தன. பிணங்கள் கிடக்கும் இடத்தில் பேய்கள் உலாவும் என்று அஞ்சி அயலிடங்களி லுள்ளவர் யாரும் வெளியே தலை நீட்டாமல் உள்ளே ஒடுங்கியிருந்தார். எல்லார் உள்ளங்களிலும் பொல்லாத திகில்களும் புலையான துயர்களும்நிலையா இடங்கொண்டிருந்தன.

இந்த நிலையில் அந்த இரவு கழிந்தது. பொழுது விடிந்தது; சூரியன் உதயமாகவும் ஊரயலிருந்த குடிசனங்கள் கூடிவந்து அப் பேரிழவைக் கண்டு பேதுற்று நின்றார். நாட்டுப் புறத்து மக்கள் முதலில் வேடிக்கையாய் வந்து பார்த்தாலும் கொலைகள் விழுந்து கிடக்கிற நிலைகளைக் கண்டதும் தம் குலைகள் நடுங்கிப் போரின் புலைகளை நினைந்து வியந்து விரைந்து விலகிப் போயினர்.

## சேனைத் தலைவர் சிந்தித்தது.

காலையில் எழுந்தவுடனே சேனாதிபதி ஆறுதை கவலையுடையராய் ஆலோசனைகள் செய்தார். முதல்நாள் மடிந்து போனவரை நினைந்து மனம் மிக வருந்தினார். பகைவனுடைய கோட்டை மதில் அருகே எல்லாரும் காணும்படியாக வெள்ளைக்காரர் இறந்துகிடப்பது அவருக்கு மிகுந்த வேதனையையும் நாணத்தையும் விளைத்தது. உடனே பிணங்களை எடுத்துப் புதைத்துவிட வேண்டும் என்று அவர் உறுதி கொண்டு ஊக்கி நின்றார். உப தளபதிகளுடன் கலந்து ஆலோசித்தார். அனைவரும் விரைந்து இசைந்தார். பிற்கட்டு தடுத்தார். "இறந்துபட்ட பிணங்கள் எதிரியினுடைய கோட்டை அயலே கிடக்கின்றன. அவற்றை எடுத்து அப்புறப்படுத்த இங்கிருந்து நம் சிப்பாய்கள் போனால் அவரையும் கொன்று அந்தப் பிணங்களோடு பிணங்களாக ஊமையன் ஆள்கள் செய்துவிடுவார்; ஆதலால் அவ்வாறுபோகலாகாது; அவனிடம் சமாதான முறையில் ஒரு தூதுவனை அனுப்பி உத்தரவுபெற்று அதன் பின்பே நாம் சவங்களை எடுக்க வேண்டும்" என்று அவர் யோசனை கூறினார். அந்த உண்மையை ஊன்றி யுணர்ந்து சேனாதிபதி அவ்வாறே செய்ய இசைந்தார்.

## தூது அனுப்பியது

ஏப்ரல் மாதம் முதல் தேதி (1—4—1801) காலை ஒன்பது மணிக்கு ஊமைத்துரையிடம் தூதுபோய் வரும்படி சுபேதார் என்னும் ஓர் இராணுவ அதிகாரியைச் சேனாதிபதி பணித்தார்; கடிதம் ஒன்று எழுதிக் கொடுத்தார். "இறந்து போன எங்களுடைய படைவீரர்களின் உடல்களை எடுத்து இராணுவ மரியாதையுடன் நாங்கள் புதைக்க வேண்டும் ஆதலால் போர்வீரர் ஆகிய தாங்கள் அதற்கு யாதொரு தடையும் கூறாமல் தயவு செய்து உடனே உத்தரவு கொடுக்க வேண்டுகிறேன்; பதில் எதிர்பார்த்திருக்கிறேன்" என இவ்வாறு வரைந்த நிருபத்தையும் உறவுரிமையுடன் வருவதை அறிவிக்கும்படி பச்சைநிறமுள்ள சமாதானக் கொடியையும் கொடுத்து அனுப்பினார் யாதொரு ஆயுதமும் இல்லாமல் துறவியர் கோலமாய் அந்தக் கொடியை நேரே தெரியும்படி மேலே உயர்த்திப் பிடித்துக் கொண்டு பாஞ்சைக் கோட்டையை நோக்கி அவன் வாஞ்சையுடன் வந்தான். பச்சைக் கொடியைத் தெளிவாய்க் காட்டி வருதலால் பகைவர் யாதொரு துயரும் செய்யார் என்னும் உறுதியோடு வந்தவன் தெற்குக் கோட்டை வாசலில் வேல்களோடு நிற்கின்ற காவலாளிகளைக் கண்டதும் சிறிது கலங்கினான். பின்பு துணிந்து அவரிடம் விடை பெற்று உள்ளே போய் ஊமைத்துரையைக் கண்டு வணங்கிச் சேனைத் தலைவரது நிருபத்தைச் சீரோடு நேரே கொடுத்தான்.

## ஊமைத்துரை உத்தரவு தந்தது.

சுபேதார் கொடுத்த அந்தக் கடிதத்தை இவர் வாங்கிப் பார்த்தார். சேனைத்தலைவர் எழுதியிருப்பதைக் குறித்து நோக்கிச் சிறிது சிரித்துக் கொண்டு அவனை முகமலர்ந்து உவந்து பார்த்து "உங்கள் சேனாதிபதி படைகளைத் திரட்டிக் கொண்டு வந்து பாஞ்சைக்கோட்டைக்குப் பலிகொடுத்து விட்டுச் செத்த சவங்களையா மீண்டும் கேட்கின்றார்? சரி எடுத்துக் கொண்டு போங்கள்!" என்று நகைச் சுவையுடன் இவர் நளினமாக உரைத்தார். அந்த உடன்படிக்கை உத்தரவை ஒரு துண்டுச் சீட்டில் எழுதிக் கொடுத்தருளும்படி அவன் பணிவோடு கேட்டான். இவர் இதமாகப் பதில் சொன்னார்: "நாங்கள் வாய்திறந்து ஒன்று சொன்னால் பின்பு அதற்கு மாறாக என்றும் நடவோம்; நீங்கள் பிணங்

களைத் தூக்கும்பொழுது இங்கு யாரும் யாதொரு இடையூறும் செய்யார்; உங்கள் கையெழுத்திலும் எங்கள் வாய்மொழி உறுதி மிகவுடையது; இந்த உண்மையை உங்கள் துரையிடம் போய்ச் சொல்லும்!" என்று இவர் சொல்லி விடுத்தார். அவன் விடை பெற்று வெளியே வந்தான்; கொடை பெற்றதை நினைந்து உவந்து ஒல்லையில் மீண்டு போய் உற்றதை யெல்லாம் உரைத்தான்.

மெலிந்த தேகியாயிருந்தாலும் வீர மடங்கல் போல் வீறு கொண்டுள்ள இவரது கம்பீர நிலையையும், கொன்னிப் பேசிய இனிய உரைகளையும் குறித்து அவன் துரைகளிடம் கூறி உவகை புரிந்து நின்றான். யாவரும் காரியங்களைக் கருதி விரைந்தார்.

பிணங்களை எடுத்தது

இறந்து கிடக்கிற தங்கள் படை வீரர்களுடைய உடல்களை உரிமையோடு எடுக்கநேர்ந்தார். வேலையாட்களும் சிப்பாய்களும் காலையிலிருந்தே துணிந்து தொழில் செய்தார். வரிசை வரிசையாய்ச் சவங்கள் எடுக்கப்பட்டன. கோட்டைக்கு வடமேற்கே ஒரு கல் தூரத்தே மைதானமான வெளியிடத்தில் பிணங்களைப் புதைத்தனர். சாதாரணமான சிப்பாய்களின் உடல்களைப் பெரிய குழிகள் பல தோண்டி ஒருங்கே போட்டு மருங்கெங்கும் மண் மூடிப் புதைத்தார். ஐரோப்பியத் தளபதிகளின் உருவங்களைக் கோரிகள் வளர்க்கும்படி கல்லறைகள் அமைத்துப் போர் மரியாதைகளுடன்பேர்விவரங்களைக் குறித்துப்புதைத்து வைத்தனர்.

வெளியில் நாறிக் கிடந்த எல்லாச் சவங்களும் குழிகளுள் புகுந்து மறைந்தன. காலை பத்து மணிக்குத் தொடங்கிய வேலை மாலை வரையும் நடந்தது. நிணங்களோடு நேரே மாறுடிப்பிணங் களைத் தூக்கிப் பெரும் பிரயாசையுடன் அன்று அவர் புதைத்து வந்த அவல நிலையை அயல் நின்று பார்த்தவர் எல்லாரும் அச்சமும் திகிலும் அடைந்து அயர்ந்து நின்றனர். இவ்வளவு பிணங் கள் குவிந்திருத்தலால் எவ்வளவு போர் நடந்திருக்கும்! என எண்ணி ஏங்கினர் மன்னனின் பதி வீரத்தை மதித்து நின்றனர்.

நாட்டு மக்கள் யாவரும் பாஞ்சை வீரர்களுடைய வெற் றிப் பிரதாபங்களை வியந்து பாராட்டிப் புகழ்ந்து பேசினர் "சீமைத்துரைகள் என்று செருக்கி யிருந்த வெள்ளைக்காரர்கள் எங்கள் ஊமைத்துரை ஊரில் வந்து உருக்குலைந்து மாண்டார்

கள்; இனிமேலாவது உணர்ச்சி வந்து ஒதுங்கிப் பிழைப்பார் களா? இந்த நாட்டு மண்ணுசை மண்டி வந்த வெள்ளையர்களை மண்ணுக்கே இரையாக்கி நம் மன்னன் விண்ணும் மண்ணும் புகழ விளங்கிநிற்கிருர். தன்னுடைய ஒரு அண்ணனைக் கொன்ற பழிக்குப் பல வெள்ளையர்களைப் பலிகொடுத்து வருகிருர். முன் னம் சொன்ன * வீர மொழியை மன்னன் நிறைவேற்றி வருவது மகிமையாயுள்ளது திக்குவிசயன் பெற்ற மகன் திக்கு எங்கும் இசைபெற்று வருகிருர். ஊமையன் என்ருல் சீமையும் திகில் கொள்ளுகின்றமையால் நம் அரசுக்கு தெய்வங்கள் கிருபை செய்துள்ளமை தெரிய வருகிறது" என இன்னவாறு பொது சனங்கள் பல பல பேசிப் பரிந்து புகழ்ந்து மகிழ்ந்து நின்றனர்.

கும்பினிப் படைகள் பிணங்களைத் தொகை தொகையா எடுத்துக் கொண்டுபோய்ப் புதைக்கும் இடங்களையும் பார்த்துப் பலர் பதைத்து இரங்கினர். படைத் தலைவர்களாய்ப் போர்க் கோலங்கள் கொண்டு குதிரைகளில் ஏறி வந்தவர் குழிகளில் வீழ்ந்து மறைவதை விழிகள் ஊன்றி நோக்கி வியந்து நின்ருர்.

"சீமையில் பிறந்திருந்தார் திரைக்கடல் கடந்து வந்து
தாமுயர் பொருள்கைக் கொண்டு தாய்நிலம் சார்ந்திடாமல்
ஊமையன் நகர்வாய் மாண்டார் ஒரிவாய் மீண்டார் மீண்டு
பூமிவாய் மறைந்தார் ஊழின் போக்கெவர் புகல்வா ரம்மா"!

என இன்னவாறு பன்னி மொழிந்து நாட்டுமக்கள் பரிந்து போனர். பகையாளிகள் என்று இகழ்ந்து பேசாமல் இரங்கிப் போனது அவரது இரக்க நீர்மையைத் துலக்கி நின்றது. இறந் தவர்பால் எவரும் பரிந்து அனுதாபம் புரிவது மனிதசுபாவமாய் மருவியுள்ளது. மானச நீர்மைகள் மதிநலங்கள் புரிகின்றன.

அந்தி அடைந்தது.

அன்று பகல் முழுவதும் மாண்டாரைப் புதைப்பதிலேயே வேலையாய் மூண்டு நின்ற அவர் மாலைப்பொழுது அடைந்ததும் மீண்டு வந்து நீராடி உண்டிகள் கொண்டு ஓய்வெடுத்திருந்தார்.

தம்மோடு துணைவர்களாய் வந்த படை வீரர்கள் பலர் மடிந்து மண்ணில் மறைந்ததை எண்ணித் தளபதிகள் உளம்

---

* பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திம் முதல் பாகம் பக்கம் 342 வரி 21, இந்நூல் பக்கம் 64 வரி 7முதல் முறையே கருதிப் பார்க்க.

மிக வருந்தினர். கோட்டை அருகே பிணங்களை எடுக்கும் பொழுது எதிரிகள் ஏதேனும் இடையூறு செய்தார்களா? என்று சேனைத்தலைவர் வினவி விசாரித்தார் "யாரும் யாதொரு இடரும் செய்யவில்லை; சிலர் அயலே வந்து நின்று உதவியும் செய்தனர். வழியே போகிற காலிகள் சிலர் தான் இன்று செத்த சவங்களை நாளைச் சாகும் சவங்கள் தூக்கிக் கொண்டு போகின்றன என்று கேலிகள் பேசிச் சென்றனர். பாஞ்சை வீரர்கள் பரிவுகூர்ந்தே நின்றனர்" என்று காரிய விசாரணைக்குக் கருதி வந்த தலைவர் எதிரிகளின் நிலைமையை உரிமையோடு பெருமையாக் கூறினர்.

அவ்வுரைகளைக் கேட்டதும் சேனாபதி உவந்து கொண்டார். பகைமையும் கோபமும் வளர்ந்திருந்தாலும் எதிரியினுடைய குண நீர்மைகளை நினைந்தபோதெல்லாம் அந்த வெள்ளைத் துரை உள்ளம் இரங்கிப் பரிந்தே வந்தார். அவருடைய வேண்டுகோளுக்கு இவர் உடனே இசைந்ததும், இசைந்தபடியே யாதும் மாறுமல் உண்மையோடு நடந்து வந்ததும் அவர்க்கு மிகவும் உவகை விளைத்து நின்றன. அரிய பண்புகளை அறிந்த போது யாரிடமும் பெரிய நண்புகள் பெருகி வர நேர்கின்றன.

அன்று நிகழ்ந்ததைக் குறித்திருக்கும் குறிப்புகள் இங்கே கருதிக் காண வுரியன. நிகழ்ச்சிக் குறிப்புகளில் நிலைகள் பல தெளிவாய்த் தெரிய வருகின்றன. ஒன்று அயலே வருகின்றது.

"Many of our late gay, and cheerful companions were lying at the foot of the breach unburied; and a flag of truce was consequently sent to the fort, to entreat permission to remove, and inter our dead.

This was kindly, and unconditionally accorded; and we then collected the disfigured, and gory bodies, and buried them in the evening, with military honours: the enemy, setting us a bright example of humanity, made not the smallest attempt to disturb us." [G. W.]

"எங்களுடைய அன்புக்குரிய இனிய துணைவர்கள் பலர் மடிந்து கோட்டையின் அடியில் யாரும் காண வெளியே கிடந்தனர். இறந்துபட்ட பிணங்களை எடுத்துப் புதைக்க உத்தரவு கொடுக்கும்படி கெஞ்சி வேண்டி உரிமையான சமாதானக் கொடியுடன் ஊமைத்துரையிடம் ஒரு தூதனை அனுப்பினோம்.

அதற்கு யாதொரு மாறும் கூறாமல், எந்த விதமான நிபந்தனைகளையும் எதிர்பாராமல் உடனே அன்போடு இசைந்தருளினார். அதன்பின் நாங்கள் சிதைந்து கிடந்த பிணங்களையெல்லாம் எடுத்துக் கொண்டுபோய் இராணுவ மரியாதைகளுடன் புதைத்தோம். எதிரி யாதொரு இடறும் செய்யவில்லை. சிறந்த பெருந் தன்மைக்கு ஒரு உயர்ந்த அடையாளமாக அன்று அவர் ஒளி புரிந்திருந்தார்" என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள். இதனை நன்கு ஊன்றி நோக்கி உணர வேண்டும்.

பாஞ்சை வீரர்களுடைய பாண்மையும் மேன்மையும் ஆண்மையும் அமைதியும் இதனால் இங்கே நன்கு தெளிவாகி யுள்ளன.

"A bright example of humanity" என்னும் இந்த ஆங்கில வாசகம் பாங்கு படிந்து வந்துள்ளது. சிறந்த மனிதத் தன்மை, உயர்ந்த பெருந்தகைமை, மிகுந்த கருணை ஆகிய இந்த நீர்மைகளுக்குச் சீர்மையான எடுத்துக் காட்டாக ஊமைத்துரை இருந்துள்ளமையை உணர்ந்து சீமைத்துரைகள் வியந்துள்ளனர்.

இயல்பாகவே இனிய நீரராயுள்ளவரைக் கொடிய கோபங்கள் மூட்டி நெடிய பகைவராக்கிக் கும்பினியார் வம்பாய்க் கொடும் போர் புரிந்து மடிந்து கடும்போர் காட்டிவருகின்றனர்.

அடங்கியிருந்தது.

மார்ச்சு மாதம் முப்பத்தோராந்தேதி காலையிலிருந்து மாலை வரை பீரங்கிகளோடு நாலங்கங்களையும் நடத்தி மூண்டு பொருதும் யாண்டும் பெரும் படைகள் மாண்டு மடிந்து போகவே அவர் மீண்டு உடைந்து போய்க் கூடாரங்களை அடைந்திருந்தனர்.

இந்தப் போரில் பாஞ்சாலங்குறிச்சியாரை விடக் கும்பினி யாருக்கே பெரிய சேதம் ஆதலால் அவர் மறுபடியும் போர் தொடங்க முடியாமல் மறுகி யஞ்சி நெஞ்சம் வெருவிநின்றனர்.

கொடிய கரு மருந்துகளும் நெடிய படைக் கருவிகளும் நிறைந்திருந்தாலும் எதிரிகளுடைய மன வுறுதியும் போராடும் திறனும் அவருக்குப் பெரிய பீதியை விளைத்தன. தம் படைகளை ஒரு சிறிதும் மதியாமல் மூண்டு பாய்ந்து யாண்டும் யாரும் மாண்டு படும்படி சீறிப் பொருது பாஞ்சை வீரர் வென்று போவது பெரிய அதிசயமா யிருந்தமையால் வெள்ளைத்துரைகள்

உள்ளம் வியந்து Miraculous என்று சொல்ல நேர்ந்தனர். எவ்வழியும் மனவுறுதியும் வினையாண்மையுமுடைய சீமையர் இவ்வழி ஊமையரிடம் படாத பாடுகள் பட்டுப் பரிசு குலைந்து வரிசையிழந்திருத்தலை இந்த வாய்மொழி வெளிப் படுத்தியுள்ளது.

ஆற்றல் மிகுந்த அரும்படையைக் கும்பினியார்
ஏற்றிச் சமரை எதிர்செய்தார்---காற்றில்
பறக்கின்ற பஞ்சாய்ப் பகைவரெல்லாம் அஞ்சி
இறக்கும் படிசெய்தான் என்று. (1)

ஊமைத் துரைநேர் உருத்துவந்த போதெல்லாம்
சீமைத் துரைகள் சிதறியே---சேமத்தை
நாடியே ஓடினார் காடும் புலிகாண
ஓடும் எருதுகள்போல் ஓய்ந்து. (2)

இன்னவாறு பீடும் பெருமையும் பெற்று அரிய அதிசய வீரராய் இவர் பெருகி இருந்தமையால் அவர் யாதொரு வழியும் தெரியாமல் அயலே செயலிழந்து மயலுழந்து மறுகியிருந்தார்.

தங்கள் படை வலியைக் கண்டு யாவரும் அஞ்சி ஒடுங்கும் படி செய்த கும்பினியாரைப் பாஞ்சை வீரர் அஞ்சி நடுங்கும் படி செய்திருப்பது அவருக்குப்பெரிய அவமானமாய் நீண்டது.

முதல் முறை வந்து பார்த்துச் சிந்தை கலங்கிப் பாளையங் கோட்டைக்கு மீண்டு போயினர். இரண்டாவது தடவை பெரும் படைகளோடு திரண்டு வந்து பொருதும் பல படை வீரர்களையும் தளபதிகளையும் இழந்து பரிதாப நிலையில் தோல்வியடைந்துபோய்ப் பாசறையில்மறுகி ஏசறவுடன் இரங்கியுள்ளனர்.

தங்களுடைய யுத்த தளவாடங்களையும் தீ வெடிகளையும் சிறிதும் மதியாமல் சீறி ஏறிப் போராடி வருகிற இவரது உள்ளத் துணிவுகள் வெள்ளையர்களுக்கு வியப்பையும் திகிலையும் விளைத்திருந்தன ஆதலால் மேலே விளைவதை நினைந்து இனைந்து உளைந்திருந்தனர். நெஞ்சக் கவலைகள் அங்கே நிறைந்து நின்றன.

## குண்டுகளின் கொடுமை.

சுடு வெடிகளுடைய இருபது பேர் முன் அக் கருவிகள் இல்லாத இருநூறு பேர்களும் எதிர் நிற்க மாட்டார். சிப்பாய்

ஒருவன் துப்பாக்கியை நீட்டினால் பெருங் கூட்டமும் சிதறி ஓடுவதை இப்போதும் நாம் கண் கூடாகக் கண்டு வருகிறோம்.

இந்தக் காட்சியைக் கொண்டு பாஞ்சாலங் குறிச்சியார் அக் காலத்தில் கும்பினியாருடைய குண்டுகளோடு நேர் நின்று போராடியுள்ள பேராண்மையை எண்ணி யுணர்கின்றவர்கள் இவர்களுடைய உள்ளத் திண்மைகளையும் உறுதி நிலைகளையும் கருதி யுருகுவர். வஞ்சம தெரியாமல் நெஞ்சம் துணிந்தே நேரே எதிர்ந்து செத்திருக்கின்றனர். மான வுணர்ச்சிகளும் வீரத் துடிப்புகளும் மீறி யாண்டும் வீறு கொண்டு போராடி யுள்ளனர்.

## சீர்திருத்தியது.

கொடிய குண்டுகளால் சின்ன பின்னமாய்ச் சிதைந்து படு சாவாய்ச் செத்துள்ளவர்களை யெல்லாம் விரைந்து எடுத்து அடக்கம் செய்துவிட்டு மேல் ஆகவேண்டியவைகளை ஊமைத்துரை வேகமாய்க் கவனித்து முனைந்து யூகமாய்க் காரியங்கள் புரிந்தார்.

பீரங்கிகளால் உடைபட்டிருந்த கோட்டை மதிலை இரவே கட்டி முடித்தார். கொத்தளங்களைச் செப்பம் செய்து ஆயுத சாலைகளை ஆராய்ந்து நிறைத்துப் படை வீரர்களை ஆற்றித் தேற்றி ஆதரித்து எல்லா ஆயத்தங்களையும் எதிர்நோக்கி ஆக்கினார்.

போரில் உடைந்து புறங்காட்டிப் போயுள்ள கும்பினிப் படைகள் மறுநாளும் மீண்டுவந்து மூண்டு போர் புரியும் என்று கருதி நின்றமையால் போருக்கு வேண்டிய யாவும் நேருக்கு நேரே கூர்ந்து பார்த்துக் குறிப்புகளோடு ஓர்ந்து அமைத்தார்.

முதல் நாள் பகல் முழுதும் போராடியிருந்தும் யாதும் சலியாமல் மேலும் போராட விரைந்து போர் வீரர்கள் மூண்டு நிற்கும் நிலையை நோக்கி ஊமைத்துரை உள்ளம் களித்து உறவுரிமைகளைப் பாராட்டி உறுதி பூண்டு பொருதிறலை நாடியிருந்தார்.

மறுநாள் விடிந்து காலையில் சமாதானக் கொடியுடன் கும்பினியாரிடமிருந்து தூதன் வந்தபோது தான் அன்றுபோர் இல்லை என்று தெரிந்தது. தெரியவே உரியவர்கள் யாவரும் ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி உத்தரவு கொடுத்து விட்டுச் சிறிது ஆறுதலடைந்து வேறு பல காரியங்களையும் சீருடன் கவனித்து வந்தார்.

போர் வீரர்களுக்கு வேண்டிய உதவிகளும் உணவு முதலி யன யாவும் வளமாய் நடந்து வந்தன. யாவரும் உறவுரிமை யாளர்களாதலால் அரசை ஒவ்வொருவரும் தனியுரிமையாகவே கருதி வந்தனர். வீரவுறவுகள் வீறுகொண்டு விறலுடன் நின்றன.

தலத்தின் அருகே பாடி வீடு கொண்டு தம் குலத்துக்கெல் லாம் கேடுசூழ்ந்துள்ள கொடிய பகைவரை அடியோடுவென்று ஒழிக்க வேண்டும் என்றே யாண்டும் உறுதி பூண்டு நின்றார் ஆக லால் போர் நிலையிலேயே கண்ணுங்கருத்துமாய் மூண்டுமுனைந்து யாவரும்எவ்வழியும் நண்டுஎண்ணி எதிர் நோக்கி யிருநதார்.

வெள்ளம்போல் திரண்டு வந்த வெள்ளையர் படைகள் எல்லாம்
பள்ளம்போம நீர்போல் ஓடிப் பதுங்கின; பாஞ்சை வேந்தன்
உள்ளம்போல் உருத்து வென்ற உரமுறு படைகள் நீர்மேல்
வள்ளம்போல் உலாவிநின்று வாகைகொண் டுயர்ந்த வன்றே.

பாஞ்சை வீரர் படைகள் இன்னவாறு வென்று விளங்கி யிருந்தன, மறங்காட்டிப் போராட வந்த கும்பினிப் பட்டாளங் கள் புறங்காட்டிப் போய் அங்கே ஒரு புறங்காட்டையும் கண்டு புலம்பி நின்றன. போரழிவு சீரழிவாய்ச் சேர்ந்து நின்றது.

வெற்றி பெற்ற இவர் இங்கே வீறு கொண்டு இருந்தனர். வெருண்டு சென்ற அவர் அங்கே மருண்டு மயங்கி மறுகிநின்ற னர். இருவகை நிலைகளும் இருவேறு நிலையில் பெருகியிருந்தன.

## வெள்ளையர் வெருவி யிருந்தது.

கருமருந்துகள் நிறைந்த கடிய கொடிய நெடிய படைக ளோடு பெரிய போர் வீரர்களும திரண்டு வந்து முரண்டு முனைந்து மூண்டு போராடியும் பாஞ்சை வீரர்கள் எதிரே படு தோல்வி அடைந்து ஆங்கிலத் தளபதிகள் பலரை இழந்து அவல முழந்திருந்தமையால் தலைமைத் தளபதி உளத்தில் தாங்க முடி யாத துயரங்களும் அவமானங்களும் ஓங்கி நின்றன. அன்று போரில் அவரும தெய்வாதீனமாய்த் தப்பிப் பிழைத்திருக்கிறார்.

"Luckily came off unhurt" [R. G.]

"அதிட்டவசமாய்ச் சேதமின்றி உயிர் தப்பி வந்தார்" என்று இவ்வாறு குறித்திருத்தலால் பெரிய சேனைபதி அன்று அங்கே சாகாமல் உயிர் தப்பி மீண்டுள்ள உண்மையை நண்டு உய்த்து உணர்ந்து கொள்கிறோம். நேர்ந்திருக்கின்ற இழவு நிலை கள் வெள்ளையர்கள் எல்லாருக்கும் கொடிய அல்லல்களோடு நெடிய எள்ளல்களாகவும் நீண்டு உள்ளங்களைக்கலக்கின்றன.

# இருபத்திரண்டாவது அதிகாரம்

## அடுசமர் சூழ்ந்தது

உடைந்து போன படைகளோடு பாசறையில் உறைந்திருந்த சேனைத் தலைவர் நேர்ந்த நிலைகளை யெல்லாம் நினைந்து நெஞ்சம் கவன்றார். நெடிது சிந்தித்தார். இருமுறை படையெடுத்து வந்தும் இழிந்துபட்டுள்ளமையால் அந்த இழிவு அவர்க்கு அதிதுயரமாய்ப் பழிவேதனைகளை விளைத்தது. தன் கைவசமுள்ள பட்டாளங்களைக் கொண்டு தான் யாதொன்றும் செய்ய முடியாது என்ற முடிவுக்கு வந்தார். மறுகி எறிய கவலைகள் எவ்வழியும் மூறுகி நின்றன. எதிரியினுடைய மனநிலையையும் படைவலிகளையும் அடலாண்மைகளையும் எண்ணி யுணருந்தோறும் கும்பினி ஆட்சி இந்நாட்டில் குலைந்து போய்விடும் என்றே அவர் அஞ்சி உளைந்து அமைந்து நின்றார். ஆயினும் உள்ளம் துணிந்து காரியங்களை ஊக்கிக் கவனித்து உறுதி புரிந்து வந்தார்.

முன்பு போனது போல் பாஞ்சைக்கோட்டைக்கு இப்பொழுதும் போய்விடலாமா? அங்கிருந்துகொண்டே ஆக வேண்டியவைகளை ஆயத்தம் செய்து வரலாமா? என்று ஒருமுறை கருதினார். அவ்வாறு செய்வது பெரிய தவறும் என எண்ணி யமர்ந்தார். பாசறையைவிட்டு வெளியேறக் கூடாது என்னும் யோசனையை உறுதி செய்து எவ்வழியும் கரும நிலைகளைக் கருதி முயன்றார்.

### பாசறை

பாசறை என்பது பகைவனோடு போராடச் சென்ற படைவீரர்கள் அயலே தங்கியிருக்கும் இடம். பாடிவீடு, பாளையம், படைநிலை எனவும் இது கூறப்படும். கோட்டைக்கு ஒரு மைல் தூரத்தில் இடம் பெற்றிருந்த இந்தப் படை நிலையத்தைத் திடமாகச் செய்து கொண்டார். எதிரியினுடைய இயல்புகளை எதிர் அறிந்து யாவும் அவர் பலமாக அமைத்தார். அந்த அமைப்புகளை அவருடைய குறிப்புரைகள் தெளிவா விளக்கி யிருக்கின்றன.

"The pioneers, dooly bearers, and lascars, were employed to make temporary shelter for the arms of the men on duty, with small breast-works. [M. R.]

"இராணுவ வேலைக்காரர், கூலிகள், சாமான் தூக்கிகள் யாவரும் படைவீரர்களுக்கு வேண்டிய இந்தப் பாடியை விரைந்து செய்தனர்; எதிரே மார்பளவு சுவர்கள் மறைவாக வளர்க்கப்பட்டன" என்று தமது இருப்பின் நிலைமையை அவர் முறையே குறித்துள்ளார். இதனால் அவர் பாசறையை நிலையாகப் பலப்படுத்தி அரிய பலயோசனைகளுடன் அமர்ந்திருக்கும் திறம் தெரியலாகும்.

இவ்வாறு எவ்வகையும் செவ்வையாகக் கருதிச் செய்து மேலேயுள்ள கும்பினி அதிபதிகளுக்குப் பாஞ்சையின் வலிமையைத் தெளிவாக எழுதி அரிய பெரிய படைகளையும் ஆற்றல் மிகுந்த பீரங்கி வெடிகளையும் உடனே அனுப்பியருளும்படி வேண்டி விண்ணப்பித்து யாண்டும் மூண்டு முயன்று வந்தார்.

கலெக்டர் எஸ். ஆர். லஷிங்டனையும் பாசறையில் அழைத்துவைத்து உள்நாட்டில் செய்து வரவேண்டிய உதவி நலங்களையும் குறித்து உரைத்தார். ஜில்லா அதிகாரி எல்லாக் காரியங்களையும் ஒல்லையில் கவனிக்க நேர்ந்தார் திரிசிரபுரம் இராமநாதபுரம் மதுரை திருநெல்வேலி முதலிய மண்டலங்களில் யாண்டும் படைகளும் யுத்த தளவாடங்களும் எத்தகைய வகைகளிலும் ஈட்டப்பட்டன. அதிகாரிகள் யாவரும் அதிவேகமாய் முயன்றனர். யூகவிவேகங்கள் மானவேகங்களாய் மருவி வேலைகள் செய்தன.

## கும்பினி கும்பியது.

தலைமை நிலையமான சென்னையிலுள்ள கும்பினி அதிபதிகள் பாஞ்சையின் நிலைமை தெரிந்ததும் நெஞ்சம் கொதித்தனர். நெடிது திகைத்தனர். சேனைத் தலைவர்களாய்ச் சென்ற வெள்ளையர் பலர் பாஞ்சைக் கோட்டையில் செத்தொழிந்தார் என்று அறியவே யாவருக்கும் பெரிய திகில்கள் உண்டாயின. இந்த நாட்டை விட்டுக் கும்பினி ஆட்சி அடியோடு அழிந்து போக நேர்ந்ததாகவே நினைந்து நினைந்து நெடிது தளர்ந்து வெள்ளையர்கள் எல்லாரும் உள்ளம் கலங்கி உறுதி குலைந்து பெரிதும் மறுகினர்

"புலி கிடக்குது பொந்துக்குள்ளே அதன்
கெலி அடிக்குது சிந்தைக் குள்ளே."

என இந்நாட்டில் வழங்கி வரும் பாட்டு ஊமைத்துரையை நினைந்து சீமைத்துரைகள் கலங்கிய கலக்கத்தைத் துலக்கியுள்ளது.

இந்தியாவில் எந்த நாட்டையும் எளிதே கைப்பற்றி வந்த வெள்ளையர் தென்னாட்டு மூலையிலுள்ள ஒரு சின்னப் பாளையகாரனை வெல்ல முடியாமல் வெருண்டு திகைத்து மருண்டு மயங்கி நொந்தது இந்தப் பாண்டிய நாட்டின் ஆண்டகைமையையும் வீரத் திறலையும் உலகம் அறிய உணர்த்தி நின்றது. தென்பாண்டி நாட்டினான் திசை கம்பம் நாட்டினான் எனப் பாஞ்சை மன்னன் பாடல் பெற்றுள்ளமை ஆடல் வென்றியாய் அமைந்து விளங்கியது. நாட்டு வீரங்களைப் பாட்டுகள் நேரே காட்டிவருகின்றன.

## அருந்திறல்

யாரும் எவ்வகையிலும் மீள முடியாதபடி நெடிய பாதுகாப்போடிருந்த கொடிய சிறையை உடைத்து மீண்டு வந்து ஐந்தே நாளையில் கோட்டையை அமைத்துக் கோ முடி தரித்து மூண்டு வந்த கும்பினிப் படைகளை யெல்லாம் மாண்டுபட நூறி மேலும் வருவன வருக என வீரவுரை கூறி உக்கிர வீரபாராக்கிரமமாய் ஊமைத்துரை உறுதி பூண்டு நிற்கும் நிலை அரிய பெரிய ஒரு வெற்றிக் காட்சியாய் வீறுகொண்டு விளங்குவதால் யாரும் இதனை அதிசயமாய் வியந்து துதி செய்ய நேர்ந்தனர். இளமையிலேயே அஞ்சா நெஞ்சராய் யாண்டும் ஆடலாண்மை புரிந்து வந்துள்ளமையான் இவரது வீரத் திறல் வியத்தகு நிலையில் விளங்கியுள்ளது. உரிய குல வீரம் உலகமறிய உலாவி நின்றது.

## ஊமையனும் கரிகாலனும்

கரிகாலன் என்பவன் ஒரு சோழ மன்னன் சிறந்த போர் வீரன். பிறந்தபோதே தந்தை இறந்து போனமையால் பகைவரால் அல்லல் பல அடைந்தான் பதினாறு வயது பாலியமாய் இருக்கும் பொழுது வஞ்சச் சூதால் பிடித்துப் பகைவர் அவனைச் சிறைப்படுத்தி விட்டனர். எவ்வழியும் தப்பாதபடி திட்பம் மிக்க பாதுகாவல் செய்து வைத்து அவனது அரசைக் கவர்ந்து கொண்டு அவர் வரிசையோடு வாழ்ந்தனர். கடினமான காவலுடைய அந்தக் கொடிய சிறையிலிருந்து வெளியேறி விரைந்து சென்று தனது அரசுரிமையை மீட்டிக்கொண்டு எதிரிகள் அனைவரையும் அடியோடு வென்று வெற்றி முடி சூடிக் கொற்றக் குரிசிலாய் உலகையாண்டு உயர்ந்த புகழுடன் அவன் சிறந்து வாழ்ந்தான். அவனுடைய வாழ்வு வீர ஒளியாய் விளங்கி நின்றது.

"கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர்பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
நுண்ணிதின் உணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப்பு ஏறி வாள்கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான் செற்றோர்
கடியரண் தொலைத்த கதவுகொல் மருப்பின்
முடியுடைக் கருந்தலை புரட்டு முன்தாள்
உகிருடை அடிய ஓங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்ப
அழல்வாய் ஓரி அஞ்சுவரக் கதிர்ப்பவும்
அழுகுரல் கூகையோடு ஆண்டலை விளிப்பவும்
கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
பிணந்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்
அருங்கடி வரைப்பின் ஊர்கவின் அழியப்
பெரும்பாழ் செய்தும் அமையான் மருங்கற
மலை அகழ்க்குவனே! கடல்தூர்க் குவனே!
வான் வீழ்க்குவனே! வளிமாற் றுவன்என" (பட்டினப்பாலை)

கூட்டில் அகப்பட்ட புலிக்குட்டி போலச் சிறையில் அகப் பட்டிருந்த கரிகாலன் அதனைத் தகர்த்து வெளியேறித் தனது அரசைக் கைப்பற்றிப் பகைவரைத் தொலைத்து வீர முழக்கம் செய்து வெற்றி பெற்று நின்ற நிலையை இதில் கண்டு வியந்து கருதி மகிழ்கின்றோம். மலையைக் கல்லுவன், கடலைக் கலக்குவன், வானைவீழ்க்குவன், வளியை மாற்றுவன் என அவனது அதிசய ஆற்றலை உலகம் இவ்வாறு ஈடு செய்திருக்கிறது. கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியிருக்கிறார். கவியின் பொருள்களையும் சுவைகளையும் கருதிக் காணுக. அருந்திறலாண்மைகள் இதில் நிறைந்திருக்கின்றன.

கொடிய சிறையிலிருந்து வெளியேறித் தன்னுடைய உரிய அரசை அடைந்து அடலாண்மையோடு பகைவரை வென்று வீரப்பிரதாபத்துடன் விளங்கி நிற்றலால் அந்தச் சோழமன்னன் இந்த ஊமைப் பாண்டியனுக்கு ஈண்டு உவமையாய் வந்தான்.

சரித்திர வீரர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் யாண்டும் விசித்திர நீர்மைகளோடு விளங்கி நிற்கின்றன. மேல் நாட்டு வீரனான நெப்போலியனும் சிறையிலிருந்து தப்பி அரிய பல காரியங்களைச் செய்திருக்கின்றான். அல்லல்களும் அவலங்களும் எல்லை மீறி எதிர்ந்தாலும் வீரர்கள் உள்ளம் தளராமல் ஊக்கி எழுந்து உறுதியோடு துணிந்து மேல்ஏறி உயர்ந்து செல்கின்றனர்.

## முற்றுகை செய்தது

எதிரியினுடைய அருந்திறலாண்மைகளை நேரே தெரிந்ததும் கும்பினித் தளபதிகள் வேறு வம்புகள் யாதும் விளைக்காமல் மேலிருந்து வருகிற சேனைத்துணைகளை எதிர்பார்த்துக் காலம் கருதி யிருந்தனர். இரண்டு தினங்கள் கழிந்தன. மூன்றாவது நாள்முதல் பாஞ்சைக்கோட்டையை முற்றுகை செய்துகொள்ள வேண்டும் என்று சேனாதிபதி உய்த்துணர்ந்து உறுதி பூண்டார். அயலூர்களிலிருந்து பாஞ்சாலங்குறிச்சிக்கு யாரும் செல்லாமலும், வெளியிடங்களிலிருந்து யாதொரு உணவுப் பொருள்களும் உள்ளே புகாமலும் செய்ய வேண்டும் என வெய்ய யோசனையுடன் விரகு புரிந்தார். கபட யுத்திகள் கடுமைகளாய் நீண்டன.

சாப்பாட்டுக்கு யாதும் வழியில்லாமல் கோட்டையிலுள்ளவர்களைப் பட்டினி கிடந்து பதைக்கும்படி செய்துவிட்டால் எதிரிகள் தாமாகவே பணிந்து விடுவர் என்று துணிந்து கொண்டமையால் இந்தக்கொடிய சூழ்ச்சியை அவர் விரைந்து செய்தார்.

"Major Macaulay determined to turn the siege into a blockade" (S. P. W.)

"மேஜர் மெக்காலே அந்தப் படையிருப்பை முற்றுகையாக மாற்றினார்" என்னும் இக்குறிப்பினால் அவர் அன்று ஆற்றியிருந்தமை அறியலாகும். கொடுமைகள் கடுமையாக மூண்டுநின்றன.

எதிரியின் பலத்தை எவ்வழியும் குறைத்து மேலே புதிதாய்த் திரண்டு வருகிற கும்பினிப்படைகளை எதிர்பார்த்து அதி சாதுரியமாய் அவர் காரியம் புரிந்து வந்தார். கருமச் சூழ்ச்சிகள் மருமங்களாய் மருவித் தரும நீதிகளை மறந்து தவறுகள் புரிந்தன.

தமது பட்டாளங்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்களை எல்லாம் இடங்கள்தோறுமிருந்து அவர் அடைந்து வந்தமையால்

காரியங்கள் யாவும் வீரியங்களாய் நடந்து வந்தன. காய் கறி பால் தயிர் முட்டை கோழி ஆடுகள் முதலியன நாட்டுப்புறங்களில் உள்ளவர்கள் நாளும் கொண்டு வந்து கொடுக்கும்படி கலெக்டர் தமது கீழுள்ள உத்தியோகத்தர்கள் மூலம் ஏற்பாடு செய்திருந்தார் ஆதலால் அவை முறையேவந்துகொண்டிருந்தன.

தம்முடைய படைவீரர்கள் உண்டு கொழுத்துச் செழித்து வரவும் எதிரிகள் இளைத்து மெலிந்து களைத்து அயரவும் காரியச் சூழ்ச்சிகளை இழைத்து அவர் உழைத்து வந்தார். எப்படியும் பகையைத் தொலைத்து விடவேண்டும் என்ற வகையிலேயே அவருடைய உழைப்புகள் தழைத்து வந்தன. ஊனமான வழிகளில் ஊறுபாடுகள் ஓங்கி மாறுபாடுகள் கிளர்ந்து வளர்ந்தன.

ஐந்து தினங்களுக்குப் பின்புதான் சேனைத் தலைவர் செய்துள்ள மித்திர பேதமான முற்றுகை நிலை ஊமைத்துரைக்குத் தெரிய வந்தது. ஊமைத்துரை செயல் சினத்தை விளைத்தது.

போரில் புறமுதுகிட்டு உடைந்தபோதே முன்னம்போல் ஜயங்கோட்டைக்கே படைகளோடு மீண்டு போய்விடுவார் என்று முதலில் எண்ணியிருந்தார். பாடி நிலையத்தை நிலையாகப் பலம் செய்து கொண்டுள்ளமையை அறிந்தபிறகுதான் அவரது இருப்பும் குறிப்பும் விருப்பும் விரகும் சரியாத் தெரிய நேர்ந்தன. நேரவே எதிர்நோக்கி யாவும் அதி வேகமாய்க் கவனித்தார்.

தன் படை வீரர்களுக்கு வேண்டிய உணவுப் பண்டங்கள் எல்லாம் முன்னமே மூன்று மாதங்களுக்குப் போதுமானபடி தொகுத்து வைத்திருந்தார். அதன் பின்னரும் வேண்டியவைகளை அரண்மனை அருகே பண்டகசாலைகளில் நிறைத்து வந்தார். உண்டிகுறையின் ஊக்கம் குறையும் ஆதலால் அந்தக்குறைபாடுகள் யாதும் நேராமல் முன்னெச்சரிக்கையாப் பாதுகாத்தருளினர்.

கும்பினியார் குறித்துச் செய்து வருகிற கொடுஞ் சூழ்ச்சிகளுக்கெல்லாம் இவர் யாதும் இடம் கொடாமல் எதிர்த்துச் செய்யநேர்ந்தார். முற்றுகை நீண்டால் பட்டினிகிடந்து சாவார் என்று பட்டிமையோடு கேடு சூழ்ந்துவருகிற அவருக்கு இவர் இடையிடையே தம் பாடு காட்டி வந்தார். எதிரிகளுடைய நிலைமைகளை எதிரறிந்து செய்து வந்தது மதியூகமாய் மருவி நின்றது.

ஆண்டுகள் பலவாயினும் யாதொரு குறையுமின்றி உண்டு வாழ ஈண்டு எமக்கு இடமுண்டு என்பதைப் படை வீரர்களுடைய அடலாண்மைகள் யாண்டும் அவர்க்குத் தெளிவாக உணர்த்தி வெளியே வீர வேலைகளை விரைந்து செய்து வந்தன.

"தண்டுக ளோடெதிர் சண்டைக்கு வந்தவர்
தாவிச் சமரைநேர் செய்யாமல்
பெண்டுகள் போலே ஒதுங்கிநீர் செய்வது
பேடிகள் செய்கிற பீடைகளே. (1)

சூழ்ந்து நரிகள்போல் சூழ்ச்சிக ளோடுநீர்
தொல்லைகளை மிகச் செய்தாலும்
வாழ்ந்துநாம் பாஞ்சையில் சிங்கங்கள் போலவே
மாட்சிமை யாகவே ஆட்சி செய்வோம்" (2)

என மாலை நேரங்களில் அந்தப் பாறை வழியாக உல்லாச விநோதமாய்ப் பாஞ்சை வீரர் இவ்வாறு பாடிப்போவர். கைகளில் ஏந்திய வல்லயங்களோடு வெள்ளைத் துரைகள் காதுகள் கேட்க இந்தத் தாளப் பாட்டைச் சந்தத்தோடு இவர் பாடிப் போவது நேருக்கு நேரே போருக்கு அறை கூவி அழைப்பபோல் அடல் மீறிநின்றது. ஆற்றலை விளக்கிஏற்றம் துலக்கிய

பட்டினியால் பதைத்துப் பணிவார் எனத் தாம் கருதி எதிர் பார்த்ததற்கு மாறாய் இவர் உறுதி பூண்டு ஊக்கி உலாவி வருவது அவர்க்குப் பெரிதும் அவமானமாஏமாற்றத்தைவிளைத்தது.

## பாரி பறம்பும் பாஞ்சை வரம்பும்

பாரி வள்ளலுடைய நகரை மூவேந்தரும் படைகளோடு வளைத்து முற்றுகை செய்து முரண் புரிந்திருந்தபோது கபிலர் அவருக்கு அறிவுறுத்தி யருளிய உறுதிமொழிகள் ஈண்டு உரிமையோடு கருதி ஓர்ந்து உண்மை நிலைகளை நன்கு உணர வுரியன.

"அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே;
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளையும்மே;
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே;
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே;
நான்கே, அணிநிற ஓரி பாய்தலின் மீதழிந்து

திணிநெடுங் குன்றம் தேன்சொரி யும்மே;
வானக ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே ஆங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளிற் கொள்ளலிர், வாளின் தாரலன்
யான் அறிகுவனது கொள்ளு மாறே;
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே" (புறம்)

மூன்று அரசர்களும் ஒருங்கு கூடி மருங்கு சூழ்ந்து முற்றுகையிட்டாலும் நீவிர் பாரியின் அரணைப் பற்ற முடியாது; தன் படையாளர்கள் நெடுநாள் உண்டு வாழத்தக்க பழங்கள் கிழங்குகள் தேன் முதலியன பல உள்ளன, அவ்வளவில் வாள் முதலிய வேறு எவ்வழியாலும் வெல்ல இயலாது; இசை வாணர் போல் பாடி வாருங்கள்! என்று ஈத்தருளுமாறு எடுத்துரைத்து நண்பனுடைய ஆடலாண்மைகளை எதிரிகளுக்கு அப் புலவர் இனிது எடுத்துக் காட்டியிருக்கும் இது இங்கே படித்துச் சுவைக்கத் தக்கது. பாட்டின் நீர்மை அரசின் சீர்மையைக் காட்டியுளது.

ஊமை அரசுக்கு இப்படி ஒரு உரிமைப் புலவர் அப்பொழுது அங்கே இல்லை; இருந்தாலும் சீமையர்களுக்குத் தமிழின் அருமை தெரியாது. ஆதலால் செவிடன் காதில் ஊதிய சங்கு போல் யாதும் பயன்படாமல் ஏதமடைந்து சேதமாயிருக்கும்.

## சிலுகுகள் வளர்ந்தது.

அயலிடங்களிலிருந்து பாஞ்சை நகருக்கு யாதொரு பண்டங்களும் போகாதபடி கும்பினியார் வம்புகள் செய்து வந்தார். ஆதலால் இருவகையாரிடமும் ஓயாமல் சிலுகுகள் நேர்ந்தன.

பட்டினி போட்டுப் பணியவைத்து விடலாம் என்று அவர் பாடுபட்டு வரவே இவர் யாண்டும் மாறுபட்டு எவ்வழியும் அவருக்கு அல்லல்களை விளைத்து வந்தார். முதலில் அவர் விரோதகரவாய் இடையூறுகள் செய்தமையால் இவர் பின்பு துணிவோடு துயரங்களை நேரே செய்ய மூண்டு நெடிது நீண்டார்.

பட்டாளங்கள் தங்கியுள்ள பாசறைக்குப் பால் தயிர் நெய் முட்டை கோழி முதலியன யாதும் யாரும் கொண்டு போக லாகாது எனப் பட்டிக் காட்டு மக்களுக்கு இவர் உத்தரவிட்டுத் தடை செய்ய நேர்ந்தார். இவருடைய ஆணைக்கு அடங்கி யாவ ரும் ஒதுங்கி எவ்வழியும் யாதும் உதவாமல் ஒடுங்கி நின்றனர்.

அயலூர்களிலிருந்து தங்கள் பாடிக்கு வந்துகொண்டிருந்த உணவுப் பண்டங்கள் தடைபடவே சேனைத் தலைவர் சிந்தனை செய்தார். எதிரியினுடைய அடலாண்மைக்கு அஞ்சி நாட்டுப் புறத்துச் சனங்கள் வராமல் நின்றுள்ளார் என்று தெரிந்து கொள்ளவே வெளியிடங்களிலிருந்து சாமான்களை வரவழைத்துக் கொண்டார். வாழ்க்கைப் பாடுகள் வம்புப் பாடுகளாயின.

சில சமையங்களில் சிப்பாய்கள் வெளியேறிப்போய் அரு கே உள்ள ஊர்களில் பண்டங்கள் வாங்கி வந்தனர். அவ்வாறு போக்குவரவுகள் நடந்து வருவதை அறிந்ததும் இவருடைய படை வீரர்கள் அந்தத் தொடர்புகளைத் தொலைக்க மூண்டனர்.

தக்க ஆயத்தங்களுடன் அவர் அயலிடங்களில் சென்று உணவுக்குரிய சாமான்களை வாங்கி வரும்பொழுது இவர் இடை வழியில் எதிர்த்து மறித்து அவற்றைப் பறித்துக்கொண்டு போயி னர். பண்டங்களைப் பறிகொடுத்து விட்டுப் பாடி வீட்டுக்கு வெறுங்கையராய் அவர் ஓடிப்போவதைக் கண்டு பேடிகளே! என்று இவர் கூடி வைது பெருநகை செய்து பேசி ஏசி வந்தார்.

இந்த வழிப் பறிகளும் பழிப்புரைகளும் இரண்டு வாரங்க ளாய்த் தொடர்ந்து நடந்து வந்தன. அதன் பின்பு சிப்பாய்கள் பாசறையை விட்டுத் தனியாய் வெளியே வராமல் உள்ளே அடங்கி நின்றனர் மாறுபாடான ஊறுபாடுகள் ஒடுங்கியிருந்தன.

திருநெல்வேலி தூத்துக்குடி முதலிய இடங்களிலிருந்து வேண்டிய சாமான்கள் பட்டாளங்களுக்கு இரகசியமாய் வந்து கொண்டிருந்தன. கலெக்டர் முதலிய கும்பினி அதிகாரிகள் அயலே ஆதரவாய் நின்று உணவுப் பண்டங்களை உதவி வந்தா லும் படைவீரர்களுக்குப் பாசறை வாழ்க்கை பலவகைகளிலும் இடையூறாகவே இருந்து வந்தது. வெளியே போரை நிறுத்தி யிருந்தாலும் உள்ளே போராட்டங்கள் மாருட்டங்களாய் மருவி நின்றன. இருதிறத்தாரும் கறுவு கொண்டே கடுத்து நின்றனர்.

கோட்டையை உடைத்து எதிரியை எவ்வகையிலும் தொலைத்து விடவேண்டும் என்றே வெள்ளையர் வீறு கொண்டு விரகு புரிந்து மாறுபாடுகளை நாடிக் கூடாரங்களுள் கூடியிருந்தனர்.

வந்த படைகளையெல்லாம் அடியோடு அழித்து ஒழித்து இந்த நாட்டில் எந்த நிலையிலும் கும்பினியாருக்கு இடங்கொடுக்கலாகாதென்று பாஞ்சை வீரர் சிந்தை துணிந்து சீறி நின்றார்.

இன்னவாறு இருதிறத்தாரும் பொருதிறத்திலேயே கண்ணும் கருத்துமாய்க் காரியங்களை வீரியங்களோடு விளைத்து வந்தார். செய்ய நேர்ந்துள்ள வினைகள் வெய்ய கொலைகளை விளைக்க மூண்டு வெவ்விய துயரங்களாய் விரிந்து நின்றன. அழிவுக்கு வேண்டிய ஆயத்தங்கள் யாண்டும்நெடிது நீண்டுவந்தன.

புதிதாய் வருகிற படைகளையே எதிர்நோக்கி அதிபதி ஆவலாயிருந்தார். அவ் வெள்ளைத்துரை அவ்வாறு கருதியிருந்தாலும் அவருடைய உள்ளத்தில் கவலைகள் பல கறுவி நின்றன.

அவல நிலைகள்

தம்முடைய படைகள் தங்கியுள்ள பாசறையை நாசம் செய்து பாஞ்சை வீரர்கள் படு துயரங்களை விளைத்து விடுவர் என்ற அச்சம் உச்சமாய் ஓங்கி நின்றமையால் சேனைத்தலைவன் யாண்டும் எச்சரிக்கையாய் இராணுவ வீரர்களை நிறுத்தி எவ்வழியும் செவ்வையாய்ப் பாதுகாத்து வந்தான். நெருப்புக்களைக் கக்குகின்ற நெடிய வெடிகளோடு துருப்புக்கள் எப்பக்கமும் சூழ்ந்து நின்று விழிப்பாய்க் காவல் புரிந்து வந்தன. மூண்ட போரில் எதிரிகளின் ஆண்டகைமைகளை நேரே கண்டவர் ஆதலால் யாவரும் நீண்ட திகில்களோடே நேர்ந்து நின்றனர். பகல் பொழுது ஒருவாறு பயமின்றிக் கழிந்தாலும் இரவு வேளை எல்லாருக்கும் இறவு காலமாகவே இணைந்திருந்தது. கருமருந்துகள் கைகளிலிருந்து உறுதி தந்து வந்தாலும் வெள்ளைக்காரர் உள்ளங்களில் பாஞ்சாலங்குறிச்சியாருடைய வீர பராக்கிரமங்கள் மிகுந்த அச்சங்களை விளைத்து வந்தன. தகுந்த உபாயங்களை நாடிச் சாதுரிய சாகசமாயிருந்தனர். தங்களுக்கு ஆதரவாக மேலே கும்பினியாரிடமிருந்து பெரிய சேனைகள் திரண்டு வருவதையே நாளும் எதிர்பார்த்து நாடி நின்றனர்.

# இருபத்து மூன்றாவது அதிகாரம்

## இடை நிகழ்ந்தது

போரில் தோற்றும் ஊரை நோக்கிப் போகாமல் பாடி சமைத்துப் படைத்தலைவன் அங்கே படிந்திருப்பதைப் பாஞ்சை வீரர் ஒரு பொருளாக மதிக்கவில்லை "வருகிற படைகள் வரட்டும்; சீமைச் சரக்குகள் இங்கே செல்லா" என்றே உள்ளம் துணிந்து இவர் ஊக்கி நின்றார். நேரே போராடுவதையே எதிர் நோக்கிப் போர் வீரர் முறையில் இவ்வாறு அமைதியா யிருந்தவர் தெவ்வர் செய்து வருகிற வெவ்வினைகளையும் சூழ்ச்சிகளையும் அறிந்து வெகுண்டு நொந்தார். பகைவகையினர் மிகையாய்ப் புரிகிற கொடுமைகள் கடுமையாய்க் கதித்து நெடுமையா எழுந்தன.

வெளியிலிருந்து உணவுப்பொருள்கள் யாதும் கோட்டைக்குள் புகாதபடி விரகு புரிந்ததோடு அமையாமல் உள்ளேயிருக்கிற கன்று காலிகளுக்கும் யானை குதிரைகளுக்கும் தீனிகள் சேராமல் ஆனிகள் செய்தனர். பசுக்களுக்கும் மாடுகளுக்கும் வேண்டிய தட்டை நாற்றுகள் அருகே நிறைய இருந்தமையால் அவை கவலையின்றி வாழ்ந்து வந்தன. வயல்களிலிருந்து பசிய புல் நாளும் வாராமையால் குதிரைகள் எல்லாம் மெலியத் தொடங்கின. அழகிய அப்பரிகளின் நிலைமைகள் பரிதாபமா யிருந்தன.

### புல்லில் விளைந்தது.

ஒரு நாள் பதினேழுபேர் கூலிக்காரர்கள் போல் வெளியே போய்ச் சாலிகுளம் அருகே நல்ல புல்லுகளை அறுத்துச் சுமைகள் கட்டிக் கொண்டிருந்தார். அந்த இரகசியத்தை எட்டப்ப நாயக்கர் தெரிந்து சில சிப்பாய்களிடம் சொல்லினார். இருபது சிப்பாய்களோடு தன் படையிலிருந்து ஐம்பதுபேரையும் அனுப்பி அந்தப் புல்லுக் கட்டுகளைப் பறித்துப் பட்டாளக் குதிரைகளுக்குக் கொண்டு வரும்படி குறித்து விடுத்தார். அந்த எழுபது பேரும் போய் அவரை வளைத்துக் கொண்டனர். பச்சைப்பசும் புல்லைத் தொகுத்துச் சுமைகளாகக் கட்டிக் கொண்டிருந்தவர் கபடமாய் வந்து அவர் வளைந்ததைக் கண்டதும் இதமுடன் வேண்டினார்: "குதிரைகள் பட்டினி கிடக்கின்றன; இந்தக்

கட்டுகளைத் தடை செய்யாதீர்கள்; விட்டுவிடுங்கள்" என்று வினயமாய்ச் சொல்லினர். அவர் யாதும் கேளாமல் மீறி வந்து கட்டுகளை எடுத்தார். உடனே சின்னவாலன் என்னும் வீரன் தனது இடையில் ஒளித்து வைத்திருந்த வாளை விரைவில் எடுத்து இருவரை வெட்டி வீழ்த்தினன். அவரும் திரண்டு அடித்தார். அடிக்கவே இவர் அனைவரும் மூண்டு பாய்ந்து கம்புகளால் முறிய அடித்தார். வந்தவருள் ஆறுபேர் மாண்டு வீழ்ந்தனர். இவருள் இருவர் செத்தார். இந்தக் கலகம் நடப்பதை அயலே நின்ற குதிரைப் பாகர் விரைந்து ஓடிப்போய் பாஞ்சையில் உரைத்தார். இருநூறு வீரர்கள் வேல்களோடு முடுகி மூண்டு வந்தார். அதற்குள் அவர் யாவரும் ஓடிப்போய் விட்டார். புல்லுக் கட்டுகள் யாவும் எடுத்துக் கொண்டு இவர் மீண்டு கோட்டைக்கு வந்தார். அந்த வரவு அதிசய வெற்றியா வந்தது.

பசியால் வாடியிருந்த பரிகள் எல்லாம் பசிய புல்லைக் கண்டதும் அதிசய ஆவலோடு தின்றன. புல்லுக்கட்டுகளில் சேர்ந்த மல்லுக்கட்டுகளில் புலையானகொலைகள் சூழ்ந்தமையால் இருவகையிலும் தொலையாத அயரங்கள் தோன்றின. எட்ட நின்று எட்டன் மூட்டியன ஒட்டார்க்கும் ஒட்டாரங்களாயின.

புல்லில் சேர்ந்த இந்தப் புல்லிய கலகம் முதலில் படைத் தலைவருக்குத் தெரியாது; நடந்த நிலையைப் பின்பு தெரிந்து அவர் பெரிதும் வருந்தினர். அல்லல்கள் எல்லாம் அவலங்களாயின.

புல்லலர் வளைந்து புல்லைத் தடுக்கவும் புரவி யுண்ண
நல்லதோர் இரையைநாடி நாங்கள்வந் தடைந்தோம் ஈண்டும்
அல்லல்செய் தகற்ற நீங்கள் அடைந்தது தகாதென் றுன்ற
சொல்லெலாம் சொல்லிப் பார்த்தும் துன்னலர் துயரேசெய்தார்.

செய்யவும் சின்ன வாலன் என்பவன் சினந்து பாய்ந்து
கையுறு வாளால் வெட்டிக் கடுத்தனன் அடுத்து நின்றார்
வெய்யவெந் தடிகள் கொண்டு வீசினர் வீச லோடும்
மொய்யமர் மூண்டதங்கே முனைந்திரு திறத்தும் மாண்டார் [2

காட்டிடை நின்றார் தம்மைக் கருதலர் கடுத்துச் சண்டை
மூட்டினர் என்ற செய்தி மன்னவன் செவியில் மூட்ட
ஈட்டிவேல் வல்லை யங்கள் எடுத்தனர் இருநூற்றன்னும்
வாட்டிறல் வீரர் ஓடி வந்தனர் வளைந்து கொண்டார். [3

வந்தவர் மண்டி ஏறி வன்சமர் புரிய நின்றார்
சிந்தினர் சிதறிஓடிச் சேனையைச் சென்று சேர்ந்தார்;
அந்தரம் தெரிந்து சேனை அதிபதி எட்டன் செய்த
விந்தையென் றிகழ்ந்துரைத்து வெறுத்துளம் வெகுண்டிருந்தான்.
(வீரபாண்டியம்)

இன்னவாறு மாறுபாடான சின்னக் கலகங்கள் இருவகையிலும் இடையிடையே நடந்துகொண்டு வந்தன. பகைமை மண்டியுள்ள பொழுது இடையிலிருந்து சிலர் நய வஞ்சகமாய்த்தங்கள் கடுப்புகளைத் தீர்த்துக் கொள்ளுகின்றனர். புகைந்துஎழுகிற தீயைப் போலவே நாளும் பகைத் தீமைகள் கிளர்ந்து நின்றன.

முற்றுகையிட்டு அவர் செய்து வருகிற அல்லல்கள் எல்லை மீறி வளர்ந்தமையால் இவரும் தொல்லைகளைத் தொடர்ந்து செய்து வந்தனர். கோட்டைக்கு மேல் புறம் அவர் போட்டிருந்த பீரங்கி மேடுகளை வெட்டியிழுத்தனர்; மருந்துப் பட்டறைகளைத் தட்டி நொறுக்கினர். பட்டாளத்திலுள்ள சிப்பாய்கள் தனியே அமைந்த பொழுது அவர்களிடமிருந்து ஆயுதங்களைப் பறித்துக் கொண்டு போயினர். யுத்த தளவாடங்களைக் கவர்ந்து வந்தனரேயன்றி எவரையும் வீணே அடித்திலர். தங்களைக் குறிவைத்துச் சுட்டவர்களை மாத்திரம் சூடுகளை வாங்கிக் கொண்டு விரைந்து பாய்ந்து வெட்டி வீழ்த்தி வெடிகளைப் பிடுங்கி வந்துள்ளனர். இவ்வாறு பறித்து வந்த வெடிகள் 160 சேர்ந்திருந்தன. தாங்கள் தங்கியிருக்கிற பாசறைக்குப் பாது காவலாக நான்கு திசைகளிலும் பதினாறு பீரங்கிகள் குண்டுகளோடு ஆயத்தமாய் அவர் வைத்திருந்தனர். ஒரு நாள் மாலையில் நேரேபுகுந்து அவற்றுள் இரண்டு பீரங்கிகளை இவர் கவர்ந்து கொண்டு வந்தனர். தொடர்ந்து பிடுங்க வந்த சிப்பாய்களை இவர் அடர்ந்து அடித்தனர். அவர் வெருண்டு மீண்டனர். ஆனவரையும் கொலைகள் விழாதபடி அதிசாதுரியமாய்ப் போர்க் கருவிகளை எவ்வழியும் இவர் வவ்வி வந்தது தெவ்வருக்குப் பெருந் திகைப்பாய் நின்றது. மூண்டு முட்டியபோதுதான் அவர் மாண்டு விழ நேர்ந்தனர். மூளாதவரையும் அவர் மாளாமல் ஒதுங்கினர்; இவர் எவரையும் வம்பாகத் தாக்காமல் கரு மருந்துகளையும் கைவெடிகளையும் பீரங்கிகளையுமே போரங்கிகளாகப் புகுந்து கவர்ந்து கோட்டையில் கொண்டு வந்து

நாட்டமாய்ச்சேர்த்தனர் இவரது குறிப்பை அவரும்குறித்துள்ளார்.

"The polegars, more intent on seizing the ordnance, than on injuring it's defenders." (R. G.)

"பீரங்கிகளைப் பறித்துக் கொண்டு போவதிலேயே பாளைய காரர் அதிக கருத்தாயிருந்தனர்; சிப்பாய்களை அவ்வளவாக அல்லல் செய்ய வில்லை" என்று சேனைத் தலைவர் குறித்திருக்கும் இந்தக் குறிப்பால் அந்த முற்றுகைக் காலத்தில் பாஞ்சை வீரர் கருதிச் செய்து வந்துள்ள காரியங்களையும் உறுதி நிலைகளையும் உணர்ந்து கொள்ளலாம். எதிரிகளை இகழ்ந்து தள்ளிவிட்டுக் கருவிகளையேயாண்டும் மூண்டு கவர்ந்துகொண்டுவந்துள்ளனர்.

புதிதாய் வருகிற படைகளை எதிர்பார்த்துப் பதிவாயிருந்து கொண்டு படுதுயரங்களை அவர் கடுமையாய்ச் செய்து வருத லால் இவர் பல வழிகளிலும் கொடுமைகள் செய்ய நேர்ந்தனர்.

இரவு நேரங்களில் பாசறையிலும் புகுந்து கலகங்களும் செய்தனர். அதனல் இருவகையிலும் மரணங்களும் நேர்ந்தன. இவர் அடல்மீறி உள்ளே வந்து அல்லல் செய்யவே அவர் பாடி வீட்டைச் சுற்றி எல்லைகள் வகுத்துப் பாதுகாப்பைப் பெரிதும் பலப்படுத்தினர். மாலை 6 மணிக்கு மேல் அப்பக்கங்களில் யாரைக் கண்டாலும் உடனே சுட்டு வீழ்த்தும்படி சேனைத்தலைவன் கட்டளை யிட்டிருந்தான். எட்டுத் திக்குகளிலும் பீரங்கிகள் ஆயத்தங்களாய் நின்றன. அயலே சூழ்ந்து இரவு முழுவதும் நாற்பத்தெட்டுச் சிப்பாய்கள் பிடித்த வெடிகளோடு காவல் காத்து நின்றனர். கொடிய குண்டுகள் கடிது சூழ்ந்து வந்தன.

அந்தக் காப்பு முறை மிகவும் கடுமையானது. தெரியாமல் அருகு நெருங்கினவர் எவரும் சுடப்பட்டுச் செத்து வீழ்ந்தனர். இந்த வகையில் இவருடைய இனத்துள் இருபத்து நான்கு பேர் மாண்டு போயினர். கடுமையாகவும் கொடுமையாகவும் பாது காப்பு மிகுந்திருந்தாலும் இடையிடையே புகுந்து அடுதிறலோடு இவர் பெரிய கலகங்களை விளைத்து வந்தனர். இருவகையிலும் கொலைகள் பல விழுந்தன. கோபதாபங்கள்கொதித்துஎழுந்தன.

நேருக்குநேர் எதிர்த்துப் போராடாமல் முற்றுகை செய்து அமைதியாய் ஒடுங்கியிருந்த இந்தக் காலத்திலும் படுகொலைகள்

நிகழ்ந்து வந்தன அடுதுயரங்களாய் நின்றன. அவர் சுடு வெடிகளால் சுட்டுக் கொன்றனர் இவரும் வெடிகளாலும் வேல்களாலும் வேட்டையாடி வந்தனர். இறந்துபட்டவர்களுடைய இழவுத் தொகை இந்த முறையில் கும்பினிப் படையுள் அதிகமாய்க் கூடி வந்தது. நாளும் சிலர் செத்தே ஒழிந்தனர்.

"We daily lost some men without being sure of the damage done to the enemy." (R. G.)

"எதிரிக்கு நட்டத்தை உண்டுபண்ண முடியாமலே நாளும் சிலரை நாம் இழந்து போனோம்" எனச் சேனாதிபதி உள்ளம் உளைந்து மொழிந்துள்ளமை கண்டு ஊன்றி உணரவுரியது.

முற்றுகை யிட்டுப் பாசறையில் இருந்து வந்த காலத்தில் நேர்ந்துள்ள நாச நிலையை இங்ஙனம் அவர் வரைந்து காட்டியிருக்கிறார். நடந்திருக்கிற நிகழ்ச்சிகளை உரைகளிலிருந்து நாம் கூர்ந்து ஓர்ந்து உண்மை நிலைகளைத் தேர்ந்து கொள்ளுகிறோம்.

பாடியை விட்டு எழுந்து அவர் ஓடிப்போய் விடவேண்டும் என்றே இவர் மூண்டு முனைந்து வேண்டிய இடர்களை விளைத்து வந்துள்ளனர். என்ன துயர் செய்தும் அன்னவர் பெயர்ந்திலர்.

கோட்டையைத் தட்டி நொறுக்கி ஊமையனைப் பிடியாமல் போவதில்லை என்று கும்பினிச் சேனைத்தலைவன் உறுதிபூண்டு எவ்வழியும் தக்க பாதுகாப்புடன் மிக்க ஊக்கமாய்க் குடிகொண்டிருக்கின்றான். குடியிருப்பு படிநெருப்பாய் மருவியிருந்தது.

பகைமைச் செயல்கள் படுதுயரங்களாய்ப் பெருகி நிற்கின்றன. இருபது தினங்களாக ஒருமுறையும் ஓராமல் இருபாலும் இவ்வாறு மாறி மாறிச் சிறுசுகளும் கலகங்களும் தொடர்ந்து நடந்துவந்தன. முடிவில் ஒருவாறு அடங்கிநின்றன.

இரவு சூழ்ந்தது.

ஏப்பிரல் மாதம் இருபத்துநாலாந் தேதி (24—4—1801) இரவு 10 மணிக்குப் பாஞ்சை வீரர் எழுபேர் கூடி ஓர் ஆலோசனை செய்தனர். பாடி வீட்டுள் கரவாகப் புகுந்து பட்டாளங்களைக் கட்டழிக்க வேண்டும் என்று கருதித் துணிந்தனர். துரைமல்லன், உருமன் என்னும் இந்த இருவரும் பாசறைக்குள்

போவதாக உறுதி பூண்டு உற்சாகமாய் ஊக்கி மூண்டனர்.

### பாடி புகுந்தது.

கச்சை வரிந்து கட்டினர். உடைவாளை இடையே மறைவாகப் பொதிந்தனர். எறிகிற வெடி குண்டுகளை முறையோடு கொண்டனர். பட்டாளங்கள் அமர்ந்திருக்கிற பாசறைக்குத் தென்மேற்கில் அரைமைல் தூரத்திலிருந்து மறைவாகப் பதுங்கினர் சிப்பாய்கள் அங்கே எவ்வழியும் விழிப்பாய்க் கடுமையோடு காத்து நிற்கின்றார்; வெளியே தலை தெரிந்தால் சுட்டு வீழ்த்தி விடுவர் ஆதலால் அக் காவலர் கண்ணுக்கு யாதும் தோன்றாதபடி தரையில் பதுங்கித் தவழ்ந்து சென்றனர். பாம்பு போல் வளைந்து வளைந்து போய்ப் பாடி வீட்டை நெருங்கினர். குதிரைகளுக்குக் காணம் அவித்து வைக்கிற பெரிய மிடாக்கள் ஆறு அயலே அவர் கவிழ்த்தியிருந்தனர் ஆதலால் அவற்றின் மறைவில் போய் இவர் ஒதுங்கினர். அப்பொழுது எச்சரிக்கையோடு பாசறையைச் சுற்றிவந்த சிப்பாய்களுள் ஒருவன் ஏதோ இரண்டு கறுப்புகள் தெரிந்தன என்று அடுத்து நின்றவரிடம் உரைத்தான். அவர் குறித்து நோக்கி மிடாக்கள் என்று உரைத்து அயலே சுற்றிப் போனார். அவர் அப்படிப் போகவே இவர் வேகமாய்ப் பதுங்கிப் பாசறைக்குள்ளே புகுந்தனர். நடுநிசி ஆதலால் யாவரும் அயர்ந்து உறங்கினார். சேனைத் தலைவன் படுத்திருக்கிற கூடாரத்தினுள்ளே கூர்ந்து பார்த்தார். அந்த வெள்ளைத்துரை கண்ணயர்ந்து கிடந்தார். அவரைக் கொலை புரிந்துவிட்டுத் தலைமறைவாய்ப் போய் விடும்படியான வாய்ப்பு அமைந்திருந்தும் இவர் அதனைக் கருதவில்லை; அது தகாத இழி செயல் என்று வெறுத்து விடுத்து அங்கு நின்றபடியே கல் வெடிகளை ஓங்கிக் கீழே எறிந்தார். பேரொலிகள் எழுந்தன; பகைவர் வந்து உள்ளே புகுந்து விட்டார் என்று எல்லாரும் துள்ளி யெழுந்தார். கண்ணயர்ந்த கடும் உறக்கம் ஆதலால் ஒன்றும் தெரியாமல் ஒருவரோடு ஒருவர் முட்டி மோதித் தட்டழிந்து தடுமாறி ஆயுதங்களைக் கடுத்து எடுத்தனர். விழிப்போடு வேலை செய்த இவர் சிலரை வெட்டி வீழ்த்திக் கொலை! கொலை! என்று அலறிக் கூவினார். பலரும் நிலைகுலைந்து நேர்ந்து பொருதனர். தங்களுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் சுட்டு மாண்டனர். வாள்கொண்டு வெட்டி வேலை செய்து வந்த இந்த இருவரும்

தட்டாக வெளியேறி விரைந்து போயினர். தம் உடம்பில் யாதொரு காயமும் படாமல் எதிரிகளுள் பல கொலைகளை விளைவித்து விட்டு அதிசாதுரியமாய் அயலே தாவி இவர் மறைந்து சென்றனர். அங்கே பலர் இறந்து கிடந்தனர். குழப்பம் அடங்கியது; விளக்குகளைக் கொண்டுவந்து யாண்டும் கூர்ந்து பார்த்து ஓர்ந்து நாடினர். அயலவர் யாரும் அங்கே காணவில்லை. பட்டாளச் சிப்பாய்களே செத்துக் கிடந்தனர். நேர்ந்துள்ள நிலைமைகளைச் சேனைத் தளபதிகள் ஆய்ந்து நோக்கி எதிரிகள் துணிந்து வந்து செய்து போயுள்ள சதி வேலையே என்று கொதித்து வருந்தினர். இறந்துபட்டவர்களை அயலே ஒதுக்கிப் புதைத்து விட்டுக் கடுங் கவலையுடையராய்க் கனன்றிருந்தார். விடிந்ததும் பாசறைக்கு அயலே வந்து போயுள்ளவர்களுடைய காலடிகளைக் கருதி ஆராய்ந்தார். இரவு கரவாய் இருவர் புகுந்து மீண்டுள்ளதை அறிந்து வியந்தார். கொலை புரியும் வெடிகளோடு சிப்பாய்கள் யாண்டும் கூர்மையாய்க் காத்து நின்ற கடுங்காவலில் இவ்வாறு இவர் துணிந்து புகுந்து செய்து போயிருக்கிற விசித்திர வேலையை எண்ணி நொந்து அதன்பின் அதிக எச்சரிக்கையுடன் யாவரும் பாசறையில் காலம் கழித்து வந்தார். காலக் கழிவு கருமக் கழிவாய்ச் சாலவும் துயரமான நிலையோடு சார்ந்து நிகழ்ந்தது.

தங்களைக் குடி எழுப்பிப் பாளையங்கோட்டைக்கு ஓட்டி விடவேண்டும் என்று எதிரிகள் பலவழிகளிலும் அல்லல் செய்து வருகின்றனர் என வெள்ளைத் தளபதிகள் உள்ளம் கனன்று உருத்திருந்தனர். உறுதி நலங்களைக் கருதிப் பெரிதும் மறுகினர்

மே மாதம் பிறந்தது; புதியபடைகள் விரைவில் வந்து சேர வேண்டும் என்று மேலும் மேலும் நிருபங்களைத் தானைத் தலைவர் வரைந்து கொண்டிருந்தார். நிலைமைகளை விளக்கி எழுதி எவ்வழியும் உதவிகளை அதிக ஆவலோடு யாவரும் எதிர்பார்த்து நின்றார்.

## இலங்கைப் படை இணைந்தது.

கலெக்டர் லஷிங்டன் யாண்டும் மூண்டு வேலைசெய்து வந்தார். கொழும்பிலிருந்து பெரும்படை ஒன்றை விரைந்து அனுப்பியருளும்படி இலங்கை அரசாங்கத்திற்கு வேண்டுகோள் விடுத்திருந்தார். அந்தச் சேனைகளும் திரண்டு வந்து சேர்ந்தன.

"The collector of Tinnevelly at this time applied to, and obtained from, the Government of Ceylon a detachment of troops to help forward the operations against Panjalamkurichi." (H. O, T.)

"பாஞ்சாலங்குறிச்சிப் போரில் கும்பினியாருக்கு உதவியாக இலங்கை அரசினரிடமிருந்து ஒரு படையைத் திருநெல்வேலிக் கலெக்டர் பெற்றிருந்தார்" என்னும் இது இங்கே உய்த்து உணரத் தக்கது. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

போரில் தோல்வியடைந்த மெக்காலே பட்டாளங்களோடு பாசறையில் பரிந்திருந்தபொழுது வெளியே எவ்வழியும் நாடிச் சேனைகளைக் கும்பினி அதிகாரிகள் மானமீதூர்ந்து திரட்டி நின்றனர். பாஞ்சைப்பதியை எப்படியும் அடியோடு அழித்துவிட வேண்டும் என்று வழிதேடி அவர் உழைத்துவந்துள்ளமைசெயல்கள் தோறும் வெளியாகி நின்றது. எதிரியினுடைய அடலாண்மைகள் அவர்க்கு அச்சத்தையும் திகில்களையும் நாளும் விளைத்து வந்தன. வினை விளைவுகளை நினைந்து விரைந்து தொழில் புரிந்தனர்.

பலமுறையும் போராடிப் படுதோல்வியடைந்து நிலைகுலைந்து நின்றாலும் சேனாபதி அயல் ஒதுங்கிப் போகாமல் முற்றுகையைப் பலப்படுத்திப் பாடி வீட்டில் குடிகொண்டிருந்தது அவரது தீரமான போர்முறையை நேரே நன்கு புலப்படுத்தி நின்றது.

அவர் அவ்வாறு நிலைத்திருப்பதைப் பாஞ்சைவீரர் பலவகையிலும் கலைத்துப் பார்த்தார். கலையவில்லை புதிய படைகள் வருவதை அவர் எதிர்நோக்கியிருக்கின்றார் என்று தெரியவே இவர் அரிய வலிகளைப் பெருக்கி அமராடலை எதிர்பார்த்து நின்றனர். கொடியபோராட்டத்தை இனியநீராட்டமாய் எண்ணியிருந்தார்.

## உள்ளத் திண்மை

வெள்ளையர் படைகள் வெள்ளமாய்த் திரண்டு வேகமாய் வருகின்றன என்று அறிந்த போது ஊமைத் துரை உள்ளம் கலங்காமல் உல்லாச விநோதமாய் எதிரிகளை எள்ளி இகழ்ந்து உறுதி பூண்டு நின்றார். பொருதிறல்களை நாடி வருவன வருக! என்று இவர் கருதியிருந்தது அரிய பெரிய வீர கம்பீரமாய் மருவி நின்றது. வீர ஒளி வியத்தகு நிலையில் இவரிடம் வீசி விளங்கியது. தெவ்வர் எவ்வழியும் அழிய வழி நாடி நின்றார்.

# இருபத்து நான்காவது அதிகாரம்

## அக்கினி வந்தது

பாஞ்சைப் பாசறையில் இருந்து கொண்டு சேனைத் தலைவர் அபயமிட்டு ஏவிய திருபங்கள் எங்கும் விரைந்து சென்றன. பட்டாளங்கள் பாழ்பட்டுத் தோல்வியடைந்து துயருழந்திருக்கும் நிலைமைகளைத் தளபதியின் எழுத்துக்கள் எடுத்துக் காட்டவே யாவரும் கடுத்து விரைந்தனர். தங்கள் ஆட்சிக்கு அபாயம் நேர்ந்துள்ளது என்று வெள்ளைக்காரர் எல்லாரும் உள்ளம் கலங்கி எவ்வழியும் உபாயங்களை நாடி ஊக்கி முயன்றார். இந்நாட்டில் ஆக்கம் மிகப்பெற்றோம் என்று கவலையின்றிக் களித்து வாழ்ந்து வந்தவர் அவலம் மீதூர்ந்து அலமந்து அலைந்தார்.

கும்பினியின் ஆட்சி மன்றத்தில் தலைமை அதிபதிகளாய் இருந்தவர் நிலைமையைத் தெரிந்ததும் அதிக விழிப்போடு யாண்டும் ஆணைகள் போக்கி மூண்டு முனைந்து வேண்டிய வேலைகளை விரைந்து செய்தனர். நீண்ட கவலைகளும் நிறைந்து நின்றன.

The Right Honourable Edward 1
Lord Clive. 2

என்னும் இந்த இருவரும் அப்பொழுது கும்பினித் தலைவராய்த் தலைமை நிலையத்தில் நிலவியிருந்தார். ஆங்கில ஆதிபத்தியத்தை இந்தியாவில் நிலைநாட்டிய ராபர்ட்க்ளைவ் (Robert Clive) என்னும் அந்த அதிபதியின் அருமைக் குமாரரே இங்கே குறித்த லார்டு க்ளைவ் என்பவர். பகைவகைகளவர்க்கும்மிகையாய்நின்றது.

### மருண்டு மறுகியது.

இந்நாட்டில் கிடைத்துள்ள தேசவுரிமையை மிக்க ஆசையோடு கவனித்து ஆட்சி புரிந்தனர். குமரி முதல் இமயம்வரையும் கும்பினிக்கு எளிதாக அமைந்து வருவதை நினைந்து அவர் உவந்து வந்தனர். எந்நாடும் தம் நாடா எண்ணி மகிழ்ந்து வருகிற அவர் இத்தென்னாட்டின் எதிர்ப்பைக் கண்டதும் சிறிது கலங்கினர். முன்னம் வீர பாண்டியக் கட்டபொம்மு மூண்டு எதிர்த்து மாண்டு போனபின் கவலை தீர்ந்து உவகை பொங்கி நின்றார். பின்னர் இப் பின்னவன் சிறையை உடைத்து வெளி

ஏறிப் பாஞ்சையை அடைந்தான் என்று கேட்டதும் தென் திசைச் சேனாதிபதி எளிதே அடக்கி விடுவான் என்று முழுதும் நம்பியிருந்தனர். அந்த நம்பிக்கைகள் யாவும் பழுதடைந்தன.

இரண்டுமுறை படையெடுத்துப்போய் அழிந்துபட்டதை அறிந்ததும் நெடுந் திகிலடைந்தனர். கும்பினி ஆட்சிக்குக் கொடிய கேடு நேர்ந்தது எனக் கடுங் கவலையோடு எவ்வழியும் விரைந்து காரியங்களைக் கருதிச் செய்தனர். போர் இயல்புகள் பொங்கி எழுந்தன. எங்கும் படைகள் நன்கு இசைந்து வந்தன.

## சேனைகள் திரண்டது

பல இடங்களிலும் இருந்து பட்டாளங்கள் திரட்டப்பட்டன. நன்கு பயிற்சி பெற்ற உயர்ந்த படைகளை எங்கணும் தொகுத்தனர். அரசாங்கத்திற்கு மூல பலமாக வைத்திருந்த 74 வது ரெஜிமெண்டு என்னும் பெரிய சேனையைத் தலைமையாக அமைத்தார். கருநடம், மராடம், கொங்கம் முதலிய நிலையங்களிலிருந் தெல்லாம் படைகள் எழுந்தன. அதிக ஆற்றலுடைய பீரங்கிகளைக் கருதித் தொகுத்தனர். எல்லாப் படைகளும் திரிச்சிராப் பள்ளியில் வந்து சேரும்படி திட்டம் செய்தனர். ஏப்ரல் மாதம் பத்தாந் தேதியிலிருந்து மே மாதம் பதினொருந் தேதி வரைக்கும் படைகள் தொகை தொகையாய்த் திருச்சிக்கு வந்து சேர்ந்து கொண்டிருந்தன. காலாட் சேனைகளும் குதிரைப் பட்டாளங் களும் வலிய பெரிய பீரங்கிப் படைகளும் ஒருங்கே சேர்ந்து பெருகி நின்றன. போர் ஊக்கம் பெருக்கமாய் நீண்டு வந்தது.

## புதிய சேனாதிபதி

எல்லாச் சேனைகளுக்கும் தலைமைத் தளபதியாய்ச் சிறந்த ஒரு போர் வீரர் அமைந்தார். அவர் பெயர் கர்னல் ஆக்னியு [Colonel Peter Agnew] என்பது. போர்த்திறத்தில் அவர் மிகவும் கீர்த்தி பெற்றவர். பல போர் முனைகளிலும் சென்று வெற்றி மிகப் பெற்று அரிய பெரிய விருதுகள் கொண்டு விளங்கியுள்ள வர். பொருதிறலுடைய அவரே பாஞ்சைக் கோட்டை மேல் படையெடுத்துச் செல்ல வேண்டும் என்று கும்பினித் தலைவர் கள் உறுதி செய்து வேண்டிய வசதிகள் யாவும் தந்து அனுப்பினர். அவர் ஆண்டகைமையுடன் மூண்டு நின்றார்.

அவருடைய தலைமையிலுள்ள பெரும் படைகளுக்குச் சிறந்த ஐரோப்பிய ஜெனரல்கள் உபதளபதிகளாய் வந்தனர்.

| | |
|---|---|
| கேப்டன் மார்ஷல் | [Captain Marshall] |
| ஜாண் மன்ரோ | [Captain John Munro] |
| கர்னல் ஸ்பிரை | [Colonel Spry] |
| ஜாண் சிங்ளேர் | [Captain Sir John Sinclair] |
| சி காட்பிரை | [Captain C. Godfrey] |
| டவுண் செண்டு | [Captain Tounsend] |
| ஜே. டவுட்டன் | [Captain J. Doveton] |
| ஒய்ட்டிலி | [Captain Whitley] |
| பிராட்லி | [Lieutenant Bradley] |

இந்த ஒன்பது படைத் தலைவர்களும் தலைமைச் சேனாதிபதிக்கு அடுத்த தளகர்த்தர்களாய் அமர்ந்து நின்றனர். ஜமேதார், சுபேதார், அவல்தார் முதலிய இராணுவ தளபதிகள் பலர் பெருகியிருந்தனர். சேனை தளங்கள் சீருடன் செழித்து நின்றன.

## படைகள் வந்தன

திரிசிராபுரியிலிருந்து படைகள் தகுதி தகுதியாய் முறையே புறப்பட்டன. மே மாதம் பதினாறும் தேதியிலிருந்தே சேனைகள் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கி அணி அணியாய் வந்து கொண்டிருந்தன. பீரங்கிப் படைகளும் காலாட் சேனைகளும் கருமருந்து முதலிய போர்க் கருவிகளும் முதலில் வந்து சேர்ந்தன. அதன் பின் குதிரைப் பட்டாளங்கள் வந்தன. அந்த அந்தச் சேனைகளுக்கு உரிய தளபதிகளும் அவற்றோடு வந்தடைந்தனர். எல்லாப் படைகளும் வந்து சேர்ந்த பின் இறுதியில் கர்னல் ஆக்னியு உயர்ந்த போர்க் குதிரையில் இவர்ந்து வந்தார். அவருடைய அந்தரங்கக் காரியதரிசியும், மூன்று இஞ்சினியர்களும், நான்கு காவலரும் பரிகளில் கூடவே வந்தனர். அவருடைய வரவுகளில் வீர விருதுகளும் தீர தைரியங்கள் நிறைந்த ஆரவாரங்களும் அடலாண்மைகளும் திடமாய் விரிந்து வந்தன.

மே மாதம் இருபத்தோராம் தேதி (21–5–1801) மாலை 5 மணிக்குப் பாஞ்சைக்கோட்டை அயலே யுள்ள பாசறைக்கு கர்னல் வரவே ஜெனரல் மெக்காலே இராணுவ மரியாதையுடன் எதிர் நின்று வரவேற்று அவரை உபசரித்தார். இருவரும் உரிமையோடு உவகை யுரையாடி அளவளாவினர். புதிய சேனாதி

பதிலையக் கண்டதும் சேனை தளங்கள் யாவும் பெருமகிழ்ச்சி யடைந்தன. பன்னீராயிரத்துக்கு மேலான போர் வீரர்கள் அந்தச் சேனையில் நிறைந்திருந்தனர். மான வீரங்களோடு யாவரும் மருவி நின்றனர். மருவலர் நிலை பொரு திறலாய் நின்றது.

### பேர் நிலை

தளபதி மெக்காலேயை மக்காளி எனவும், கர்னல் ஆக்னியூவை அக்கினிச் சென்னல் எனவும் அக்காலத்தில் பாஞ்சையர் வழங்கி வந்தனர். போர்மேல் வந்த அக்கினியை நீர்மேல் நெருப்பு எனவும் கூறிவந்தார். அக்கினி வந்தது என இந்த அதிகாரத்திற்குப் பேர் தந்ததும் மேலே குறித்த வழக்கத்தைக் கருதியே. நாட்டு வழக்கங்கள் பாட்டுகளில் படிந்து வருகின்றன. அம்மானை கும்மி முதலிய ஏடுகளிலுள்ள பாடல்கள் எல்லாம் எளிய நடையில் இருந்தாலும் அரிய வீரவுணர்ச்சிகளின் சாரங்களாய் வீறு கொண்டு வெற்றிக் களிப்புகளோடு வந்துள்ளன.

ஆயிரம் அக்கினிச் சென்னல்கள் வந்தாலும்
  ஆண்டவன் பாஞ்சைமன் அஞ்சாமல்
பாயும்சிங் கேறுபோல் ஏறிநின்றான் அந்தப்
  பாண்டியன் வீரமார் கூறவல்லார்? [1]

நீர்மேல் நெருப்பும் மக்காளியும் சேர்ந்துமே
  போர்மேல் எழுந்து பொருதார்கள்;
கார்மேல் எழுந்து பொழிகின்ற மாரிபோல்
  காயும்தீக் குண்டுகள் வீசிநின்றார். [2]

குண்டெல்லாம் செல்லா உதிர்த்துவிட்டான் கொட்டம்
  இட்டான் குலவையிட்டான் சமர்த்தன்
தண்டுவார் முண்டன் நம்ஊமைத்துரை சீறச்
  சீமைத்துரைகள் தளர்ந் தொழிந்தார். [3]

வெள்ளையர் வெள்ளமாப் பீரங்கிக் குண்டுகள்
  வீசிக் கொடுஞ்சமர் மூசிச்செய்தார்
உள்ளம் கலங்காமல் பாஞ்சையர் வேந்தன்
  உருத்தெதிர் ஏறி அழித் தொழித்தான். (4)

கும்பினிக் கும்பல்கள் வம்புக ளாகவே
  கூடி எதிர் அமர் ஏறிவந்தார்
வெம்புலி ஊமையன் வீறுடன் சீறவே
  வேறுவேறாய் ஒளிந் தோட லானார். (5)

இவ்வாறான பாடல்கள் அன்று எவ்வாறு இவர் தெவ்வரோடு போராடியுள்ளனர் என்பதைச் செவ்வையாகக் காட்டியுள்ளன. அரிய போராட்டங்கள் அதிசயங்களாய் நிற்கின்றன.

பாஞ்சைக் கோட்டை மேல் பொழிந்த குண்டுகள் மிகவும் பயங்கரமானவை. கோடையிடிகள் போல் முழங்கினமையால் அயலூர்களிலிருந்த அடுக்குப்பானைகள் எல்லாம் ஆடினஎன்பர். இந்தப் பீரங்கிச் சத்தங்களைக் கேட்டு ஆகாயத்திலுள்ள சில நட்சத்திரங்களும் உதிர்ந்தன என்று கற்பனை செய்து பாடவும் நேர்ந்தனர். பாடல்கள் இந்த வீர மன்னனுடைய விறலாண்மைகளை விளக்கி வீறு கொண்டு வியனாய் விரிந்து வந்துள்ளன.

"அந்தந்த இடங்கள் தோறும் அடித்தடித் திடித்தாற்போலக்
கந்தங்கள் கெந்தம் வீசக் கருமருந் தோசை தாக்கப்
புந்தியில் இகழ்ந்து கட்டபொம்மனைப் பழித்த பேர்கள்
தந்தங்கள் உதிர்ந்த தென்னத் தாரகை உதிர்ந்த வன்றே!"

என இந்தவாறு வீரப் பிரதாபங்களை ஊட்டி வருகிற பாட்டுக்கள் பல உள. அவை பாஞ்சை வீரர்களுடைய நிலைகளைக் குறித்துக் காட்டி, இந் நாட்டு மக்களுக்கு நலம் பல கூட்டி வருகின்றன. செவியுணர்வுகள் சிந்தைகளை உயர்த்துகின்றன.

யாரும் அஞ்சி அயரும்படியான படைகளும் பீரங்கிகளும் எல்லை மீறி வந்துள்ளன. கொல்லும் எமன்களைப் போல் வெள்ளையர்கள் உள்ளக் கொதிப்போடு உருத்து வந்து வெள்ளம் எனத் திரண்டிருக்கின்றனர். இருந்தும் ஊமைத்துரை யாதும் அஞ்சாமல் எள்ளளவும் கலங்காமல் சீமைத் துரைகளையெல்லாம் திரணமாகவே கருதி மூரணோடு மூண்டு முனைந்து நின்றுள்ளார்.

## வந்தவர் எண்ணியது

புதிதாய் வந்துள்ள தளபதிகள் பாஞ்சைக்கோட்டையைப் பார்த்ததும் மிகவும் எளிதாகவே எண்ணினர். மலைகள் சூழ்ந்துள்ள அரண்கள் அடர்ந்திருக்குமோ? என்று நிலைகளை நெஞ்சில் நினைந்து வந்தவர்க்கு மண்ணால் அமைந்துள்ள மதிலைக் கண்ணால் கண்டதும் இளிவாய்த் தோன்றியது. வெட்ட வெளியான பொட்டல் காட்டில் இந்தக் கட்டமண் கோட்டையைத் தட்டி நொறுக்காமல் முன் வந்த பட்டாளங்கள் முட்டாள்களாய் வெட்டித்தனமாய் வேலை செய்துள்ளன என்று கேலி செய்து

கொண்டனர். வந்த தலைவர்களுடைய சிந்தனைகளை முந்திய சேனாதிபதி தெரிந்து கொண்டு அங்கே இறந்து பட்டவர்கள் தொகையை வகையாய்க் குறித்துக் காட்டி எதிரியின் வலி நிலையை விளக்கிச் சொன்னார். அவர்க்குச் சரியாய் விளங்க வில்லை; இந்தச் சிறிய பகைவனைப் பிடிக்க இவ்வளவு பெரிய படைகளா? என்றே அவர் மறுகி நின்றார். இரவு வந்தது; யாவரும் உணவுகள் அருந்தி உறுதி கருதி அமைதியாயிருந்தனர்.

ஊமையன் ஊதியது

கொடிய பீரங்கிகளோடு பெரிய சேனைகள் வந்து சேர்ந் திருத்தலையும், வெள்ளைத் தளபதிகள் திரண்டு உள்ளம் கடுத்து ஊக்கி நிற்றலையும் நோக்கி வந்து சிலர் ஊமைத்துரையிடம் பரி வோடு மறுகி யுரைத்தார். அவர் குறுமுறுவலாய்ச் சிறிது சிரித்தார். வாய் திறந்து ஒன்றும் சொல்லாமல் கொஞ்சம் புல் உமியை எடுத்து வைக்கோல் துரும்புடன் மடுத்து உள்ளங் கையில்வைத்துக் கசக்கிஊதினார். அவையாவும் பறந்துபோயின. அதனைச் சுட்டிக் காட்டி விட்டு அமைதியாய் அமர்ந்திருந்தார்.

"வெள்ளையர் படைகள் எவ்வளவு திரண்டு வந்தாலும் இந் தப் புல்லுமியை ஊதித் தொலைத்தது போல் எளிதே அழித்து ஒழிப்பேன்" என்பதை வாய் திறந்து சொல்லாமல் செய்கையா லும், சைகையாலும் அன்று இவர் காட்டிய காட்சி அரிய ஒரு வீரத் திறலாய் விளங்கி நின்றது. இவருடைய உள்ளத் துணி வும் உக்கிர வீர நிலையும் உரையிட லரியன. அச்சம் என்பதை யாதும் அறியாமல் யாண்டும் உச்ச வீரராய் இவர் ஒளி செய் திருந்தது உலக விழிகளுக்கு நிலையான ஓர் அதிசயமாயுள்ளது.

இவரது மனவுறுதி தனி நிலையுடையது; எவ்வழியும்தளராதது.

தெவ்வர்களும் திசை நோக்கி வியக்கும்படி அவ்வளவு அதிசயங்கள் இவரிடம் அமைந்திருந்தமையால் எவ்வகையிலும் யாரும் வியந்து போற்றி வீரவுருவன் எனப் பாராட்டநேர்ந்தனர்.

வெள்ளையர்களுடைய பட்டாளங்களை இவர் மிகவும் துச் சமாக எண்ணி இகழ்ந்து எல்லாரையும் ஒல்லையில் ஒழிப்பதாக விரைந்து ஊதிக் காட்டிய செய்கையை எவ்வாறோ அவர்களும் அறிந்து கொண்டார். உள்ளத்தில் கோபம் மூண்டாலும் அச் செயலை அவர் வியந்து நின்றார். தங்களுடைய சேனைப் பெருக்

லைக் கண்டும் யாதும் அஞ்சாமல் இந்த மான வீரன் குறித்துச் செய்த சைகையை அவரும் குறித்து வைத்தார். வாய் திறந்து சொல்லாதது வையம் அறிய வந்தது. அயலே வருவது காண்க.

"His method of representing the English was extremely simple: he collected a few little pieces of straw, arranged them on the palm of his left hand to represent the English force; he drew the other hand across and swept them off, with a whizzing sound from his mouth, which was the signal for attack. He was generally the foremost in executing those plans, for our annihilation." (R. G.)

"வெள்ளைக்காரரை மிகவும் துச்சமாகவே அவர் எண்ணி வந்தார்; சில வைக்கோல் துரும்புகளைச் சேர்த்து இடது உள்ளங் கையில் வைத்து வலது கையால் கசக்கி ஊதிக் கும்பினிப் படைகளை இப்படி அடியோடு எளிதே தொலைப்பேன் என்று குறித்துக் காட்டினார். அவர் செய்து வந்த ஆயத்தங்கள் எல்லாம் நம்மை அடியோடு நாசம் செய்வதாகவே இருந்தன" என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

கும்பினியாரை ஊமைத்துரை எவ்வளவு எளிமையாகக் கருதி வந்துள்ளார் என்பதும், அவரது இயல்பான உறுதி நிலையும் ஊக்கமும் அடலாண்மைகளும் இதனால் நன்கு அறியலாகும்.

பீரங்கி வெடிகளையோ, படை வலிகளையோ, வெள்ளைக்காரர்களுடைய ஆரவாரங்களையோ குறித்து அவர் யாண்டும் யாதும் கலங்கியிருப்பதாகவே தெரியவில்லை எவ்வளவு படைகள் வந்தாலும் எப்படியும் வென்று விடலாம் என்றே உள்ளத் துணிவுடன் அவர் ஊக்கியிருந்துள்ளார். அவருடைய உறுதி நிலை இறுதி வரையும் எவ்வழியும் யாதும் குறையவே யில்லை.

## தளபதிகள் கருதியது

மார்ச்சு மாதம் முப்பத்தோராம் தேதி நடந்த போரில் இறந்துபட்டவர்கள் தொகையை அறிந்ததும் கர்னல் ஆக்னியூ பெரிதும் வருந்தினார். கும்பினிப் படைகளில் இவ்வளவு இழவுகளைச் செய்ய வேண்டுமானால் எதிரி எவ்வளவு படைகளை வைத்திருக்க வேண்டும்? எத்துணை ஆற்றல்கள் அவனிடம் நிறைந்திருக்கும்? என உய்த்து உணர்ந்து மெக்காலேயோடு பலவும்விசாரித்து நிலைமைகளை நினைந்து நெடிய ஆலோசனைகள் செய்தார்.

இரண்டு சேனாதிபதிகளும் இரவு பன்னிரண்டு மணி வரையும் கலந்து ஆலோசித்து மறு நாள் செய்ய வேண்டிய காரியங்களை முடிவு செய்து கொண்டு கூடாரங்களில் உறங்கியிருந்தார்.

## மறுநாள் செய்தது

பொழுது விடிந்தது. காலை யுண்டி கொண்டதும் அன்று செய்ய வேண்டிய வேலைகளைச் சேனாதிபதி விரைந்து கவனித்தார். கொண்டு வந்துள்ள புதிய பீரங்கிகளை எந்த இடத்தில் நிறுத்துவது? எவ்வளவு தூரத்தில் குறி வைப்பது? என அந்த நிலையங்களை ஆராய்ந்தார். அதற்கு வேண்டியபடி உயர்ந்த மேடுகளை அமைக்குமாறு கட்டளையிட்டார். கோட்டைக்குத் தென்மேற்கு நீளமான நெடிய மணல் மேடுகள் வளர்க்கப் பட்டன. அந்த வேலைகளைத் தங்கள் வேலைக்காரர் செய்யும் போது எதிரிகள் புகுந்து இடையூறு செய்யாதபடி அயலே படை வீரர்கள் வெடிகளோடு காவல் காத்து நின்றனர். காரியங்கள் யாவும் மிக்க கவனமாய்த் தக்கவாறு செய்து வந்தனர்.

## கோட்டையைச் சுற்றிப் பார்த்தது

பாஞ்சைக் கோட்டையை நேரே சுற்றிப் பார்த்து நிலையங்களைத் தெளிவாக அறிந்து கொள்ள விரும்பி கர்னல் ஆக்னியூ இரண்டு இஞ்சினீயர்களோடு (Engineers) பாசறையிலிருந்து புறப்பட்டுப் போய் முதலில் வடக்குக் கோட்டை மதிலைக் கவனித்துப் பார்த்தார். அதன்பின் நான்கு புறமும் அயலே நடந்து யாவும் சூழ்ந்து நோக்கினார். எதிரியின் நிலைமை அவர்க்கு மிகவும் எளிதாகவே தோன்றியது. கோட்டையை அவர் சுற்றிப் பார்த்து வரும் பொழுது பாஞ்சை வீரர் யாரும் வெளியே வந்து திரண்டு நிற்கவில்லை. கவண் கல்லுகளுக்கும் வில்லுகளுக்கும் வெடி குண்டுகளுக்கும் எட்டாத தூரத்திலேயே அவர் கட்டாக உலாவி வந்தார். அவ்வாறு அவர் வேவு பார்த்து வருங்கால் தெற்கு மதிலின் கொத்தளங்களிலிருந்து சிலர் கூவி அழைத்தார்: "ஏன் எட்டநின்று ஒதுங்கிப் பதுங்கிச் சுற்றிப்பார்க்கிறீர்கள்! கிட்ட வந்து வேண்டியதை விவரமாகக் கேட்டுப் போங்களேன்?" என்று ஓலமிட்டு உரைத்தார். இவர் கூச்சலிட்டதைக் கேட்டு ஏதோ கேலி செய்கிறார் என்று சேனைத் தலைவர் சிரித்துச் சென்றார். வெளியே அவ்வாறு நகைத்துப் போனாலும்

கோபக் கொதிப்பும் மானக் கடுப்பும் உள்ளே எரித்து நின்றன.

பாசறையை அடைந்தார்; பலவும் யோசனை புரிந்திருந்தார்.

மாலை ஐந்து மணிக்கு மெக்காலேயோடு பேசிக்கொண்டிருக்கும்போது எட்டப்பநாயக்கரைக் குறித்து கர்னல்ஆக்னியூ விசாரித்தார். வந்தவுடனேயே அவரை மெக்காலே அறிமுகம் செய்திருந்தார் ஆயினும் அவரது நிலைமைகளைக் குறித்துத் தெளிவாக அறியவிரும்பி மறுபடியும் மருமமாய் வினவினார். "இவன் உண்மையானவனா? இவனை நாம் நம்பலாமா?" என்னும் சந்தேகத்தோடு அவர் கேட்டதை அறிந்ததும் பழைய தளபதி வந்துள்ள புதிய தளபதியின் உள்ளம் தெளிய உரைத்தார். தெளியும்படி சொன்ன மொழி என்ன? அயலே காணுக.

"Hereditary enemy of the Panjalamcurichi race."

"பாஞ்சாலங்குறிச்சி மரபுக்கு இவன் பரம்பரை விரோதி"

எட்டப்ப நாயக்கரை இவ்வாறு தளபதி அறிவுறுத்தியுள்ளார். ஊமையனுக்குச் சென்மவிரோதி ஆகலால் அவனை அழித்தொழிப்பதில் நம்மைக் காட்டிலும் இவனுக்கு அக்கறையும் கவலையும் அதிகம் என மதி தெளியச் சொல்லவே சேனாபதி சிந்தை தெளிந்து உவந்து கொண்டார். வந்தகாரியம் இனிது முடிதற்கு உள்நாட்டிலே நல்ல துப்பு அமைந்துள்ளமை அவர்க்கு உவகை தந்தது. உறுதி நலங்களை இருவரும் திறமாக் கருதி ஆராய்ந்தார்.

பாஞ்சாலங்குறிச்சியாருடைய செயல் இயல்களையும், மனவுறுதிகளையும், போராடும் திறங்களையும் குறித்து மெககாலே அக்கினிச் சென்னனுக்குத் தெளிவாக உரைத்தார். அந்த உரைகளைக் கேட்டுப் புதியசேனாதிபதி சிறிது வியந்தாலும் உள்ளத்தில் சினமும் சீற்றமும் பெருகி நின்றன. கடும் போர் புரிந்து எப்படியும் எதிரியை அடியோடு அழித்துவிட வேண்டும் என்றே அவர் துணிவாய்த் துடித்து நின்றார். இந்தப் பகைவனைத் தொலைக்க வில்லையானால் கும்பினி ஆட்சி இந்நாட்டில் இல்லாமல் தொலைந்தே போம் என இரண்டு தளபதிகளும் கருதி மறுகினார் ஆகலால் கோட்டையை விரைந்து அழித்து ஒழித்தற்கு வேண்டிய வேலைகளை யெல்லாம் இரவே கரவாய்ச் செய்து மறுநாள் வரவை எதிர் நோக்கி எண்ணிக் கண்ணயர்ந்திருந்தார். இரவு 12 மணிக்கே அவர் படுக்கப் போனார்.

அன்று பொழுது அமைதியாய்க் கழிந்தது.

# இருபத்தைந்தாவது அதிகாரம்

## அடலமர் மூண்டது

ஆதவன் உதயமாயினான். யாவரும் காரியங்களில் கருதி விரைந்தனர். மே மாதம் இருபத்துமூன்றாம் தேதி (23–5–1801) காலையிலேயே பீரங்கிகள் கோட்டையை நோக்கி நேரோங்கி நின்றன. மதிலின் தென்மேற்குத் திக்கில் அறு நூறு கெஜ தூரத்தில் வளர்த்திருந்த பெரிய மணற் குன்றின் மேல் பீரங்கிகள் பதிக்கப்பட்டுக் கிழக்கு நோக்கிய பார்வையாய்க் குறி செய்திருந்தன. காலை ஆறு மணிக்கே சுடத் தொடங்கின. அதிக ஆற்றல் வாய்ந்த பெரிய பீரங்கிகள் ஆதலால் குண்டுகள் இடிகள் முழங்கியனபோல் நெடிய முழக்கங்கள் செய்து கடிது எழுந்தன. அயலிடங்கள் எல்லாம் அதிரொலியின் எதிரொலிகளாய் நீண்டன. போராட்டங்கள் எங்கும் பொங்கி மூண்டன.

குதிரைப் படைகளும் காலாட் சேனைகளும் தயாராய் ஆயுதமுடன் அணி வகுத்து நின்றன. மலாய் தேசத்திலிருந்து கொண்டு வந்திருந்த நாற்றைம்பது மூலாயர்கள் தனித்தொகுதியாய் நின்றனர். மிகுந்த தேகபலமும் மூர்க்கமும் முரட்டுத்தனமும் வாய்ந்த இந்தப்படை ஒயிட்டிலி (Whitley) என்னும் தளபதியினுடைய தலைமையில் நின்றது. கோட்டையை உடைத்தவுடன் எல்லாரும் உள்ளே பாய வேண்டும் என்று உறுதி பூண்டு பொரு திறலோடு ஊக்கி எதிர் நோக்கி நின்றனர்.

### பாஞ்சைப் படை நிலை

கும்பினிப் படைகள் இவ்வாறு எவ்வழியும் வெவ்வலியுடன் திரண்டு சூழவே பாஞ்சை வீரர்கள் யாண்டும் யுத்தசன்னத்தராய் மூண்டு நின்றனர். யார் அருகே நெருங்கினும் அவரை உருமாய்த்து உயிர் குடிக்க வேண்டும் என்று வேல் வல்லயங்களோடு வீறுகொண்டு எதிர் நோக்கி எத்திசையும் ஒத்திசைந்து ஊக்கி நின்ற இவரது நிலை உக்கிர வீரமாய் உயர்ந்து விளங்கியது. உள்ளத் துணிவுகள் எல்லை மீறி நின்றன.

கொடிய பெரிய பீரங்கிகள் வந்துள்ளன என்று தெரிந்தவுடனே கோட்டைக்குள்ளே நகரம் எங்கணும் குழிகள்

தோண்டி நிலவறைகள் அமைத்திருந்தனர். அந்தப் புரத்திலும் அரண்மனைகளுக்கு உள்ளேயும் சுரங்க வழிகளும் நிலவறைகளும் மறைமுகங்களாய் மருவியிருந்தன. எந்த இடங்களிலும் எதிர்ப்புகளும் தடுப்புகளும் அடுத்து அடுத்து அமைந்துநின்றன.

அன்று கோட்டையுள் நாலாயிரத்திருநூறு போர் வீரர்கள் தான் இருந்தனர். நான்கு மாதங்களாய்த் தொடர்ந்து நடந்து வந்த போரில் ஆயிரத்து முந்நூறு பேர் இறந்து போயினர். கொடிய வெடி குண்டுகளால் படுகாயங்கள் அடைந்து கால் கை முதலிய உறுப்புக்களை இழந்து பலர் ஒதுங்கியிருந்தனர். உடல்களில் ஊனமுற்று அங்ஙனம் கிடைகளில் கிடந்தவரும் அன்று மான வீரத்துடன் எழுந்து வந்து படைகளில் சேர்ந்து மிகவும் அடல்கொண்டு நின்றனர். வென்று வாழ்வது இன்றேல் அன்றே பொன்றி வீழ்வது என்றே எல்லாரும் உறுதி கொண்டு பொரு திறலோடு மருவி நின்றனர். அவர்களுடைய மனவுறுதியும் அடலாண்மைகளும் எவர்களிடமும் எளிதில் காண முடியாதன. ஒரு உயர்ந்த வீரமரபினுடைய குல பரம்பரையின் தீர நீர்மையை உலகம் அறிய அவர் நிலை அன்று நேரே காட்டி நின்றது. என்றும் காணாத வீரக்காட்சியோடு அவர் வீறுகொண்டு மூண்டு நின்ற உக்கிர வீர நிலை பாண்டி மண்டலத்தின் சீரையும் சிறப்பையும் துலக்கிப் பேரையும் புகழையும் பெருக்கி விளங்கியது.

காலையில் கும்பினிப் படைகள் திரண்டு எழுந்தவுடனே பாஞ்சை வீரர்கள் யாவரும் ஆயுதபாணிகளாய்க் கோட்டையினுள்ளே நான்கு புறங்களிலும் எதிர்நோக்கி முதிர்வேகத்துடன் மூண்டு நின்றனர். எதிரிகள் ஏறி வராமல் அயலே ஆறி நிற்பதை அறிந்ததும் சீறி எதிர்ந்த இவரது நிலை மாறியமைந்தது.

கோட்டையை முழுதும் உடைத்துத் தரையோடு தரையாத் தகர்த்த பின்புதான் படைகள் உள்ளே போக வேண்டும் என்று வெள்ளைத் தளபதிகள் எல்லாரும் உறுதி செய்திருந்தமையால் போராடல்கள் தாமதமாய் ஒதுங்கி நின்றன. பீரங்கிகள் ஓயாமல் நேரே குண்டுகளைப் பொழிந்து கொண்டேயிருந்தன.

காலாட் படைகள் போராட வரும் என்று நேரே வீறோடு இவர் எதிர்பார்த்து நின்றார்; அவ்வாறு நேராமல் அவை அயலே செயல் ஓர்ந்து நின்றமையால் கொத்தளம் முதலிய இடங்களில்

இவர் மேல் ஏறி நில்லாமல் கீழேயே அடங்கி யிருந்தார். கோட்டை அரண்களைத் தட்டி வெட்ட வெளியாக்கிய பின்பே கிட்ட நெருங்க வேண்டும் என்று அவர் எட்ட நிற்கும் நிலையை இவர் உய்த்துணர்ந்ததும் நிலவறைகளை யெல்லாம் நிலையாக ஆயத்தம் செய்தனர். நாலு மூலைகளிலும் மதில்கள் அருகே பெரிய பள்ளங்களைத் தோண்டினர். பீரங்கிக் குண்டுகள் மேலே படாதபடி ஓரங்கள் தோறும் நெடிய வேல்களோடும் கொடிய வல்லயங்களோடும் குறியாய் ஒளிவைத்து இவர் பதுங்கி யிருந்தனர்.

### கோட்டை உடைந்தது

காலை ஆறு மணி முதல் பன்னிரண்டு மணி வரையும் தொடர்ந்து ஓயாமல் பீரங்கிகள் சுட்டுக்கொண்டே இருந்தன ஆதலால் உச்சிப் பொழுதில் கோட்டையின் தெற்கு நெட்டு பாதிக்கு மேல் உடைந்து வீழ்ந்தது. ஒரு மணிக்குள் மேற்கு நெட்டு முழுவதும் தகர்ந்து போயது. அரண் அழிந்து போகவே படைகள் ஆரவாரமாய் ஆர்த்து வந்தன. அருகே வரும் வரையும் எதிரே பாஞ்சை வீரர் யாரும் தலை நீட்டாமல் பள்ளங்களிலேயே பதுங்கி யிருந்தனர். உள்ளே ஏறும்படி படைகளை நடத்தி வெள்ளைத் தளபதிகள் வேகித்து வந்தனர். கைக்கு எட்டிய அளவில் கிட்ட நெருங்கவே நெடிய வேல்களை நேரே நீட்டிக் கடிது பாய்ந்து அடு திறலோடு எதிரிகளை இவர் குத்தி வீழ்த்தினர். முதிர்வேகமாய் மூண்டு பொருதமையால் இவருடைய ஆயுதமுனைகளில் பகையினங்கள் தொகையாய் மாண்டு மடிந்தன.

### கொலைகள் விழுந்தது

முதலில் முன்னேறிப் பாய்ந்து வந்த சிப்பாய்களுள், முப்பதுபேர் ஒரு நொடியுள் மாய்ந்து விழுந்தனர். மூண்டு திரண்டு வந்தவர் முன்னே மாண்டு விழுந்ததைக் கண்டதும் நெடிய திகில்களோடு பின்வாங்கினர். பின்னே திரும்பும் பொழுது விரைந்து பாய்ந்து இரண்டு வெள்ளைத் தளபதிகளைக் குத்தி வீழ்த்தினர். எதிர்பாராதபடி கொடிய கொலைகள் வீழ்ந்ததும் எதிரிகள் நெடிது கலங்கினர். கொலைகள் விழுந்த அந் நிலைகளை அறிந்ததும் தலைமைச் சேனாதிபதி போரில் ஏறும்படி படைத் தலைவர்களுக்கு உத்தரவு செய்தான். யாவரும் மாறி மீண்டனர். சீறி ஏறி வந்தவர் அதி விரைவில் மாறி மீண்டது அவலக்

காட்சியாய்த் தோன்றியது. கவலைத் திகிலோடு கடிது மீண்டு கொடிது சூழ்ந்தனர். முடிவு தெரியாமல் மறுகி மயங்கினர்

## மறுகி நின்றது

கோட்டை கெட்டுகள் இரண்டும் உடைந்து போயின என்று உள்ளம் களித்துத் துள்ளி வந்தவர் உடனே துடித்து விழுந்து செத்தது ஓர் விசித்திரமான மாய வேலையாயிருந்தது. வெள்ளைத் துரைகள் எல்லாரும் வியந்து திகைத்தார். தலைமைச் சேனாதிபதியான கர்னல் ஆக்னியூ எதிரிகளுடைய நிலைமைகளை நினைந்து நோக்கினார். கடுங் கோபம் மூண்டது; நெடுந்திகிலும் நீண்டது. தன்னுடைய தலைமைப் பாதுகாப்பிலிருந்த படைகளுள் ஒரு நிமிடத்தில் முப்பத்திரண்டு வீரர்களை இழந்து நின்ற அந்த இழவு அவருக்குக் கொடிய துயரமாயும் நெடிய அவமானமாயும் நீண்டு நின்றன. அன்று போர் செய்வதை நிறுத்தி விடும்படி வெறுப்போடு கட்டளையிட்டார். படைகள் எல்லாம் பாசறைக்கு மீண்டன. படைத்தலைவர் யாவரும் பரிந்து நாணினர். பழைய தளபதியான மெக்காலேயோடு கூடிப் புதிய சேனைத் தலைவர் கூடாரத்துக்கு வந்தார். பாடி வீட்டில் கூடியிருந்து யாவும் நாடி ஆலோசித்தார். இந்த ஆலோசனையில் ஜமீன்தார் எட்டப்ப நாயக்கரும் ஒட்டாய்ச் சேர்ந்திருந்தார்.

பகையாளிகளுடைய நிலைமைகளைக் குறித்துப் பல வகைகளிலும் ஆராய்ந்தார். மதில் முழுவதும் உடைந்து போன மேற்குத் திக்கில் எதிர்ந்த போதே இவ்வாறு சீறிப் பொருத எதிரிகள் அரணோடு கூடியுள்ள வடதிசையிலும் கீழ்புறமும் எவ்வாறு நிலைத்து நின்று வெவ்வலியாய் வேலை செய்வர்? என்பதை எண்ணி நோக்கி ஏற்ற உபாயங்களை நுண்ணிதாக நாடினர்.

வல்லையப் போரில் எதிரிகளுடைய வல்லமைகள் எல்லை கடந்துள்ளன என்று வெள்ளைத்துரை வியந்து கூறினர். கும்பினிப் படைகள்மீது பாய்ந்து குத்திக் கொலித்துக் கூரிய ஆயுதங்களோடு இவர் தாவிச் சென்ற செயல் வித்தக விநோதமாயிருந்தமையால் அந்த அரிய காட்சிகளை அவர் கருதி யுரைத்தார்.

"The immediate defence of the breach was with pikes, as sharp as a razer, from eighteen to twenty feet long." (R. G.)

"பதினெட்டு முதல் இருபதடி நீளமுள்ள கூரிய ஈட்டிக

ளால் எதிரிகள் தகர்ப்பை விரைந்து காத்தனர்" என்னும் இதனால் பாஞ்சை வீரர்களுடைய கைகளிலிருந்த வேல் வல்லையங்களின் நீளமும் கூர்மையும் வலிமையும் நிலையாய் அறியலாகும்.

சேனைத் தலைவர்கள் நேரே கண்டு நெடுந்திகில் கொண்டு கூறியிருத்தலால் அந்தக் கூரிய ஆயுதங்களின் கூர்மை நீர்மைகளை நாம்கூர்ந்துநோக்கி மானசக்காட்சியால்ஓர்ந்துகொள்ளுகிறோம்.

கொடிய சுடுகுண்டுகளைப் பகைவர் வீசுந்தோறும் பதுங்கியிருந்து அவர் கிட்ட வந்தவுடனே எறிக் குத்தி வகு பாய்ந்து இவர் மாறிப் போவது அரிய ஓர் வீரப் போர்க் காட்சியாய் வீறுகொண்டு நின்றது. அந் நிலைமை யாரும் வியந்து பாராட்ட நேர்ந்தனர். பாஞ்சை வீரர்களுடைய போராடல்கள் ஆங்கிலேயர் யாவருக்கும் ஓங்கிய திகில்களை நேரே உருவாக்கியுள்ளன.

எதிர்ப்பட்ட எதையும் தூளாக்கிப் போகின்ற தீய நெருப்புக் குண்டுகள் ஓயாமல் பாய்ந்து கொண்டிருந்தும் ஒரு சிறிதும் அஞ்சாமல் நெஞ்சம் துணிந்து எதிரிகளை நேரே துணித்து வீழ்த்தி வீறுடன் இவர் கெலித்து வருவது நுனித்து நோக்கவுரியது.

உயிரை வெறுத்து உறுதி ஊக்கங்களோடு அதிசய நிலையில் இவ்வாறு இவர் போராடியதைக் கண்ட தானைத் தலைவன் பட்டாளங்களைச் சிறிது பின் வாங்கும்படி செய்து மீண்டும் பீரங்கிகளைச் சுடும்படி கட்டளை யிட்டான். அவை கடுமையாகத் தொடுத்துச் சுட்டன. கோட்டையின் மேற்கு கொட்டு முற்றும் இடிந்து தகர்ந்தது; அதன் பின் வடமேல் மதிலும் உடைந்து விழுந்தது. உடைவுகள் கடிது நிகழ்ந்தன எதிரிகள் முதிர் வேகமாய் மூண்டனர். அதிசய வெற்றிகள் அடைந்தன என்று கருதிக் களித்துக் கதிவேகமாய் அவர் கடுத்து விரைந்தனர்.

### படு சமர் எழுந்தது

அரண் அழிந்தது என்று அறிந்ததும் கும்பினிப் படைகள் கொதித்து வந்தன. மீண்டுபோன படைகள் மூண்டு பாய்ந்து வரவே இவர் நீண்ட வேல்களோடு நேரே எதிர்ந்து பொருதார். கோரமான கொடும் போர் மூண்டது. இந்த முறை எதிரிகளுள் குதிரைப் படை வீரர்கள் கொதித்துப் பொருதார். அந்தப் படைத்தலைவனை டவுட்டன் (Captain Doveton) அடலாண்மை

யோடு தன் படைகளை நடத்திக் கடுமையாகப் போராடினான். காலாட் படைகள் சுடு வெடிகளுடன் ஒருபுறம் அடுபோர் புரிந்துவரக் குதிரைச் சேனைகள் முதிர் வேகத்துடன் மூண்டு பொருதன. இருதிறத்திலும் பலர் மாண்டு விழுந்தனர்.

## அமரில் நேர்ந்த அதிசயம்

இவ்வாறு போராடி வரும்பொழுது இவருள் நபாவு என்னும் ஓர் போர்வீரன் எவ்வழியும் எதிரேறித் தெவ்வழிய வாளாடல் புரிந்து வந்தான். ஆளரி போல் ஆர்த்து அவ்வண்ணம் அமராடி வருங்கால் இடுப்பில் ஒரு குண்டு வேகமாய் வந்து பாய்ந்தது. பாயவே வாளோடு கீழே வீழ்ந்தான். ஓர் வயல் வரப்பின் அருகே உயிர் பதைத்துக் கிடந்த அவ் வீரனைக் குதிரை மேல் வாவி வந்த ஆங்கில வீரன் கண்டான். கையில் பிடித்த நீண்ட வாளோடு நெடிது சாய்ந்து கிடக்கின்ற அவனைக் கடிது நோக்கினான். பளபள என்று மின்னிக் கிடந்த அந்த வாளைத் தன்னிடம் கொடுக்கும்படி குதிரையிலிருந்து கொண்டே குறித்துக் கேட்டான். "இடையில் குண்டு பாய்ந்துள்ளது; என்னால் எழுந்து கொடுக்க முடியாது; நீயே குனிந்து வாங்கிக்கொள்ள வேண்டும்" என்று இவன் சைகையால் கூறினான். வாசியில் இருந்தபடியே தலை குனிந்து வாளைத் தா என்னும் குறிப்போடு கையை நீட்டி அவன் கேட்டான்; கொடுப்பவனைப் போல் வாளை மேலே நீட்டின இவன் அவன் தலையை நேரே வீசினான். அந்த வெள்ளைத்துரை தலை அயலே துள்ளிப்போய் விழுந்தது. அற்ற தலை கீழே விழு முன்னரே அந்தக் குதிரையையும் வயிற்றில் குத்தி வீழ்த்தினான்; உடனே தன்னுடைய வாளை வயல் வரப்பினுள்ளே சொருகி மறைத்தான்; உயிரும் போயது. இந்த வீரக்குரிசிலின் தீரதைரியத்தை அறிந்து எதிரிகளும் வியந்து நின்றனர். இவரைப் போர் வீரர் யாவரும் * போற்றியுள்ளனர்.

---

*இந்த அதிசய வீரருக்கு ஞாபக சின்னமாக நடுகல் நாட்டியுள்ளது. போரில் மாண்ட இவருடைய அருமை மகனுக்கும், வேறு ஆறுபேருக்கும் அருகே கல்லுகள் அமைந்திருக்கின்றன. ஒட்டநத்தம் என்னும் ஊரின் அருகே வடபால் மருவியுள்ள அந்த வீரச் சிலைகளுக்கு இவருடைய மரபினர் வருடம் தோறும் சிவ நிசியில் வேல் வாள் முதலிய ஆயுதபாணிகளாய்ச் சென்று தொழுது விழுமிய பண்போடு வீர வழிபாடுகள் செய்து வருகின்றனர். சின்னப் பாஞ்சாலங்குறிச்சி என்று சிறந்திருந்த அவ் வூரே இவ் வீரர் பிறந்து வளர்ந்த பதி ஆதலால் அங்கே விதிமுறையே வீரச்சிலையில் இவர் விளங்கி யிருக்கின்றார்.

வெள்ளை யன்தலை துள்ளிவிழ---வாளால்
வீசிய வீரனை வெள்ளையரும்
உள்ளம் வியந்து புகழ்ந்தனர்---வீரரை
ஓர்ந்து புகழார் உலகிலுண்டோ? (வீரக் கும்மி)

உலகம் இவ்வாறு உவந்து புகழ இக் குலவீரன் நிலவியுள்ளான். இந்த அருந்திறலாளன் வெற்றி பெரும் புகழ்களைப் பெற்று வீரவுலகிற்கு என்றும் குன்றாத வியப்பையூட்டியுள்ளது.

வெட்டிமேல் ஏறும் வேளை வெய்யதோர் குண்டு வந்து
பட்டது படவும் கிந்திப் பக்கம்ஓர் வயல் வரப்பில்
தட்டழிந் தயர்ந்து வீழ்ந்தான்; சார்ந்தவர் எவரும் இல்லை;
ஒட்டிஅப் பொழுதோர் வீரன் ஒண்பரி கடாவி வந்தான். (1)

வந்தஅவ் வெள்ளை வீரன் வரப்பிடைப் படுத்திருந்த
இந்தமா வீரன் கையில் இருக்கின்ற வாளைத் தன்பால்
தந்திடு மாறு கேட்டான் தருகுவன் தாழ்ந்து வந்து
குந்திநீ கொள்க என்று குறிப்பினல் குறித்து ரைத்தான். (2)

வாசியைச் சாரி செய்து வந்தவன் குனிந்து கேட்டான்
ஆசையால் தருவான் போல அயர்வுடன் எடுத்து வாளை
வீசினன் தலைபோய்த் துள்ளி வீழ்ந்தது பரியும் வீழ
ஓசையால் உருத்துக் குத்தி ஒளிறுவாள் மண்ணி லுய்த்தான்.

மண்ணிடைத் தன்கை வாளை மாண்புடன் புதைத்த போதே
உண்ணிறை ஆவி நீங்க ஓய்ந்துடல் கிடந்த தங்கே
கண்ணிடைச் சீவன் நின்ற பொழுதினும் காமர் வீரர்
எண்ணுறு திறலோர் என்ன இசைமிகுந் தெழுந்த தன்றே. (4)

உடலுயிர் நீங்கும் போதும் ஒன்னலன் உயிரை வவ்வி
அடலுடன் போன இந்த ஆண்டகை திறனை நோக்கிப்
படையுயர் தலைவன் தானும் பரிந்துடன் புகழ்ந்து நின்றான்
திடமுறு வீரர் தம்மை யாவரே சிந்தை செய்யார்? 5)
(வீரபாண்டியம்)

இத்தகைய சுத்த வீரரை இந் நாடு முன்னம் பெற்றிருந்ததை நினைந்து இன்று நாம் பெருமகிழ்ச்சி அடைகின்றோம். அரிய போர் வீரர்கள் கொடிய குண்டுகளால் மடிய நேர்ந்தது பெரிய பரிதாபமாயுள்ளது. மாறு பட்ட போராட்டங்களில் வீரப்பாடுகள் மாறாய் வேறுபடுகின்றன. எதிராளிகள் கைகளில் தாம் நின்று சுடுகின்ற தீ வெடிகள் உள்ளன; கொடிய பீரங்கி

கள் இருக்கின்றன. எதிர்ப்பாளரிடம் கிட்ட வந்தால் மட்டும் குத்தி வீழ்த்துகின்ற கையாயுதங்கள் உள்ளன. இவ்வாறன வேறுபாடுகளிருத்தலால் ஏறி வந்த கும்பினிப்படைகள் ஏற்றம் மிகப் பெற்றன. எதிர்ப்பின் ஆற்றல்கள் இடர்மிக வுற்றன.

மனத் திட்பமும் மானவுணர்ச்சியும் பாஞ்சை வீரர்க்கு ஆனவரையும் ஆதரவு புரிந்து வந்தமையால் அமராடலில் எதிரிகளுடைய சேனை தளங்களைப் பலமுறையும் முரிய அடித்து அரிய வெற்றிகளை உரியதாக்கினர். சிறிய துணைவலியுடையவர் பெரிய படைகளை இடை விடாமல் எதிர்த்து வெல்வது எவ்வளவு கடினம்? என்பதை எண்ணியுணர்பவர் பரிதாப முடிவுகளை எளிதில் ஓர்ந்து கொள்ளுவர். இரங்கி நொந்து பரிந்து வருந்துவர்.

அருந் திறலுடன் இவ்வாறு தெவ்வர்களோடு அன்று அமராடியதால் இருவகையிலும் பெரிய அழிவுகள் நேர்ந்தன. பொழுதும் அடைந்தது. மாலை ஆறு மணிக்குக் கும்பினிப் படைகள் திரும்பிப் போய்ப்பாசறையைச் சேர்ந்தன. பாஞ்சை வீரர் பரிந்து நின்றனர். பகைவர் படுகேடுகள் கருதினர்.

## இரவு முழுவதும் குண்டுகள்

பகலில் உடைபட்ட கோட்டையைப் பழுது பார்த்து இரவில் கட்டி விடுவது பாஞ்சை வீரர்களுடைய வழக்கம். அதனைத் தடுத்து ஒழிக்க வேண்டும் என்று சேனைத் தலைவர் அன்று கடுத்த யோசனைகள் செய்தனர். இரவு முழுவதும் ஓயாமல் பீரங்கிகள் குண்டுகளைப் பொழிந்து கொண்டேயிருக்கும்படி குறித்து வைத்தனர். அவ்வாறே ஆற்றல் மிக்க அவை சுடு குண்டுகளைக் கோட்டைமேல் நேரே வீசிக்கொண்டேயிருந்தன.

"The firing was kept up all night to present the enemy from repairing the breach." (M. R.)

"எதிரி அரண் உடைப்பை அடைக்க விடாதபடி இரவெல்லாம் பீரங்கிகள் சுட்டுக்கொண்டே யிருந்தன" என்னும் இதனால் அன்று இரவு கும்பினியார் செய்திருந்த கொடுமை நிலை தெரியலாகும். படுநாசம் செய்ய அடிகோலி அவ்வாறு அவர் சுடு குண்டுகளைக் கடுமையாக விடியும் வரையும் வீசி நின்றார்.

கோட்டை முழுவதும் அடியோடு தகர பட்டமாய்த்

நகர்ந்து போம் என முடிவு செய்து விடிவை எதிர் நோக்கிப் படு சூழ்ச்சிகளோடு பாடி நிலையங்களில் அவர் படுத்திருந்தார்.

இடை விடாமல் இரவெல்லாம் பீரங்கிகள் நகரின் மீது குண்டுகளைப் பொழிந்து கொண்டிருந்தனவே! அங்கே பாஞ்சையர் எவ்வாறு இருந்தனர்? எப்படிப் பிழைத்தனர்? என இப்படிக் கேள்விகள் இங்கே வியப்புகளாய்த் தோன்றுகின்றன. நிலைமைகள் நெடுந் திகில்களைக் காட்டுகின்றன. அந்தக் கொடிய குண்டு மாரியில் யாதும் கண்ணுறங்காமல் அவர் கருதிச் செய்த வேலைகள் அரிய அதிசய முடையன. தங்களுக்கு உறுதியான பாதுகாப்பாயிருந்த கோட்டைகளும் கொத்தளங்களும் உடைந்து போனமையால் எதிரிகள் விரைந்து உள்ளே ஏறி வாராதபடி வேறு சில தடைகளை வெளியே செய்ய நேர்ந்தனர். கருவேல் உடை முதலிய நெடிய முள் மரங்களைக் கொண்டு வந்து கோட்டைக்கு மேற்கே நீளமாக மேலும் பரப்பி வைத்தனர். அவற்றிற்கு நடுவே பெரிய பள்ளங்கள் தோண்டி அமைத்தனர். வேலிகளைத் தாண்டி உள்ளே எதிரிகள் ஏறி வருங்கால் அந்தப் பள்ளங்களில் பதுங்கியிருந்து வேல்களால் குத்தி வீழ்த்துவதற்கு இசைவாகவே யாவும் கருதிக் குறியோடு கூர்ந்து செய்தனர். இரவு நாலு மணி வரையும் அந்த வேலைகள் ஓயாமல் நடந்து வந்தன. குண்டுகள் பாய்ந்து கொண்டிருக்கும் போதே பதுங்கியும் ஒதுங்கியும் அந்தப் பாதுகாப்புக் காரியங்களை அதிசாதுரியமாய் ஆத்திரத்தோடு செய்தனர். இரவு நடந்த அந்த வேலையில் இடையிடையே சிலர் குண்டுகளுக்கும் இரைகளாய் மாண்டனர். உற்ற வுறவினர்கள் செத்து வீழ்ந்தபோதும் சித்தம் கலங்காமல் நின்று தத்தம் கடமைகளை இவர் செய்து வந்த காட்சி உயர்ந்த வீர மாட்சியாய் ஒளி செய்து உத்தம தீரங்களை நன்கு விளக்கி நின்றது.

இனிமேல் கோட்டை மீது அமர்ந்தும் கொத்தளங்களில் இருந்தும் வெளியே வில்லாளிகள் யாதும் செய்ய முடியாது ஆதலால் உள்ளேயே அவர் ஒளி செய்து நின்று எய்தற்கு வேண்டிய மறைவுகளை நிரை நிரையா நெறியே செய்திருந்தனர்.

நிலவறைகள் பலவகைகளாய் எங்கும் நிரம்பி நின்றன. மறுநாள் நடக்க நேர்ந்துள்ள போர் முடிவானதென்று முடிவு

செய்து கொண்டமையால் எல்லாரும் உயிரை வெறுத்தே உறுதி யுடன் ஊக்கி அறுதியிட்டுப் பொருதிறல்களை நாடி யுழைத்தனர்.

## சிலர் அயல் அகன்றது

நடுச் சாமத்திற்கு முன்னதாகவே அந்தப்புரத்திலிருந்து மகளிர் சிலரை வெளியேற்றி அயலிடங்களுக்கு அனுப்பிவிட்ட னர். நகரில் இருந்த பொது சனங்களையும் வெளியேறி விரைந்து போய் விடும்படி ஊமைத்துரை முதல் நாளே உத்தரவு செய் திருந்தார் ஆதலால் எல்லாரும் தத்தமக்கு வேண்டிய இடங் களுக்குக் கடிது குடியேறிப் போயினர்.

அரசைப் பிரிந்து போய் அயலே தனியே யிருந்து உயிர் வாழ விரும்பாத மங்கையர் சிலர் அரண்மனைகளிலேயே தங்கி யிருந்தனர். உலக வாழ்வை வெறுத்தே யாவரும் அங்கே கலக நிலைகளைக் கருதி மறுகிப் பரிவு கூர்ந்து நின்றனர்.

நகரம் முழுவதிலும் அன்று மூவாயிரத்து அறு நூறு போர் வீரர்களே யிருந்தனர். அல்லலும் அவமானமும் அடைந்து இருந்து வாழ்வதைவிட அமராடல் புரிந்து இறந்து போவதே நல் லது என்று எல்லாரும் உள்ளம் துணிந்து உறுதி பூண்டே நின்ற னர். அந்நிலை அவரது சிந்தை வலிகளைத் தெளிவுறுத்தி நின்றது.

## மாமன் மறுகியது

பாதுகாப்புக்குரிய காரியங்களை யாவரும் பரிவோடுசெய்து கொண்டிருக்கும் பொழுது இரவு ஒரு மணிக்கு ஊமைத் துரை யுடைய மாமனார் அவரிடம் தனியே வந்தார் நிலைமைகளை நினைந்து நெஞ்சம் உளைந்து நெடுந்துயரோடு வந்த அவர் மரு மகனை மரியாதையோடு நோக்கி உறுதி மொழிகளை உரைத்தார்: "கும்பினிப் படைகள் கடல் போல் வந்து கூடி யிருக்கின்றன; கொடிய குண்டுகளைப் போட்டுக் கோட்டையை உடைத்துவிட் டனர்; நம்மவருள் பலர் இறந்துபோயினர்; இன்னும் போராட மூண்டு நாம் எதிர்த்து நிற்பது கேடேயாம். கும்பினித் தளபதி யிடம் உடன்பாடு பெற்றுச் சரணடைந்து விடுவதே நல்லது; அவர் இரங்கியருளுவர்; வேறு துயரங்கள் யாதும் செய்யமாட் டார்; பணிந்து கப்பம் கட்டி வாழ்வதாக ஒப்பந்தம் செய்து கொண்டால் அவர் உடனே போரை நிறுத்தி விடுவார்; தாங்கள்

இசைந்தால் நானே நேரே போய்ச் சமாதானம் செய்து வரு வேன்; மெக்காலே துரை முன்னமே என்னிடம் சில குறிப்பு களை உரைத்திருக்கிறார். இப்பொழுது தப்பவில்லையானால் நம் பாளையம் பாழாகிவிடும்; இந்த வேளையில் இசைந்தருளுங்கள்."

"படைகள் பற்பல அழிந்தன; பாளையம் பலவாய்க்
கெடுதல் உற்றது; மக்களும் கிளைகளும் கிளர்ந்து
படுகளத்திடைப் பட்டனர்: பகைப்படை ஓங்கி
மடையில் வெள்ளம்போல் வந்துகொண் டுள்ளனநாளும்.

நங்குலத்துயர் வீரர்கள் நம்பொருட் டாக
வெங்களத்தினில் வன்கொலை யாய்விளிந்து ஒழிந்தார்;
எங்கும் இன்னலும் இடர்களும் தொடர்ந்துள இன்னே
சங்க வேந்தொடு சார்ந்துடன் படுதலே சால்பாம்."

என இங்ஙனம் மாமனார் மறுகிக் கூறவே ஊமைத்துரை சிரித்தார். "முதிர்ந்த வயதை அடைந்திருக்கிறீர்கள்; இருந்தும் இறந்து போவதற்கு அஞ்சுகிறீர்கள் என்று தெரிகிறது. நாம் சரணடைந்தால் வெள்ளையர் இரங்கி நம்மை மரியாதையாக நடத்துவார் என்று எண்ணுவது எவ்வளவு மடமை! எதிரியிடம் அபயம் புகுந்து அவமானம் அடைந்து வாழ்வதைக் காட்டிலும் அடலாண்மையோடு எதிர்த்துப் போராடி யுத்த களத்தில் செத் துப் போவதே மேல். மானம் அழிந்து உயிர் வாழ்வது எவ் வழியும் ஈனமேயாம் வீர மரணமே விழுமிய வாழ்வாம்.

வான வில்என மருவிய மின்னெனத் தோன்றி
மீன கன்றதோர் நெறியென மறைந்துபோம் இந்த
ஊனு டம்பினை ஓம்பிட விரும்பிஒன் னலர்பால்
மானம் நீத்துடன் படுவரோ மாண்புறு மரபோர். (1)

வீர அண்ணலை வெங்கொலை புரிந்தனர்; எம்மை
ஈரம் இன்றியே இருஞ்சிறை வைத்தனர்; என்றும்
வாரம் ஒன்றியே வாழ்க்கையை நடத்தினர்; இந்த
நீர ரோடு நான் நேர்ந்தர சாளுதல் நெறியே! (2)

சுற்றி நின்றுள படைகளைச் சுளித்தடர்ந் தேறி
வெற்றி கொள்ளுதல் வேறலான் றிலதெனின் விளிந்து
பெற்ற இப்பிறப் பெய்திய பேற்றினைப் பெறுதல்
எற்றும் நான்கொண்ட உறுதியீ தறிதியென் றிசைத்தான்.

புலைநிறைந்த இப் புவியினில் இருப்பதில் போரின்
கலைநிறைந்த வெங் களத்தினில் கருதலர் தங்கள்
தலை நிறைந்தழி குருதியில் தவழ்ந்திடத் தாக்கி
நிலை நிறைந்தமெய் வெற்றியை நேரலன் நெறியே. [4]

நோயடைந்துறு துயரொடு நொந்துளம் நுடங்கிப்
பாயடைந்திழு பறியெனப் பதைத்துயிர் நீங்கித்
தீயடைந்துபுன் சாம்பலாய்த் தீர்ந்திடும் இந்தக்
காயம் நின்றுள மாயம்நீர் கண்டிலீர் போலும்! [5]

உடம்பில் ஓர் துளி உதிரம் உள்ளளவும் ஒன்னலருக்கு
அடங்கி வாழ்ந்திலன்; அடுசமர் அடலுடன் புரிந்து
மடங்க லேறென வாகையே சூடுவேன்; வழுவின்,
இடங்கலந்தமெய்க் கீர்த்தியை இருத்தியான் இறப்பேன் [6]

ஊழித் தீயென உருத்தெழுந் தக்கினிச் சென்னல்
பாழித் தோளுடல் பருந்தினுக் கிரையெனப் படுத்துக்
காழிப் போடுயர் காலனுக் குயிரினைக் காட்டி
ஆழிப் பாரினை ஆளுவென் ஆண்மையில் தாழேன். [7]

அச்சம் என்பதை அறிகிலாது ஆண்மையே மிகுந்த
உச்ச வீரவொண் குலத்தினில் உதித்துளேன்; முன்னே
வைச்ச காலைப்பின் வைத்திலன் வசையுறும் இந்தக்
கொச்சை வார்த்தையை ஒழித்துநீர் அகலுதல் குணமே."
[வீரபாண்டியம்]

ஊமைத்துரையினுடைய உள்ளத் திண்மையும் உறுதி நிலையும் இதனால் உணரலாகும். எவ்வழியும் தளராத மன நிலையுடன் அவர் மருவியுள்ளார். இராச தந்திர முறைகள் யாதும் தெரியாமல் போராடல் ஒன்றனையே உறுதியாகக் கருதி யிருக்கிறார்.

## போர் வீரர் நிலை.

கும்பினிச் சேனையின் திரள்களும் கொடிய ஆயுத வகைகளும் மேலும் மேலும் தொடர்ந்து வந்து படுநாசம் செய்தும் நெஞ்சம் கலங்காமல் நிலை தளராமல் தலைமை வீரனோடு இவர் நின்று வருவது அதிசய வியப்பாயுள்ளது. அழிவு நேர்ந்து விட்டது என்று மாமன் விழி நீர் மல்கி வேண்டியும் இழிவோடு வாழ்வது ஈனம் என்று இவர் தெளிவு கூறி யிருப்பது எவரும் சிந்தித்து உணரத் தக்கது. வாழ்ந்தால் மானமும் மரியாதையும் மருவி வர வாழ வேண்டும். அவை தாழ நேர்ந்தால் உயிர் வாழ

லாகாது: உடனே மாள வேண்டும் என்று இவர் மூண்டுள்ளார். அவ்வுண்மையை இவருடைய உரைகள் தோறும் ஓர்ந்து உணர்ந்து வருகிறோம். உறுதி குன்றாமல் கருமமே கண்ணாய்க் கருதி விரைந்து காரிய விசாரணைகளை வீரியமாப் புரிந்து வந்தார்.

### கண்ணீர் கண்ட காட்சி.

இரவெல்லாம் எவ்வழியும் பாதுகாப்புக்கு வேண்டிய வேலைகளைக் கவனித்தார்; கண்ணுறக்கம் இல்லாமையால் கடும் அசதியா யிருந்தது. விடிய ஐந்து நாழிகை யளவில் சிறிது கண்ணயர்ந்தார். ஒரு நாழிகை நேரம் கூடக் கழியவில்லை; விரைவில் எழுந்து கொண்டார். படை வீரர்கள் எல்லாரையும் தயார் செய்தார். நிலவறைகளில் நிலைத்திருந்து யாவரும் வினை செய்ய வேண்டிய விதங்களைக் குறித்து விட்டுத் தேவி கோவிலுக்குப் போனார்; தெரிசனம் செய்தார். அம்மன் கோவிலிலிருந்து மீளும்பொழுது இவருடைய கண்களிலிருந்து நீர் பெருகி வந்தது. என்றும் அழாத கண்கள் அன்று அழுதன; அந்த அழுகை எதை நோக்கி வந்தது? என்று யாருக்கும் தெரியாது; இவரது ஆவிக்கும் அத்தேவிக்கும்தான் தெரியும். நெடிய அரச வாழ்வுக்குக் கொடிய முடிவு நேர்ந்துள்ளதைக் கருதி உருகி மறுகியுள்ளார் என்று பரிவோடுநாம் யூகித்துக்கொள்ளுகிறோம்.

மலை கலங்கினும் நிலை கலங்காத வீரனுடைய விழிகளிலிருந்து நீர்வெளியே வந்துள்ளமையால் அந்த உள்ளத்தில் துன்ப வெள்ளம் பொங்கியுள்ளதை அது தெளிவாய்த் துலக்கியுள்ளது.

ஒருதுளி கண்ணீர் உள்ளத் துறுதுயர் வெள்ளம் எல்லாம்
தெரிதர வெளியே காட்டும் தெளிவினால் ஊமை வேந்தன்
கருவிழி சொரிந்த நீர்தான் கருதிநொந்து அன்னான்உற்ற
பருவரல் யாவும் யாரும் பார்த்திடப் பகர்ந்த அன்றே.

கண்ணீரின் நீர்மையை இதனால் கூர்மையாக் கண்டு கொள்ளுகிறோம். மனிதனுடைய கண்களிலிருந்து நீர் பெருகி வருமானால் அரிய பல உணர்ச்சிகள் அதனால் உணரவருகின்றன. அன்பு இன்பம் துன்பம் முதலிய வழிகளால் விழிகளிலிருந்துநீர் வெளி வருகிறது. இங்கே தோன்றியிருப்பது துன்ப அழுகையே. நீண்ட காலமாய்த் தலைமையோடு நிலைத்து வாழ்ந்து வந்த அரசு

குடி அடியோடு அழிந்து ஒழிய நேர்ந்ததே! என்று நினைந்து நொந்துள்ளமையால் ஊமைத்துரை கண்களிலிருந்து நீர் பெருகி மார்பில் வழிந்து ஓடியுள்ளது. மானவீரன் மறுகி அழுதது இரவு இறுதி நேரமே. மே மாதம் 23ந்தேதி (23-5-1801) இரவு இருபத்தேழு நாழிகையளவில் தேவியைத் தொழுது ஆவி உருகிக் கோவிலிலிருந்து இவர் கண்ணீர் மார்பில் மருவி ஓட அழுது திரும்பினார். அது பெரியபரிதாபக்காட்சியாய்ப் பெருகிநின்றது.

தன் அரசு அழிந்தது என்று தளர்ந்ததோ? தனது வாழ்வின்
இன்னலே எண்ணி நோக்கி இனைந்ததோ? இனம் இசைந்து
துன்னிய அழிவை ஓர்ந்து சோர்ந்ததோ? இந்நாடு அந்தோ!
அன்னியர் வசமாயிற் றென்று அயர்ந்ததோ? அழுதது அம்மா!

சுத்த வீரன் அழுத கண்ணீர் இத்தகைய நிலைகளை எல்லாம் எண்ணியுணர்ந்து யாவரும் இனைந்து இரங்கச் செய்துள்ளது.

அந்த நிலையிலும் இவர் சிந்தை துணிந்து சேனைகளைத் தயார் செய்து போருக்கு ஆயத்தமாயினர். முடிவு நேர்ந்தது என்று தெரிந்திருந்தாலும் ஆனவரையும் மூண்டு போராடி மாண்டு படவே வழிநாடி நீண்ட வுறுதியுடன் யாண்டும் நிலைத்துநின்றார்.

## தெவ்வர் தேறியது

சூரியன் கிழக்கே உதிக்கும் பொழுதே பாசறையிலிருந்து சேனைத் தலைவர் பாஞ்சைக் கோட்டையைப் பார்த்தார். இரவு முழுதும் பாய்ந்த குண்டுகளால் அரண்கள் எல்லாம் அடியோடு அழிந்து படுநாசமடைந்திருந்தன. வெள்ளைத் துரைகள் எல்லாரும் உள்ளம் உவந்தார். அன்று தங்களுக்கு நிச்சயமாய் வெற்றி கிடைத்து விடும் என்று துணிவா உறுதி செய்து கொண்டமையால் எல்லாரிடமும்உற்சாகங்கள் உச்சநிலைகளில் ஓங்கிநின்றன.

காலம் கடத்தி நிற்கக் கூடாது என்று கருதிக் காலையிலேயே யாவரும் போருக்கு ஆயத்தமாயினர். அரண்களை உடைக்கும் படி முதலில் குறி செய்து வைத்திருந்த பீரங்கிகளைப் பின்பு எதிரிகள் மேல் சுடும்படி தொடுத்து நிறுத்திக் கடுத்து வேலை செய்தனர். கொல்லும் கொடுமைகளில் எல்லை மீறி நின்றனர்.

தளபதிகள்யாவரும் அடுத்துநின்று ஆடலாண்மைகள் புரிந்தனர். அழிவு நிலைகளில் எவ்வழியும் விழிகள் ஊன்றி நின்றன.

## இருபத்தாருவது அதிகாரம்

### சதி புரிந்தது

மே மாதம் இருபத்து நாலாம் தேதி (24–5–1801) காலையிலிருந்தே கடும் போர் தொடங்கியது. பீரங்கிகளைச் சமீபத்தில் கொண்டு வந்து பதித்துச் சுட்டனர். கோட்டை அன்று அழிந்து போனமையால் குண்டுகள் ஊடுருவி வேகமாய்ப் பாய்ந்தன. பல மாடங்கள் இடிந்து விழுந்தன. அரங்கமால், இலட்சுமி விலாசம் எனப் பேர் பெற்றுச் சிறந்திருந்த அரச மாளிகைகள் தகர்ந்து சிதைந்தன. அரண்மனைகள் நொறுங்கின. வீதிகளின் இருமருங்குகளிலும் வரிசை வரிசையாயிருந்த வீடுகள் யாவும் தவிடு பொடிகளாயின. படுநாசங்கள் கடுவேகமாய்க் கதித்து விளைந்தன. அடு துயரங்கள் யாண்டும் மூண்டு நீண்டன.

படைகள் முழுவதும் ஒருங்கே தொடர்ந்து அடர்ந்து நகரை வளைந்து கொண்டன. தென் புறமிருந்து முன் அணியில் மூண்டு வந்த காலாட் சேனைகள் வேலியைக் கடந்து விரைந்து உள்ளே நெருங்கின. நெருங்கவே பள்ளங்களில் பதுங்கியிருந்த பாஞ்சை வீரர்கள் மேலே பாய்ந்து வேல்களால் வெகுண்டு குத்தினர். சிலர் செத்து வீழ்ந்தனர். அடுத்து அடர்ந்து வந்த பட்டாளங்கள் கடுத்துச் சுட்டன. இவருள் பலர் மாண்டுபட்டனர். ஒரு கிடங்கு வரிசையைத் தாண்டி அவர் ஏறி வருந்தோறும் இவர் சீறிக் குத்தி அயலே வீசி யெறிந்தனர். வெளியே யாரும் தலை தெரியாமல் பள்ளங்களில் மறைந்திருந்து கொண்டு ஐந்து வரிசைகள் அடலமர் ஆடியதைப் பார்த்ததும் சேனைத்தலைவர் விரைந்து படைகளை விலக்கி எதிரிகளுடைய நிலைமைகளை நெடிது சிந்தித்தார். திகைப்பும் வியப்பும் கொதிப்பும் அவரிடம் மிகைத்து எழுந்தன. அரண்கள் யாவும் அழிந்தும் உள்ளே பகைவர் முரண் ஓங்கி மூண்டு போராடியுள்ளனரே! என்று முனைந்து சினந்து நினைந்து கலன்று நெடிது சிந்தித்தார்.

### வியந்து நின்றது

எதிரிகள் யாவரும் கண்ணுக்குத் தெரியவில்லை. பட்டாளங்கள் கிட்ட நெருங்கும்போதுதான் பள்ளங்களிலிருந்து விரைந்து வெளியேறி வெட்டி வீழ்த்தி மறைந்து கொள்ளுகின்றனர்.

இது என்னே விந்தை! என்று வியந்து சினந்தார். "நகருள் எவ்வளவு கிடங்குகள் உள்ளன? எத்தனை படை வீரர்கள் இருக்கின்றனர்? என யாதும் தெளிவாகத் தெரியவில்லை. எல்லாம் விசித்திர வேலைகளாய்த் தோன்றுகின்றன" என்று வெள்ளைத்துரை உள்ளம் திகைத்து மெக்காலேயோடு நிலைமைகளைக் குறித்து ஆலோசித்தார் உள் நாட்டில் உள்ளவர் ஆதலால் ஊரின் எல்லா விவரங்களும் தெரியும் என்று கருதி எட்டப்ப நாயக்கரிடம் எதிரியின் இருப்பிடத்தைக் குறித்து மெக்காலே கேட்டார். அவர் பக்குவமாய்ப் பதில்சொன்னார்: "நகரம் முழுவதும் நிலவறைகள் செய்து வைத்திருப்பதாகக் கேள்வி; புதருள் மறைந்திருக்கும் புலிகளைப் போல எதிரிகள் மறைவான இடங்களில் கரவோடு ஒளி செய்து பதுங்கி யுள்ளனர்; இவ்வளவு தொகையினர் என்று தெளிவாகத் தெரியவில்லை. நிலைமை தெரியாமல் நம் படைகள் உள்ளே புகின் எதிரிகள் படு கொலைகள் செய்து விடுவார்கள்; அப்படியும் அவரை வெளியேற்றியே போராட வேண்டும்; உள்ளே தீப் புகைகளைச் செலுத்தினால் எல்லாரும் வெளியேறி வருவர்; பாஷாணப் புகைகளைக் கலந்து வீசினால் விரைந்து இறந்து படுவர். எவ்வகைகளிலும் புகைகள் உள்ளே புகும்படி செய்வதே நல்ல வகையாம்" என்று இவ்வாறு அவர் சொல்லவே சேனைத்தலைவர் திகைத்தார்; அது பாதகமான செயல் என்று பதைத்தார். புகையாலன்றி வேறு எந்த வகையாலும் அவரை வெளியேற்றி வெல்ல முடியாது என்று மீண்டும் எட்டப்ப நாயக்கர் வற்புறுத்தவே தானைத்தலைவர் இசைந்தார். கொடிய கொலையான பழிச் செயலைக் கடிது செய்ய அவர் நெஞ்சம் துணிந்தார். அக்கினிச் சென்னல் அடு புகைகளை மூட்டிப் படு கொலைகள் செய்ய மூண்டார். கோளன் மூட்டிய தீ கொடுமையாய் மண்டிக் கடுமையாய் ஓங்கியது.

## கிச்சுக் குடுக்கை.

நிலவறைகளுள் பதுங்கி யிருந்து கடும்போர் புரிந்து வருகிற பாஞ்சை வீரர்களை எப்படியும் வெளியேற்றி விட வேண்டும் என்று கொடிய வஞ்ச வினைகளைக் கும்பினித் தளபதிகள் கூடிச்செய்தனர். எட்டப்பநாயக்கரும் ஒட்டி உளவுகள் உரைத்தார். மிளகு வத்தல்களைக் கொண்டு கோட்டை யுள்ளே நான்கு புறமும் யாருக்கும் தெரியாமல் பாங்காப் பள்ளங்கள் தோண்டி

யாண்டும் குவித்தனர். மடிந்து போன வத்தல்களைப் பொடி செய்து சுரைக் குடுக்கைகளில் நிரப்பி இடங்கள்தோறும் பரப்பி வைத்தனர். கருமருந்துகளோடு சில மயக்க மருந்துகளையும் சேர்த்தனர். கொலைபாதகமான இந்தச் செயல்கள் யாவும் அதி விரைவில் ஆயத்தமாயின. போரை நிறுத்தி யிருப்பதாக எதிரிகள் பாசாங்கு செய்திருந்தமையால் பாஞ்சை வீரர்கள் ஊருள் அமைதியாயிருந்தனர். உரிய சமையம் வரவே ஊருள் எங்கும் புகைகள் புகுந்தன. வத்தல் தூள்களோடு மருந்து வகைகள் நிறைந்திருந்த சுரைக்குடுக்கைகளில் தீயைவைத்து உள்ளேஎறிந் தனர். அவை கிச்சுக் குடுக்கைகள் என்று சொல்லப்பட்டன. கிச்சு=நெருப்பு. தீய புகைகள் யாண்டும் பரவினமையால் ஆண்டிருந்தவர் யாவரும் மாய நேர்ந்தனர். மருண்டு மறுகி எவ் வழியும் மக்கள் வெவ்விய துக்கமாய் வெருண்டு திரண்டு வேறு வழி தெரியாமல் மாறுபாடாய்ப் பரிந்து பிரிந்து பரிதபித்தனர்.

அந்தப் புறமும் அயலும் புறநகரும்
எந்தப் புறமும் இரைந்தெழுந்து கூவியே
சிந்திப் புறம்போகத் தேம்பினர் தேம்பினவர்
முந்தப் புகையால் முழுதும் மயங்கினர்; (1

கூவி யலைந்து குலைந்து நிலைகலங்கி
வாவி மறுகும் மலர்ச்சோலையின் மருங்கும்
பாவில் உறுகுழலின் பாடாகப் பாடழிந்தே
ஓவிலா தோடி உளைந்தார் உளமறுகி. (2

மாடங்கள் தோறும் மதிமுகத்து மங்கையர்கள்
பாடங்கள் ஓதிப் பயின்றிருந்தார் பட்டபுகை
வீடெங்கும் மண்டி விரையவே வெய்துயிர்த்துக்
கூடங்கள் வந்து குலைந்துமறு கேறினர். (3

நின்று தவித்து நிலைதிரிந்து நேர்முகமாய்
ஒன்றும் தெரியாமல் ஊரெங்கும் உட்கலங்கிக்
கன்றி யலமந்து காலோடிக் கையற்றே
அன்றவர்கள் பட்ட அவதிநிலை யாரறிவார்? (4

கிச்சுக் குடுக்கை கிளர்ந்து விழஎழுந்த
நச்சுப் புகையால் நகரம் நிலைகுலையக்
கச்சுக் கடங்காக் கனதனத்து மங்கையர்கள்
பச்சைத் தளிர்மேனி பாடழிய வீடகன்றார். (5

பூங்கொம் பனையார் புகையடரப் பொங்குதுயில்கண்
நீங்கி எழுந்தார் நிலைதெரியார் நீள்தெருவை
ஏங்கி அடைந்தார் இடந்தெரியா துள்மூச்சு
வாங்கி விழுந்து மயங்கினர் மாடெல்லாம். (6

பொன்புனைந்த பொம்மற் புணர்முலையார் தாமணந்த
அன்பரொடு மேவி அரமியங்கள் தோறமர்ந்தே
இன்பமே துய்த்தங் கினிதிருந்தார் அன்றுகொடும்
துன்பமே கண்டு துடித்துவெளி யேறினர். (7

அந்தோ துயரென் றலமருவார்; கைக்குழந்தை
இந்தா பிடியென் றிடைதருவார்; இக்கொடுமை
முந்தோடிச் செய்தார் முதுபகைவர் நாமிங்கே
வெந்தோட நேர்ந்ததே வெந்தீ எனவிரைந்தார். (8

[வீரபாண்டியம்]

இந்தவாறு கொடிய பரிதாப நிலைகளில் அந் நகர மகளிர் பரிதபித்து நொந்தார். புகையின் மிகையால் சிலர் மடிந்து போயினர். கிச்சுப் புகை இப்படி மண்டிவரவே நச்சுப் புகை தோய்ந்த பீரங்கிக்குண்டுகளும் அங்கே தொடர்ந்து பாய்ந்தன.

புகை புகுந்தது

கருமருந்துகளோடு கலந்த புகைக் குண்டுகளைப் பீரங்கிகளில் வைத்து உள்ளே செலுத்தி அங்கே வெடிக்கும்படி விடுத்தார்; கிழக்கு வடக்கு தெற்கு ஆகிய மூன்றுபுறங்களிலும் குதிரைப்படைகளை நிறுத்தினர். வாசல்கள்தோறும் நான்கு நான்கு பீரங்கிகளை முறையே பதித்திருந்தனர். யாரும் எந்த வழியும் வெளியே போய் விடாதபடி வழியடைத்துக் காத்துச் சுடுவெடிகளோடு படைகள் நெடிது தொடர்ந்து நின்றன. புகைக்குண்டுகள் உள்ளே கொடிதாகப் பாயவே கரும் புகைகள் எங்கும் படர்ந்து தொடர்ந்து அடர்ந்து பரவின; நில வறைகளில் மறைந்திருந்தவர் எல்லாரும் அங்கே இருக்க முடியாமல் விரைந்து வெளியேறினர். தலைகள் வெளியே தெரியவே கும்பினிப் படைகள் வெடிகளோடு கொடுமையாய்க் கொதித்தேறிக் கடுமையாய்ச் சுட்டனர். சுடு வெடிகள் இடிகளின் ஒலிகள் போல் எம்மருங்கும் வெம்மையாய் எழுந்தன. நச்சுப் புகையால் மதி மருண்டு திசை தெரியாமல் பலர் மயங்கி விழுந்தனர். நிலை குலைந்து நெடிது திகைத்தாலும் நெஞ்சம் துணிந்தே நேர்ந்து பொ

ருதார். அஞ்சாமையும் ஊக்கமும் எஞ்சாமல் வேலை செய்தன.

## அழிவு நேர்ந்தது

பட்டாளங்கள் நெட்டு நெட்டாக உள்ளேறிச் சுட்டு வந்தாலும் பாஞ்சை வீரர் யாதும் அஞ்சாமல் எதிர்த்துப் போராடினர். கும்பினிப் படைகள் யாவும் ஒருங்கே மூண்டு கொடும் போர் புரிந்து சுட்டமையாலும் வெட்டினமையாலும் பாஞ்சை வீருள் அறு நூறு பேர்கள் அரை நாழிகை நேரத்துள் அநியாயமாய் மடிந்து விழுந்தனர். அந்தக் கொடிய கொலைகள் கடிது நிகழவே எஞ்சி நின்றவர் அங்கே எதிர்த்து நிற்க முடியவில்லை. நகரின் கீழ்த்திசை வழியே விரைந்து வெளியேறினர். திரண்டு மருண்டு வெளியேறுங்கால் அயலே ஆயத்தமாய் நின்ற பீரங்கிப் பட்டாளங்கள் நேரெங்கும் சுட்டன; குதிரைப் படைகள் கொதித்துப் பாய்ந்து கொன்றன. ஆயிரம் பேருக்குமேல் அங்கே மாண்டு மடிந்தனர். மற்றவர் மீண்டு போயினர். தப்பிப் போன ஆயிரத்து அறுநூறு பேர்களையும் விடாமல் பின் தொடர்ந்து விரைந்து கொல்லும்படி குதிரைப் படைகளையும் காலாட் சேனைகளையும் கர்னல் ஆக்கினியூ கடுத்து ஏவினார்.

கும்பினிப்படைகள் தொடர்ந்துஅடர்ந்துவரவே உயிர்தப்பி ஓடிய பாஞ்சையர் எதிர்த்துப் போராடிக் கொண்டே போயினர். அந்தப் போராட்டத்தில் இருவகையிலும் பலர் மடிந்தனர். மூன்று மைல் தூரம் தொடர்ந்து எதிர்த்துப் பொருது பின்வாங்கிப் போன இவர் இறுதியில் கடுத்து மூண்டு நின்று கொதித்துப்போராடினார். அந்தச் சமர்க்களத்தில் பலர் மாண்டு வீழ்ந்தனர். இரவு நேரம்; எங்கும் இருள் சூழ்ந்திருந்தமையால் மேலும் யாதும் செய்ய முடியாமல் அங்கிருந்து மீண்டு கும்பினிப் படைகள் பாஞ்சைக்கு வந்தன. தப்பி உயிர் பிழைத்த பாஞ்சை வீரர்கள் வட கீழ்த் திசையாய் அயலோடி மறைந்தனர். போராடி மாண்டவர் ஆண்டே பிணங்களாய்க் கிடந்தனர். அந்தப் படுகளம் உதிரச் சேறுகளாலும் பிணங்களாலும் உடல்களாலும் நிறைந்து கொடிய கோரமா யிருந்தது.

## வீர லட்சுமி

பாஞ்சை வீரர்கள் நிலை குலைந்து வெளியேறிய வுடனே கும்பினிச் சேனைத் தலைவர்கள் யாவரும் அதிக உற்சாகமாய்ப் படை

களோடு ஊருக்குள்ளே புகுந்தனர். மாற்ருர் தமது நகரினுள்ளே புகுந்தார் என்று தெரிந்ததும் அந்தப்புரத்திலிருந்த மங்கையர் எல்லாரும் ஈட்டி வாள்களால் தத்தம் கைகளால் குத்திக் கொண்டும் வெட்டிக் கொண்டும் செத்து வீழ்ந்தார். சிலர் தீயை வளர்த்துப் பாய்ந்து மாய்ந்தார். சிலர் குதிரை வீரர்களுக்கும் எட்டாமல் விரைந்து ஓடிக் கிணறுகளில் வீழ்ந்து மடிந்தனர். மான வீரங்களோடு மகளிர் அங்ஙனம் மடிந்து வருங்கால் எதிரிகளுடைய சேனை வீரர்கள் வீதிகளிடையே வீறுடு நடந்து வந்தார். ஒரு வீட்டு அருகே வரும்பொழுது வெள்ளைச் சேனைத் தலைவனுடைய கழுத்தில் ஒரு வேல் விரைந்து பாய்ந்தது. அவன் அலறி வீழ்ந்து அங்கேயே செத்தான்; அயலே வந்தவர் அஞ்சி மருண்டார்; வீட்டினுள் எட்டிப் பார்த்தார்; ஓர் இள மங்கை ஈட்டியால் தன் ஊட்டியில் குத்தி மடிந்து கிடந்தாள். அம் மடந்தையின் பெயர் வீரலட்சுமி என்பது. மல்லம்மாள் என்று பெற்ருேர் செல்லமாக அழைத்து வந்தார் ஆதலால் எல்லாரும் அப் பெயரையே வழங்கி வந்தனர். அப்பொழுது அவளுக்கு இருபத்தொரு வயது நிரம்பியிருந்தது. அரசுக்கு நெருங்கிய உறவுரிமை யுடையவள். பகைவர் படை உள்ளே ஏறி வருகிறது என்று அறிந்ததும் அவள் இறந்து போகத் துணிந்தாள். அவ்வாறு துணிந்து நிற்கும்பொழுது தன் வீட்டருகே படை வீரர்கள் வந்து விட்டனர். மூலையில் சாத்தி யிருந்த வேலை விரைந்து எடுத்தாள்; வெள்ளைத்துரையைக் குறி செய்து நின்ருள்; வாசல் அருகே வரவும் மின்னல் ஒளிபோல் வேல் வீசியது. அவ் வெள்ளையன் துள்ளி வீழ்ந்து மாண்டான். அடுத்த நிமிடம் அவள் உள்ளே செத்து வீழ்ந்தாள். அந்த வீரக் குலமகள் ஆற்றிய வெற்றி வேலையைக் கண்டதும் வெள்ளையர் எல்லாரும் உள்ளம் கலங்கி வெருண்டு மருண்டு வெருவினர். அந்த அச்சத்தினால் பின்பு யாண்டும் எந்த இடத்துக்கும் போகாமல் மீண்டு வெளியே போயினர். மாண்டவளுடைய மகிமை யாண்டும் அதிசயமாய் நீண்டது. அவளுடைய மான வீரம் விழுமிய வான ஒளியாய் எங்கும் தெளிவாய் விளங்கி நின்றது.

அழகொழுகு திருமுகத்தவ் ஆரணங்கு தன்னுயிரை
விழைவாக விடுமுன்னே வேல்ஒன்றை விரைந்தெடுத்துங்
குழையோடி நின்றஒரு ஒ ானலனை உயிர்மாய்த்தே
இழையோடும் இடைநுடங்க எதிர்வாவி இடைமாய்ந்தாள். (1

அடலோடு மனம்களித்தங்கு ஆண்மையுடன் அடைந்தஅவன்
குடலோடு மண்வீழ்ந்து குலைந்தாவி தீர்ந்தொழிந்தான்;
மிடலோடு நேர்வந்து வென்றஇவள் வேலொடுதன்
உடலோடு எறிந்தோடி உயிர்துறந்து புகழ்சிறந்தாள். (2

மண்வீரம் உடையதென மாநிலத்தில் பாஞ்சைநகர்
எண்வீர முடையதாய் இரும்புகழ்கொண் டிருந்ததிந்தப்
பெண்வீரம நேர்கண்ட பேரெல்லாம் பெருங்குலத்தின
திண்வீரம் தனைவியந்து திறம்புகழ்ந்து நின்றார்கள். (3

அவ்வீரக் குலமகளின் அருந்திறலைப் பெரும்படையின்
தெவ்வீரத் தலைவனோர் தெரிந்தஞ்சி மிகவியந்தான்;
இவ்வீரப் பதிமகளிர் இயல்பிதுவேல் இகலறிந்த
வெவ்வீர மைந்தர்திறம விளம்பலாம் தகைமைத்தோ? 4

இறந்துபடும் பொழுதும்ஓர் இளமங்கை எதிர்ஏறிச்
சிறந்ததிறல் ஆண்மகனைச் சீறியடல் வேல்எறிந்து
மறந்திறம்பா வகைமாண்டாள் மாண்புடைய இம்மரபின்
திறந்தெரிய இவ்ஒன்றே சிறந்தபெருங் குறியாமே. (5

அம்மா இப் பதிவென்றேம் அச்சமின்றிப் புகுகின்றேம்
சும்மாநீர் வாரும்எனச் சொன்னாலும் துணிந்துவரக்
கைம்மாவின் அணியதிறற் கருதலரும கருதார்ரேல்
எம்மாண்பில் அந்நகரம இருந்துளதென்று அறிந்திடலாம். 6

அரியேறும் புலியேறும் அடர்ந்திருந்த அருவனத்தில்
நரியேறி வந்ததென நண்ணார்கள் நண்ணியங்குப்
பரியேறிக் கரியேறிப் பவனிவந்த வீதியெல்லாம்
எரியேறிப் புகையேறி இருந்தபடி தெரிந்துவந்தார். (7

நின்றபெரும் குடிகளெல்லாம் நீள்தெவ்வர் புகுமுன்னே
மன்றஅயல் மறைந்தகன்றார்; மற்றவர்கள் மாண்டழிந்தார்;
அன்றநகர் அழிந்திருந்த அழிநிலையை மொழியாலே
ஒன்றவுரைப் பரிதாகும்; உள்ளினுயிர் உருகிவிடும். (8

[வீரபாண்டியம்]

எவருடைய உள்ளமும் உருகி மறுகும்படியான நிகழ்ச்சிகளை இந்தப் பகுதியில் கண்டு நாம் பரிந்து நிற்கிறோம். இங்கே ஒரு மங்கை துணிந்து செய்திருக்கும் வீரச் செயல் பாஞ்சை மரபின் நிலைமையை உலகம் அறிய நன்கு விளக்கியிருக்கிறது. பெண்மைவீரம் உண்மை நீர்மைகளோடு ஒளி வீசியுள்ளது.

இந்த வீர மங்கையை அந்த மரபினர் ஒரு வீர தேவதையாகப் பாவித்து இன்றும் பூசித்து வருகின்றனர். ஆலயம் அமைத்து வைத்துச் சிவராத்திரி தோறும் சிவ சத்தியாக வழிபட்டு வருதலால் மல்லம்மாள் கோவில் என அது வழங்கப் படுகிறது.

சேனைத் தலைவன் வியந்தது

அன்று இந்தக் குலமகள் புரிந்த வீரத் திறலைக் கேட்ட தலைமைச் சேனாபதி தன் குலத்தான் ஒருவன் கொலையுண்டு இறந்தான் என்பதையும் மறந்து இவளது மனநிலையை வியந்து புகழ்ந்தான். அதன் பின் உப தளபதிகளோடு கூடி மிகவும் எச்சரிக்கையாக ஊருள் புகுந்து நிலவறைகளை நேரே பார்த்தான். நெடிது வியந்தான்; எங்கும் பிணங்களாய்க் குவிந்து கிடந்தன. பாஞ்சை வீரர் உயிரை வெறுத்து எதிர்த்துப் போராடி மடிந்துபட்டுள்ள நிலைகளை யெல்லாம் நினைந்து நினைந்து சிந்தித்து நெஞ்சம் திகைத்தான். அஞ்சாத வீரக்குலம் என்று அதிசயித்து நின்றான். இம் மரபினருடைய அடலாண்மைகள் அவனுடைய உடலையும் உள்ளத்தையும் நடுங்கச் செய்தன.

பாஞ்சையருள் அன்று இறந்துபட்ட படு சாவுகள் பெரிய பரிதாபங்களுடையன. அந்த இழவு நிலைகளை எதிரிகள் எழுதி வைத்துள்ள இராணுவக் குறிப்புகளால் ஓரளவு அறியலாகும்.

"Our cavalry attacked them in flank and rear, and succeeded in cutting off six hundred. Four hundred and fifty dead bodies of the enemy were also found in the fort.

Those killed on former occasions having been disposed of outside, to the eastward." [R. G.]

"நம்முடைய குதிரைப் படைகள் முன்னும் பின்னும் வளைத்துக்கொண்டு எதிரிகளுள் அறுநூறுபேர்களைக்கொன்றன. நானூற்று ஐம்பது பிணங்கள் கோட்டைக்குள் சிதறிக் கிடந்தன. முன்பு கொல்லப்பட்ட உடல்கள் கோட்டைக்குக் கீழ் புறம் ஒதுக்கப்பட்டிருந்தன." என்னும் இதனால் இவர் பக்கம் நேர்ந்துள்ள இழவு நிலைகளை எளிது தெளிந்து கொள்ளலாம். அரணுக்கு வெளியே ஆயிரத்தறுநூறு பேர் அழிந்து கிடந்தனர்.

கும்பினிச் சேனையுள் அறுபத்து ஒன்பது ஐரோப்பியர்களும் எழுநூற்று நாற்பது சிப்பாய்களும் மொத்தம் இறந்து

போயுள்ளனர். பேர்பெற்ற சேனைத் தலைவர்களும் செத்து ஒழிந்தனர். வெள்ளைத் தளபதிகள் அழிந்த அழிவுகள் உள்ளத்திகில்களையும் கவலைகளையும் ஒருங்கே விளைத்தன ஆங்கிலேயரது நெடிய அழிவுகள் அவர்க்குப் பெரிய துயரமாய்ப் பெருகி நின்றன.

| | |
|---|---|
| ஜில் கிரைஸ்ட் | [Lieutenant Gilchrist] |
| ஸ்பால்டிங் | [Lieutenant Spalding] |
| கேம்பல் | [Lieutenant Campbell] |
| பிராசர் | [Lieutenant Fraser] |
| மேக்னல் | [Lieut. Mangnall] |

அன்று இறந்துபட்ட வெள்ளைக்காரருள் இந்த ஐந்து பேரும் சிறந்த படைத் தலைவர்கள். தன் பக்கல் பலர் இறந்து பட்டிருந்தாலும் வெற்றி கிடைத்ததை நினைந்து சேனாதிபதி மிக்க பெருமித மடைந்தான். பக்கங்கள் எங்கணும் சுற்றி நோக்கினான். அமராடியுள்ள நிலைகளைக் கண்டு அயர்ந்து நின்றான்.

### பாஞ்சையர் பாதுகாப்பு

பாஞ்சை வீரர்கள் செய்திருந்த பாதுகாப்பு நிலையங்கள் அதிசய வியப்புகளாய் அவனுக்கு ஆச்சரியங்களை விளைத்தன. எல்லா இடங்களையும் உள்ளத் திகிலோடு ஓர்ந்து பார்த்தான். உடன் வந்த யாவரும் உளங் கலங்கிப் பயந்து வியந்தார்.

இவர்களுடைய மனவுறுதியும் கும்பினியாரை எதிர்த்துப் போராடி யிருக்கும் போராண்மைகளும் போரதிசயங்களா யுள்ளமையால் யாரும் வியந்து பாராட்ட நேர்ந்தனர். நேரே பார்த்த தளபதிகள் எல்லாரும் அளவு மீறி அதிசயித்து நின்றனர். அந்நிலையில் எழுதிய சில குறிப்புகள் அயலே தெரிய வருகின்றன.

"To shelter themselves from shot and shells, they had dug these holes in every part of the fort. No language can paint the horrors of the picture.

Their long pikes, used in such a sheltered spot, must be most powerfully effective. No wonder, then, that every man who got to the top was instantly pierced and thrown down again. He could never get at his enemy, and indeed could scarcely tell from whence the blow was inflicted.

The system of defence adopted by these savages would have done credit to any Engineer. Nothing could surpass it but their unwearied perseverance," [M. R.]

"பீரங்கிக் குண்டுகளிலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்ளும் பொருட்டு கோட்டையுள் எல்லாப் பாகங்களிலும் குழிகள் தோண்டி யிருந்தனர். அந்தப் பயங்கர நிலைகளை எழுதி விளக்க மொழிகள் கிடையா.

"பாதுகாப்பான இடங்களிலிருந்துகொண்டு அவர்கள் உபயோகித்த நெடிய வேல்கள் கொடிய ஆற்றல்களுடையன. கிட்ட நெருங்கிய ஒவ்வொரு எதிரியையும் உடனே அவர் குத்தி வீசி வெளியே எறிந்தனர். யாரும் அருகே அணுக முடியவில்லை. எங்கிருந்து குத்துகள் வருகின்றன என்பதை எவரும் அறிந்திலர். அது ஓர் அரிய அதிசய நிலையா யிருந்தது.

"எதிர்த்துப் போராடுதற்கு இந்த முரட்டுச் சனங்கள் வகுத்துக் கொண்ட பாதுகாப்பு முறை எந்த யந்திர நிபுணராலும் செய்ய முடியாத பெரிய அற்புத நிலையது. யாண்டும் எவ்வகையிலும் தளராத இவர்களுடைய உறுதியும் ஊக்கமும் பொருதிறலும் யாரிடமும் காண முடியாதன"

இது மேலே குறித்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

பாஞ்சை வீரர்கள் போராடி யிருக்கிற போராட்டங்களையும், ஒருங்கே கூடிப் பட்டுள்ள பாடுகளையும் மானச நோக்கால் ஈண்டு உய்த்துணர்ந்து நாம் உள்ளம் உருகி நிற்கின்றோம்.

சத்துருக்களாயிருந்த வெள்ளைத் துரைகளே இத்துணை வியப்போடு குறித்திருத்தலால் இவர்களுடைய உள்ளத் திண்மையும் உறுதி நிலையும் ஊக்கப்பாடும் வீரத்திறல்களும் போராற்றல்களும் எத்துணை நிலைகளில் ஓங்கி யிருந்திருக்கும்! என்பதை யூக விவேகமாய் ஈங்குக் கூர்ந்துஓர்ந்து தேர்ந்து கொள்ளவேண்டும்

## முடிவு நிலை

நான்கு மாத காலமாய் ஓயாமல் பெரும்படைகளைக் கொண்டு வந்து கொடும் பீரங்கிகளோடு கும்பினியார் கடும்போர் புரிந்தும், படை வீரர்களையும் தளபதிகளையும் தொகை தொகையாக இடையிடையே இழந்தும் யாதும் வெல்ல முடியாமல் மறுகி யுளைந்து இறுதியில் பஞ்சமா பாதகமான தீய புகைக் குண்டுகளை வஞ்சமாய்ச் சதியாலோசனை புரிந்து உள்ளே ஏவிப் படுபழிகளை விளைத்துக் குடிகேடுகள் செய்திருத்தலால் முடிவில் பாஞ்சைவீரர் இவ்வாறுபரிதாபமாய்முடியநேர்ந்தனர்.

யுத்த தருமத்தின்படி நேர்மையோடு நெறி முறையாகப் போராடியிருந்தால் இவரை யாராலும் வென்றிருக்க முடியாது. ஆதியி லிருந்து தொடர்ந்து நோக்கி வந்தால் இந்தச் சுத்த வீரர்களுடைய உத்தம நிலைகளை உணர்ந்து யாரும் சித்தம் இரங்குவர். அந்நிய நாட்டாரை இங்கு அடியிட ஒட்டாமல் இந்நாட்டு மானத்தை நன்கு காத்து எங்கும் வணங்காமல் எவ்வழியும் தளர்ந்து இணங்காமல் யாண்டும் மூண்டு பொருதே இவர் மாண்டு போயிருக்கின்றனர். உள் நாட்டில் கோளர்களும் குடிகேடர்களும் இல்லாதிருந்தால் வெளி நாட்டார் இவ்வாறு இவர்க்கு அவகேடுகள் செய்திருக்கமாட்டார். முதலில் மூண்டிப் பார்த்த வுடனேயே பின்பு உறவுரிமையுடன் அண்டி அணைத்து வணிகமுறையில் தங்கள் ஆட்சியைப் பேணிப் போயிருப்பர். இவரது காணியைக் கைப்பற்றி யிருக்கமாட்டார். வீர இந்தியாவுக்கும் இந்த ஈனமான அவமானம் நேர்ந்திராது. ஆங்கிலேயர் பாங்கறிந்தே பாடுபட்டுப் பீடு பெற்றுள்ளனர்.

இவ்வளவு பகை வளர்ந்தும், அழிவுகள் நேர்ந்தும், இவரைக் குறித்து இடங்கள் தோறும் வெள்ளைத் துரைகள் எழுதி வந்துள்ள குறிப்புகள் எல்லாம் பரிவும் பண்பும் மருவி, வீர மானங்களை வியந்து, ஈர நீர்மைகளுடன் இசைந்திருத்தலை யாரும் எளிதாக உணர்ந்து கொள்ளலாம். உத்தம வீரரை எந்த உள்ளமும் தன்னையறியாமலே புகழ்ந்து போற்றி வியந்து வருகின்றது.

ஊமைத்துரை எங்கே?

சீமைத்துரைகள் எல்லாரும் சேர்ந்து படைகளோடு மூண்டு புகுந்து போராடியதால் பாஞ்சை வீரர் பலர் மாண்டு வீழ்ந்தனர். யாரும் தப்பி வெளியே போகாதபடி நாலு திசைகளிலும் பீரங்கிகளையும் குதிரைப் படைகளையும் நிறுத்திக் காவல் புரிந்து எல்லாரையும் உள்ளேயே வைத்து ஒருங்கே கொன்று விட வேண்டும் என்று மூண்டு அழித்து வருகையில் ஊமைத்துரை ஆச்சரிய சாதுரியமாத் தம்பி துரைச் சிங்கத்தை அழைத்துக் கொண்டு உரிய படை வீரர்களோடு கிழக்கு வாசல் வழியே வெளியேறிப் போயிருப்பது அரிய அதிசயமாயுள்ளது.

"He had escaped by miracle." (R. G.)

"அவன் மாயமாய் மறைந்து போயிருக்கிறான்" என வெள்

ஐயர் இப்படி உள்ளம் வியந்து மொழிந்திருக்கின்றனர்.

எவ்வழியும் கொல்லும்படி சூறி செய்து கொதித்து நின்ற கொடிய பகைவரிடமிருந்து தப்பி உரிய படை வீரர்களோடு விரைந்து வெளியேறிப் போன ஊமைத்துரையைப் பின் தொடர்ந்து எட்டப்ப நாயக்கர் படையும் கும்பினிச் சேனையும் முடுக்கி வந்தன; வழி முழுதும் போராடிக் கொண்டே இவருடைய படைகள் பின் வாங்கிச் சென்றன. மூன்று கல் வழியைக் கடந்ததும் அங்கே நிலையாய் நின்று மூண்டு பொருதன. இரு திறப் படைகளிலும் பல பேர் மாண்டு விழுந்தனர்; இரவில் யாண்டும் நீண்ட இருள் சூழ்ந்திருந்தமையால் அவர் மீண்டு போயினர்.

அங்கே எங்கும் பிணக் குவியல்கள் பெருகிக் கிடந்தன. அதனிடையே ஊமைத்துரை உடல் முழுதும் படுகாயங்கள் அடைந்து உணர்விழந்து துயரமாய் உயிர் மயங்கிக் கிடந்தார்.

யாண்டும் இரத்தங்கள் பெருகிப் பிணங்கள் நெடிது நிறைந்து கிடந்தமையால் அந்த ரணகளம் கொடிய கோரமாயிருந்தது.

ஓர் வீரமகன் பரிவு

இரவு நேரத்தில் சில பெண்கள் அங்கே வந்தனர். அந்த மகளிருடைய மக்களும் ஒக்கலும் பாஞ்சைப் படை வீரர்களாய்ச் சேர்ந்திருந்தார் ஆதலால் தங்கள் தந்தையர், கணவர், புதல்வர் யாரேனும் அதில் இருக்கின்றார்களா? என்று பேராவலோடு நாடித் தேடினார். அவ்வாறு தேடிவருங்கால் தன்னுடைய அருமை மகன் உருவை ஒருத்தி கண்டாள். உடல் எல்லாம் கொடிய காயங்கள் பட்டு உதிரம் சோர உணர்வழிந்து உயிர் மயங்கிக் கிடந்த அந்தப் புதல்வனைக் கண்டதும் அத் தாய் உள்ளம் துடித்து அள்ளி எடுத்து அந்தோ மகனே! என்று அலறியழுதாள்.

ஆவி அகத்ததோ! புறத்ததோ! என்று அலமந்து கிடந்த அந்த மகன் தாய் வந்து கூவி அழுத சத்தத்தைக் கேட்டதும் சிறிது கண்ணைத் திறந்து பார்த்தான். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தமையால் சரியாய்ப் பேச முடியவில்லை. மெல்லச் சொன்னான்: "அம்மா! நான் பிழைக்க மாட்டேன்; இறந்து போவேன்; எனக்காக வருந்தாதே; அதோ கிடக்கிற நமது சாமியைப் போய்ப் பார்! ஆனவரையும் அம்மான வீரரைப் பாதுகாத்தருள்!" என்று இவ்வளவே கூறினான். உடனே உயிர் போய் விட்டது

இது எவ்வளவு பரிவு! எவ்வளவு உரிமை! எத்துணைப் பரிதாபம்! எத்தகைய தியாகம்! யாவும் உய்த்து உணர வேண்டும்.

என்பும் உருகும்படியான இந்த அன்பு நிலையையும் வீரக் காட்சியையும் கருதி யுணர்வார் எவரும் உள்ளம் உருகி அழுவார். உணர்ச்சி வெள்ளங்கள் எவ்வழியும் பெருகி ஓடுகின்றன.

தனது அருமை மகன் இறந்து போனதை அறிந்ததும் அந்த அன்புத்தாய் உருகி யழுதாள்; பெரிதும் மறுகினள்; உடனே தேறி அவ் வீர மகன் கூறிய படியே அவ் வீரத் தாய் ஊமைத்துரையிடம் வந்தாள். பிணங்களுக்கு இடையே இரத்த வெள்ளத்தில் உணர்விழந்து கிடந்ததைக் கண்டாள்; உள்ளம் கலங்கினள். மேலே கிடந்த பிணங்களை அயலே தள்ளினள். கையால் மெல்ல அணைத்து எடுத்தாள்; உயிர் இருப்பதை அறிந்தாள்; உள்ளம் உவந்தாள்: "ஆ வீர அரசே! உங்களுக்கும் இவ்வாறு நேர்ந்ததே!" என்று கரைந்து அழுதாள்; கண்ணீர் வார்த்து வடியத் தன்னைக் கையால் ஏந்தியிருக்கிற அப் பெண்ணரசை ஊமைத்துரை கண் திறந்து பார்த்தார். யாதும் பேச முடியவில்லை. மீண்டும் விழிகளை மூடிக் கொண்டார். அத்தாய் அயலே பரிவோடு பதைத்து நின்ற பெண்களை உதவிக்கு அழைத்தாள். யாவரும் ஒருங்கே கூடி ஊமைத்துரையை மெல்ல அணைத்து எடுத்துத் தங்கள் ஊருக்குக் கொண்டு போயினர். யாருக்கும் தெரியாதபடி அங்கே அத்தாயின் வீட்டில் கிடத்தி வேண்டிய உபசாரங்களை விரைந்து புரிந்து பரிந்து பாதுகாத்தார்.

இந்தப் பகுதி யாரும் நெஞ்சம் கரைந்து நெடிது சிந்திக்கத் தக்க கொடிய சோகக் காட்சியாய் இங்கே விளைந்திருக்கிறது. பரிதாபமான இந்த அதிசய நிகழ்ச்சியை எதிரிகளும் தெரிந்து பின்பு பெரிதும் வியந்தனர். அவ் வியப்புகளை வரைந்தனர். அயலே வருகிற ஆங்கிலக் குறிப்புகள் ஈண்டு அறிய வுரியன.

"Amongst the heaps of slain they discovered the son of one of the party, still breathing, and after weeping over him, they began to raise him up, when exerting his little remaining strength, he exclaimed, "O mother, let me die, but try to save the life of Swamy, who lies wounded near me." The word he used, fully justifies my assertion of their adoration, as its literal meaning is a deity. The woman, animated by the same

**feelings, immediately obeyed her dying son, and speedily found Oomee, weltering in his blood, but still alive; and these extraordinary matrons immediately lifted, and carried him to the mother's house, where they were busily employed staunching his wounds." [M. R.]**

"இறந்து பட்ட பிணக்குவியல்களுள் அந்தப் பெண்கள் பரிந்து தேடி வரும் பொழுது அதனிடையே குற்றுயிராய்க் கிடந்த ஒரு மகனைக் கண்டனர். காணவே "ஐயோ! மகனே! என்று அவனுடைய தாய் கூவியழுது கையால் அவனை அணைத்துத் தூக்கினள். உயிர் மறுகிக் கிடந்த அவன் தன் தாயாரைத் துயரமோடு நோக்கி "அம்மா! நான் இறந்து போவேன்; எனக்காக அழாதே; அதோ காயங்களோடு அயலே கிடக்கிற சாமி உயிரைக் காப்பாற்றியருள்!" என்று சொல்லி விட்டு இறந்து போனன். அந்த வீர மகன் உபயோகித்த இந்த வார்த்தை ஊமைத்துரையைத் தெய்வமாகப் பாவித்து வணங்கி வந்துள்ள உண்மையை உணர்த்தி நிற்கிறது. சாகுந்தருணத்தில் தன் அருமைமகன் கூறியபடியே அந்த அதிசயத் தாயும் விரைந்து திரும்பி இரத்த வெள்ளத்தில்தோய்ந்து கிடக்கிற ஊமைத்துரையைக்கண்டாள்; உள்ளம் துடித்தாள்; உயிர் இருப்பதை அறிந்துஉவந்து எடுத்துக் கொண்டு போய்த் தன் வீட்டில் வைத்து உடல் முழுதும் பாய்ந்துள்ள காயங்களுக்கு மருந்து வைத்து நன்கு ஆற்றினள்" என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் பொருள்.

இந்த அரிய நிகழ்ச்சி பல மருமங்களை உலகம் அறியச் செய்துள்ளது. இந்நாட்டு மக்களும் படை வீரர்களும் பாஞ்சை மன்னர்பால் வைத்துள்ள வாஞ்சை நிலைகளை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம். ஒருவன் சாகும் பொழுது இவ்வளவு உரிமையோடு உரைத்திருத்தலால் எவ்வளவு பாசம்! எவ்வளவு மதிப்பு! எவ்வளவு அன்பு! எவ்வளவு ஆர்வங்கள் உள்ளே நிறைந்திருக்க வேண்டும்? கரணங்கள் கலங்கிய மரண வேளையில் மனம் உருகி அன்புசெலுத்தியிருப்பது அரிய வியப்பாயுள்ளது. தன் இன்னுயிரினும் இனியனாக இக் கோமகனை அக் குலமகன் எண்ணி வந்துள்ள உண்மை இங்கே கண் எதிரே காண வந்தது.

போர் வீரர்கள் யாவரும் இந்த வீர மகனைத் தங்கள் ஆருயிரினும் அருமையாகப் பேணி வழிபாடு செய்து வந்துள்ளனர்.

தெய்வமாகப் பாவித்துப் பத்திசெய்து நின்றனர் என்பார் Deity எனத் தங்கள் மொழியில் வெள்ளையரும் வெளிப்படுத்த நேர்ந்தனர். சேனைத் தலைவர் யாவரும் இந்த மான வீரனுடைய மாட்சியையும் ஆட்சியையும் வியந்து புகழ்ந்து உவந்துகொண்டாடினர்.

"This wonderful man was loved by his soldiers as no one else had ever been before,, (E. H.

"இந்த அதிசய மனிதனை அவனுடைய படை வீரர்கள் நேசித்தது போல் உலகில் வேறு எந்தத் தளபதியையும் யாரும் நேசித்ததில்லை" என நெப்போலியனைக் குறித்து லூஸிடேல் (Lucy Dale) என்பவர் இவ்வாறு வியந்து வரைந்திருக்கிருர்.

வீரத் தளபதியான ஊமைத்துரையை அவருடைய போர் வீரர்கள் நேசித்துப் போற்றி யிருப்பதை அவர் வாசித்து அறிந்திருந்தால் இதை ஆதரவா யோசித்து எழுதி யிருப்பார்.

## தலைமையின் நிலைமை

குடி சனங்களும் படைவீரர்களும் இக் குல வீரனிடம் பேரன்பும் பெருமதிப்பும் பூண்டு யாண்டும் உரிமை கூர்ந்து வந்துள்ளனர். சாமி என்றே ஊமைத்துரையை யாவரும் மரியாதையுடன் கூறி வந்தமையால் இவர்பால் அவர் கொண்டிருந்த பத்தியும் பரிவும் நன்கு தெரிய நின்றன. இவருடைய முன்னிலையில் எவர்க்கும் மன்னிய ஊக்கங்கள் மருவி யிருக்கின்றன. இவரது காட்சி அதிசய மாட்சியை அருளி வந்துள்ளது. இந் நாட்டு மக்கள் இவரை உள்ளம் உவந்து போற்றி வந்துள்ளதை அறிந்து வெள்ளையரும் வியந்திருக்கின்றனர். குறிப்புகளும் பல வரைந்து வைத்துள்ளனர். ஒன்று அயலே வருகின்றது.

"The Oomai was adored; his slightest sign was an oracle, and every man flew to execute whatever he commanded.

No council assembled at which he did not preside, no daring adventure was undertaken." (R. G.)

"ஊமையனை யாவரும் தெய்வமா வணங்கியுள்ளனர். அவருடைய சிறு குறிப்பும் தெய்வ வாக்கா மதிக்கப்பட்டது. அவர் இட்ட கட்டளையை முடிக்க எவரும் விரைந்து பாய்வர். அவர் தலைமை தாங்காத ஆலோசனைக் கூட்டம் யாதும் இல்லை. வீரச் செயல்கள் யாவும் அவராலேயே யாண்டும் நடந்துள்ளன."

இந்த ஆங்கில வாசகங்கள் ஈங்கு ஊன்றி நோக்கி உணர வுரியன. மருமமான வழிகள் உலக விழிகள் அறிய வருகின்றன.

ஊமைத்துரைபால் இத் தேசமக்கள் வைத்துள்ள பாச விசுவாசங்களை அந்நிய தேசத்தவரான வெள்ளைத் தளபதிகள் இவ்வாறு உள்ளம் வியந்து புகழ்ந்துள்ளனர். அரிய பெரிய நிலைமை நீர்மைகளோடு தலைமையாய் இவர் வாழ்ந்து வந்துள்ள மகிமைகள் இடங்கள்தோறும் தகைமையாய்த்தெரியவந்துள்ளன

இத்தகைய அதிசய வீரன் அநியாயமாய்ப் பகைவர் புரிந்த சதியால் பதியை விட்டு எழுந்து படுதுயரடைந்தான். இவனது அடலாண்மைகளை உடலில் பாய்ந்துள்ள கொடிய காயங்கள் உரையாடிநின்றன. தன்னைத் தொடர்ந்து வந்த நெடிய படைகளை நேரெதிர்ந்து பொருது ஆனவரையும் இம் மான வீரன் அமராடல் புரிந்தது, அதிசய தீரமாய்த் துதிகொண்டு நின்றது.

"பரிகள்எண் ணூறு பாயப் பாரவேல் வீரர் வீசக்
கரிகள்போல் அடர்ந்து காலாட் படைகளும் கடுத்து மொய்க்க
அரியெனத் திரிந்து பாய்ந்திவ் வாண்டகை அன்று செய்த
பெரியவெம் போரை எங்ஙன் பேசுவ திங்கே யம்மா! (1)

நீண்டபோ தயரா தேறி நேரல ரோடு நேர்ந்து
மூண்டுபோர் புரிந்து நின்றான் முடிவினில் உடல்கள்எங்கும்
கீண்டுவேல் வாள்கள் பாய்ந்து கிளர்ந்துவெங் குருதி சோர
மாண்டவர் போல்மயங்கி மண்ணிடை மறிந்து வீழ்ந்தான். (2)

ஆயிரம் பிணங்கள் அங்கே அணிஅணியாய் அடர்ந்து
மீயுயர் அடுக்கல் போல விளங்கிட வீரனுள்ளே
தீயுமிழ் கண்ண னாகிச் செய்யவெங் குருதி மெய்யில்
பாயுற ஆவி சோர்ந்து பரிந்திடை கிடந்தான் பார்மேல்." ]3)

இவ் வீரக் குரிசில் இங்கே இவ்வாறு ஆருயிர் அலமந்து கிடக்க அங்கே தெவ்வர் ஊருள் புகுந்து வெவ் வினைகள் புரிந்தார்.

தள்ளருந் திறலுடன் தழைத்திருந்த அவ்
ஒள்ளிய நகரிடை ஊக்கி ஏறியே
வெள்ளையர் இடந்தொறும் வியந்து கண்டனர்
கொள்ளைகள் கொண்டனர் கூடி எங்குமே.

சீரிய நிலையில் தலைமையாய்ச் சிறந்திருந்த நகர் சீரழிய நேர்ந்தது.

# இருபத்தேழாவது அதிகாரம்

## பதி அழிந்தது

அரண்கள் எல்லாவற்றையும் அழித்துக் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டோம் என்று வெள்ளையர் எல்லாரும் உள்ளம் களித்து நின்றார். சேனைத் தலைவன் உள்ளத்தில் மாத்திரம் வெற்றியுவகை முற்றும் புகவில்லை. அவமானமே மூண்டு நின்றது. கும்பினிக்கு நெடிய இகலாய் நீண்டு நின்ற கொடிய பகைவனைப் பிடிக்கவில்லையே என்ற வெட்கமும் துக்கமும் அவன் உள்ளத்தை வாட்டி நின்றன. இவ்வளவு பட்டாளங்கள், இவ்வளவு குதிரைப் படைகள், இத்தனை பீரங்கிகளையும் தப்பி ஊமையன் போய் விட்டானே! என்று அந்தச் சீமையன் சித்தம் கவன்றான். தப்பிப் போயுள்ள ஊமைத்துரையை எப்படியும் பிடித்து விட வேண்டும் என்று அவன் துடித்து நின்றான். முன்னம் மூன்று மைல் வரையும் பின் தொடர்ந்து மூண்டு போராடி மீண்டு வந்துள்ள படைகளையும் தலைவர்களையும் மறுபடியும் அழைத்தான். "அமர் புரிந்த இடத்தில் குவிந்து கிடக்கிற பிணங்களுள் ஊமையன் கிடக்கின்றானா? என்று ஆராய்ந்து பாருங்கள்; அங்கே இல்லையானால் அங்கிருந்து சென்றுள்ள காலடிச் சுவடுகளின் வழியே தேடிப் போய் அவன் எங்கேயிருந்தாலும் பிடித்து வாருங்கள்; உயிரோடாவது அல்லது கொன்றாவது அவனைக் கொண்டு வருபவர்களுக்குச் சிறந்த வெகுமதிகள் கொடுக்கப்படும்: விரைந்து போய்க் காரியத்தை முடித்து மீளுங்கள்" என்று சேனைத்தலைவன் குறித்துவிடுத்தான்.

### எட்டப்பன் எழுந்தது.

இந்தக் கருமத்தைச் செய்தற்கு எட்டையாபுரம் ஜமீன்தாரே தகுந்தவர் என்று கருதி அவருடைய படைகளோடு அவரே தலைமையாய்ப் போய் வரும்படி தளபதி கட்டளையிட்டான். வெற்றிக் களிப்போடு வீறு கொண்டிருந்த அவன் பாஞ்சை வீரரைப் பற்றி வரும்படி பணித்தது, படுகொடுமையாய் மூண்டு அடு கொலையில் நீண்டு நின்றது எதிரியை அடியோடு அழித்து ஒழித்து விட வேண்டும் என்று அவன் சுழித்து நின்றமையால் சுடுமொழிகளைக் கடுமையாய்க் களித்துக் கொதித்துக் கூறினான்.

"Colonel Agnew instantly ordered the Eteapooreans to follow them till night, offering rewards for any men of consequence, dead or alive." (R. G.)

"ஓடிப் போனவரைத் தொடர்ந்து போய் இரவு முழுவதும் தேடி உயிரோடோ அல்லது கொன்றே கொண்டு வருபவர்க்கு உயர்ந்த பரிசுகள் கொடுப்பதாக உறுதி கூறி எட்டியாபுரத்தாரைக் கர்னல் ஆக்னியூ உடனே அனுப்பினர்" என்னும் இது இங்கே அறிய வுரியது. அந்த வெள்ளைத் தலைவனுடைய உள்ளக் கொதிப்பை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். ஊமைத்துரையைப் பிடித்துக் கொண்டுவந்து கொடுத்தால் ஊமைத்துரையிடம் பேருதியம் பெறலாம் என்ற பேராசை எட்டப்பனைப் பெரிய பேயாக்கி யிருக்கிறது. அந்தப் பேயாட்டம் நோயாட்டமாயது.

கோட்டையழிந்த பொழுது பாஞ்சைப் பதியிலிருந்து தப்பி வெளியே பிழைத்துப் போன ஊமைத்துரையைப் பிடித்து வந்து கும்பினியாரிடம் கொடுத்து அரிய வெகுமதிகள் வாங்கலாம் என்று ஆவலோடு படைகளைத் திரட்டிக் கொண்டு எட்டப்ப நாயக்கர் போயிருத்தலை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம்.

"Set out with great glee."

"பெருங் களிப் போடு புறப்பட்டார்" என அவர் போன நிலையை அச் சேனை வீரர் இங்ஙனம் புலப்படுத்தியுள்ளார்.

இந்தப் பாதகச் செயலைச் செய்ய அவர் பேராசையோடு சென்றிருத்தலால் அந்தப் போக்கு அவருடைய உள்ளத்தையும், தேசத் துரோகத்தையும், நீசத்தனத்தையும் நேரே காட்டி நிலைமையை உணர்த்தியுள்ளது. வெள்ளைஏவல் கொள்ளை ஆவலாயது. கொலை நோக்கும் புலை நோக்கும் கொடிய பழி நோக்கமாய் நெடிதோங்கி நின்றன. வேறுயாதும் பாராமல்நேரேசென்றனர்.

## படுகளம் பார்த்தது.

பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து வடகிழக்கே மூன்று கல் தூரத்தில்முன்னம் போராடிய படுகளத்தைப் போய்ப் பார்த்துக் கடிதுதேடினர். செத்த பிணங்களே இரத்தங்களோடு அங்கே குவிந்து கிடந்தன. வேறு யாரும் உயிரோடு காணாமையால் அயல் எங்கும் நாடித் தேடினர். அங்கிருந்து சென்றுள்ள காலடிகளின் சுவடுகளை நோக்கியே தொடர்ந்து போயினர்.

மூக்கால் மைல் தூரம் கடந்ததும் ஒரு ஊரை அடைந்தார். அந்த ஊருக்குக் கக்கரம்பட்டி என்று பெயர். முன்னம் இரண களத்திலிருந்து தூக்கிக் கொண்டு வந்த ஊமைத்துரையை அங்கே தான் ஒரு வீட்டில் கிடத்தியிருக்கின்றனர். உடல் முழுதும் கொலைக் கருவிகளால் ஊறுபட்டுப் பரிதாப நிலையில் உயிர் மறுகி நீண்ட துயரோடு ஆண்டு அவர் பரிந்து கிடந்தார்.

## முத்தம்மாள்

தன்னுடைய அருமை மகன் படுகாயங்கள் அடைந்து பொருகளத்தில் இறக்கும் தருணத்தில் "அம்மா! சாமியைக் காப்பாற்று!" என்று சொன்னபடியே செய்த அந்த அன்னையின் பெயர் முத்தம்மாள் என்பது. அதிசயநிலையில் அனபுரிமைபூண்டு தலைவனைத் துதி செய்து மாண்ட அவ் வீர மகனுக்குச் சிவசங்கு என்று பேர். தான் அருமையாகப் பெற்ற பிள்ளை இறந்துபட்ட பெருந்துயரையும் மறந்து ஊமைத்துரையை வருந்தி எடுத்துக் கொண்டு வந்து தன் வீட்டில் கிடத்திப் போரில் நேர்ந்த காயங்களை ஆற்றுதற்கு வேண்டிய மருந்துகளை ஆவலோடு ஆராய்ந்து தேர்ந்து அந்த மாதா ஆர்வமீதூர்ந்து ஆதரவு செய்து வந்தாள்.

## அஞ்சி அயர்ந்தது

அப்படியிருக்கும் பொழுது எட்டப்ப நாயக்கர் படைகளோடு ஊருள் புகுந்து பிடிக்க வந்துள்ளார் என்பதை அறிந்ததும் அவள் உள்ளம் கலங்கினாள்; உயிர் நடுங்கினாள். கொடிய பகைவர் வந்து விட்டாரே! குடிகேடு நேர்ந்ததே! என்று நெடிய திகிலால் நிலை குலைந்து அலமந்து துடித்த அவள் உடனே நெஞ்சம் துணிந்து ஓர் உபாயத்தை விரைந்து செய்தாள். அபாயம் நீங்கச் செய்த அவளது உபாயம் அதிசய விநோதமாய் மதிநலம் சுரந்து யாவரும் வியந்து துதி செய்யும்படி இருந்தது.

## சூழ்ச்சி செய்து காத்தது.

வெடிகள் வேல்களோடு பொல்லாத எதிரிகள் கொல்ல வந்துள்ளாரே! என்று குலை நடுங்கிய அக் குலமகள் உடனே மஞ்சளை நிறைய அரைத்து ஊமைத்துரையின் உடம்பெல்லாம் பூசி மேலே நீளமான வெள்ளை வேட்டியைப் போட்டு மூடினாள். வேப்ப இலைகளைக் குழைகளோடு கொண்டு வந்து உடம்பெங்

கும் பொதிந்து வாசலில் தோரணமும் கட்டி வைத்தாள். இழவு வீட்டுக்கு வந்தவர் போல் துக்க மிகவுடையராய்த் தோன்றுமாறு பல பெண்களை வெளியே தெருவில் நிற்கச் செய்தாள். வந்து கேட்பவரிடம் தந்திரமாக ஒரு வார்த்தையைச் சொல்லும் படி உறுதி கூறிவிட்டு உள்ளே சில பெண்களைச் சேர்த்துக் கொண்டு ஒப்பாரி வைத்து ஓலமிட்டு அழுதாள். அந்த அழுகை அதிக பரிதாபமாயிருந்தது. இரண களத்தில் இறந்துபட்ட தன் பிள்ளையின் சோகம் வேகமாய் எழுந்தமையால் அவள் உள்ளம் உருகி உண்மையாகவே புலம்பி யழுதாள். அதி சீக்கிரத்தில் அதிசாகசமாய் அவள் செய்த செய்கையும் அழுத அழுகையும் அதிசய மதி யூகங்களாய் மருவி நின்றன. எந்த மதி யூகியும் அந்த விந்தையை வியந்து சிந்தை மகிழ நேர்ந்தனர்

## பயந்து ஓடியது.

"ஊமையன் இந்த ஊரிலேதான் ஒதுங்கி யிருக்கிறான்" என்று உறுதி பூண்டு கறுவுகொண்டு கருவியோடு துருவி நோக்கி ஊக்கிப் பிடிக்கவந்த எட்டையாபுரத்தார் அந்த வீட்டை யடைந்தபோது அழுகின்ற சத்தம் அவலமாய்க் கேட்டது. "இது என்னே அழுகை?" என முன்னே முனைந்து வந்தவர் அயலே நின்ற பெண்களிடம் ஆவலோடு கேட்டார். அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் நின்ற அவர் நயமாகப் பதில் சொன்னார்: "அந்த அம்மாளுக்கு ஒரே ஒரு மகன் இருந்தான்; நல்ல வாலிபன்; வைசூரி போட்டிருந்தது; ஒரு மாதமாய்ப் படுத்திருந்தான்; இன்று இறந்து போனான்; பிள்ளைப் பாசத்தால் இப்படி உள்ளம் துடித்து அழுகிறாள்" என்று அவர் மெல்லச் சொல்லினார். வைசூரி என்ற வார்த்தையைக் கேட்டதும் எட்டையா புரத்தார் அந்த ஊரை விட்டு அதி வேகமாய் ஓட்டம் பிடித்தார். அவர் அன்று ஓடிய ஓட்டம் பேடிகளும்நகைக்கும் படியாயிருந்தது; பெண்கள் எல்லாரும் பார்த்துச் சிரித்தார். தாங்கள் செய்த தந்திரம் நல்ல பலனைக் கொடுத்தது என்று உள்ளம் உவந்து களித்தார். ஊராரெல்லாரும் கூடி ஆர்வம் புரிந்து நின்றார். அரசு பிழைத்ததென்று ஆனந்தம் பொங்கியது.

ஊமைத்துரை முதலாகப் பல உயிர்கள் இறந்துபடும்படி மூண்டு வந்த கொடிய அபாயத்தை ஒரு சிறிய உபாயத்தால்

நீக்கிக் காத்தருளிய அந்தத் தாயினுடைய சாதுரிய சாகசமும் அன்புரிமையும் கருதி யுணருந்தோறும் பேராச்சரியமும் பேருவகையும் பெருகி வருகின்றன. அவள் ஒப்பாரி வைத்து அழுத பொழுது வெளிவந்துள்ள அறிவுரைகள் சூழ்வின் குறிகளாய் ஒளி புரிந்துள்ளன. சில நிலைகளை அயலே அறிய வருகின்றோம்.

தன்மகனை யுள்நினைந்து சார்ந்தவர்கள் கேட்டொழிய
மன்மகனை விரகுடனே மாய்ந்தவன்போல் நேர்கிடத்தி
என்மகனே இறந்தாயே! இனியெந்தப் பிறப்பிலுன்றன்
பொன்முகத்தை நான்காண்பேன்? போரேறே! எனப்புரண்டாள்.

ஒருத்திஎனக்கு ஒருமகனாய் உற்றிருந்தாய் உதவாமல்
வருத்திஎனைத் தள்ளிவிட்டு மாண்டாயே மணிவிளக்கே!
கருத்தறியாப் பாலகனே! காலனெனும் படுபாவி
பிரித்தகன்றான் இனியுலகில் பிழைத்திரேன் எனத்துடித்தாள்.

போரிலுற்று மாளாமல் பொன்தேடி மாளாமல்
பாரிலுற்ற இன்பமெலாம் பண்பாகத் துய்த்தபின்பு
நேரிலுற்று மாளாமல் நேர்ந்த அம்மை என்னுமுத்து
மாரியுற்று மாண்டாயே மாமகனே! எனக்கலுழ்ந்தாள். (3

கண்ணோடிக் காப்பாற்றிக் கையாலே கடன்கழித்திம்
மண்ணோடு புகழோடு வாழ்ந்திருப்பாய் என்றிருந்தேன்
விண்ணோடி இன்றுநீ வேறாக மறைந்தாயே
புண்ணோடு நெஞ்சோடு புலம்புகின்றேன் பொன்றாமல். 4

பேய்சூழும் பிணக்காட்டில் பிழைத்தெழுந்து வந்தாலும்
நாய்சூழும் படிவந்து நண்ணுகின்ற நாடுதனில்
தாய்சூழத் தமர்சூழத் தன்கிளைஞர் அயல்சூழ
வாய்சூழ வாய்த்திருந்த மாமகனே! மாண்டாயே! (5

கண்ணே!என் கண்மணியே! கைந்நிறைந்த கற்பகமே!
எண்ணேயென் எண்ணமெலாம் இன்றிழந்தேன் நீபிரிந்து
விண்ணேறி வீற்றிருக்க வீணாயிம் மண்ணிழிந்து
உண்ணேயென் உயிர்நலிய உற்றிருக்க ஒல்லேனே. (6

என்றிவ்வா றினைந்தேங்கி இருநிலத்தில் வீழ்ந்துபுரண்டு
அன்றவள்தான் கொண்டுநின்ற அல்லல்நிலை தனைக்கண்டே
ஒன்றிவந்தார் என்னே?என உசாவினர் உசாவவுமே
துன்றி அயல் நின்றவர்கள் சொல்லினர் சூழ்ந்தபடி. (7

ஊட்டிமிக வளர்த்துவந்த ஒருதாயிக்கு ஒருமகனுய்
நீட்டிஇங்கே நின்றிருந்தான் நேர்ந்துபெரி யம்மைமிகப்
போட்டிருந்த தொருமாதம் பொன்றினன் இன்றந்தோ
காட்டியபே ரன்புடையாள் கதறுகின்ருள் எனக்கரைந்தார். (8

அம்மையென அவர்சொல்ல அம்மொழியைக் கேட்டவுடன்
நம்மையுமே தொடர்ந்திந்நோய் நாசமுறச் செய்யுமென
வெம்மையுடன் உள்வெருவி வெருண்டகன்று மீண்டார்கள்
எம்மையுமே திரும்பாமல் இரிந்தோடி யிடம்புகுந்தார். (9

வாள்வீரன் தனைப்பிடிக்க வந்தவர்கள் ஒருகிழவி
சூழ்வீர மொழியாலே சொல்லாமல் தொலைந்தோடித்
தாள்வீரம் காட்டினர்; அத் தாய்செய்த சாகசத்தை
நாள்தோறும் அவ்வூரார் நவின்றுநகைத் தினிதிருந்தார். (10

[வீரபாண்டியம்]

இங்கே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை நாம் வியந்து நோக்கி உவந்து நிற்கிறோம். கொடிய பயங்கரமான மரணத்திலிருந்து ஓர் அரச குமாரன் தப்பிப் பிழைத்திருக்கிற அதிசய சோகக் காட்சியை இப் பகுதி விழியெதிரே காட்டி யுள்ளது. முத்தம்மாள் அழுதிருக்கிற அழுகைகள் உள்ளத்தை உருக்கி உணர்ச்சிகளைப் பெருக்கி உறுதி நலங்களை யூட்டியிருக்கின்றன. ஒப்பாரியில் ஊடாடி வந்துள்ள புலம்பல்மொழிகள் நுட்பமான குறிப்புகளுடையன. செப்பமும் சீர்மையும் சேர்ந்துள்ளன. யாவும் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளத்தக்கன.

பேய்சூழும் பிணக்காட்டில் பிழைத்து எழுந்து வந்தாலும்,
நாய்சூழும் படிவந்து நண்ணுகின்ற நாடு

என்றது எண்ணியறிய வுரியது. சோகமான அழுகையி லேயும் வேகமான விவேகங்கள் விளைந்து வருகின்றன. சுட்டுச் சொற்கள் சூட்டோடு தோய்ந்து பாட்டோடு பாய்ந்தெழுந்தன

நாட்டுப் பற்றின்றி மானம் கெட்டு மாட்டுப் புத்தியாய் வெளி நாட்டவர்க்கு வழி காட்டி இழி நாட்டமாய் இந் நாட்ட வர் உழைத்து வருவதை இகழ்ந்து பழித்திருக்கிருள். பெண்மை மொழிகள் உண்மை ஒளிகளாய் உணர்ச்சிகளை யூட்டி நிற் கின்றன. தாய் நாட்டு அன்பு இத் தாய்மாட்டு மிளிர்கின்றது.

போர் முகத்தில் பொருது வீழ்ந்து உடம்பு முழுவதும் படு

காயங்கள் அடைந்து அடு துயரோடு ஆருயிர் பிழைத்து வந்துள்ள ஒரு வீரக் குலமகனை அநியாயமாய்க் கொல்ல மூண்டு படை திரட்டி வந்திருக்கிற அந்தக் கொடிய கொலை பாதகச் செயலைக் குறித்து வெறுத்திருக்கிறாள். பிணங்களைத் தேடி அலைகிற நாய்கள் போல் நாடி ஓடி வந்துள்ளாரே! என உள்ளம் பதைத்து ஒப்பாரியோடு ஒப்பாரியாய் ஓலமிட்டு அந்த அன்னை நன்னயமாய் வைதிருப்பது உலகம் உன்னியுணர வந்துள்ளது.

பேய் வாயிலிருந்து மீட்டி வந்த பிள்ளையை நாய்கள் தின்னக் கோட்டி கொண்டு வந்துள்ளன என்று தெரிந்ததும் அச் சேயை நோய்வாயில் வைத்துப் பாய்வாய்க் கிடத்தி அத் தாய் காப்பாற்றியிருக்கும் காப்பு நிலையைக் காப்புக் கடவுளும் கண்டு மகிழ்ந்திருப்பார் என நாம் கருதி மகிழ்கின்றோம். வீரத் தாயின் பாதுகாப்பு வெற்றி வாய்ப்பாய் விளைந்து வியந்து புகழ நின்றது.

கொன்று தொலைக்கக் கொதித்து வந்த கும்பினிப் படைகளும் எட்டையாபுரத்தாரும் புறங்காட்டி விரைந்து வெருண்டு ஓடும்படி ஒரு சின்னப் பட்டிக்காட்டிலிருந்த பெண்கள் கூடிச் செய்திருக்கும் செயல் இங்கே நம் கண்கள் காண வந்துளது. அரிய காட்சி அவரது பெரிய மாட்சிகளை விளக்கி நிற்கிறது. கலகம்செய்து கொல்ல வந்தவர்களை ஒல்லையில் கலக்கி ஊருக்கு வெளியே ஓட்டியிருப்பது உணர்வுக்கு உவகையையூட்டியுளது.

## கும்பினியார் நாணியது

மங்கையர் திரண்டு செய்த இந்த அதிசய வெற்றியைக் கும்பினியாரும் பின்பு தெரிந்து கொண்டனர். தாங்கள் ஏமாந்து இழிந்து பயந்து ஓடி வந்ததை நினைந்து நாணி இளைந்து நின்றார். பரிசில்பெறலாம் என்று மூண்டு போனவர் பரிசழிந்து இழிந்து மீண்டு வந்தது பெரிய பரிகாச நகையாய் நீண்டு நின்றது.

ஜெனரல் வெல்ஷ் துரை இந்த விசித்திர நிகழ்ச்சியை வியந்து குறித்திருக்கிறார். அதன் ஒரு பகுதி அயலே வருகிறது.

"There is nothing like the ingenuity of woman at such a crisis. These miserable, and apparently half imbecile creatures conceived a plan in an instant, which not only proved successful, but most probably saved the lives of several others." M.R.

"இத்தகைய அபாய வேளையில் அந்தப் பெண் செய்த மதி நுட்பமான உபாயம் மிகவும் அதிசயமுடையது. மெலிந்த ஏழைகளான இந்த எளிய சனங்கள் உடனே ஓர் உபாயத்தைச் சூழ்ந்து செய்து காரிய சித்தி பெற்றிருப்பது பல உயிர்களைக் காப்பாற்றியருளிய வீர வெற்றியாய் விளங்கி நிற்கிறது" என்னும் இது இங்கே ஊன்றி உணர்ந்து கொள்ள வுரியது.

அன்று அந்தத் தாய் அவ்வாறு தந்திரம் செய்ய வில்லையானால் வந்திருந்த படைகள் ஊமைத்துரை முதலாகப் பல பேர்களை அங்கே கொன்று ஒருங்கே அழித்திருப்பார் என்பது மேலே பொறித்திருக்கும் குறிப்புகளால் நன்கு தெளிவாய் நின்றது.

கோரமான கொலைகள் பல நிகழ நேர்ந்த கொடிய அபாயத்தை ஒரு நொடியில் அக் குலமகள் நீக்கியருளியது பெரிய புண்ணியமாய் மருவியுள்ளது. படுகளத்தில் தப்பிய பாஞ்சை வீரர் பலர் அவ்வூரில் வந்து அன்று ஒதுங்கி யிருந்துள்ளனர் என்பதை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். சின்ன ஊரில் எவ்வாறு அன்னவர் மன்னி மறைந்திருந்தனர்? என்பது இன்னமும் தெரியாத பெரிய மருமமாய்த் துன்னியுள்ளது.

பட்டிக்காட்டுப் பெண்கள் செய்த சாதுரிய சாமர்த்தியங்களையும் படை வீரர்கள் பட்ட பாடுகளையும் தங்களுக்கு நேர்ந்த தோல்விகளையும் மேலும் தளபதி விளக்கி எழுதியிருக்கிறார்.

"They covered the body over with a cloth, and set up a shriek of lamentation peculiar to the circumstances.

The Eteapooreans, on their arrival, demanded the cause, and being informed, that a poor lad had just expired of the smallpox, fled for their lives out of the village, without ever turning to look behind them." [R. G.]

"ஊமையனைத் துணியால் மூடிக்கிடத்தி அந்தச் சமையத்திற்கு ஏற்றவாறு ஓலமிட்டு ஒப்பாரி வைத்து அழுதார். படைகளோடு சென்ற எட்டையாபுரத்தார் வீதியை அடைந்ததும் அழுவதின் காரணத்தை விசாரித்தார்; ஒரு இளைஞன் வைசூரியால் இறந்து போனான் என்பதை அறிந்தார்; உடனே தங்கள் உயிருக்குப் பயந்து அந்த ஊரை விட்டு விரைந்து ஓடினார்; பின்பு ஒரு போதும் அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கவே யில்லை."

இதைத் திரும்பித் திரும்பிப் பார்த்து நாம் சிரித்து நிற்கின்றோம். சிரிப்பு நம்மை அறியாமலே செழித்து வருகிறது. கிழவி அழுது கொண்டு அன்று செய்த செயல் உலகம் என்றும் குழுமி நகைத்துக் கிழமையாய் உவந்து கொள்ளும்படி செய்துள்ளது.

தன் பேச்சு மொழியில் வெள்ளைத் தளபதி இப்படி எழுதி வைத்துள்ளான். உள்ளதை ஒளியாமல் எள்ளளவும் மறையாமல் வெளியிட்டிருப்பது உவகை தருகின்றது. இந்தச் சேனைத் தலைவன் நல்ல நகைச்சுவை யுடையவன் என்று தெரிகின்றது.

வைசூரி என்பது ஒரு தொத்து நோய். அதன் பெயரைக் கேட்டால் வெள்ளைக்காரர் அஞ்சி வெருவுவர் என்று தெரிந்தே அத் தாய் நெஞ்சம் துணிந்து இந்த வஞ்சச் சூழ்ச்சியைச் செய்தாள். அது காரியசித்தி பெற்றது. சீரிய யூகமாய்ச் சிறந்து காரிய விவேகமா விரிந்து வீரியவெற்றியோடு விளங்கி நின்றது.

எட்டையாபுரத்தாருடைய இயல்பும் செயலும் இங்கே வெளியாயுள்ளன. நோயின் பெயரைக் கேட்டவுடனே உள்ளம் வெருவி ஓடியிருத்தலால் அவருடைய இயல்பான கோழைத் தனங்களைக் காட்டி நின்றனர். கும்பினிப் பட்டாளங்களோடு ஒட்டி நின்று தட்டாகவே வேலை செய்து வந்திருக்கின்றார். பட்டு வரும் பாடெல்லாம் பகைமை பொறாமை சுய நலங்களைக் கட்டி வருகின்றன. வஞ்சக் கரவுகள் செய்கின்றவர்களிடம் நெஞ்சத் துணிவுகள் இரா என்பதை அவர் செயல்கள் நேரே தெரியச் செய்தன. எட்ட நின்றே எட்டன் இழவு கூட்டியுள்ளான்.

இங்கே சில உண்மைகள் எண்ணி யுணரவுரியன.

நாட்டிலுள்ள குடி சனங்கள் எல்லாரும் பாஞ்சை மரபினர்பால் வாஞ்சையும் உரிமையும் பூண்டு உள்ளன்புடையராய் ஒழுகி வந்துள்ளமையை யாண்டும் நன்கு அறிந்து வருகின்றோம்.

ஈண்டு நிகழ்ந்தது அரிய பரிவாய் மருவியுளது.

பண்டைக் காலத்தில் இந் நாட்டிலிருந்த வீரத்தாய்மார்களுடைய சரித்திரங்களைச் சங்க நூல்கள் நன்கு துலக்கியுள்ளன.

### வீரத்தாயர்

தன் தேசத்து மன்னனுக்கு உதவி செய்யும்படி சென்ற தனது தந்தையும் கணவனும் போரில் மாண்டு போயினர். ஒரே

ஒரு மகன்தான் அந்தத் தாய்க்கு இருந்தான். தன் அரசன் மீது படையெடுத்து அந்நிய நாட்டார் வந்து கோட்டையைமுற்றுகை செய்துள்ளனர் என்று கேட்டாள். உடனே தன் மகனை அழைத்தாள்; தலையைச் சீவி முடித்தாள்; நல்ல வெள்ளை வேட்டியை மடுத்து உடுத்தினள்; கூரிய வேலைக் கையில் எடுத்துக் கொடுத்தாள்; "என் அருமை மகனே! நம் அரசுக்குத் துணையாய் நின்று போரில் உதவி செய்து அருளுக" என்று உறுதி கூறி விடுத்தாள். இருபது வயதுடைய அக் குலமகன் தாய் கூறியபடியே வேலோடு விரைந்துசென்று தன் மன்னன் படையுடன் சேர்ந்து நின்று எதிரிகளைப் பொருது வந்தான். பல தலைவர்களை வென்று வந்த அவன் முடிவில் நிலை குலைந்து வீழ்ந்தான். அந்த வீரமகன் இறந்துபட்டதை அறிந்ததும் யாவரும் கண்ணீர் சொரிந்து அழுதார் சிலர் அக் குலமகனைப் பெற்ற தாயினுடைய நிலைமையை நினைந்து வருந்தினர். மகன் இறந்த செய்தி தெரிந்தால் அவள் பதைத்து வருந்துவாளே என்று சிலர் மறைத்து மொழிந்தார்: "உன் மகன் போரில் சாகவில்லை; பகைவர் படை மிகுதியாய் வந்தமையால் புறங்காட்டி ஒதுங்கிப் போனன்" என்று உரைத்து நின்றார். அச் சொல்லைக் கேட்டதும் பிள்ளை பிழைத்தது என்று மகிழாமல் உள்ளம் கொதித்து உருத்தாள். "என் வயிற்றில் பிறந்த வீரமகன் போருக்கு அஞ்சி ஓடான்; நீங்கள் இங்கே சொல்லியபடி அவன் அங்கே ஓடியிருப்பது உண்மையானல் அப் பேய் மகன் வாய் வைத்துப் பால்உண்டுவந்த என் முலைகளை அறுத்து எறிவேன்" என்று சூளுரை புகன்று வாள் கைக் கொண்டு படுகளம் புகுந்து பிணங்களைப் புரட்டி நிணங்களை ஒதுக்கி தேடிப் பார்த்தாள்; முடிவில் தனது அருமை மகன் உடல்கொடிய வேல்கள் பாய்ந்து படியில் கிடப்பதைக் கண்டாள்; கையில் பிடித்திருந்த வாளைக் கடுத்து அயலே வீசினள்; பிள்ளைப் பாசத்தோடு உள்ளம் உருகி அவ்வுடலை அள்ளி எடுத்தாள்; கண்ணீர் வெள்ளமாய்ப் பெருகி ஓடியது; போரில் மாண்டதை நினைந்து பேருவகை கொண்டாள். அவ் வீரத் தாயின் நீர்மையை யாவரும் வியந்து துதி செய்து நின்றனர். அரிய வீரப்பாடுகள் பெரிய வழிபாடுகளாய்ப் பெருகி வருகின்றன. பொது மக்கள் அன்று போற்றி நின்ற நிலை என்றும் ஏற்றம் மிகப் பெற்று எவ்வழியும் இசையுற்றது.

## வீர மகளிர்.

"கெடுக சிந்தை கடிது இவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற்கு இவள் தன்ஐ
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற்கு இவள்கொழுநன்
பெருநிரை விலக்கி யாண்டுப்பட் டனனே;
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே."

அந்த வீரத்தாய் செய்த தீரச் செயலைக் குறித்து ஒக்கூர் மாசாத்தியார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

இவ்வாறு செருமுகம் நோக்கிச் சென்ற அவ் ஒரு மகன் மருவலரோடு எதிர்த்துப் போராடினான்; பலரை வென்றான்; ஆயினும் இறுதியில் பொன்றி வீழ்ந்தான். அவ் வீர மகனது நிலைமையை மாறுபாடாக அறிந்த தாய் முதலில் சீறி எழுந்தாள்; போர்க்களம் புகுந்த பின் உண்மை தெளிந்து உவந்து நின்றாள்.

"நரம்பெழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே." [புறம்]

போரில் மாண்டு கிடந்த தன் மகனை நேரில் கண்ட ஒரு வீரத் தாயின் தீர நீர்மையை இது காட்டியுள்ளது. காட்சிகளைக் கருதி நோக்குவார் எவரும் மாட்சிகளை வியந்து போற்றுவார். நாட்டு வீரங்களைப் பாட்டுகள் நன்கு காட்டி நிற்கின்றன.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த அரிய வீரக் காட்சியை இங்கே இந்தப் பாஞ்சாலங்குறிச்சிப் போரில்

ஓரளவு பார்த்து உறுதி கூர்ந்து உள்ளம் பூரித்து நிற்கின்றோம்.

சமர்க்களத்தில் படுகாயங்களோடு ஆவி அலமந்து இறந்து படுகிற மகனை நேரில் கண்டு உயிர் உருகினாலும் உள்ளம் கலங்காமல் நின்று அவன் சொல்லிய படியே ஊமைத்துரையை அள்ளி எடுத்து ஊருக்குக் கொண்டு வந்து ஆற்றிப் போற்றிக் கொல்ல வந்த பொல்லாத கொடிய பகைவரிடத்தும் பிடிகொடாமல் பேணிக் காப்பாற்றியுள்ள அந்த வீரத் தாயின் தீர நீர்மையை எண்ணுந்தோறும் ஏத்தி மகிழ்கிறோம்; கண்ணீர் மல்கிக் கனிந்து உருகுகிறோம்; உண்ணீர்மை உயர்ந்து உறுதியுறுகிறோம்.

தம்முடைய அரசின்பால் உள்நாட்டு மக்கள் ஆண் பெண் அடங்கலும் உள்ளன்போடு உரிமை பாராட்டி வந்திருக்கும் அருமை பெரிதும் பாராட்டத் தக்கது. நிகழ்ச்சிகள் நிலைமைகளை யுணர்த்தி யுள்ளன. உறுதி நிலைகள் யாவும் கருதி யுணர வுரியன.

## ஊரைக் கொள்ளையிட்டது

பதியைவிட்டு வெளியேறிய அதிபதியை விதிமுறை கடந்து வதைத்து வரும்படி படைகளை ஏவி விட்டு அதிக பாதுகாவலோடு சேனைத் தலைவன் பாஞ்சையுள் புகுந்து யாவும் ஆய்ந்து பார்த்தான். செல்வ வளங்களை யெல்லாம் கொள்ளை செய்து வெளியேற்றும்படி குறித்தான். இடங்கள்தோறும் புகுந்து உள்ள பொருள்களை யெல்லாம் சிப்பாய்கள் கொள்ளை கொள்ளையாக வாரி யெடுத்தார். குண்டுகளுக்குத் தப்பிப் பிழைத்திருந்த குதிரைகளையும் மாடுகளையும் யானைகளையும் பாசறைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர். நிதியறையுள் புகுந்தனர். பெரிய கருவூல அறைகள் திறக்கப்பட்டன. அதுபொழுது அங்கே நாலாயிரத்து மூந்நூறு தங்கப் பவுன்களும், முப்பத்தாறுயிரம் ரூபாய்களும் வேறு மணிகளும் அணிகளும் இருந்தன. எல்லாவற்றையும் ஒருங்கக்கே கவர்ந்து கொண்டனர். அழகிய அரச மாளிகையாயிருந்த அரங்கமாலை அடைந்து நோக்கி வியந்து நின்றனர். அதன்பின் அந்தப்புரம் புகுந்து ஆவலோடு ஆய்ந்து பார்த்தனர்.

அங்கே பரிதாபமாய் இறந்து கிடந்த மங்கையரைக் கண்டதும் எல்லாரும் மறுகி நின்றனர். பல்லோரும் பரிவு கூர்ந்தனர். யாண்டும் அஞ்சாத சேனைத் தலைவனும் ஆண்டு நெஞ்சம் கரைந்து உருகி நிலை குலைந்து நெடிது பரிந்து கடிது கவன்றான்.

புறநகரம் கண்டுநின்று போர்மன்னன் வீற்றிருந்த
திறனகரம் இனிதடைந்தான் செழுமணி மாடங்களுடன்
அறமிருந்து குடிகொண்ட அரண்மனையும் பார்த்துவந்து
பெறலரிய பேறென்று பெருவகை மீக்கூர்ந்தான். 1

உள்வியந்து நின்ற அவன் உள்புகுந்து நோக்கினான்
கள்விரிந்த மலர்க்கூந்தற் காரிகையார் வீரியமாய்
ஒள்ளெரியில் வீழ்ந்திறந்த ஊறுகண்டு நேருருகி
அள்ளுபழி என்றயர்ந்தான் அஞ்சாதான் அஞ்சிநொந்தான்.

பகைமை மண்டியுள்ள வெள்ளைத் தளபதியும் இவ்வாறு உள்ளம் பரிந்து உருகி இரங்கி யிருத்தலால் அங்கே இறந்து கிடந்த அரச மங்கையருடைய பரிதாப நிலைகளை அறிந்து கொள்ளலாம். எரியுள் வீழ்ந்தும் நீர் நிலைகளில் பாய்ந்தும் மாய்ந்து போயுள்ள மரண முடிவுகள் அந்தக் கரணங்களைக் கலக்கி நின்றன. மாதர்களுடைய மான வீரங்களை நினைந்து நினைந்து யாவரும் வியந்து புகழ்ந்தனர். அதிசயமடைந்து வருந்தினர்:

## நகரை அழித்தது

சிறந்த அரசகுடி அநியாயமாய் அழிந்து போயது! என்று மூக்கில் விரலை வைத்து நெடு நேரம் வருந்தி நின்ற வெள்ளைத் துரை உள்ளத்தைத் தேற்றிக் கொண்டு மீண்டு வெளியே வந்தான். வேண்டிய காரியங்களை விரைந்து செய்யும்படி பணித்தான். படைகள் மூண்டு வேலைகளைச் செய்தன. கோட்டையைச் சுற்றிக் குவிந்து கிடந்த சவங்களை அயலே அப்புறப்படுத்திப் புதைத்தனர். நிலவறைகளிலும் ஊருள்ளும் அந்தப் புரத்திலும் கிடந்த பிணங்களை அப்படியே மண்ணை மூடி மறைத்தனர். பின்பு ஊர்முழுவதையும் தட்டிநொறுக்கித் தரைமட்டமாக்கினர். நெடிய அரணாய் நிலைத்து நின்ற கோட்டை மதில்கள் முன்னமே கொடிய குண்டுகளால் உடைபட்டனவாயினும் மீண்டும் இடையிடையே தலை நீட்டி நின்றவற்றை யெல்லாம் அடியோடு அழித்து அவை இருந்த இடமும் தடந்தெரியாதபடி செய்தனர். வீரத் திறலோடு விளங்கி யிருந்த நகரம் வெறுந் தரையாக நேர்ந்தது. இந்த அழிவு மே மாதம் இருபத்தைந்தாம் தேதி (25–5–1801) நடந்தது. திருவேறி யிருந்தது உருமாறி ஒழிந்தது. அருந்திறலோடு சிறந்து பெருந்திருவாய்ப் பெருகியிருந்த ஊர் வெறுந்தரையாய் விளிந்து வீரக் காட்சியை இழந்தது.

## கல்லறை

போரில் இறந்துபட்ட கும்பினிப் படைத் தலைவர்களையும் சிப்பாய்களையும் ஊரின் வடபால் புதைத்திருந்தனர் ஆதலால் அங்கே ஞாபக சின்னம் அமைத்தற்கு வசதியாகப் பெரிய மயான பூமியை வரைந்து குறித்தார். நீண்ட நாளாக மூண்டு நடந்த சமரில் நூற்றுக் கணக்கான ஐரோப்பியரும், ஆயிரக் கணக்கான படைவீரர்களும் அழிந்து போயுள்ளமையைநினைந்து தலைமைத் தளபதிகள் வருந்தினும் இறுதியில் கிடைத்த வெற்றி அவர்க்கு உறுதியும் உவகையும் தந்தது. நெடிய பகை அழிந்தது என்று நெஞ்சம் களித்தாலும் கொடிய கவலையும் கோபதாபங் களும் உள்ளே குடிபுகுந்து வெள்ளையரை வருத்தி நின்றன.

## உள்ளக் கவலை

பல வெள்ளையர்களைப் பலி கொடுத்துப் படாத பாடுகள் பட்டுக் கோட்டையைப் பிடித்துக் கொண்டாலும் தலைவன் தப் பிப் போய் விட்டானே! என்ற கவலை சேனைத் தலைவன் உள் ளத்தை வருத்தி வாட்டியது. ஊமையன் பிழைத்து நின்றால் மீண்டும் போர் வீரர்களைத் திரட்டிக் கும்பினி ஆட்சியை நிலை குலைத்து விடுவான் என அக்கினிச் சென்னல் அல்லல் உழந்து நின்றான். பெரும்படை திரண்டு காட்டையாபுரத்தார் விரைந்து போயிருத்தலால் எப்படியும் ஊமையனைப் பிடித்து வந்து விடுவர் என்று ஆலலோடு எதிர் பார்த்திருந்தான். மூண்டு போனவர் ஒரு பலனும் இல்லாமல் வெறுங்கையராய் மீண்டு ஓடிவந்ததைக் கண்டதும் அவன் மிகவும் கவன்றான். தன் படைகள் பல வற்றை இழந்தும் பூரணமான வெற்றி பெறவில்லையே என்று உளைந்து வருந்தி நின்ற அவன் திருந்தித் தேறினான். கோட்டை அடியோடு அழிந்து போனமையால் இனி ஊமையனால் யாதும் செய்ய முடியாது என்று துணிந்து மேலே செய்ய வேண்டிய வேலைகளை யாண்டும் கருதிஆய்ந்து உறுதியா விரைந்து புரிந்தான்.

## படை பிரிந்தது

ஊமைத்துரை கைப்பற்றியிருந்த தூத்துக்குடியை மீண்டும் கும்பினி ஆட்சியில் சேர்த்துக் காரியங்களை ஒழுங்கு செய்யும்படி டன்னல் (Captain M. Donnel) என்னும் ஆங்கிலத் தளபதியைப் படைகளோடு அங்கே அனுப்பினான். பாசறையைக் கலைத்து

விட்டு மற்றைப் படைகளையெல்லாம் பாளையங்கோட்டைக்கும், திருச்சிராப்பள்ளிக்கும் போகும்படி பணித்தான். அவ்வாறே சேனைகள் பிரிந்து இரண்டு இடங்களுக்கும் சென்றன. எட்டப்ப நாயக்கருக்கு வேண்டிய மரியாதைகளையும் வெகுமதிகளையும் சேனைத் தலைவன் உவந்து செய்தான். "உங்கள் உதவி எங்களுக்கு மிகவும் இதமாய் நின்றது; உங்களைக் குறித்து மேலே கும்பினியாருக்கு எழுதுவேன்; நல்ல பலனை நீங்கள் விரைந்து பெறுவீர்கள்" என்று இங்ஙனம் அவருக்கு ஆறுதல் கூறிவிட்டுக் கர்னல் ஆக்கினியூவும் மெக்காலேயும் தக்க குதிரைகளில் ஏறிப்பக்கப்படைகளுடன் பாளையங்கோட்டைக்குப் போயினர்.

வீர நிலையில் வீறுகொண்டிருந்த ஊர் சீரழிந்து சிதைந்து போனதை நோக்கி நாட்டு மக்கள் யாவரும் உள்ளம் வருந்தி உருகி யுளைந்து மறுகி யிரங்கிப் பரிவு கூர்ந்து பரிந்து நின்றனர்.

திருமகளுக் குறைவிடமாய்ச் செழித்திருந்த திருநகரின்
பெருவளங்கள் யாவுமே பேணலர்கள் மிகவாரி
ஒருகளத்தி லுறத்தொகுத்தார் உயரரசின் வளமுறவே
அருவளத்த ராயினர் அகமகிழ்ச்சி மீக்கூர்ந்தார். (1

பெருவாரி நீரிழந்த பெற்றிபோல் பெருநகரம்
உருமாறி உயிர்பிரிந்த உடலாகி ஒளியிழந்து
திருமாறி நின்றதே திரையாழி நிலவாழ்வை
ஒருவாழ்வா யுள்ளியுளங் களிப்பரோ வுணர்வுடையார். (2

போர்மகட்கும் கலைமகட்கும் புகழ்மகட்கும் நிலையமாய்ச்
சீர்வளங்கொண் டினிதிருந்த தென்பாஞ்சை சீரழிந்தே
ஓர்வளமும் இல்லாமல் ஒன்னலர்கைப் பட்டதெனப்
பார்வழங்கிப் பலபுலம்பிப் பரிதபித்து நின்றதுவே. (3

[வீர பாண்டியம்]

இன்னவாறு உலக மக்கள் உள்ளம் பரிந்து வருந்த அக் கலக மக்கள் கடுங்கேடு புரிந்து கரந்து போனர். உளவு கூறி ஒட்டியிருந்து இழவு கூட்டி வந்த எட்டப்ப நாயக்கரும் தன் படைகளுடன் கட்டாக எட்டையாபுரம் போய்ச் சேர்ந்தார்.

உற்ற பகையை ஒழித்து வெற்றிமிகப் பெற்றோம் என்று கொற்றம் குலாவிக் கும்பினியார் குதூகலித்து நின்றார். தங்கள் ஆட்சிநிலையைப் பலப்படுத்தி யாண்டும் ஏற்றமுற ஆற்றிவந்தார்.

## இருபத்தெட்டாவது அதிகாரம்

### வெளி எழுந்தது

அரசு நிலையில் அதிபதியாய் நின்று அடலாற்றி வந்தவர் சதி வினையால் பதியிழந்து படுதுயரடைந்தார். விதியின் விளைவு விசித்திர நிலைகளை விரித்து வியப்புகளை விளக்கி வருகிறது. முத்தம்மாள் என்னும் அந்த அருமைத் தாய் செய்த அதிசய உபாயத்தால் ஊமைத்துரையின் உயிர் பிழைத்தது. கொடிய பகைவர் கையில் அகப்பட்டுப் பரிதாபமாய் அழிந்துபடுவதிலி ருந்து இவர் தப்பி உய்ந்திருப்பது அற்புத நிலையமாயுள்ளது. எமன் வாயில் போன உயிர் மீண்டு வந்தது போல் இவர் ஈண்டு வாழ்ந்துள்ளார். உடம்பில் படிந்திருந்த படுகாயங்கள் எல்லாம் விரைவில் ஆறின. ஆறு தினத்துள் யாவும் குணமாய்த் தேறி எழுந்தார். பாலும் பழமும் ஊட்டி நாளும் அத் தாய் நன்கு பேணி வந்தமையால் தேகம் திடமாயது. அவளது உரிமை யான உபசார நிலைகளையும் உபகார வகைகளையும் எண்ணி எண் ணிக் கண்ணீர் மல்கி இவர் உள்ளம் உருகினர். "இந்தப் பேருத விக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன்? எந்தப் பிறவியில் இந்தக் கடன்களைத் தீர்ப்பேன்?" என்று கருதிக் கரைந்தார். ஈன்று எடுத்த தனது அருமையான ஒரு மகன் இறந்துபட்ட துக்கத்தையும் பொறுத்துக் கொண்டு தன்னைத் தூக்கி வந்து ஆற்றியருளி இடையே பேய்கள் போல் ஓடிவந்த கொலைகாரர் களையும் சூழ்ச்சியால் ஒதுக்கி ஆருயிரை ஆதரவாய் அருளி யுள்ள அந்தப் பேருபகாரத்தை நினைந்து நினைந்து நெஞ்சம் கனி ந்து "அம்மா! நீயே என்னைப் பெற்ற தாய்: நான் மீண்டு பிழைத்து ஈண்டு வந்தால் பிள்ளையாய் நின்று உனக்கு வேண் டிய பணிகளை நானே விழைந்து செய்வேன்; கொள்ளி வைக் கப் பெற்ற பிள்ளையைப் போரில் தள்ளி விட்டு என்னை அள்ளி எடுத்து வந்தாய்! அருமைத் தாயே! உனது உரிமை மகனை நான் இனி எனது கடமையைச் செய்வேன்; எனக்கு விடை தந்தருளுக; நான் வெளியே போய் விட வேண்டும்; ஈண்டு இனி மேல் இருக்கலாகாது; கோளர்கள் உளவு கூறி இழவு கூட்டி விடுவர்; அயலே போய் நின்று மேல் ஆகவேண்டியதை நான்

வேகமாச் செய்ய வேண்டும்; எனது அருமைத் தம்பி துரைச் சிங்கம் எங்கே இருக்கிருனே? யாதும் தெரியவில்லை; அன்று கோட்டையை விட்டு வெளியேறும் பொழுது கூட அழைத்து வந்தேன்; கும்பினிப் படைகள் பின் தொடர்ந்து பொருதன; அந்தப் போரில் இறந்து பட்டானே? தப்பிப் பிழைத்தானே? துப்பு ஒன்றும் துலங்க வில்லை; எப்படியும் நான் வெளியேறி அயலே போய் நின்று செயல் இயல்களை ஆராய வேண்டும்; விடையருளுங்கள்'' என்று இரு கைகளையும் குவித்து அந்தத் தாயைத் தொழுது வேண்டினர். அப் பெண்ணரசி கண்ணீர் சொரிந்து கரைந்து அழுதாள். கெழுதகைமை நிறைந்த அக் குலத் தாயைத் தேற்றித் தொழுது நிறுத்திவிட்டு இரவே எழுந்து வடதிசை நோக்கி இவர் விரைவாய்ப் போனர். அவ்வாறு போனது ஜூன் மாதம் (16–6–1801) இராத்திரி 15 நாழிகையாம்.

## கல்மடவு கண்டது.

நடு நிசியில் தனியே சிறிது தூரம் நடந்தவர் இடையே ஓர் இடத்தில் தங்கி யிருந்தார்; விடியுமுன் எழுந்து நடந்தார்; காலையில் ஓர் ஊரை யடைந்தார். அவ் ஊர்க்குக் கல்மடவு என்று பேர். அவ் ஊரில் கணக்கு வேலை பார்ப்பவர்; நல்ல சமுசாரி; வேளாளர் மரபினர்; சாம்பசிவம் பிள்ளை என்னும் பேரினர்; அவர் இவரைக் கண்டதும் அடையாளம் தெரிந்து கொண்டார். பேரன்போடு தொழுது வணங்கி வீட்டுக்கு அழைத்துப் போய் வேண்டிய உபசாரங்களைச் செய்தார். "பேர் அரசாய்ப் பார் ஆண்டிருந்த உங்களுக்கு இந்த அல்லல் வந்ததே!'' என்று அவர் உள்ளம் வருந்தி இவரைத் தனியே ஒரு மனையில் வைத்து வேளை தவருமல் உணவுகள் உதவி மிகவும் மரியாதையோடு பேணி வந்தார். அங்கிருந்து கொண்டே தம்பி நிலையை ஆராய்ந்தார். பிள்ளையும் நல்ல மதியூகி ஆதலால் எங்கும் இரகசியமாய் உசாவி வந்தார். அன்று நடந்த போரில் தப்பி உறவினர் சிலருடன் சம்புலிங்கபுரம் என்னும் ஊரில் போய்த் துரைச்சிங்கம் மறைந்திருந்தார் ஆதலால் அந்தத் துப்பு அறிந்து அங்கு ஆள் அனுப்பி அவரை இவர்பால் அழைத்து வந்து அந்த அன்பர் சேர்த்தார்.

## தம்பி தவித்தது

அண்ணனை வந்து கண்டதும் அந்த அருமைத் தம்பி கண

ணீர் சொரிந்து அழுதார். அவரை ஊமைத்துரை தழுவி அணைத்து உறுதி நலங்கள் கூறி உள்ளம் தேற்றினர். இளவல் மறுகி அழுத பொழுது இவரும் உருகியழுதார். கோட்டையில் அடியோடு இறந்து போன தன் குடும்பத்தை நினைந்து இருவரும் நெடிது மயங்கி நெஞ்சம் கரைந்தார். கொற்றக் குரிசிலாய்ச் சுற்றம் சூழ வெற்றி வீரோடு வாழ்ந்து வந்த அரச குடும்பம் அழிந்து பட்டது கொடிய துயரமாய்ச் சூழ்ந்து நின்றது. தம்பி உள்ளம் வெம்பித் தேம்பி அழுவதை நோக்கி இந் நம்பி ஆறுதல் கூறி அணைத்துப் போற்றி ஆதரவோடு சோதரனைத் தேற்றியருளினர்.

## கருதி நின்றது

இவரது உறுதி நிலை மீண்டும் பொரு திறலையே நாடி நின்றது. அந்த உள்ளத் திண்மையும் ஊக்கமும் அதிசய நிலையங்களாய் வெளியறிய வந்தன. உற்ற தம்பியைத் தழுவி உருகி அழுத இவர் உடனே வெற்றி வீரோடு விளம்பிய மொழிகள் வியத்தகு நிலையில் விளங்கி நின்றன. பதி யழிந்து நிலை குலைந்து வெளி யெழுந்து படு துயரங்களை அடைந்திருந்தமையால் விதி விளைவினை நொந்து வெந் துயரோடு வெதும்பி மொழிந்தார். உள்ளத் துயரங்கள் உரைகளில் வெளியாய் அயலறிய நின்றன.

## மறுகி உரைத்தது

உற்றாரும் உறவினரும் உரியாக ரிடையிருந்த
மற்றாரும் மாண்டசெய்தி மறுகியழு தண்ணனிடம்
சொற்றானத் தம்பிதனைத் துணைக்கையால் அணைத்து நின்று
கற்றவிற் கரைந்துருகிக் கருத்துடனே அடுத்திசைத்தான் (1)

வீரமா நகரிழந்து வெளியேறி வெந்துயரம்
கூரநின்றேம் கோட்டையுள்ளே கூடிநின்றார் எல்லாரும்
சீரழிந்து செத்தொழிந்தார் தெவ்வருயிர் வவ்வியினிப்
போருழந்து போனறுவதே புகழாகும் என்றுரைத்தான். (2)

அண்ணனுயிர் இழந்தவன்றே அழிந்துள்ளேம் இனிஎந்த
வண்ணமவந்து சேர்ந்தாலும் மனக்கலங்கல் மாண்பாமோ?
திண்ணமுடன் நின்றுதெவ்வைச் சீரழித்துச் சேரவென்றே
எண்ணியதை முடித்துவிண்ணில் ஏறுவதே இன்கடனும். (3)

அவர் எண்ணி யுள்ளதை நம் கண்ணெதிரே இவை காட்டியுள்ளன. உலக வாழ்வை ஒரு சிறிதும் கருதாமல் பகைவர்

மீதே கருவு கொண்டு உயிரை வெறுத்து ஊமத்துரை உருத்திருத்தலை ஆதியிலிருந்தே நாம் அறிந்து வருகிறோம். அந்தக் குறிக்கோளும் உறுதியும் சிறிதும் குறையாமல் உள்ளமையை இங்கேயும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். யாண்டும் ஆண்டகைமை குன்றாமல் அடல் கொண்டு நின்றாலும் நேர்ந்துள்ள அழிவுபாடுகள் நெஞ்சத்தை மிகவும் நிலை குலைத்திருக்கின்றன.

அண்ணன் அழிந்த துயரம் உயிரை வாட்டி வருதலால் மண்ணின் வாழ்க்கையை இகழ்ந்து குல மானத்துடன் வீர மரணத்தையே விழைந்திருக்கிறார். பகைமையைப் பாடழித்துப் பழிக்குப் பழி வாங்குவதிலேயே விழிப்பூன்றி நிற்கின்றார். எண்ணியதை முடித்து விண்ணில் ஏறுவதே இன்கடனும் என்று கூறியிருத்தலால் இவரது கருத்தும் குறிப்பும் திருத்தமாகத் தெரியகின்றன. எண்ணியுள்ள எண்ணங்கள் கண்ணீரோடு கலந்து வெளி வந்துள்ளன. உள்ளத்தில் ஊன்றியுள்ள துயரங்கள் உரைகளில் ஓங்கித் துறைகள் தோறும் தோய்ந்து துலங்கி நிற்கின்றன.

அண்ணன் உயிர் இழந்த அன்றே அழிந்துள்ளோம்.

என்று தன் தம்பியை அணைத்துக் கொண்டு இந் நம்பி வெம்பி மொழிந்திருக்கும் துணிவுரை பரிபவம் மிகவுடையது. உயிரை வெறுத்தலோடு குல வீரமும் கலந்திருத்தலால் எந்நிலையிலும் தளராமல் எவ்வளவு படைகள் வந்தாலும் கலங்காமல் கடும் போர் புரிந்து அடும் திறலாற்றி எதிரிகள் எவரும் நெடுந் திகிலடையும்படி நேரே தீரச் செயல்களைச் செய்து வந்திருக்கிறார். இவரது வீரச் செயல் எவ்வழியும் எதிராளிகளைத் திரணமாகவே எண்ணி மரண வீறோடு மருவி அரணம் புரிந்துள்ளது.

தன்உயிரை எண்ணாத சூரனுக்கு எதிராளி
தளம்எலாம் ஒருதுரும்பு!

என்னும் உறுதி மொழி இவரிடம் பெரிதும் உரிமையாய் மருவியுளது. இவருடைய உயிர் வாழ்வு துயர் வாழ்வாய்த் தொடர்ந்திருந்தாலும் யாண்டும் அயராமல் யாதும் அஞ்சாமல் எவ்வழியும் தீரமாய் வீரமே விளைந்து வருவது பேரதிசயமாய்ப் பெருகி வருகிறது. செயல் இயல்கள் எல்லாம் வியப்புகளாய் விளங்கி வீறோடுமூண்டு வினையாண்மைகளை விளக்கி நிற்கின்றன.

அடியோடு கொன்று தொலைக்கவே கன்றிக் கடுத்து அடர்ந்து சூழ்ந்து தொடர்ந்து நின்ற அந்தக் கொடிய படைகளைக் கடந்து அன்று இவர் வெளியேறி வந்ததை எண்ணி வெள்ளையர் எல்லாரும் வியந்து நாணி வெட்கியுள்ளனர். பொல்லாத கொலைக் கருவிகளுடன் எல்லா வழிகளிலும் விழியூன்றிக் கொல்ல மூண்டு கொதித்து நின்ற கொடும் படைவரைக் கடந்து ஒல்லையில் இவர் துள்ளி எழுந்து விரைந்து மறைந்து சென்றது எதிரிகளுக்கு என்றும் பெரிய அதிசயமாகவே தோன்றி நின்றது.

"He had escaped as it were, by miracle in every previous engagement, although every soldier in our camp was most anxious to destroy so notorious and celebrated a chieftain."

"பெயர் பெற்ற கீர்த்திமானை பாஞ்சை மன்னன் கோட்டையிலிருந்து வெளியே தப்பிப் போகாதபடி முன் எச்சரிக்கையாக எவ்வளவோ பாது காப்புகளை அமைத்திருந்தோம்; படை வீரர் ஒவ்வொருவரும் அவனைக் கொன்று அழிக்க ஆவலோடு குறிக்கொண்டு நின்றனர்: நின்றும், அதிசயமாய்த் தப்பி அவன் வெளியே போய்விட்டான்" எனச் சேனைத் தலைவர் வாய்விட்டு உரைத்துள்ள இந்தக் குறிப்பு இங்கே கூர்ந்து சிந்திக்கத்தக்கது. நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை அவருடைய வாய் மொழிகளும் கை எழுத்துக்களும் தெளிவாக ஓர்ந்து கொள்ளச் செய்கின்றன.

ஊமைத்துரையைக் கொலை செய்யக் கருதிக் கொடிய கொலைக் கருவிகளோடு கும்பினிப் பட்டாளங்கள் அன்று கொதித்து நின்ற நிலையை இதனால் நன்கு அறிந்து கொள்ளுகிறோம்.

வெடிகளோடும் பீரங்கிகளோடும் குதிரைப் படைகளோடும் நெடிது சூழ்ந்து வளைந்து நின்ற கொடிய பகையாளிகளிடமிருந்து தப்பி வெளியே வந்திருக்கிறார்; வந்தும் வழிமுழுவதும் தொடர்ந்து போராடி யிருக்கிறார். முடிவில் படு காயங்கள் அடைந்து பிணங்களிடையே இனந் தெரியாமல் வீழ்ந்து கிடந்திருக்கிறார்; ஆளை இனம் தெரிந்திருந்தால் தலையை அறுத்துக் கொண்டு பகைவர் அன்றுஉவகையாய்க்களித்துப் போயிருப்பர்.

அந்தப் படுகொலையிலிருந்து பிழைத்து வந்த இக் குலமகன் இந்நிலையில் இங்கே தலை நிமிர்ந்து நிற்கின்றான். நிலைமைகளை நினைந்து பார்ப்பவர் நெஞ்சம் இரங்கி ஏங்கலும் அனுதாபம்

அடைந்து இவருடைய தலைமைத் தன்மையை உணர்ந்து தறுகண்மையை வியந்து பொருதிறலை ஓர்ந்து புகழ்ந்து வருவர்.

போரில் பிழைத்து இவர் அவ்வூரில் வந்திருப்பதை அறிந்து வேறு சில உறவினரும் அங்கு வந்து சேர்ந்தார். இவரைக் கண்டு உவந்தாலும் உள்ளம் வருந்தி மறுகினர். யாவருக்கும் ஆறுதல் கூறி இவர் ஆற்றியருளினர். மேலே ஆகவேண்டிய காரியங்களை ஆலோசனைகள் செய்தார். கால நிலைகளையும் கரும முடிவுகளையும் கருதி யுணர்ந்தாலும் பின்பு புரிய வேண்டியதை எண்ணி உறுதி பூண்டு நின்றார். ஆண்டிருந்து நீங்கி வேறிடம் போகவேண்டும் என்று விரைந்தார். கருத்தும் குறிப்பும் ஒருத்தருக்கும் நேரே உணர முடியாதனவாய்த் திருத்தமுற்றிருந்தன.

### கமுதி அடைந்தது

தன்னை உள்ளன்புடன் ஆதரித்து வைத்துள்ள பிள்ளையிடம் விடை பெற்றுக் கொண்டு தம்பி முதலிய உறவினர்களுடன் இரவே மறைவாய் வெளியேறிப் போனர். பல இடங்களிலும் இதமாய்த் தங்கி யிருந்து முடிவில் கமுதியை வந்து அடைந்தார்.

கமுதி என்னும் ஊர் அக்காலத்தில் சிறந்த அரணுக அமைந்திருந்தது. அது இராமநாதபுரத்தைச் சேர்ந்தது. அங்கே யிருந்த கோட்டையில் ஊமைத்துரை உரிமையாய்க் குடியேறியிருந்தார்.

### படைகள் சேர்ந்தது

கமுதிக் கோட்டையில் இவர் வந்து இருப்பதை அறிந்ததும் அந்தப் பக்கங்களில் இருந்த மறவர்கள் எல்லாரும் உவந்து வந்து உரிமையுடன் கண்டு உபசரித்தருளினர். பாஞ்சைப் போரில் தப்பிச் சிதறிப் போயிருந்த படை வீரர்கள் பலரும் அங்கே அடைவாக வந்து சேர்ந்தார். இவரது அடலாண்மைகள் யாவருக்கும் பேரரணுய் உறுதியும் ஊக்கமும் உதவி நின்றன. பொருதிறல்கள் மறுபடியும் பெருகி உறுதி யடைந்து வந்தன.

பாஞ்சாலங்குறிச்சியாருக்கு உறவாய் நின்று உதவி செய்து வந்தன என்று கருதிக் கும்பினியாரால் பறித்துக் கொள்ளப் பட்ட பாளையங்கள் எல்லாம் இப்பொழுது விழித்துக் கொண்டு வேகமாய் வேலை செய்ய மூண்டன. ஆண்டிருந்த படைவீரர்கள்

யாவரும் கும்பினியாரைப் பழித்து யாண்டும் வம்புகள் விளைத்தனர். வெள்ளையரின் அதிகாரங்களை எங்கும் வெறுத்து நின்றனர்.

கொடிய கொலைக் கருவிகளைக் கொண்டு நெடிய படைகளோடு வந்து நீண்ட காலமாகப் போராடியும் ஊமைத்துரையைப் பிடிக்க முடியாமல் சீமைத்துரைகள் சிதைந்து போயினர் என அவரை இகழ்ந்து பேசி இவரைப் புகழ்ந்து போற்றி அவர் எல்லாரும் உவந்து திரண்டனர். குளத்தூர், காடல்குடி, நாகலாபுரம், விருப்பாச்சி என்னும் இந்த நான்கு ஜமீன்களிலுமிருந்து பல பேர்கள் திரண்டு ஆயுதபாணிகளாய்க் கமுதியை வந்து அடைந்தனர். ஊமைத்துரையைக் கண்டு வணங்கி உரிமை பாராட்டி நின்றார். மிகுந்த அபிமானத்துடன் உள்ளம் துணிந்து ஊக்கி வந்த அவர்கள் எல்லாரையும் இவர் உவந்து உபசரித்தார். நாளும் விருந்துகள் நன்கு நடைபெற்றன. பெரிய வீர அரசு தன் பதியை இழந்து வந்துள்ளது என அந்நாட்டில் இருந்த யாவரும் ஆர்வம் மீதூர்ந்து ஆதரவுகள் புரிந்து வந்தமையால் உணவு முதலிய வசதிகள் யாவும் யாதொரு குறைவுமின்றி வளமாய் நடந்து வந்தன. இத் தலைவருடைய நிலைமையை நோக்கிப் பல இடங்களிலுமிருந்து படைகள் பெருகி யெழுந்தன. அரிய பல ஆயுத வகைகளும் ஆயத்தங்களாய் நிறைந்தன. உரிய வகைகள் உறவாய்ப் பெருகவே எல்லாரிடமும் உறுதிகள் ஓங்கி நின்றன.

## கருதி மூண்டது

பாஞ்சைப் பதியை இழந்து படுதுயரங்கள் அடைந்து தெய்வாதீனமாய்த் தப்பித் தான் வெளி வந்துள்ளதைத் தனியேயிருந்து கொண்டு நினைந்து நினைந்து ஊமைத்துரை நெடிது சிந்தித்தார். அங்கேயே செத்துப் போகாமல் இங்கே இப்படித் தப்பி வந்திருத்தலால் இன்னும் சில காரியங்களைச் செய்து முடித்து இறுதியின் முடிவைப் பொறுதியோடு காண வேண்டும் என்று அறுதியிட்டு இவர் உறுதி பூண்டு நின்றார். வீரக் கனல் மறுபடியும் வீறுற்று மூண்டு வெய்யபோரை விளைக்க நீண்டது.

இராமநாதபுரம் ஜமீன் அப்பொழுது கும்பினியார் கைவசம் இருந்தது ஆதலால் அதனை முதலில் பிடித்துப் பலம் செய்து கொண்டு பெரும் படைகளைத் திரட்டிக் கும்பினி ஆட்சியை எங்கும் எதிர்த்து அழித்து மீண்டும் பாஞ்சைக்குப் போய்

வேண்டியதைச் செய்ய வேண்டும் என இவர் வீறு கொண்டு துணிந்தார். இவருடைய துணிவுக்கு ஏற்றபடி படைவீரர்களும் உறுதி கூறி ஊக்கி நின்றனர். அது சமையம் இவரிடம் திரண்டிருந்த படைகள் இருபதினாயிரத்திற்கு மேல் நிறைந்து நின்றன.

மே மாதம் இருபத்து நாலாந் தேதி (24—5—1801) இரவில் கோட்டையை விட்டு வெளியேறிய இவர் உயிருக்கு நேர்ந்த அபாயங்களை எல்லாம் நீங்கிப் பிழைத்து முப்பது நாளைக்குள் இப்படிச் சேனைகளைச் சேர்த்து இவ்வாறு மூண்டு நிற்கிறார்; இது எவ்வளவு அதிசயம்! எத்துணை வியப்பு! உய்த்துணர வேண்டும். அருந்திறலாண்மைகள் யாவும் பெரிய அதிசயங்களாய் விரிந்து நிற்கின்றன. பொருந்திறலோடு பொங்கி நின்ற வெள்ளையர் பொறி கலங்க நேர்ந்தனர். நெடிய திகில்கள் அவரிடம் நீண்டன. அந்நிலையால் அரியவுண்மைகள் பலதெரிய வந்தன.

## கும்பினி தெரிந்தது

அடியோடு அழிந்து போனன் என்று தெளிந்து நின்ற கும்பினி அதிகாரிகள் இவருடைய இருப்பை அறிந்ததும், நெருப்பை விழுங்கியது போல் கொதித்து நின்றார். இவர் குறித்து நிற்கிற ஆயத்தங்களையெல்லாம் கலெக்ட்டர் கூர்ந்து ஓர்ந்து கொண்டார். உள்ளங் கலங்கி உறுதி சூழ்ந்து ஊக்கி முயன்றார்.

மேலே யுள்ள கும்பினித் தலைவர்களுக்கும், சேனாதிபதிகளுக்கும் இவரது நிலைமையைத் தெளிவாக விளக்கிக் கடிதங்கள் எழுதி விடுத்துக் காரியங்களை யாண்டும் விரைந்து கவனித்தார். கலெக்ட்டர் லஷிங்ட்டன் (Lushington) கருத்தோடு தேர்ந்து குறித்துள்ள குறிப்புகளுள் ஒன்று அயலே வருகின்றது.

"The number of armed men still openly or secretly maintained by the various Poligars at 22,000, all ready at a moment's notice to follow their masters on any expedition."

[S. R. Lushington]

"எந்தச் சமையத்திலும் படையெழுச்சிக்கு ஆயத்தமாக இருபத்திராயிரம் போர்வீரர்கள் ஆயுதபாணிகளாய்ப் பல பாளையங்களிலுமிருந்து இரகசியமாய்த் திரண்டிருக்கின்றனர்" எனக் கலெக்ட்டர் இங்ஙனம் வரைந்திருத்தலால் படைகள் சேர்ந்துள்ள நிலைமையை நாம் நன்கு உணர்ந்து கொள்ளுகின்றோம்.

இந்தச் சேனை இவ்வளவு திரண்டுள்ளது எவ்வளவு வியப்பு!

அஞ்சாமையும் ஊக்கமும் யாண்டும் இவரிடம் எஞ்சாமல் மூண்டு நிற்கின்றன. இந்த ஆண்டகையின் வீரத்திறல் அதிசய நிலையில் இருந்தமையால் இன்றும் எவரும் துதிசெய்து வருகின்றனர். சாதாரணமான மனித இயல்புக்கு மிஞ்சிய எதுவும் அசாதாரணமாய் அதிசயித்துத் துதிசெய்ய வருகின்றது.

தம்மைப் பொருது தொலைக்க இவர் கருதியுள்ள நிலைகளைக் கும்பினித் தளபதிகளும் கூர்ந்து ஓர்ந்து கொண்டனர். ஜில்லா அதிகாரி சொல்லியபடி அவ்வளவு படைகள் சேர்ந்திருக்குமா? என்று முதலில் சிறிது ஐயமிருந்தது; பின்பு அது தெளிவாயது. நிலைமைகளை ஆராய்ந்து வரும்படி கரவாக ஒற்றர்கள் சென்றனர். ஓர்ந்து வந்து உண்மையை உரைத்தனர். யாவரும் தேர்ந்து விரைந்தனர். தெவ்வர் வினைகள் எவ்வழியும் வெவ் வலிகளாய் விளைந்து வந்தன. பதியிழந்து போனவன் அதிசய வலியை அடைந்துள்ளானே! என்று அவர் ஆங்காரங் கொண்டு அடலுடன் மூண்டு முயன்றனர். யாண்டும் கவலைகள் நீண்டு நின்றன.

## துணை சேர்ந்தது

கமுதிக் கோட்டையில் வந்து ஊமைத்துரை தங்கியிருந்து கொண்டு படைகளைச் சேர்த்து வருவதையும், பலவகையான ஆயுதங்களோடு போர் வீரர்கள் வந்து குவிந்து நிற்றலையும் அந் நாட்டுத் தலைவனை மருதுசேர்வை தெரிந்து பெரிதும்மகிழ்ந்தார்.

பாஞ்சாலங்குறிச்சி அரசர் பெரிய போர் வீரர் என்று அவர் நெடுநாளாகக் கேள்வியுற்றிருந்தார். இப்பொழுது கோட்டையை விட்டு வெளியேறித் தன் நாட்டில் வந்து ஒதுங்கியுள்ளமையையுணர்ந்ததும் உள்ளம் உவந்து இவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டும் என்று அவர் உறுதி பூண்டு நின்றார். தன்னுடைய அரண்மனைக்கு இவரை அழைத்துப் போக எண்ணி அவர் மிகுந்த ஆவலுடன் ஆவதை எதிர்பார்த்திருந்தார்.

உரிய அரசை இழந்து கொடிய துயரங்கள் அடைந்து அல்லல் பல வுழந்து அலமந்து வந்துள்ள இவரை நல்ல வீரனை அத்தலைவன் நயந்து வியந்து உள்ளம் உவந்து உரிமையுடன் காண விழைந்தது, நிலைமை நீர்மைகளை நேரே விளக்கி நின்றது.

## வீர உள்ளம்

தெய்வாதீனமாய்த் தப்பி வெய்ய பகைவரின் கொடிய வெடிகுண்டுகள் யாவும் கடந்து உயிர் பிழைத்து எழுந்த ஊமைத் துரை உக்கிரவீரபராக்கிரமமாய் உருத்து மூண்டு கொதித்து நிற்கின்றார். இடங்கள்தோறும் இருந்து படை வீரர்கள் திரண்டு வந்திருக்கின்றார். ஆயுதபாணிகளாய் 22000 பேர் சேர்ந்துள்ளனர் என்று கலெக்ட்டர் குறித்திருத்தலால் அந்தச் சேனை நிலையை நாம் யூகித்து உணர்ந்து கொள்கிறோம். பாஞ்சைப்பதியை அடியோடிழந்து குடிபெயர்ந்து வந்துள்ள இந்த அதிபதிபால் தேசமக்கள் கொண்டுள்ள நேச விசுவாசங்களை இவ் வீரர் திரள் வித்தக விநோதமாய் விளக்கியுள்ளது. அவ்வளவு போர் வீரர்களையும் ஆதரித்துத் தெவ்வரைத் தேய்த்து ஒழிக்கத் தேர்ந்து நின்றார். யாண்டும் தளராத வீர வுள்ளம் மீண்டும் மூண்டு முனைந்து நீண்ட போரை நேரே எதிர்நோக்கியுள்ளது. அந்த உண்மையை கண்டு ஊன்றி ஓர்ந்து தேர்ந்து கொள்ளுகிறோம்.

வெள்ளமென வந்தடைந்த வெள்ளையர்வெம் படைகளெல்லாம்
பள்ளமுடைந் தோடும்வகை பலமுறையும் பொருதுவந்தான்
தள்ளரிய திறலெல்லாம் தனியிழந்து வினைவிளைவால்
உள்ளமுடைந் தயலெழுந்தான உறுதிநலம் பெறவிழைந்தான்.

உற்றபடை வீரரொடும் உரிமைமிகு தம்பியொடும்
பற்றுமனத் துயரோடும் பற்றலர்மேல் செற்றமொடும்
கொற்றமுறும் நினைவோடும் கூடிநடந் திறுதியாய்க்
கற்றுவளம் மிகுந்திருந்த கமுதிநகர் வந்தடைந்தான். (2)

அன்னநகரிடைப்பலநாள் அடங்கிநின்றே அடங்கலரை
என்னவகை யாம்வெல்வ தென்றெண்ணி யிருக்குங்கால்
சின்னமருது எனும்பேரான் சிவகங்கைத் தலைவனிந்த
மன்னன்வர வறிந்துமனம் மகிழ்ந்தழைத்து மாண்புசெய்தான்.
[வீரபாண்டியம்]

இன்னவாறு ஊமை மன்னனை இனிது பேணி மருது மன்னன் உரிமையோடு உபசரித்துவந்தது பெரிய உதவியாயிருந்தது.

# இருபத்தொன்பதாவது அதிகாரம்

## மருது மருவியது.

மருது என்பவர் சிவகங்கை ஜமீனை ஆண்டு வந்தவர். சிறந்த போர் வீரர். நல்ல கொடையாளி. ஆட்சித் திறனும் அடலாண்மையும் இவரிடம் அமைந்திருந்தமையால் எதிரிகள் எவரும் அடங்கி நின்றனர். சிவகங்கை ஜமீனுக்குப் பரம்பரை முறையில் இவர் நேரான உரிமையாளர் அல்லர். வேறானவரே. இடையே வந்து இவர் தலைவராய் அமைந்தது அக்கால நிலைமையைக் காட்டியுளது. கரும வினைகள் மருமங்களாய் வருகின்றன.

### சிவகங்கை

சிவகங்கை என்னும் ஜமீன் இராமநாதபுரம் ஜமீனிலிருந்து பிரிந்தது. இந்தப் பிரிவினை கி பி 1733ல் நிகழ்ந்தது. அப்பொழுது இதற்குத் தலைவராயிருந்தவர் சசிவர்ணத்தேவர் என்பவர். இந்த இரண்டு ஜமீன்களும் மறவர் பாளையப்பட்டுகள் எனப் பேர் பெற்றிருந்தன. இராமநாதபுரத்தார் செம்பிநாட்டார் என்னும் மறவர் வகுப்பைச் சேர்ந்தவர். இராமேசுவரமும் சேதுக் கரையும் அவருடைய ஆட்சியிலிருந்தமையால் சேதுபதி என்னும் பட்டம் அவருக்கு அமைந்து நின்றது. சிவகங்கையின் மூல புருடரான சசிவர்ணத்தேவர் இறந்து போயினர்; அதன்பின் இரண்டு பட்டங்கள் கழிந்து போயின. இறுதியில் வந்தவர் முத்து விசய கௌரி வல்லவன் என்பவர். அவர் இறந்துபோன பின் ஜமீனை அவருடைய மனைவி வேலு நாச்சியார் என்பவர் பார்த்து வந்தார். வேலைக்கு இருந்தவர் மேலுக்கு வரநேர்ந்தார்.

### வெள்ளை மருது

வெள்ளை மருது சேர்வை என்னும் இவர் நல்ல அழகன். சிறந்த பலசாலி உயர்ந்த குணங்கள் சில இவரிடம் அமைந்திருந்தன. மறவருள் ஒரு பிரிவு ஆகிய அகம்படியர் என்னும் வகுப்பைச் சேர்ந்தவர். இவரை மேலே குறித்த வேலுநாச்சியார் காதலித்தாள். அவளை இவர் மணந்து கொண்டார். கொள்ளவே ஜமீனுக்கு இவர் தலைவராயினர். பல வகையிலும் நிலை குலைந்திருந்த சிவகங்கை ஜமீனை இவர் நல்ல நிலைமைக்குக் கொண்டு

வந்தார். அழகிய பெண்ணையும், அரச மண்ணையும் ஒருங்கே பெற்ற பெரிய பாக்கியவான் எனப் பலரும் இவரைப் போற்றி வந்தனர். கி. பி 1773ல் இந்த ஜமீன் உரிமையை அடைந்து கொண்டார் ஆதலால் அதுமுதல் இவர் ஜமீன்தார் என விளங்கி நின்றார். இவரோடு உடன்பிறந்த தம்பிக்குச் சின்னமருது என்று பெயர். பெரிய தீரனை அவர்தான் இந்த அத்தியாயத்திற்கு நேரே உரியவராய்ச் சீரோடு முதலில் குறிக்கப்பட்டுள்ளார்.

### மருது என்னும் பேர்

மருது என்பது இவரது குல தெய்வத்தின் பேர் ஆதலால் அதனை அருமையாகக் கருதி உரிமையோடு வழங்கி வந்துள்ளனர். பெயர் வரவு வழிமுறையே உயர்வாய் ஒளி புரிந்துள்ளது.

ஒரு மருத மரத்தின் கீழிருந்த சிவலிங்கத்தை இவருடைய முன்னோர் வழிபட்டு வந்தனர். மருதப்பன், மருதீசன், மருதேசுவரன் என் அன்புரிமையோடு பூசித்து வந்துள்ளமையால் அந்தக் குல தெய்வத்தின் பெயரை இந்த இருவருக்கும் நலமாக இட்டுப் பெற்றோர் உரிமையுடன் பெருமையாப்பேணிவரலானார்.

அண்ணன் பெரியமருது என நின்றான்.

தம்பி சின்னமருது என வந்தான்.

சேர்வை என்பது சாதிக்கு உரிய பட்டப் பெயர்.

பெரிய மருது என்பவர் வேட்டையாடுவதில் பிரியம் மிக உடையவர் ஆதலால் நாட்டை ஆள்வதைத் தம்பிக்கே தனி யுரிமையாக் கொடுத்து விட்டு உல்லாசமாய்ப் பொழுது போக்கி நின்றார். வேட்டையாட்டமே அவருக்கு வினோத விளையாட்டாயிருந்தது. காட்டு விலங்குகளோடு கடும்போர் புரிந்து அவர் காட்டி வந்த அடலாண்மைகள் அளவிடலரியன. நாட்டு மக்கள் யாவரும் அவரது வீர நிலையை வியந்து வந்தனர். வேட்டைப் பிரியரான வெளி நாட்டாரும் அவரைப் புகழ்ந்திருக்கின்றனர். அயலே வருகிற ஆங்கிலக் குறிப்பு ஈங்கு அறிய வுரியது.

"He was a great sportsman, and gave up his whole time to hunting and shooting." (G. W.)

"அவன் பெரிய வேட்டைப் பிரியன்; தன் காலம் முழுவதையும் மிருகங்களைச் சுடுவதிலும் வேட்டை யாடுவதிலுமே

கழித்து வந்தான்" எனப் பெரியமருதைக் குறித்து ஆங்கிலேயர் இங்ஙனம் எழுதி வைத்திருக்கின்றனர். இதனால் அவரது வலி யும் வாழ்க்கையும் நிலையும் சேர்க்கையும் நேரே அறியலாகும்.

காட்டு விலங்குகளோடு போராடி இவ்வாறு அவர் வீர விளையாடல்கள் புரிந்து வந்தமையால் நாட்டின் ஆட்சிப் பொறுப்பு முழுவதும் தம்பியைச் சார்ந்து தகுதியாய் நின்றது.

அதனை இவர் நன்கு பாதுகாத்து வந்தார்.

## மருதின் ஆட்சிமுறை

அஞ்சா நெஞ்சமும் அருந்திறலாண்மையும் பெருந்தகை மையும் உடையரா யிருந்தமையால் குடி சனங்கள் இவரிடம் மிகுந்த பயபத்தியோடு நடந்துவந்தனர். துட்டர்களைத் துடுக்கு அடக்கிப் பொல்லாதவர்களை ஒல்லையில் ஒழித்து எல்லாருக்கும் இதம் புரிந்தமையால் யாவரும் இவர்பால் பேரன்பு பூண்டு யாண்டும் உரிமை பாராட்டி உவந்து புகழ்ந்து ஒழுகி வந்தனர்.

மருதுபாண்டியன், மகாராஜா, எங்களப்பன் என இன்ன வாறான மரியாதை வசனங்களால் அந்நாட்டவர் இவரை அழை த்து வருவது வழக்கமா யிருந்தது. இவர் பல தருமங்களைச் செய்திருக்கிறார். காளையார் கோவில் என்னும் ஊரில் பெரிய சிவாலயம் அமைத்திருக்கிறார். விசாலமான தெப்பம் ஒன்று அங்கே உண்டாக்கி வைத்துள்ளார். எங்கும் சத்திரங்கள் கட்டி அன்னதானங்கள் யாவருக்கும் இட்டு வரும்படி தக்க மானியங்களை வழங்கியிருக்கிறார். சருகணி என்னும் கிராமத்தை வெள்ளைக்காரப் பாதிரிகளுக்கு இனமாகக் கொடுத்திருக்கிறார். மிக்க வருவாய்களை ஜமீனுக்குப் பக்குவமாகப் பெருக்கி வந்துள் ளார். பல ஊர்களிலும் தமக்கு உயர்ந்த நிலையங்களை அமைத் திருக்கிறார். சிறந்தமாளிகைகள் இன்னும் விளங்கி நிற்கின்றன.

## சிறுவயல்

இவ்வூர் சிவகங்கையிலிருந்து வடகிழக்கே பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ளது. நல்ல வசதியான இடம் ஆதலால் இங்கேதான் சின்னமருது பெரும்பாலும் தங்கியிருந்தார். தான் இனிது வசிப்பதற்குத் தகுதியாகச் சிறந்த அரண்மனை ஒன்று கட்டி வைத்திருந்தார் ஆதலால் அரண்மனை சிறுவயல் என்று

ஒன்றும் இவ்வூர் வழங்கப்பட்டு வருகிறது. அக்காலத்தில் எங்கும் இவருடைய கீர்த்தி பரவியிருந்தது. அதிகார ஆணைகள் யாண்டும் நீண்டு விதி நியமங்களோடு விளங்கி நின்றன.

## உருவ நிலை

உருவப்பொலிவும் உறுதியும் ஊக்கமும் உபகார நீர்மையும் இவர்பால் இயல்பாகவே இமைந்திருந்தமையால் யாவரும் இவரைப் பெருமையாகப் போற்றி உரிமை கூர்ந்து வந்தனர். அயல் நாட்டவரும் இவருடைய இயல்பு உயர்வு தகவு முதலிய நிலைகளை அறிந்து வியந்து மிகுந்த பிரியமாய் உவந்து புகழ்ந்துள்ளனர்.

கி. பி. 1795 பிப்ரவரி மாதம் ஜெனரல் வெல்ஷ்துரை [General Welsh] ஒருமுறை இவரை நேரில் பார்த்தார். அந்த வெள்ளைத்துரையைக் கண்டதும் இவர் உள்ளன்போடு உபசரித்து விருந்து முதலியன புரிந்து சிறந்தகனிவகைகளை உதவினார். இவருடைய இயல்புகளையும் செயல்களையும் அவர் உணர்ந்து வியந்து நயந்து புகழ்ந்து உவந்து போனார். இவரைக் குறித்து அவர் எழுதி வைத்துள்ள குறிப்பு ஒன்று அயலே வருகின்றது.

"Though of a dark complexion, he was a portly, handsome, and affable man, of the kindest manners, and most easy access; and though ruling over a people to whom his very nod was a law, he lived in an open palace, without a single guard."
[G. W.]

"நிறம் கருப்பாயிருந்தாலும் பொலிவும் அழகும் கம்பீரமும் இனிய பண்பும் மிகுந்த அன்பும் சிறந்த ஆதரவும் அவரிடம் நிறைந்திருந்தன. அவருடைய தலை அசைப்பே நிலையான சட்டமாய் நின்று குடி சனங்களை ஆண்டு வந்தது; அப்படியிருந்தும் தனக்கு ஆடம்பரமான பாதுகாப்பு யாதொன்றும் இல்லாமலே வெளியான மாளிகையில் அவர் வசித்துவந்தார்." எனச் சின்ன மருதைக் குறித்து இன்னவாறு சீமைத்துரை எழுதியிருத்தலால் இவரது விழுமிய நிலைமைகளையும் தலைமையான நீர்மைகளையும் சீர்மைகளையும் நாம் கூர்மையாய் ஓர்ந்து உணர்ந்துகொள்கிறோம்.

அதிகார ஆற்றலும் செல்வச் செழிப்பும் நிறைந்திருந்தாலும் அவற்றை நல்ல வழிகளிலேயே பயன்படுத்தி வந்துள்ளமையால் எல்லாருடைய மதிப்புகளையும் எளிதே இவர் பெற்றுக் கொண்டார். இனியபான்மைகள் அரியமேன்மைகளாயுள்ளன.

கல்விப் பயிற்சியில் இவர் நன்கு உயர்ச்சியடையவில்லை. ஆயினும் கற்றவர்களைக் கண்டால் மிக்க மரியாதையுடன் மதித்துப் போற்றினர். புலவர்களுக்கு உயர்ந்த சன்மானங்களை வழங்கி வந்துள்ளார். வரிசை யறிந்து போற்றி வந்துள்ளமையால் அறிஞர் பலரும் இவரை அரசர் என ஏத்தி நின்றனர்.

## கவிகளை ஆதரித்தது

அக்காலத்தில் அந்த நாட்டில் பெருங்காடுகள் இடையிடையே அடர்ந்திருந்தன. களவுகளும் வழிப் பறிகளும் நடந்து வந்தன. கழுகி நாட்டுப் புலவர் ஒருவர் தன் மனைவியுடன் வேற்றூருக்குப் போய் மீண்டு வந்தார். வரும் பொழுது கல்லல் அயலே இரவு ஏழு மணி அளவில் கள்ளர் சிலர் அவரை வளைத்துக் கொண்டனர். அவ் வமையம் அவர் கையில் யாதொரு பொருளும் இல்லை. மனைவி கழுத்தில் தாலி மட்டும் இருந்தது. அதனை அத் திருடர் பறித்துக் கொண்டு போயினர். புலவர் வருந்தி அன்றிரவு கல்லலில் தங்கி யிருந்தார். மறு நாள் எழுந்தார்; தமக்கு நேர்ந்த துயரை மருது பாண்டியனிடம் சொல்ல வேண்டும் என்று கருதி விரைந்தார். அப்பொழுது இவர் சிறுவயலில் தங்கி இருந்தார் ஆதலால் தம் மனைவியுடன் புலவர் அங்கே வந்தார். மருது சேர்வையைக் கண்டார். பரிதாப நிலையில் மறுகி வந்துள்ளதைக் கண்டதும் அவரை இவர் ஆதரவுடன் உவந்து உபசரித்து யாது வேண்டும்? என்றார். அவர் உடனே ஒரு கவியைச் சொன்னார். அந்த வெண்பா அயலே வருகிறது.

"மருவிருக்கும் கூந்தல் மனையாள் கணவன்
அருகிருக்கத் தாலி அறுமா?---இரவுனக்குச்
செங்கோல் இலையா? இத் தேசமெங்கும் கள்ளருக்குப்
பங்கோ மருதுபூ பா!"

என்று இங்ஙனம் அவர் கூறி நின்றார்.

"கணவன் இறந்த பின்புதான் மனைவியின் தாலி அறுபடும். அவன் உயிருடன் அருகே நிற்கும்பொழுது அது அறுபட்டுளது; இந்த அதிசயம் நேற்று உன் நாட்டில் நிகழ்ந்தது; உனது ஆணையும் ஆக்கினையும் செங்கோலும் பகலிலேதான் நடைபெறுமோ? இரவில் முடியாதோ? உன் தேசத்தில் கள்ளருக்கும் சமமான பங்கு உண்டோ? மருது பாண்டியா?" என இன்னவாறு

பொருள் பொதிந்த பாடலைப் புலவர் கூறவே இரவு நடந்துள்ள களவு நிலையை இவர் அறிந்து கொண்டார். அவரை ஆதரித்து அங்கே இருக்கச்செய்து உடனே பொற்கொல்லரை அழைத்து ஆறு பவுனில் ஒரு தாலிச் சங்கிலியை விரைந்து செய்து வரும் படி பணித்தார்; அவ்வாறே அவர் கொண்டு வந்து தந்தார். அந்தத் தாலியைப் புலவர் கையில் கொடுத்து மனைவியின் கழுத்தில் கட்டும்படி செய்தார். நல்ல பட்டாடைகளும் பொருளும் கொடுத்து அவரை அனுப்பி வைத்தார். இவரது மன நிலையை யும் கொடை முறையையும் நினைந்து புலவர் உள்ளம் உருகினர்.

தாலிக்கு வேலி தமிழுக் குதவிய தார்மன்னனே!

என்று ஆர்வம் மீதூர்ந்து அவர் வாழ்த்திப் போனர்.

இவ்வாறு கற்றவரை ஆதரித்துப் புலவர்களுக்கு உதவி வந்தமையால் கொடை வள்ளல் என இவருடைய புகழ் எங்கும் பரவி நின்றது. யாவரும் இவரை வியந்து போற்றி வந்தனர்.

### வள்ளல் மருது

புதுக்கோட்டை அரசரிடம் நவராத்திரி விழாவில் ஒருபுலவர் பரிசில் பெற்று வந்தார். திருமயத்தின் அருகே வரும் போது கள்வர் சிலர் இடை மறித்து அவரிடம் உள்ள பொருளைப் பறித்துப் போயினர். போகவே அவர் வெறுங் கையராய் வீட்டுக்கு வந்தார். வழியிடையேவந்து கள்வர் கொள்ளை செய்துபோனதை மனைவியிடம் உரைத்தார். அவள் உள்ளம் வருந்தினள். புலவர் உடனே ஒரு பாட்டுப் பாடினர். தன் இல்லாள் உள்ளம் தெளிய அன்று அவர் பாடிய அந்தப் பாட்டு அயலே வருகின்றது.

"கள்ளன் கொடுத்ததைக் கள்ளன் எடுத்தகன்றான்
உள்ளம் கடுத்தால் உறலாமோ?---வள்ளல்
மருதரசன் உள்ளான் மடவாய்! வறுமை
ஒருவ அருள்வன உடன்."

என இங்ஙனம் ஒரு வெண்பாவால் இவருடைய பண்பாடு களை விளக்கினர். புதுக்கோட்டைத் தொண்டைமான் கள்ளர் மரபைச் சேர்ந்தவர் ஆதலால் அவர் உள்ளம் உவந்து கொடுத்ததைக் கள்ளர் பறித்துக் கொண்டு போனர் என்று குறித்தார். "வந்தவழியே பொருள்போயது; அதற்காக நாம் உள்ளம் வருந்

தலாமா? நமது வறுமை அடியோடு தொலையும்படி வள்ளல் மருது அரசன் அருள் புரிவான்; நீ மனம் தேறி இரு" எனத் தன் மனைவியைக் கவிஞர் தேற்றியிருப்பதை இதில் பார்த்து மகிழ்கின்றோம். அனுபவ அறிவு அவருக்கு இனிமையாய் உறுதி பயந்துள்ளது. உபகார நிலைகளை உணர்ந்து புகழ்ந்துள்ளார்.

இவ்வாறு புலவர் பாடும் புகழுடையராய் இத் தலைவர் நிலவியிருந்தார். அருந்திறலும் பெருங்கொடையும் ஒருங்கு நிறைந்திருந்த இந்த மருதுசேர்வை ஊமைத்துரையின் நிலைமையைக் கேள்வியுற்றதும் உள்ளம் வருந்தினர். அல்லல் நிலைகளை உணர்ந்து அனுதாபம் அடைந்து நல்ல ஆதரவுகள் புரியநினைந்தார்.

ஊமைத்துரையைக் கண்டது

பாஞ்சைப்பதியை இழந்து தனது எல்லையில் புகுந்துள்ளதை அறிந்ததும் நேரேவந்து காணவிரைந்தார். சிறந்த குதிரையில் ஏறி வந்தார். கமுதிக் கோட்டையை அடைந்து கண்டார். இவரது பரிதாப நிலையைக் கண்டதும் அவர் பெரிதும் உருகினர். வீரரை வீரர் வியந்து மகிழ்வர் என்னும் பழமொழிப்படி இருவரும் உரிமை நண்பராய் உவந்து அமர்ந்தார். அதன் பின் இவரை அவர் ஊராகிய சிறுவயலுக்கு அழைத்துச் சென்றார். சிறுவயல் அரண்மனையில் மருது சோவையின் விருந்தினராக ஊமைத்துரை அமர்ந்திருந்தார். நேர்ந்துள்ள நிலைமைகளை எல்லாம் இவரிடம் அவர் நன்கு உசாவி அறிந்தார். பரிவுகள் பொங்கி நின்றன.

மருது மாறியது

கும்பினியார் மீது மருதுசேர்வைக்கு இயல்பாகவே சிறிது பகைமை யிருந்தது. ஜமீனுக்கு உரிய வரி முதலியன யாவும் செலுத்தி வந்தார். யாதொரு பாக்கியும் இல்லை. கப்பம் கட்டி வாழ்வது சிறுமை என்று பாஞ்சைமன்னர் எண்ணியது போல் அவர் யாதும் கருதவில்லை. தேசாபிமானமும் சுதந்திர உணர்ச்சியும் மண்டி வீறோடு இவர் மாறுபட்டது போல் அவர் தீரமாய் வேறுபாடு கொண்டிலராயினும் உள்ளே கொஞ்சம் மாறுபாடிருந்தது. "சிவகங்கை ஜமீனுக்கு நீர் நேர்வாரிசா? அப்படியாயின அதற்கு உரிய ஆதாரங்களை அனுப்பும்" எனக் கலெக்கட்டர் உத்தரவு அனுப்பியிருந்தார் ஆதலால் அதிலிருந்து மருது

சோர்வைக்குச் சினம் மிகுந்திருந்தது. எங்கேயோ கிடந்த அந்நிய நாட்டார் இந்நாட்டில் வந்து புகுந்து வரம்புமீறி அதிகாரங்களைச் செலுத்தி வருகிருர் என்று வெறுப்பும் வெகுளியும் விளைந்து நின்றன. ஊமைத்துரையைக் கண்ட பின் அவை வேகமாய் விரிந்து எழுந்தன. திடமான போர் வீரர் ஆயினும் அவரிடம் படைகள் அதிகமாயில்லை. சிறிதே இருந்தது. காலம் கருதி யிருந்தவர் வேளை வாய்த்ததும் வேலை செய்ய மூண்டார்.

## கருதித் துணிந்தது

பதியை இழந்து போன ஊமைத்துரையிடம் இருபதினாயிரம் போர் வீரர்கள் சேர்ந்திருந்தனர். இந்தச் சேனையின் உதவியைக் கொண்டே கும்பினியாரை எதிர்த்துத் தொலைத்துவிடலாம் என்று மருது உறுதி பூண்டு ஊக்கி நின்ருர். கோட்டையைக் கைவிட்டுக் கொடிய துயரங்களோடு வெளியேறி வந்த ஊமைத்துரைக்கு அவ் வீரருடைய உதவி பேராதரவாயிருந்தது. இறுதிவரையும் பொருது எதிரிகளை ஈடழித்து இந்நாட்டை விட்டு ஓட்டி விட வேண்டும் என்று இவரும் கோட்டிகொண்டு மூண்டு நின்ருர். ஆங்கிலேயரின் கைவசமுள்ள இராமநாதபுரத்தை முதலில் பிடித்துக் கொண்டு அதன் பின் மேலே ஆகவேண்டிய வேலைகளை வேகமாகச் செய்ய வேண்டும் என்று யூகம் செய்திருந்தார். விவேகம் வீறுகொண்டு நின்றது.

## கும்பினியார் தெளிந்தது

இவருடைய நிலைகளைக் கும்பினியார் கூர்ந்து ஓர்ந்து வந்தார். கலெக்டரும் அடிக்கடி குறிப்புகள் எழுதினர். இவருடைய செயல் இயல்களை அறிந்து சேனைபதிகள் யாவரும் பேரதிசயமடைந்தனர். "கோட்டை அடியோடு அழிந்து போயது; உயிர் தப்பி ஒளிந்து போன ஊமையன் மீண்டும் படைகளைச் சேர்த்து நம்மை நாசப்படுத்தி இத்தேசத்திலிருந்து நீக்கி விடலாம் என்று ஊக்கி நிற்கிருன்; அவனது உறுதியும் ஊக்கமும் என்னே!" என அவர் உள்ளம் கொதித்து நின்ருர். நிலைமைகளை நெடிது ஆய்ந்து முடிவுகளைத் தேர்ந்து கொண்டார். ஒற்றர்களை ஏவி உளவுகளை ஓர்ந்து படைவலியைத் தெளிந்தார். சேனைபதி ஒருவர் இவரைக் குறித்து உரைத்திருப்பது அயலே வருகிறது.

"An organized force of 20,000 Panjalamkurichi men would have been irresistible, and we have seen that a considerable body of those very men, including the Poligar himself and his brother, had escaped on the capture of the fort and fled northwards to Sivagangai. They were received by the usurping Poligar of Sivagangai with open arms." (G. W.)

"பயிற்சி பெற்ற பாஞ்சாலங்குறிச்சிப் படை வீரர்கள் இருபதினாயிரம் பேர் ஒருங்கே திரண்டு நம்மைப் பொருது அழிக்கும்படி ஊக்கி நிற்கின்றனர். கோட்டையை நாம் கைப்பற்றிய பொழுது வடக்கு முகமாய்த் தப்பி ஓடிய ஊமைத்துரையும் அவன் தம்பியும் அதில் தலைமை தாங்கியுள்ளனர். சிவகங்கை ஜமீனை வலிந்து கவர்ந்து கொண்ட பாளையகாரன் அவரை இரு கையாலும் வரவேற்று மிகவும் ஆதரித்துப் போற்றி நிற்கிறான்." என்பது மேலே வந்துள்ள ஆங்கிலத்தின் மொழி பெயர்ப்பு.

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளையெல்லாம் இதனால் நாம் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். பகைமையின் விளைவுகள் விசித்திர நிலைகளில் விளங்கி நிற்கின்றன. கோட்டையை இழந்து உயிர் தப்பிப் போன பாஞ்சை மன்னன் ஒரு மாதத்துள் இருபதினாயிரம் போர்வீரர்களைச் சேர்த்துக்கொண்டு மீண்டும் வெள்ளையர்களைத் தொலைக்க மூண்டு நிற்பது ஆண்டகைமையின் அதிசய ஆற்றலாகவே நீண்டு திகழ்கின்றது. அந்த நெஞ்சுரம் யாண்டும் அஞ்சாமையாய் நிமிர்ந்து எவ்வழியும் பகைவரைப் பழி வாங்கும் நோக்கத்திலேயே விழி யூன்றி நிற்கிறது. சினமும் சீற்றமும் மன வீறுடன் மானக் கொதிப்புகளாய் மருவிநிற்கின்றன.

### சேனைத் தலைவன் சினந்தது

ஊமைத்துரையும் மருது சேர்வையும் சேனைகளைத் திரட்டி வைத்துக் கொண்டு கும்பினிக்குக் குடிகேடு செய்ய மூண்டுள்ளார் என்பதை அறிந்ததும் ஆங்கிலத் தளபதிகள் அதிவேகமாய் வேலை செய்தனர். பல இடங்களிலுமிருந்து படைகளைச் சேர்த்தனர். முன்பு பாஞ்சை மேல் வந்து போராடி மீண்ட சேனைகளோடு வேறு சில புதிய சேனைகளும் அதிகமாச் சேர்ந்தன. எட்டப்பநாயக்கரும் தம் படைகளோடு வந்து கலந்து கொண்டார். இந்தப் படை யெழுச்சிக்குப் புதிதாகத் தேர்ந்தெடுத்த படைத் தலைவர்கள் கதிவேகமாய்க் கவித்துக் கடுத்து வந்தனர்.

பாஞ்சை வீரரிடம் 22000 போர் வீரர்கள் சேர்ந்திருக்கின்றனர் என்று கலெக்ட்டர் குறித்திருக்கிறார். 20000 என்று சேனைத் தலைவர் வரைந்துள்ளார். எண்ணலளவையில் சிறிது வேறுபாடு இருந்தாலும் பெரிய படையைத் திரட்டிக் கொண்டு வெள்ளையரை வேரறுக்க ஊமைத்துரை மூண்டு நிற்கின்றார் என்பதை இருவர் உரைகளும் உறுதி செய்துள்ளன. ஆகவே கொடிய போர்க் கருவிகளோடு நெடிய படைகளைக் கடிது சேர்த்துக் கும்பினியார் இத்தொல்லையை அடக்க விரைந்தனர். அந்தச் சேனைகளுக்குச் சிறந்த தலைவர்கள் சேர்ந்து நின்றனர்.

### தளபதிகள்

| | |
|---|---|
| கர்னல் டால்ரிம்பிள் | (Colonel Dalrymple) |
| மேஜர் கிரேகாம் | (Major Graham) |
| மேஜர் லீயோட் | (Major M' Leod) |
| லெவ்ட்டினெண்டுலிட்டில் | (Lieutenant Little) |
| லெவ்ட்டினெண்டு கிங் | (Lieutenant King) |
| மேஜர் பேர்சன் | (Major, M. Pherson) |
| கர்னல் இன்னெஸ் | (Colonel Innes) |
| ஜெனரல் வெல்ஷ் | (General Weleh) |
| மேஜர் மெக்காலே | (Mojor Macaulay) |

இந்தப் படைகளுக்கும், தளபதிகளுக்கும் தலைமைச் சேனாதிபதியாய்க் கர்னல் ஆக்கினியூவே (Colonel Agnew) அமர்ந்திருந்தார். யுத்த ஆயத்தங்கள் யாவும் சித்தமாயின. எத்தகைய வகையிலும் எதிரிகளை அடக்கி விடவேண்டும் என்ற ஆங்காரம் ஆங்கிலேயரிடம் யாண்டும் ஓங்கி அடலோடு மூண்டு நீண்டுநின்றது.

ஜூலை மாதம் 27ந் தேதி இரவு படை எழுச்சி செய்தார்.

சிவகங்கையையும், சிறுவயலையும் பிடிக்கமூண்டு படைகள் நடந்தன. மருது சேர்வை சிறுவயல் அரண்மனையில் இருக்கிறார் என்று உறுதி செய்து கொண்டமையால் அங்கே வந்து வளைந்தன. கும்பினிச் சேனைகள் வருவதை மூன்று தினங்களுக்கு முன்னதாகவே அறிந்து கொண்டமையால் ஊமைத்துரையும் மருதும் படைகளுடன் அரணை காட்டில் மறைந்து கொண்டனர். எதிர்த்து நின்று எதிரிகளோடு போராடுதற்குச் சரியான

அரண்வலி சிறுவயலில் இல்லாமையால் இவர் அயல் மலறய நேர்ந்தனர். உயர் வலிகளைக் கருதிஒதுங்கி உறுதிநாடிகின்றனர்.

தீ மூண்டது

ஜூலை மாதம் 30 ந் தேதி (30–7–1801) மாலை 6 மணிக்குச் சிறுவயலைச் சூழ்ந்து கும்பினிப் படை வளைந்து கொள்ளவே தங்கள் வீடுகளில் தீயைக் கொளுத்தி விட்டு ஊரிலுள்ள யாவரும் வெளியேறிப் போயினர். எல்லா வீடுகளும் பற்றிக்கொண்டன. தீ கோரமாய் எரிந்தது; எங்கும் புகைப் படலங்கள் பொங்கி எழுந்தன. நெருப்பின் சுவாலைகளைக் கண்டதும் ஆங்கிலேயர் ஒதுங்கி நின்றனர். தீயெல்லாம் எரிந்து அவிந்த பின்பு சேனைகள் உள்ளே புகுந்தன. யாண்டும் கரிந்து ஊரெல்லாம் அழிந்திருந்தது. யாரும் அங்கே இல்லை. யாதொரு எதிர்ப்பும் இல்லாமையால் விரைந்து சென்று மருது பாண்டியனுடைய அரண்மனையைச் சேனைத் தலைவர் கைப்பற்றிக் கொண்டனர். மறுநாள் இரவு முழுவதும் அங்கேயே தங்கி யிருந்தனர்.

முன்னக் கூடியே தயார் செய்திருந்தபடி ஊரார் புரிந்த வேலையும், தங்கள் தலைவனிடத்தே குடிசனங்கள் கொண்டுள்ள ஆர்வமும் கும்பினித் தளபதிகளுக்கு ஆச்சரியத்தை விளைத்தன.

"The people had set fire to their houses with their own hands and fled into the jungles. The flames, accelarated by a high wind, spread with great fury, so that the fine extensive village, with its broad and regular streets, and the Marudu's palace fell into the hands of the troops without opposition."

[G. W.]

"தங்கள் வீடுகளுக்குத் தீயை வைத்து விட்டுச் சனங்கள் காடுகளுக்கு ஓடிப் போயினர். காற்று வேகமாய் அடித்தமையால் தீ அகோரமாய்ப் பற்றிக் கொண்டது; பயங்கரமாய் வீசி எரிந்தது; விசாலமான நல்ல தெருக்களிடைய அந்த அழகிய ஊர் அழகழிந்தது; யாதொரு தடையு மில்லாமல் மருதுவின் அரண்மனையைத் துருப்புக்கள் எளிதே கைப்பற்றிக் கொண்டன" என்னும் இக் குறிப்பு இங்கே கூர்ந்து நோக்கத் தக்கது.

ஊரைத் தீயைக் கொளுத்தி விட்டால் வந்த கும்பினிப் படைகள் மீண்டு போய் விடும் என்று ஊரார் கருதி யிருப்பதா

கத் தெரிகிறது. கூடி யோசித்தே வீடுகளை நாசப்படுத்திவிட்டு முடியிருக்கின்றனர் அந்த ஓட்டம் வந்தவர்களுக்குத் தேட்டமாய் நின்றது. நாட்டு மக்கள் காட்டுள் கரந்தது களிப்பைத் தந்தது.

அச்சம் நீங்கியது

படைகள் புறப்பட்ட பொழுது சேனைத் தலைவர் பயந்தே வந்தனர். பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையோடு போராடிய இல்கள் அவருடைய உள்ளங்களில் இன்னும் வேரூன்றி யுள்ளன. அங்கே நேர்ந்ததுபோல் நெடுநாள்கள் நீளும்; படுநாசங்களும் மூளும் என்று நெஞ்சம் கலங்கியே வந்தார்; அவ்வாறு வந்தவர் இங்கே ஒரு சிரமும் இல்லாமல் எதிரியின் இடம் தம் கைவசம் ஆயதும் அவருக்குக் கழிபேருவகையாயது. எவ்வழியும் எளிதே வெல்லலாம் எனப் பெரிய ஊக்கம் பெருகி வந்தது.

மூன்று நாள் சிறுவயலிலேயே தங்கி யிருந்து எதிரிகள் மறைந்துள்ள இடங்களைக் குறித்து ஊன்றி ஆராய்ந்தார் யாதொரு தகவலும் தெரியவில்லை பின்பு நேரே படைகளை அனுப்பிச் சிவகங்கையையும் பிடித்துக் கொண்டனர். தலைமையான நிலையங்கள் இரண்டும் கைவசமானமையால் ஜமீன் முழுவதும் பற்றியதாகவே வெற்றிக்களிப்பு அவரிடம் விறுகொண்டு நின்றது. விரைந்து துணிந்து யாவரும் வேலைகள் செய்தனர்.

ஊமையனையும் மருது சேர்வையையும் இனிமேல் எளிதாகப் பிடித்து விடலாம் என்று உறுதி பூண்டு யாண்டும் அவர் மூண்டு முயன்றார். தக்க இடங்களை யெல்லாம் தனித் தனியே ஆராய்ந்தார். எங்கும் காணவில்லை மறைந்திருக்கிற இருவரையும் எப்படியும் பிடித்துக்கொள்ள வேண்டும் என்று கடுத்து விரைந்தார். ஒளிந்து போயுள்ள இடங்களைக் குறித்து உளவுகள் ஓர்ந்தார். சிறுவயலுக்குத் தென்மேற்கே பத்தாவது மைலிலுள்ள ஓர் அடர்ந்த காட்டில் சில படை வீரர்களோடு ஊமையனும் மருதும் மறைந்திருப்பதாகத் துப்புகள் தெரிய வந்தன. தெரியவே அங்கே கும்பினிப் படைகள் போய் வளைந்தன.

கூடி மூண்டது

புலிப்புதர் என்னும் அவ் வனத்துள் யாரும் எளிதே புக முடியாது. அடலுடைய இவர் அதிசாதுரியமாக ஆண்டு ஒளிவு

கொண்டிருந்தனர். தாங்கள் கருதிச் சூழ்ந்தபடி நடவாமல் இடையே தடை நேர்ந்தமையால் இருவரும் பெரிதும் வருந்தினர். முதலில் இராமநாதபுரத்தைக் கைக்கொண்டு அங்கு நிலையாய் அமர்ந்து கும்பினியாரை எதிர்த்து ஒழிக்க வேண்டும் என்று குறித்திருந்த குறி தவறிப் போனமையால் சேர்ந்திருந்த படைகள் எல்லாம் சிதைந்து பிரிந்து தியங்கி நின்றன. குறியான சில படை வீரர்களோடு இருவரும் அங்கே தலைமறைவாயிருந்தனர். ஆகஸ்டு மாதம் ஆறாம் தேதி (6–8–1801) காலையில் அந்தக் காட்டுப் பக்கங்களைக் கும்பினிப் படைகள் வளைந்து கொண்டன. உள் நாட்டுத் துப்புகள் எவ்வழியும் உதவி புரிந்தன.

உள்ளே எதிரிகள் ஒளிந்துள்ளனர் என்று தெரிந்து கொள்ளவே தளபதிகள் எல்லாரும் மிகுந்த உற்சாகத்துடன் படைகளை ஊக்கி நின்றார். மேஜர் கிரேகாம் [Major Graham] தமது படைகளை ஏவி அந்தக் காட்டுப் புதர்களுள் உள்ளக் கிளர்ச்சிகளுடன் ஒல்லையில் மூண்டு மாண்டும் ஊக்கிவேலைகள் செய்தார்.

### போராட்டம் நேர்ந்தது

படைகள் நேரே வந்து வளைந்து கொண்டன என்று அறிந்தவுடனே ஊமைத்துரை போர் செய்ய உருத்து மூண்டார். அப்பொழுது அங்கே மருது சேர்வையும் இரு நூற்றறுபது படை வீரர்களும் அவர் கூட இருந்தனர். வசதியாய்த் தங்கியிருத்தற்கு மூன்று அரணான இடங்கள் அங்கே வாய்ப்பாய் அமைந்திருந்தன. அந்தத் தானங்களைச் சேனைகள் நெருங்கும் வரையும் எதிர் நோக்கி நின்றனர். சில வெடிகளும் வேல்களும் படை வீரர் கைகளிலிருந்தன. வளரி என்னும் ஒருவகை ஆயுதம் மருதுசேர்வை கையில் இருந்தது. அந்தப் போர்க்கருவியை உபயோகிப்பதில் அவர் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார்.

விசித்திரமான சுருட்டு வாள் ஒன்றை ஊமைத்துரை கைக்கொண்டு நின்றார். அந்த வாள் அதிசயமுடையது. இருபத்து நான்கு முழம் நீளம் விரிந்து பாய்வது; இருபுறமும் கூர்மை வாய்ந்தது. ஒரு சுற்றில் பல தலைகளைக் கொய்து வருவது. அந்த ஆயுதத்தைக்கொண்டு போராடுவதில் ஊமைத்துரை பேராற்றல் வாய்ந்தவர். வேறு யாரும் அதை வைத்து வேலை செய்ய முடியாது. இவர் ஒருவரே அதில் அரிது முயன்று நெடிது பயின்று

அதிநிபுணராய் நிலவி நின்றார். பாஞ்சைப் போரில் இவர் அவ்வாளோடு வந்து நின்றாரேயன்றி நேரே ஆசை தீரப் போராடவில்லை. எல்லா வேலைகளையும் போர் வீரர்கள் முன்னணியில் நின்று முடித்து வந்தமையால் இவருடைய வீரவாளின் போராடல்கள் அங்கே வெளிப்படவில்லை. அந்த அதிசய ஆடலை இங்கே செய்ய மூண்டு இந்தச் சிங்க ஏறு வீறோடு சீறி நின்றார்.

## போர் புரிந்த திறம்.

புதர்களை நீக்கி வழிகளைச் செம்மை செய்து கும்பினிப் படைகள் வெடிகளோடு திரண்டு நெருங்கின. நெருங்கவே ஊமைத்துரை வாளோடு எதிர் நின்றார். இவரைக் கண்டதும் சேனைத் தலைவர்கள் எல்லாரும் வியந்து திகைத்தார். ஒல்லையில் பிடித்து விடலாம் என்று உள்ளம் உவந்து வளைந்தார். உருத்துச் சுட்டார். வெடிகளிலிருந்து எழுந்த அந்தச் சூடுகளுக்கும் குண்டுகளுக்கும் யாதும் இடங்கொடாமல் ஒதுங்கி எழுந்து விரைந்து பாய்ந்து தம் கையிலிருந்த சுருட்டுவாளைச் சுற்றி வீசினார். ஒரே வீச்சில் ஏழு தலைகள் கும்பினிப் படைகளிலிருந்து துள்ளி விழுந்தன. அவை தரையில் விழுமுன்னரே இவர் விரைந்து மேலேறிச் சூறைக் காற்றைப் போல் கால்மாறிச் சுழன்று சாரி திரிந்து சுற்றி எறிந்தார். வாள் பாய்ந்த இடமெல்லாம் ஆள் மாய்ந்து வீழ்ந்தன. கொலைகள் விழுந்த நிலைகளை யாரும் அறிய முடியவில்லை. தலைகளும் முண்டங்களும் அயலிடமெங்கும் குவிந்து கிடத்தலையே கண்டனர். கும்பினிப் படைகள் பயந்து பின் வாங்கின. சேனைத் தலைவர் திகைத்துச் செத்த சவங்களைப் போட்டு விட்டுப் படைகளோடு அந்தக் காட்டை விட்டு வெளியே ஓடினர். இவரும் மருதும் தமது சனங்களோடு உள்ளே இனமாய் மறைந்து உறுதி கூர்ந்து உறைந்து கொண்டனர்.

உயிர் தப்பி வெளியேறிய தளபதிகள் எல்லாரும் ஊமைத்துரை செய்த போரையும் தமக்கு நேர்ந்த இழவையும் நினைந்து நினைந்து வருந்தினர். இவர் வீசிய வாளின் ஒளியும், அது செய்த நாச வேலையும் ஆங்கிலேயர்களுடைய கண்கள் எதிரே காட்சி புரிந்து நெஞ்சங்களைக் கலக்கி வந்தன. பல படை வீரர்களும் மூன்று படைத் தலைவர்களும் அதில் மாண்டு மடிந்தனர். பலர்

படு காயங்கள் அடைந்து போய்ப் பின்பு செத்தனர் இந்தச் சண்டையில் இவர் பக்கம் எழுபது பேர் இறந்து போயினர்.

இவரை எளிதே பிடித்து விடலாம் என்று வலிய உறுதியோடு ஊக்கி வந்தவர் அழிவு பல அடைந்து வெளியேறினமையால் அவலமடைந்து நின்றார். யாதொரு ஆதரவும் இல்லாமல் காட்டில் மறைந்திருந்தும் கடுத்து எதிர்த்துத் தங்கள் சேனைகளை இவர் மாட்டி அழித்த திறல் அவர்க்கு மாய வேலையாகவே யிருந்தது. மறுகி மயங்கி இறுதி நினைந்து உறுதிகள் நாடினார்.

"This post they defended with great resolution, and kill. ed and wounded many of our men. Our loss was very great."

[R. G.]

"இந்தக் காட்டு நிலையில் அவர் மிகுந்த துணிவோடு எதிர்த்துப் போராடினர். நமது படையில் பலர் இறந்து போயினர்; அநேகர் காயமடைந்தனர். நமக்கு நேர்ந்த அழிவு பெரிதே" என்னும் இந்தக் குறிப்பினால் படைவீரர்களை அதிகமாக இழந்து கும்பினிப் படைத் தலைவர் உள்ளம் உடைந்துள்ளமை உணரலாகும். கொடிய போர்க் கருவிகளும் நெடிய படைகளும் ஒருங்கு திரண்டு வந்தும் ஊமையன் எதிரே ஊனம் அடைந்து ஒருவிப் போனமையால் அவர்க்கு அது பெரிய அவமானமா யிருந்தது.

## மருது வியந்தது

நாட்டை இழந்து கோட்டையைப் பறிகொடுத்து வெளியே காட்டை யடைந்திருந்தும் ஊமைத்துரையின் உறுதியும் ஊக்கமும் வீர பராக்கிரமும் பொருதிறல் வீறும் யாதும் குறையாமல் இருப்பது யாருக்கும் அரிய அதிசயமாகவே பெருகி நின்றது

மருது சேர்வையும் இவரது அடலாண்மையை வியந்து ஆர்வம் மீதூர்ந்து புகழ்ந்தார். பெரிய போர் வீரர் என்று கேள்வியுற்றிருந்தார்; அன்று போரில் இவர் புரிந்த வீர விளையாடலை நேரில் கண்டதும் அவர் பேரதிசயமடைந்தார். ஏதோ ஒரு தெய்வீக சத்தி இவரிடம் இசைந்துள்ளதாகவே அவர் ஏத்தி நின்றார்.

அந்தக் காட்டில் இருந்தால் மீண்டும் படைகள் வந்து அல்லல்கள் செய்யும் என்று கருதி அதனை விட்டு வெளியேறி இவர் அயலிடம் போனார். அக் காலத்தில் எங்கும் அடர்ந்த காடுக

னாய் அந் நாடு இருந்தமையால் இவர் ஒடி ஒளிக்க வசதியா யிருந்தது இருபது மைலுக்குத் தெற்கே வந்து ஒருவரும் அறியாத இடத்தில் இவர் ஒதுங்கி இருந்தார். தாங்கள் கருதிச் சூழ்ந்தபடி முடியாது போயதே என்று இருவரும் பெரிதும் வருந்திக் காலச் சுழலைக் கருதி யுளைந்து மறுகி யிருந்தனர்

## கும்பினியார் சூழ்ந்தது

இவர் இவ்வாறு இருக்கப் பொருது தொலைந்து போன கும்பினித் தலைவர்கள் மேலும் உறுதிகள் பல சூழ்ந்து காரிய சித்திகளைக் கருதி விரைந்தார். கொடிய நெருப்புக்குக் கடிய காற்றுச் சேர்ந்தது போல் ஊமையனுக்கு மருது உறுதியாய் நின்று உதவி புரிகின்முன் என்று வெள்ளையர்கள் உள்ளங்களில் அவர் மீது கொடுங் கொதிப்பேறி நின்றது. கடுங் கேடுகளைச் செய்யக் கடுத்து மூண்டார். அந் நாட்டு மக்கள் தம் பக்கம் உரிமையாய் நின்று உழைக்கும் படிக்கான உபாயங்களை நாடினார். அதற்கு வேண்டிய தந்திரங்களைக் கலெக்ட்டர் லஷிங்ட்டன் விரைந்து செய்தார். மித்திர பேதங்கள் விசித்திரங்களாய் விளைந்தன.

## புதிய ஜமீன்தார்

சிவகங்கை ஜமீனுக்கு நேர் வாரிசு என ஒருவரைப் பேருக்கு அமைத்தார். அந்த ஜமீனுக்கு மூல புருடனை சசிவர்ணத் தேவருடைய வழிமுறையில் வந்தவர் என அவரை வெளியறிய வைத்தார். அவர் பெயர் படமாத்தூரார் உடையாத் தேவர் என்பது. புதிய ஜமீன்தாராய் வந்த அவர் கும்பினியாருக்கு அதிக உரிமையாய் நின்று உழைத்தார். நாட்டில் அவருக்குக் கொஞ்சம் செல்வாக்கிருந்தமையால் அவரைச் சேர்ந்தவர் எல்லாரும் மருது சேர்வையைப் பிடித்துக் கொடுக்கப் பெரிதும் மூண்டு முனைந்தார். வெள்ளையர்கள் செய்த சூழ்ச்சித் திறம் வெள்ளை மருதுக்கு உள்ளக் கொதிப்பை உரமாய் மூட்டியது.

## பெரிய மருது மறுகியது

தனக்கு உரிமையாயிருந்த ஜமீனைக் கும்பினியார் வம்பாகக் கவர்ந்து கொண்டு வேறு ஒருவனை உரியவனாகச் செய்திருப்பதை அறிந்து பெரிய மருது பெரிதும் வருந்தினர். அதுபொழுது அவர் மனைவியோடு அரசனேந்தல் என்னும் ஊரில் இருந்தார்

பாஞ்சாலங்குறிச்சியாரோடு சேராமல் அமைதியாய் அவர் ஒதுங்கியிருந்தமையால் அவரைக் கும்பினியார் ஒன்றும் செய்யாமல் பொதுவாக விட்டிருந்தார். தன்னுடைய தம்பி பால் மிகவும் பிரியமுடையவர். அவனைக் கொன்று தொலைக்க வெள்ளையர் மூண்டு முனைந்து திரிவதை நினைந்து நினைந்து அவர் நெஞ்சம் கலங்கினார். அத்துடன் ஜமீனைக் கும்பினியார் பறித்துக் கொண்டது அவருக்குக் கொடிய துயரமாய் நின்றது. அவருக்கு ஐந்து மனைவியர். உல்லாசமாய்ப் பொழுது போக்கிச் செல்வச் செழிப்பில் சிறந்து நல்ல சுக போகங்களை அனுபவித்து வந்தவர் ஆதலால் இந்த அல்லல்கள் நேரவும் அவர் உள்ளம் உடைந்து உயிர் துடித்து எள்ளல் இழிவுகளை எண்ணி இளைந்திருந்தார்.

## சின்ன மருது செய்தது

எல்லையில்லாத அல்லல்களை அடைந்து உள்ளத் துயரோடு ஒளிந்திருந்த மருது சேர்வை ஒரு நாளிரவு தனியே வெளியேறி யாருக்கும் தெரியாமல் சிவகங்கையை அடைந்தார். அங்கே குதிரை லாயத்திலிருந்த தனது பட்டத்துக் குதிரையில் ஏறி அரசனேந்தல் போய் அண்ணனைக் கண்டார். தம்பியைக் கண்டதும் அவர் உழுவலன்போடு தழுவி மகிழ்ந்தார். நேர்ந்துள்ள அல்லல்களைச் சொல்லி உள்ளம் உருகி அழுதார். அவரைத் தேற்றி அங்கிருந்து மறுநாள் இரவு சிறுவயலுக்கு வந்தார். நிலைமைகளை ஆராய்ந்தார். பல இடங்களுக்கு இரவுகளில் சென்று இவர் ஒற்றி அறிந்து எதிரிகளுடைய செயல் இயல்களை ஓர்ந்து வந்தார் இவ்வாறு இவர் வெளியேறி உளவுகள் ஓர்ந்து திரிவதை புதிய ஜமீன்தார் அறிந்து இவரைப் பிடிக்கும்படி படைகளை ஏவினார். தன்னை இடைமறித்த படை வீரர்களை எல்லாம் தொலைத்து இவர் தப்பி வந்தார். பல இடங்களிலும் பல அபாயங்களைக் கடந்தார். அவ்வாறு கடந்து வருங்கால் ஒரு காட்டில் ஒரு நாள் மாலைப் பொழுதில் பசியாலும் களைப்பாலும் பரிதாப நிலையை அடைந்து மயங்கி விழுந்தார். அங்கே காட்டில் காவல் காத்துக் கொண்டிருந்த கிழவி ஒருத்தி இவரது நிலைமையைக் கண்டு நெஞ்சம் இரங்கினாள். பசி தாகத்தால் சோர்வடைந்திருந்த இவருக்கு ஒன்றும் உதவ முடியவில்லையே என்று வருந்தினாள். பகலில் தான் குடித்து மிச்சம் வைத்துள்ள கூழை நினைந்தாள்.

மண் கலசத்திலிருந்த அதனை எடுத்து வந்து "ஐயா! கொஞ்சம் கூழ் நீராகாரமாயுள்ளது சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டாள். "கொண்டுவா!" என்று அந்தக் கலசத்தை இரண்டு கைகளாலும் வாங்கி இவர் குடித்தார். களைப்பு நீங்கியது. அந்தக் கிழவியை இவர் உவந்து பார்த்தார். பெயர் என்ன? என்று கேட்டார். தாயம்மாள் என்றாள். அங்கே கிடந்த ஒரு முள்ளை எடுத்துச் சிறு ஓலையில் "இந்தக் கிராமம் தாயம்மாள் என்னும் இந்தக் கிழவிக்கு உரியது" என்று எழுதி மருது என்று தன் பெயரையும் கீழே குறித்து அந்த ஓலையை அவளிடம் கொடுத்து "அம்மா! இதைச் சிவகங்கை ஜமீன் மானேஜரிடம் கொண்டு போய்க் கொடு" என்று சொல்லிவிட்டு மேலே எழுந்துபோனார்.

இவர் ஜமீன்தார் மருது பாண்டியன் என்பது அந்தக் கிழவிக்கு அப்பொழுது தெரியாது. பிற்பாடு தெரிய வந்தது. பெரிதும் வியந்து மகிழ்ந்தாள். அந்தக்கிராமம் அவளுக்கே கொடுக்கப் பட்டது. கூழுர் என்னும் பேரால் அது இன்று வழங்கி வருகிறது. காட்டில் இட்ட கூழ் கதி நிலையைக் காட்டியது.

இவ்வாறு நாட்டில் அலைந்து திரிந்து யாண்டும் அல்லல் பல அடைந்து மீண்டு வந்து காட்டுள் புகுந்து ஊமைத்துரையோடு கலந்து கொண்டார். தங்கள் நிலை அபாயமுடையது என்று தெரிந்தும் யாதொரு உபாயங்களையும் நாடாமல் உறுதியுடன் மாங்கியிருந்தார். அந்த இருப்பு அவலமுடைய நேர்ந்தது.

## காடு களைந்தது

எங்கும்தேடி எவ்வழியும் நாடி இவரை வேரோடு களைந்து ஒழிக்க வேண்டும் என்று கும்பினித் தளபதிகள் படைகளை இடங்கள் தோறும் செலுத்தி அல்லும் பகலும் அடலாண்மையுடன் முயன்று வந்தார். வடக்கே சிறுவயலிலிருந்து தெற்கே காளையார் கோவில் வரையும் காடுகள் அடர்ந்திருந்தன. செடிகளும் புதர்களும் மரங்களும் அடர்ந்து படர்ந்திருந்த அந்தக் கானகங்களில் இவர் மறைந்திருந்தமையால் அவற்றைக்களைந்து வெளியாக்கவேண்டும் என்று கும்பினியார் மூண்டு வேலைசெய்தார். ஜமீன் அவருடைய கைவசமானமையால் நாட்டு மக்களும் கூடி உழைத்தார். ஆரணை காடு ஆதலால் யாவரும் முறையாய்ப் பாடு பட்டனர். எய்த அம்பு ஊடே போகாது என

இக்காட்டைக்குறித்து அந்நாட்டவர் சொல்லிவருவது வழக்கம்.

"The jungle was so impenetrable."

"உள்ளே ஒருவரும் புகமுடியாதபடி அவ்வனம் புதர் அடர்ந்திருந்தது" என இந்தக் கானகத்தைக் குறித்து அந்தச் சேனைத் தலைவரும் இங்ஙனம் சிறப்பாக வியந்து உரைத்திருக்கின்றார்.

இவ்வாறு புதர்கள் அடர்ந்திருந்த காட்டை வெட்டித் திருத்தி வழிகளை யுளவாக்கி வெளிகள் செய்து வந்தனர். எதிரிகள் செய்து வருகிற வேலைகளை எதிர் நோக்கி இவர் அக் காட்டிலிருந்து வெளியேறிக் காளையார் கோவில் அயலே யிருந்த பெருங்கானகத்தில் விரைந்து போய் மறைந்து கொண்டனர். அவர் வருந்தி முயன்று யாண்டும் தேடி மூண்டு நின்றனர்.

இவர் ஒளிந்து வாழ்ந்து வருவதை நாளும் அளவாக உளவுகள் உசாவி ஓர்ந்து வந்தனர். இருக்கும் இடத்தை முடிவாகத் தெளிந்து கொண்டபின் அவர் ஒருங்கே திரண்டு வந்து மருங்கு சூழ்ந்து பெரும் படைகளோடு எங்கும் வளைந்து கொண்டனர்.

## முடிவில் விளைந்தது

அக்டோபர் மாதம் 10ந்தேதி வந்துவளைந்தவர் 15 ந் தேதி வரையும் தொடர்ந்து சூழ்ந்து முற்றுகை யிட்டு நின்றனர். மெக்காலே, செப்பேடு, இன், கிரகாம், இன்னெஸ் முதலிய படைத்தலைவர்கள் காளையார் கோவில் அயலே கூடாரங்களில் தங்கி யிருந்தனர். கொடிய சதிகளைக் கடிது செய்தனர்.

வெளியிலிருந்து யாதொரு பண்டமும் எவ் வகையிலும் போகாதபடி கட்டிக் காத்து நின்றார் ஆதலால் உள்ளே மறைந்திருந்தவர் பட்டினி கிடந்து பரிதாப நிலையில் மறுகி யிருந்தார்.

## ஊமைத்துரை உரைத்தது

படைகள் வந்து சூழ்ந்துள்ள நிலைமையை அறிந்ததும் ஊமைத்துரை மருது சேர்வையைத் தனியே அழைத்து வைத்துச் சில உறுதி மொழிகள் கூறினார்: "என்னால் உங்களுக்கு மிகவும் அல்லல்கள் நேர்ந்தன; நான் இங்கே இல்லையானால் கும்பினியார் உங்களை ஒன்றும் செய்யமாட்டார்; சில உடன் படிக்கைகளை வாங்கிக்கொண்டு ஜமீனை மறுபடியும் உங்களிடம் கொடுத்து விடுவார்; நீங்கள் சுகமா யிருந்து வாழலாம். நான்

கண்டு இருந்து மூண்டு வந்த படைகளைப் பொருது மாண்டு போனாலும் உங்களையும் கொன்றுவிடுவார்; ஆதலால் இனிமேல் நீங்கள் இங்கே இருக்கலாகாது; இது வரையும் நீங்கள் எனக்குச் செய்து வந்த உதவியை நான் என்றும் மறவேன்; இந் நாட்டிலுள்ள ஜமீன்தார்கள் எல்லாரும் கோளர்களும் கோழைகளுமாய் இருந்து வருவதை அறிந்து வருந்திய என் நெஞ்சுக்கு உங்கள் செயல் மிகுந்த ஆறுதலை அளித்துள்ளது; உங்களுடைய அபிமானமும் சுதந்திர வுணர்ச்சியும் வீரப்பாடும் எனக்கு உவகை தந்து வருகின்றன; உங்களது அன்புரிமைக்கு எனது நன்றி என்றும் உரிமையாம். என்னைப் பற்றி இனி நீங்கள் யாதும் கவலையுற வேண்டாம். எனது முன்னோர் நெறி முறையே அரசாண்டு வந்துள்ளனர். யாதொரு தவறும் புரியாமல் நீதி முறையா ஒழுகி வந்தும் எனக்கு இந்த அவகேடுகள் நேர்ந்திருக்கின்றன. சுதந்திரநிலைமையில் நிரந்தரமாய் வாழ்ந்து வந்த அரசுரிமையை இழந்துவிட்டேன் மானம் அழிந்தபின் உயிர் வாழ்வது ஈனமேயாம். போரசைமண்டி வம்பு மீதூர்ந்து கொடுமையாய் வந்த கும்பினிப் படைகளை அடியோடு வென்று குடியெழுப்பியிருப்பேன்; இறுதியில் நீசத்தனமாய் மறைந்து நச்சுப்புகையை மூட்டிக் கோட்டையை அக்கொடியவர் நாசப்படுத்திவிட்டனர். அதனால் என்னுடைய சேனைதளங்கள் அநியாயமாய் மாண்டு போயின. படுபாதகமான அந்த நீச வேலையைச் செய்யும்படி தூண்டினவன் எட்டப்பநாயக்கன் என்று தெரிகின்றது அந்தக் கோளன் செய்துள்ள குடிகேடுகள் அளவிடலரியன. அவனை உள்ளே துப்பாக வைத்துக் கொண்டே வெள்ளையர்கள் எம்மோடு வெளியே போராடியுள்ளனர். அந்நிய நாட்டாரான ஆங்கிலேயர் இந் நாட்டை ஆளும் ஆசையில் நய வஞ்சகமாய்த் துணைகளைச் சேர்த்திருக்கின்றனர். அந்த வஞ்சச் சூழ்ச்சிகளை யாதும் உணராமல் தமக்குக் கிடைக்கிற சிறிய ஊதியங்களையே பெரிதாக நாடி இந்த அருமை நாட்டைப் பிறர்க்கு உரிமையாக்க ஒட்டியிருந்து உழைத்து வருகிற பேடிகளை எண்ணும் பொழுதுதான் என் உள்ளம் பெரிதும் வருந்துகிறது. மானம் கெட்டவனர் சிலரது இழி செயலால் கண்ணியம் வாய்ந்த இப் புண்ணிய நாடு தனது நிலையான தலைமைத் தன்மையை இழந்து நிலைகுலைந்து பல தலைமுறைகளுக்கு அடிமை நாடாய்ச் சிறுமை

அடைய நேர்ந்துள்ளது. எனக்கு இடையூறாக ஒரு கோளனைத் துணை சேர்த்துக் கொண்டது போல் உங்களுக்குத் துயர்செய்ய இடையே இப்பொழுது ஒரு துப்பனைச் சேர்த்துக்கொண்டு கொடுந்தீமைகளைச் செய்து வருகின்றனர். காலம் கருதி இடம்கண்டு வழி தெரிந்து நடந்து கொள்வது நல்லது. நான் இங்கே இருப்பின் மேலும் உங்களுக்குத் துயரமே நேரும் ஆதலால் அயலே விலகி விடுவது இதம் என்றே கருதுகின்றேன். என்னுடைய பிரிவினால் உங்களுக்கு இடையூறு நீங்கி விடும் என நம்புகின்றேன்; எனக்கு விடை கொடுத்து விடுங்கள்." என்று இன்னவாறு கூறவே இவரது மன நிலையை அறிந்து மருது மறுகினார். அவரை உறுதி கூறித் தேற்றி விட்டு இவர் சமையம் நோக்கி இருந்தார். நெஞ்சக் கவலைகள் நெடிது நீண்டு நின்றன.

## ஊமைத்துரை வெளி ஏறியது

அக்டோபர்மாதம் 15 ந் தேதி(15–10–1801)இரவு2 மணிக்குத் தம்பியை மாத்திரம் தன்னுடன் அழைத்துக் கொண்டு ஒருவருக்கும் தெரியாமல் இவர் வெளியேறிப் போயினர். கொடிய சுடு வெடிகளோடு எவ்வழியும் கூர்ந்து நோக்கிச் சூழ்ந்து காத்து நிற்கிற நெடிய ஆங்கிலப் படையைக் கடந்து இவர் கடிது தாவிப் போயிருப்பது பெரிய அதிசயமாகவே யுள்ளது.

## உள்ளவர் பிடிப்பட்டது

16 ந் தேதி காலையில் வழிகளைச் செப்பம் செய்துகொண்டு குப்பினிப் படைகள் உள்ளே புகுந்தன. யாதொரு எதிர்ப்பும் இல்லை. பகல் 11 மணிக்கு அங்கிருந்தவர் அனைவரும் பிடிபட்டனர். மருது சேர்வை முதலாக அப்பொழுது அங்கே அறுபத்து நான்கு பேர் (64) இருந்தனர். அவருள் பாஞ்சாலங் குறிச்சியார் 24 பேர். மற்றவரெல்லாரும் மருதினைச் சேர்ந்தவரே. அங்கே யிருந்த போர்க் கருவிகளோடு அவர்களைக் கைதிகளாக்கி வெளியே கொண்டு வந்தார். பகைவர் சிறைப்பட்டு வந்திருப்பதைக்கண்டதும் சேனைத் தலைவர் பெருமகிழ்ச்சியடைந்தார். உள்ளக் களிப்புகள் வெள்ளையரிடம் ஓங்கி நின்றன.

ஊமைத்துரை அந்தக் கூட்டத்தில் இருப்பதாகவே அவர் உறுதி செய்து கொண்டார். கும்பினித் தளபதிகள் எவரும் இவரை நேரே கண்டு பழகாதவர் ஆதலால் யாரும் இனம் தெரிய

வில்லை. எல்லாரும் பிடிபட்டார் என்ற உற்சாகத்தில் வெள்ளையர்கள் உள்ளம் களித்திருந்தார். வீரதளவாய், ஆகிராமு, முத்தையா, இராஜபொம்மு, பராக்கிரமபாண்டியன் என்னும் இந்த ஐவரும் அன்று அங்கே அகப்பட்டவர்களுள் தலைமையானவர். ஊமைத்துரையின் நெருங்கிய உறவினர். இவர் முதலிய24பேர்களையும் உடனே அழைத்துப் போய்க் கமுதிக் கோட்டையில் சிறை வைத்தார். கடுந் துயரங்கள் நெடிது கதித்து நின்றன.

## மருது மாண்டது

மருது முதலிய நாற்பது பேரையும் திருப்பத்தூரில் கொண்டு போய்க் கைதிகளா அடைத்து வைத்தார். ஒரு வாரம் கழிந்ததும் அங்கே அவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. கர்னல் ஆக்னியூவின் உத்தரவின் பேரில் அவ் வூரில் பகிரங்கமான இடத்தில் மிகவும் கொடுமையாக அவரைத் தூக்கில் இட்டார்; அவர் துடித்துச் செத்தார். வீரன் சாவு விரி துயரமாயது.

இந்தப் படுகொலை கொடிய பழி பாதகமுடையது.

"To chase like a wild beast, then lingering with a fractured thigh in prison, and hanging in chains upon a common gibbet." (R. G.)

"காட்டு மிருகத்தைப் போல் துரத்திப் பிடித்து, சிறையில் வைத்துத் தொடையை முறித்து, முடிவில் பொதுவான இடத்தில் தூக்கப்பட்டான்" என சின்ன மருது சேர்வையைக் கொலை புரிந்திருக்கும் கொடிய புலைநிலையை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

இது எவ்வளவு சித்திரவதை! எத்துணைக் கொடிய பாதகம்! ஆட்சிக் களிப்பில் ஆசை மீதூர்ந்து வெள்ளையர் சிலர் இங்கே வந்து செய்துள்ள கொடுமைகளால் ஆங்கிலேயர் பொல்லாத கொடியவர் என இத்தேசத்தவர் எல்லாரும் சொல்ல நேர்ந்தார். நெறியும் நீதியுமுடைய நல்லவர்கள் அவருள் எவ்வளவு பேரோ உள்ளனர்; சில சதிகார அதிகாரிகள் செய்த பழிச் செயல்களால் பலரும் புலையான கொலையர் எனப் பழிக்க நேர்ந்தனர்.

இந் நாட்டில் நேர்மையோடு துணிந்து மான வீரங்களில் தலைசிறந்து நின்றவர்கள் எல்லாரும் தங்களுக்குக் குல விரோதிகள் என்று கருதி அதிகாரிகளாய் வந்த வெள்ளையர் இங்கே

சதி வேலைகளைச் செய்திருக்கின்றனர். கோழைகளாய்க் கூழைக் கும்பிடுகள் போட்டு வேலைக்குத் தக்கபடி பணிந்தவரைத் தமக்கு இதமாகத் தழுவிக் கொண்டு அதமங்களை ஆற்றியுள்ளனர். அந்தப் புலை நிலையில் இந்தக் கொலை நிகழ்ந்துள்ளது.

வீர மருது வாழ்வு இப்படிக் கோரமாய் முடிந்தது.

இவருக்கு ஒரு மகன் இருந்தான். துரைச்சாமி என்றுபேர்; அப்பொழுது அவனுக்கு வயது பதினெட்டு. அவனோடு இவருடைய உறவினர் எழுபது பேரையும் அயல் நாட்டிலுள்ள பிரின்ஸ் ஆவ் வேல்ஸ்[Prince of Wales' Island] என்னும் தீவுக்கு அனுப்பிவிட்டார். குடி கேடுகள் கொடிதாய் ஓங்கி நின்றன.

## பெரிய மருது முடிவு

சின்ன மருதைப் பிடித்த பின்பு இவருடைய அண்ணனை பெரிய மருது சேர்வையையும் அன்புறுத்திக் கும்பினியார் பிடித்துக் கொண்டார். காட்டு மிருகத்தைக் கலைத்து வேட்டையாடுவது போல் நாட்டில் அவரைத் துரத்திப் பிடித்தார்; எப்படியும் தப்பி ஓடிவிடுவான் என்று கருதி அவருடைய வலது தொடையில் துப்பாக்கியால் சுட்டு விட்டார். சிறந்த தீரன் ஆதலால் அந்தச் சூட்டையும் வாங்கிக் கொண்டு சிவகங்கைக்கு நடந்து வந்தார். சேனைபதியான கர்னல் ஆக்னியூவின் முன் அவர் பேசியுள்ள வார்த்தைகள் அவருடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் உணர்த்தியுள்ளன. நெஞ்சில் வஞ்சம் இல்லாமையால் யாதும் அஞ்சாமல் அடலாண்மையோடு பேசியிருக்கிறார். அன்று அவர் கூறியன கூர்ந்து அறிய வுரியன.

## பேசிய நிலை

“நான் கும்பினியாருக்கு யாதொரு இடையூறும் செய்யவில்லை. ஜமீன் தீர்வையை ஒழுங்காகச் செலுத்தி இருக்கின்றேன். எனக்கே சொந்தமான எனது ஜமீன் உரிமையைப் பறித்து வேறு ஒருவனுக்குக் கும்பினியார் கொடுக்க நேர்ந்திருப்பது பெரிய அநியாயம்; கொடிய பாவம். நானும் என் வாரீசும் தவிர வேறு யாருக்கும் சிவகங்கைஜமீனில் என்றும் யாதொரு பாத்தியமும் கிடையாது. என் தம்பி எனது மானேஜராய் நின்று ஜமீனை நடத்தி வந்தான்; அவன் பாஞ்சாலங்

குறிச்சியாருக்கு உதவி செய்திருப்பது எனக்குத் தெரியாது; அவன் மீதுள்ள கோபத்தால் என் ஜமீனைக் கவர்ந்து கொண்டு என்னையும் கொன்று தொலைக்க மூண்டிருப்பது கொடிய பாதகம்; எனது தொடையில் வெடியால் சுடுதற்கு நான் என்ன குற்றம் செய்தேன்? வெள்ளைக்காரர் நீதியோடு அரசாள்வார் என நீங்கள் வீணே பெருமை பேசி வருவது வெறும் பொய் என்பதற்கு இச் செயல் ஒன்றே மெய்யான சாட்சியாம். உள் நாட்டில் கலகங்களை மூட்டிவிட்டு ஒருவரோடு ஒருவர் பகைத்துப் போராடும்படி தூண்டி நீங்கள் பாராள மூண்டிருக்கும் பேராசையை உலகம் இப்பொழுது அறியாது போயினும் பின்பு எப்பொழுதாவது தெரிந்து வருந்தும். எனது ஜமீன் உரிமையை படமாத்தூர் உடையாத்தேவனை அடையும்படி செய்து அவனைத் தூண்டிவிட்டு என் தம்பியைப் பிடித்துக்கொன்றீர்கள். அந்தக் கொலையை நினைந்து என் குலை துடிக்கிறது. என்னையும் கொல்லக் கடுத்து நிற்கிறீர்களே! இந்தப் பாவம் உங்களை விடுமா? தெய்வம் கேளாமல் போமா? இவ்வளவு அவமானம் அடைந்த பின்பு இனி நான் உயிர் வைத்திருக்க முடியாது; சேத்தே போவேன்; நான் இறந்து போனபின் என் ஜமீனை எனது சந்ததிகளுக்கே உரிமை செய்ய வேண்டும்; வேறு யாருக்கும் உரிமை செய்யவில்லை என்று நீங்கள் எனக்குச் சத்தியம் செய்து தர வேண்டும். பெரிய சேனைத் தலைவராய் வந்துள்ள நீங்கள் சுத்த வீரர்களுக்கு உரிய முறைப்படி பட்டாக் கத்தியைப் போட்டு நேரே பலரும் காணத் தாண்டிக் கொடுக்க வேண்டும்" என்று இவ்வாறு பெரியமருது பெரிய சத்தமிட்டு உறுதியோடு ஊக்கிப் பேசினார். அந்த வார்த்தைகள் அவருடைய நெஞ்சக் கொதிப்புகளை நேரே காட்டி நெடிய துயரங்களை விளக்கி நின்றன.

வெள்ளை மருது இப்படி உள்ளம் கொதித்துத் தமிழில் பேசியதை அந்த வெள்ளைத்துரை கேட்டுக் கொண்டே இருந்தார். அவருக்குத் தமிழ் யாதும் தெரியாது; ஏதோ வயிற்றெரிச்சலோடு கூப்பாடு போடுகிறான் என்று நினைந்து அருகே நின்ற மொழி பெயர்ப்பாளரிடம் "அவன் என்ன சொன்னான்?" என்று கேட்டார். அந்தத் துவிபாஷி ஒன்றுக்குப் பாதி உளறிச் சொன்னான். துரை கேட்டார்; தலையை அசைத்தார். "சரி இவனுக்குத் தூக்குத் தண்டனை விதித்திருக்கிறது; சாகுமுன்

தனக்கு வேண்டியதைக் கேட்டுக் கொள்ளச் சொல்" என்று சொன்னார். அவ்வாறு அவர் சொல்லவே பெரியமருது தனது இறுதியான உறுதி மொழிகளைச் சொன்னார். மூல ஓலையில் உள்ளபடி அந்த மரண வாக்குமூலம் அடியிலே வகையா வருகிறது.

## பெரிய மருதின் மரண வாக்குமூலம்

"ஈஸ்டு இந்தியா கம்பெனி கவர்ண்மெண்டின் சேனாதிபதியான கர்னல் ஆக்கினியூ (Colonel Agnew) துரை அவர்கள் முன்பாக, சிவகங்கை ஜமீன்தார் வெள்ளைமருது சேர்வைகாரர் அவர்கள் சொன்ன மரண வாக்குமூலம்:

(1) என்னுடைய ஜமீன் வேலுநாச்சியாருக்குப் பாத்தியமாயிருந்தது; ஷை யாளை நான் கலியாணம் செய்துகொண்டு அவள் மூலமாக ஷை சிவகங்கை ஜமீனை உயில் சாஸனம் பெற்றிருக்கிறேன்.

(2) 1773 ல் உயில் சாஸனம் பெற்று மத்தூர் நவாப் அவர்களால் ஷை ஜமீனை ஜப்தி செய்து ஏலமாக்கிய பணத்தை நான் கட்டி ஏலத்தை நீக்கி அநுபவித்து வருகிறேன். என்னைத் தவிர வேறு யாரொருவருக்கும் இதில் பாத்தியம் இல்லை.

| | | |
|---|---|---|
| (3) | தேவஸ்தானம் | (க) |
| | பண்ணை | (உ) |
| | கோள்கிரயம் | (ந) |
| | சேறுதேட்டு | (ச) |
| | ஆயம் | (ரு) |
| | சுங்கம் | (சா) |
| | சாயவேல் | (எ) |
| | உப்பளம் | (அ) |
| | சத்திரங்கள் | (கூ) |
| | மடம் | (ம) |

இவைகள் எல்லாம் என்னால் கிரயத்துக்கு வாங்கப் பட்டன. நானே அநுபவித்து வருகிறேன். இந்தச் சொத்துக்கள் எல்லாம் யாருக்கும் எவ்விதமான பாத்தியமும் கிடையாது. நானும் என் வாரிசுகளுமே என்றும் உரிமையான பாத்தியமுடையவர்கள்.

(4) மேலே கண்ட சொத்துக்களை என் சுயார்ஜிதமாய்க் கஷ்டப்பட்டுச் சம்பாதித்திருக்கிறேன். என் வாரீசுகளுக்கே கொடுக்க வேண்டியது. நான் பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மு துரைக்கும் ஊமைத்துரைக்கும் உதவி செய்ய வில்லை; இடம் கொடுக்கவும் இல்லை.

(5) என்னால் கட்டப்பட்டிருக்கிற சத்திரங்களுக்கும் கோவில்களுக்கும் ஆலயங்களுக்கும் விடப்பட்டிருக்கிற தருமாஸனங்களும், மற்றவர்களுக்குக் கொடுத்திருக்கிற தஸ்தாவேசுகளில கண்ட சொத்துக்கள் யாவும் அவரவர்களே அனுபவிக்கும்படி செய்யவேண்டியது

(6) என் தம்பி சின்னமருது சேர்வைகாரருக்கும்,எனக்கும் தாய் ஒன்று; தகப்பன் இரண்டு. மேற்படியாருக்கு ஜெமீனில் யாதொரு பாத்தியமும் இல்லை; ஷை யானை மானேஜராக வைத்திருந்தேன்; அவன் பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மு ஊமைத்துரைகளுக்கு அடைக்கலம் கொடுத்துக் காத்ததாகச் சொல்லுகிறதைத் தவிர எனக்கு யாதொன்றும் தெரியாது.

(7) நான் கிஸ்தி பாக்கியை நிறுத்தாமல் செலுத்தி வந்திருக்கிறேன். என் தம்பி சின்னமருது சேருவைகாரனை மூன்று நாளைக்கு முன் தாங்கள் தூக்கிவிட்டதாலும், என்னைத் தூக்காமல் நிறுத்தி வைக்கக் கூடாது. நான் யாதொரு பாவமும் தெரியாதவனா யிருந்தும், கம்பெனியாருக்கு யாதொரு பொல்லாங்கும் செய்யாதவனா யிருந்தும் என்னை வலது தொடையில் துப்பாக்கியினால் சுட்டு விட்டதினால் என்னையும் தூக்கிவிட வேண்டியது அவசியமா யிருக்கிறது.

(8) அப்படிச் செய்யாத பட்சத்தில் தர்ம சாஸ்திரத்திற்கு ஏற்காது. நான் கழுத்தில் கயிறு போட்டுக் கொள்ளுகிறேன்; சிவபெருமானே! கேள்க்கவும். கம்பெனியாரவர்கள் என்னை அநியாயமாய்த் தூக்குகிறபடியால் என்னுடைய ஜமீன் பூராச் சொத்துக்களை வேறே யாருக்காவது கொடுத்தாலும் ஜமீனை ஆளுகிற எவர்களும் விருத்தியடையாமல் போவார்களாகவும்; சிவபெருமானே! நீ வரம் கொடுக்க வேண்டியது.

(9) என்னுடைய வாரிசுகளைத் கருவித்து என் ஜமீனைக் கொடுக்கவேண்டும்; என்னுடைய ஜமீன் சொத்துக்கள் யாவும்

என் சந்ததிகளுக்குக் கொடுத்துவிடுவதாகவும், நான் செய்திருக்கிற தரும நிலையங்களுக்கு நான் ஏற்படுத்தியிருக்கிற பிரகாரம் யாவும் ஒழுங்காக நடத்தி வருவதாகவும் நீங்கள் இப்பொழுது எனக்கு உறுதி மொழி தரவேண்டும். அதற்கு அத்தாட்சியாகக் கவர்மெண்டு கத்தியைப் போட்டுத் தாண்டித் தாங்கள் சத்தியம் செய்து தரவேண்டியது. இது சத்தியம்.

(10 என் வாரிசுகளின் விவரம்: எனக்கு முதலாவது பெண்சாதி பெயர் ராக்காத்தாள்; அவள்தான் பட்டஸ்திரி; அவளுக்கு ஒரு மகள் உண்டு. அவளுடைய பெயர் மருதாத்தாள்.

(11) நானும் என் மூத்த சமுசாரமும் சிறுவயலில் இருந்தோம்; அவள் பிரசவத்திற்காக அவளுடைய தகப்பனார் ஊராகிய அரசனேந்தல் அரண்மனையில் போயிருக்கிறாள் போய் மூன்று மாதகாலம் ஆகிறது.

(12) இரண்டாவது பெண்சாதி பெயர் கருப்பாயி ஆத்தாள். மேற்படியாளுக்குக் கருத்தையா என்று ஒருமகனும், கண்ணாத்தாள் என்று ஒரு பெண்ணும் உண்டு. இரண்டு பேருக்கும் சந்ததி இல்லை. அவள் மூத்தார் அரண்மனையில் இருக்கிறாள்.

(13) மூன்றாவது பெண்சாதி பெயர் பொன்னாத்தாள். அவளுக்குச் சந்ததி இல்லை.

(14) நாலாவது பெண்சாதிபெயர் ஆனந்திபாய். அவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு.

(15) ஐந்தாவது பெண்சாதி பெயர் மீனாக்ஷியாத்தாள். அவள் அன்னிய ஜாதி; அவளுக்கு ஒரு பெண்குழந்தை உண்டு; அவள் இப்பொழுது கவுண்டன் கோட்டை அரண்மனையில் இருக்கிறாள்.

(16) எனக்கு சிவகங்கை ஜமீனையும் சாசனம் செய்து கொடுத்த முதல் பெண்சாதி வேலுநாச்சியார் இறந்து ஒரு வருஷம் ஆகிறது. அவளுக்குச் சந்ததி இல்லை.

(17) என்னுடைய வாரிசுகளைக் கம்பெனியார்களாவது எனக்கு விரோதிகளாவது யாதொரு இம்சையும் செய்யாமல் இருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். முருகன் துணையாக

வும் ஆகாசவாணி பூமிதேவி சாட்சியாகவும் நான் என் கழுத்தில் கயிறு போட்டுக் கொள்ளுகிறேன்.

மேலே சொன்னபடி தாங்கள் கத்தியைப் போட்டுச் சத்தியம் செய்துகொடுத்ததை நான் நேரில் பார்த்துக்கொண்டேன்.''

(இப்படிக்கு ஒப்பம் பெரிய மருது சேர்வை)

இவ்வாறு மரண வாக்குமூலம் கொடுத்து முடிந்ததும் பெரிய மருது காளேசுவரா! என்றுகூக்குரலிட்டுத் தூக்கில் ஏறித் துடித்து மாண்டார். இக் கொலை (27–10–1801)ல் நடந்தது.

கரவு யாதும் அறியாமல் நேர்மையோடு வாழ்ந்துவந்துள்ள இவ் வீரனை அநியாயமாய்க் கொன்றிருப்பது கொடிய பரிதாபமாயுள்ளது. பல கொலைகள் கொடுமையாய் நிகழ்ந்துள்ளன.

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்குவார் எவரும் நெஞ்சம் வருந்துவர். நாட்டில் எவ்வளவு கேடுகள் நடந்திருக்கின்றன! எத்தனை இழவுகள் தொடர்ந்துள்ளன! யாவும் உய்த்துணரவேண்டும். சிவகங்கை பூமியைத் தலைமையான நிலைமையில் மருது சேர்வை ஆண்டு வந்தது கும்பினியாருக்குப் பெரிய பொறாமையாய் மூண்டு நின்றது.

நாடாளும் ஆசையால் ஆங்கிலேயர் உள்ளங்களைக் கேடுகள் ஆண்டிருக்கின்றன. இந் நாட்டு வீர மக்களை யாண்டும் தலையெடுக்க ஒட்டாமல் அவர் நிலையடக்கி யுள்ளதில் கொலைகளும் புலைகளும் கொடியசூழ்ச்சிகளும் பொங்கி எழுந்துள்ளன.

அதிகாரிகளாகவும் சேனைத் தலைவர்களாகவும் நண்டு வந்தவர் யாண்டும் சதிகளே புரிந்துள்ளனர். உள் நாட்டில் சில கோளர்களைக் கைவசம் செய்து கொண்டு வேலையோடு தம்முடைய பேராசையை அவர் நேரே நிறைவேற்றி யிருக்கின்றனர்.

யாரேனும் உறுதியோடு துணிந்து நின்றால் அவருக்கு உறுதி சூழ்ந்து அறுதி கண்டு விடுகின்றனர். கொடிய சூழ்ச்சிகளில் நெடிய வெற்றிகளை அடைந்து கொள்ளுகின்றமையால் பெரிய தந்திரசாலிகள் என வெள்ளையர் வெளியறிய நேர்ந்தனர்.

எவரையும் வேறுபடுத்திப் பிரிந்து வைத்துத் தம் காரியத்தைச் சாதித்துக் கொள்ளுவதில் வீரிய வினையாளராய் அவர் விளங்கி நிற்கின்றார். வெள்ளைமருதைக் கொன்றது வெய்ய புலை

ஆதலால் அந்தக் கொலையைச் செய்ததற்குப் பொய்யான காரணத்தை இனமாய்ப் புனைந்து வனைந்திருக்கின்றார்.

**"The Brother of Cattabomma instigated by the evil advice of Vella Murdoo and Chinna Murdoo of Sivagunga."**

"சிவகங்கை ஜமீன்தாராகிய வெள்ளை மருதும், சின்னமருதும் கட்டபொம்மு தம்பிக்குக் கெட்ட போதனைகளை யூட்டித் தூண்டி விட்டுள்ளார்" எனக் கும்பினி அதிபதிகளுக்கு நம்பிக்கையாகச் சேனைத் தலைவர் இவ்வாறு குறித்து விடுத்திருக்கின்றார். இக் குறிப்புகள் பிழைபாடுடையன. ஜில்லா அதிகாரியால் இப் பொல்லாத குற்றம் புனைந்து சொல்லப்பட்டது.

மருது சகோதரர்கள் உண்மையில் அவ்வாறு யாதும் செய்யவில்லை. அரசை இழந்து போன ஊமைத்துரையை ஆதரித்து நின்றதைத் தவிர வேறு யாதொரு அல்லலையும் கும்பினியாருக்கு அவர் செய்யாதிருந்தும் வம்பாகவே அவரை இவர் அழித்திருக்கின்றனர். வீரமும் மன வுறுதியும் நேர்மையும் தேசப் பற்றும் யாரிடமிருந்தாலும் அவரெல்லாரும் தமக்குக் கொடிய விரோதிகளாகவே கும்பினியார் கருதிக் குடிகேடுகள் செய்திருத்தலை அறிவாளிகள் எவரும் கூர்ந்து ஓர்ந்துகொள்வார்.

சேனைத் தலைவன் கத்தியை வைத்துப் பெரிய மருது முன்பு சத்தியம் செய்து கொடுத்தபடி பின்பு செய்யவில்லை. ஜமீனை அயலானுக்கே கும்பினியார் கொடுத்து விட்டனர். இந்த மரணசாசனத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு மருதுவின் உறவினர் ஜமீன் உரிமையை நாடிச் சர்க்காரிடம் பிற்பாடு பெரிய வழக்காடினர். நலன் யாதும் காணமல் அவரும் பலனிழந்து போனர்.

எல்லாம் கபட நாடகங்களாகவே காரியங்கள் நடந்திருக்கின்றன. வஞ்சச் சூழ்ச்சிகளைக் கும்பினியார் யாண்டும் நெஞ்சம் துணிந்து செய்திருக்கின்றனர். அவருடைய செயல் இயல்களும் தலைமைகளும் இந் நாட்டின் நிலைமைகளைத் துலக்கி நெடிய கொடுமைகளை நேரே விளக்கி நிற்கின்றன. சிறந்த வீரர்களைத் தலையடக்கி மக்களை மாக்களாக்கித் தேச ஆட்சியைத் தாம் அடைந்து கொள்ள அவர் மிடைந்து செய்துள்ள செயல்கள் தொலையாத தொல்லைகளாய்த் தொடர்ந்து படர்ந்து வந்தன.

# முப்பதாவது அதிகாரம்.

## இறுதி எய்தியது



அன்று இரவு அந்தக் காட்டிலிருந்து தம்பியோடு கரந்து வெளியேறிய ஊமைத்துரை வடதிசை நோக்கி விரைந்தார். திருமயம் என்னும் ஊரை அடைந்தார். அப்பொழுது அங்கே பொன்னுச்சாமித் தேவர் என்பவர் அவ்வூருக்குத் தலைவரா யிருந்தார். இவரைக் கண்டு இனம் தெரிந்ததும் அவர் மிகுந்த மரியாதையோடு உவந்து உபசரித்தார். ஆண்டிருந்த கோட்டையில் அமர்ந்திருக்கச் செய்து வேண்டிய ஆதரவுகளை விளைத்து வந்தார். அவரும் வீரத்திறலோடு தேசாபிமானமும் உடையராதலால் இந்த வீரக் குலமகளை ஆர்வம் மீதூர்ந்து பாராட்டி எவ்வழியும் உறுதித் துணையாய் உதவி நின்றார். சுதந்திர வீரராய் நின்று மான வுணர்ச்சியோடு பெரிய ஆங்கிலப் படைகளை எதிர்த்துப் போராடி அரசை இழந்து வந்துள்ள அதிபதி எனப் பலர்க்கும் இவரை அவர் அறிமுகம் செய்து வைத்தார். அவர்க்கும் கும்பினியார் மீது வெறுப்பு இருந்தது; ஆகவே இந் நம்பியைக் காணவே மிகுந்து உவப்புடன் உதவி புரிய நேர்ந்தார். யாண்டும் உள்ளத்துணிவோடு வாய்ச் சாலகமாய்ப் பேசும் இயல்பினராதலால் இவர் துணை கூடிய பின் வெள்ளையரைக் கூசாமல் வைது வரத் துணிந்தார். பண்டங்களை மாற்றி உயிர் பிழைக்க வேண்டுமென்று அந்நிய நாட்டிலிருந்து இங்கே வயிறு வளர்க்க வந்தவர் இப்பொழுது இந்தக் கண்டம் முழுவதையும் ஆளவேண்டுமென்று பேராசை மண்டி யாண்டும் பிழைகள் மிகச் செய்து வருகின்றார்; ஈண்டு வந்து முளைத்துள்ள அந்த வெள்ளைக் களைகளை வேரோடு களைந்து எறிந்தாலன்றி இந் நிலத்தில் நல்ல சீர்மைகள் உள்ள உயிர்ப் பயிர்கள் தழைத்து வளரா; வெள்ளைப் பூடுகள் ஈண்டுக் கொள்ளைப் பூடுகளாய்க் குடி புகுந்துள்ளன; அடியோடு அகழ்ந்து ஒழிக்காமல் நாம் மடி புகுந்திருந்தால் பின்பு நாம் அடிமைகளாய் இழிந்து படுவோம்; குடிகேடுகளே யாண்டும் விளைந்து எங்கும் இழிதுயர்கள் பொங்கிவிடும்" எனக் கூட்டங்களில் அவர் நாட்டின் நலங் குறித்து இன்னவாறு முழக்கமாய்ப் பேசி வருவது வழக்கமாயிருந்தது.

## உற்ற துணைவன் உறுதி புரிந்தது

தக்க செல்வமும் மிக்க செல்வாக்கும் உடையராயிருந்தமையால் ஊமைத்துரை தன் பக்கம் வந்து சேர்ந்தவுடன் அப் பக்கங்களில் சில படைகளை அவர் சேர்த்து வைத்தார். சிவகங்கை ஜமீனைக் கவர்ந்து கொண்டு பெரிய மருதையும், சின்ன மருதையும் தூக்கில் ஏற்றிக் கும்பினியார் கொடுமையாகக் கொன்றதை நினைந்து நினைந்து அவர் நெஞ்சம் கனன்றார். உள்ளே பிளவுகளை உளவாக்கி வெளியே நல்ல நீதிமான்களைப்போல் நடித்து இந் நாட்டின் வெள்ளையர்கள் படுகேடுகளை விளைத்து வருகின்றார் என நாளும் வெறுத்து வந்தவராதலால் இந்தக் கொலைகளைக் கேட்டதும் அவர் குலை துடித்து நொந்தார். எங்கேயோ தங்கி இருந்தவர் இங்கே வந்து இந் நாட்டின் வீரத் தலைவர்களைக் கோரக் கொலை புரிகிறார் என்று கொதித்து நின்றார்.

திருமயத் தேவர் கும்பினியார் மீது மாறுபாடு மண்டி இவ்வாறு சீறி நின்றமையால் இவ் வீர மகனுக்குப் போதரவு புரிந்து வந்தார். இவரைப் பக்க பலமாக வைத்துக் கொண்டே வெள்ளையர் ஆட்சியை இந் நாட்டில் வேரூன்றாமல் செய்துவிடலாமென்று அவர் உறுதி பூண்டு எவ்வழியும் கறுவு கொண்டு நின்றார். வெளிப்படையாய் எதிர்த்துப் பொருது வருதற்குரிய கருவிகள் சரியானபடி இல்லாமையால் எல்லாம் கரவாகவே கருதிக் காலம் நோக்கியிருந்தார். கருமச் சூழ்ச்சிகள் மருமங்களாகவே மருவி யிருந்தன. போராட்டங்கள் மாறாட்டங்களாய் மீறிவந்தன. மாற்றாரும் சீற்றம் மீதூர்ந்து செயிர்த்து நின்றார்.

## தெவ்வர் திரிந்தது

காளையார் கோவில் காட்டிலிருந்து தப்பித் தம்பியுடன் ஊமைத்துரை திருமயம் புகுந்து இங்ஙனம் ஒருவரும் அறியாவகை உறைந்திருந்தார். சீமைத்துரைகள் எங்கும் சீறி நாடி ஆராச் சினத்தோடு அடங் கொண்டு நின்றனர். அன்று காட்டில் மருது சேர்வையுடன் பிடிபடவில்லை; ஊமையன் மருமமாய் வெளியேறிப் போய் விட்டான் என்னும் உண்மையை உணரவே அவர் உள்ளம் கடுத்து உருத்து யாண்டும் கருத்தோடு உசாவித் தேடினார். "ஊமையனைப் பிடித்துத் தருபவர்களுக்குத் தக்க பரிசுகள் தரப்படும்" என்று எங்கும் உறுதி மொழிகள்

[illegible] யாவரும் அறிய ஆணைகள் போக்கினர். எவ்வழியும் ஊக்கினர். இந்த ஆக்கத்தை நோக்கி எட்டப்பநாயக்கரே யாண்டும் முயன்று முனைந்து நீண்டு வேலை செய்தார். நாலா பக்கங்களிலும் ஆள்களை அனுப்பி அல்லும் பகலும் இவரைக் கொல்லும் குறிப்போடு கூர்ந்து முயன்றார். அவருடைய முயற்சியையும் கும்பினியார் கொதித்து நிற்கும் நிலையையும் தெரிந்து நாட்டு மக்கள் பலர் உள்ளம் வருந்தினர். கோட்டையை அடியோடு அழித்து ஜமீன் முழுவதையும் கவர்ந்துகொண்ட பின்பும் தப்பிப் பிழைத்துள்ள ஊமைத்துரையைக் கொல்ல மூண்டு திரிவது எல்லாருக்கும் பொல்லாத வெறுப்பா யிருந்தது. யாரையும் எதிர்த்து ஒன்றும் சொல்லமுடியாமையால் உள்ளே கொதித்து நின்றனர். ஆட்சியாளர் யாண்டும் நீண்டு அச்சுறுத்தி வந்தனர்.

## நாகையன் வந்தது

நாகையன் என்னும் இவன் அருங்குளம் என்னும் ஊரினன். பாஞ்சைப் போரில் படைவீரனாய்ச் சேர்ந்திருந்தான். கோட்டை அழிந்து பட்டபொழுது உயிர்தப்பி ஒதுங்கினவன். இப்பொழுது ஊமைத்துரையைத் தேடிப் பிடிக்கக் கும்பினியார் நாடித்திரிவதை அறிந்ததும் இவன் இரவே ஓடிவந்தான். மருது சேர்வைகளை விட்டுப் பிரிந்து திருமயம் போயிருப்பதை இவன் ஒருவகையாய் அறிந்திருந்தான் ஆதலால் ஒன்னலர் நிலையை முன்னுற உணர்த்த விரைந்தான். இரண்டு நாள் மறைந்து நடந்து மூன்றாம் நாள் இரவு நடு நிசியில் வந்து கண்டான். ஊமைத்துரையிடம் உற்றதை உரைத்தான். சீமைத்துரைகள் சீறி அலையும் நிலையையும் எட்டப்பநாயக்கர் இயல்பையும் அறியவே இவர் யாதும் கவலாமல் அமைதியாகவே அவனிடம் உரைகள் ஆடினர். தன்னைக் கொன்று தொலைக்கக் கொலை நோக்கமாய் வைரிகள் கன்றிக் கடுத்துத் திரிகின்றார் என்றதைக் கேட்டதும் யாதொரு வாட்டமும் அடையாமல் இவர் பேசிய வார்த்தைகள் அரிய வீரப்பாடுகளாய்ப் பெருகி ஆற்றல் மீதூர்ந்து வந்தன.

எனைத்தலை எடுக்குமுன் எதிர்ந்து நின்றுளார்
வினைத்தலை பலபல வாங்கி என்றுமே
நினைத்தலை சுலாய இந் நிலத்தினில்
பினைத்தலை இலாதஓர் புகழை எய்துவேன். (1)

*சாகநேர் துணிந்துள என்னைச் சார்ந்தெவர்*
*வாகைமேற் கொள்ளுவர்? வந்து நேர்ந்தவர்*
*ஆகம்நாய் கழுகுகள் ஆர ஆற்றிஎன்*
*வேகவாள் நிலையினை விளக்கிக் காட்டுவேன்.* [2]

*பழிபடு பாதகப் புகையைப் பாஞ்சையுள்*
*இழிபடு தீயராய் இரவில் உய்த்தனர்;*
*அழிபடு கொலைகளை அமரில் அன்றியே*
*வழியிடை விளைத்தனர் வன்கணாளர்கள்.* (3

*பாசறை இருப்பினில் படையை எம்மவர்*
*நாசமே செய்திட நாடி நின்றனர்;*
*மோசமென் றவரைநான் முதல்விலக்கினேன்*
*நீசவெங் கொடுமையை நேர்ந்து நொந்தனன்.* (4)

*பாடிவீட் டிருந்துள பகையைப் பாடழித்து*
*ஓடிமீ ளாவகை ஒழித்தி ருப்பனேல்*
*வாடியென் பதியினை இழந்து வந்திவண்*
*பீடழிந் திருப்பனோ பேசி யாவதென்?* (5)

*எவ்வகை ஆயினும் எதிர்ந்த தெவ்வரை*
*வெவ்வலி தேய்ந்திட வென்று வீறுடன்*
*அவ்வுல கடைவனே யன்றி யாதுமே*
*இவ்வுல காசையை எண்ணி நின்றிலேன்.* (6)

(வீரபாண்டியம்)

ஊமைத்துரையின் உள்ளக் கொதிப்பையும், உறுதிநிலைகளையும் இவ் வுரைகள் உணர்த்தியுள்ளன. உரிமையோடு வந்து உரைத்தவனை உள்ளம் தேற்றி இவர் பொறுமையோடு இருந்தார்.

நேர்ந்துள்ள துயரங்களை எல்லாம் நினைந்து நெஞ்சம் வருந்தினலும் அஞ்சாமையும் ஆண்மையும் இவரிடம் எஞ்சாமல் குடிகொண்டிருந்தன. வீரத்திறலாளர் எவரும் வியந்து புகழ்ந்து வர இவர் வீறு மண்டி நின்றது வெற்றி விசயமாய் விளங்கி வந்தது. உடலுயிர் நீங்கநேரினும் வீரர் அடலாண்மை குன்றார் என்னும் அதிசய முதுமொழி இவர்பால் துதிகொண்டு துலங்கியது. நன்றியறிவும் வென்றி வீரமும் என்றும் ஒன்றி நின்றன.

தன்னை இனிது ஆதரித்து வந்த அருமைத் துணைவனை மருதுபாண்டியன் மாண்டான் என்று அறிந்ததும் இவர் உருகி

மறுகினார். உள்ளக் கொதிப்புகள் எல்லாம் வெள்ளையர்கள் மீதே விரிந்து பரந்தன. மேலும் போராடி வேரறுக்கவே வீறு கொண்டு நின்றார். அரண் இழந்த நிலை அவலமாய் நின்றது.

## திருமயம் கோட்டை

நிலையாய் நிலைத்து நின்று அவரோடு நேரே போராடுதற்குத் தகுதியான இடவசதியும் படைத்துணையும் இல்லையே! என்ற கவலை இவருடைய உள்ளத்தை வாட்டி வந்தது. உற்ற துணைவராய் வாய்த்துள்ள தேவரிடமும் தன் ஆவலை உரைத்தார். ஆவன செய்வதாக அவரும் ஆராய்ந்து வந்தார். திருமயத்தில் சிறந்த அரண்கள் அமைந்திருந்தன. அவற்றுள் அமர்ந்திருந்து கொண்டு அமர்கள் செய்யலாம் என உறுதி பூண்டார். தமக்குக் கொடிய அல்லல்களை விளைத்து அவமானங்களை இழைத்துள்ள வெள்ளையரை எப்படியாவது இந் நாட்டை விட்டு வெளியேற்றி விட வேண்டும் என்று இருவரும் கோட்டி கொண்டு திரிந்தனர். உள்ளத் துணிவுகள் எல்லை மீறி நின்றமையால் யாண்டும் ஊக்கி நின்று தங்கள் நோக்கம் போல் எதிராளிகளுக்கு அச்சம் விளையக் கொச்சையான இகழ்ச்சிகளையும் இடையூறுகளையும் விளைத்தனர்.

அத்தேவரும் இவரும் குமாரமங்கலம் என்னும் ஊரிலிருந்து கொண்டு ஒரு நாள் ஒரு வேலை செய்தார். சிவந்த இளநீர்கள் சில கருவித்தார். பொதிகள் கட்டினார்; சில வெள்ளையர்களுடைய தலைகளைக் கொய்து பாடம் செய்து இளநீர்கள் போலவே பொதிந்து அவற்றுள் வைத்தார். ஒவ்வொரு பொதியிலும் தனித் தனியே ஒரு ஓலைச் சீட்டு வைக்கப் பட்டது. சீமைத் துரைகளுக்கு ஊமைத்துரை அனுப்பிய திறைப் பணம் எனத் தமிழ் மொழியில் தெளிவாக எழுதி யிருந்த அந்தச் சீட்டுகளை மூட்டைகளுள் முதன்மையாக வைத்து மூட்டு வாய்களை முத்திரையிட்டு எருதுகள் மேல் ஏற்றினார். அந்த மாடுகளை நடத்திப் போவதற்கு ஒன்பது காவலாளிகளைத் தேர்ந்து எடுத்தனர். திருச்சிராப்பள்ளியில் உள்ள கும்பினித் தலைவருடைய பங்களாவில் கொண்டு போய் அப்பொதிகளை இறக்கி விட்டு விரைந்து மீண்டு வரும்படி விடை கொடுத்தனுப்பினார். பொதி மாடுகள் நடந்தன; காவலரும் தொடர்ந்து போயினர். ஊரை அடைந்

தனர். குறித்த படியே கும்பினி அதிபதி வீட்டில் அப் பொதிகளை இறக்கி வைத்து விட்டு எருதுகளை அயலே ஓட்டி அவர் வெளியே விரைந்து மறைந்து போனார். மாலை 4 மணிக்கு வெள்ளைத்துரை வந்தார்; பொதிகளைப் பார்த்தார்; இளநீர்கள் என்று தெரிந்தார். யாரோ நண்பர் அனுப்பியுள்ளார் என்று உள்ளம் உவந்து அவ் வெள்ளையர் விழைந்து திறந்தார். இடையே சில தலைகள் இருந்ததைக் கண்டார்; திகில் கொண்டு திகைத்தார். ஓலைச் சீட்டுகளை நோக்கினார்; எடுத்தார். தமிழ் தெரிந்த ஒருவரிடம் கொடுத்து விவரங்களைக் கேட்டார். அவர் உள்ளதை உரைத்தார். "பாஞ்சாலங்குறிச்சி ஊமையன் இப்படிச் செய்திருக்கிறான்!" என்று அவ் வெள்ளைத்துரை உள்ளம் கொதித்தார்; பல்லைக் கடித்தார். உடனே பாளையங்கோட்டைக்கும், படைத்தலைவருக்கும், கலெக்டருக்கும் கடிதங்கள் எழுதினார். கிருபங்கள் வந்தன; எல்லாரும் நெடுந் திகைப்பாய் நெஞ்சம் கலங்கினார். ஊமையனை எப்படியாவது பிடித்துத் தலையை அறுத்து விட வேண்டும் என்று கொலை நோக்கோடு குறிக் கொண்டு திரிந்தார். கோப தாபங்கள் கொதித்து மூண்டன. துப்பர்களை உய்த்தனர்; நாடெங்கும் தேடினர். ஓடி அலைந்து உசாவி ஓர்ந்தனர். திருமயத்தில் இருப்பதாகத் தெரிய வந்தது. தெரியவே பெரிய உவகைகள் பிறந்தன. அரிய வினைகளை ஆற்றமூண்டனர்.

## படைகள் வளைந்தது

இராமநாதபுரத்திலும் சிவகங்கையிலும் வைத்திருந்த கும்பினிப்படைகள் ஒருங்கே திரண்டன; ஊக்கி எழுந்தன. சேனைத் தலைவர்கள் மானத் துடிப்போடும் மனக் கொதிப் போடும் கடுத்து வத்தனர். ஊமையனுடைய உயிரைக் குடித்துத் தலையை அறுத்துவர வேண்டும் என்றே யாவரும் இம்முறை ஆங்காரத்துடன் ஆர்த்து வந்தார். இருநாள் தங்கி மறுநாள் இரவு கரவாக வந்து திருமயம் கோட்டையை வளைந்து கொண்டனர். இரவு ஒரு மணிக்கு அம்முற்றுகை நேர்ந்தது. அவ்வமையம் இவர் அருகே யாரும் துணையிலர். நம்பியும் தம்பியும் தனியிருக்க நேர்ந்தனர். நடு நிசியில் படுமோசம் வந்தது. ஒருவருக்கும் தெரியாமல் ஊரைச் சூழ்ந்து நின்று கொண்டு உள்ளே புகுந்து வெள்ளையர் எல்லாரும் வேகமாய் வேலை செய்தனர். சீமைத்தலைவர்கள் ஊமைத்துரையின் உயிரை எடுக்க மூண்டு உருத்து

மீண்டு கடுத்து விரைந்தார். கரவு நிலையில் கடுமையும் கொடுமையும் விரவி நின்றன. வீர தீரங்கள் வேகமாய் விரிந்தன.

## ஊமைச்சிங்கம் உருத்தது

கும்பினிச் சேனைகள் வந்து வளைந்து நிற்பதை ஊமைத்துரை தெரிந்து கொண்டார். யாதொரு கவலையும் கொள்ளவில்லை. அப்பொழுது இவரது தேக நிலை சரியாயில்லை; இரண்டு தினங்களுக்கு முன் சுரம் கண்டிருந்தமையால் உடல் தளர்வுற்றிருந்தது. இருந்தாலும் உள்ளம் தளரவில்லை; எதிரிகள் வந்து சூழ்ந்துள்ளதைக் கண்டதும் ஓர் வீராவேசமே இவரிடம் வீறுகொண்டு நின்றது. விடிந்தபின்பே படைகள் போராட மூண்டு நின்றுள்ளமையால் இவர் முன்னதாகவே வெளியேறி விடவேண்டும் என்று துணிந்தார். கச்சையை வரிந்து கட்டினார். வச்சிரமுட்டி என்னும் கவசத்தை இடது கையில் பிடித்தார். சுருட்டு வாளைக் கையில் எடுத்தார். அந்த ஒரு வாள் இவருக்கு ஆயிரம் ஆள் பலமாயிருந்தது. இளைய துரைச்சிங்கத்தை அருகழைத்தார். "தம்பி! என் பின்பு வந்துவிடு; தாமதித்து நில்லாதே; வாள் வீச்சு மேலே படாதபடி எனது இடது விலாப் பக்கமே விரைந்து வருக" என வெளியேற்றத்தின் நெளிவுகளை உரைத்தார். அவரும் யாதும் அஞ்சாமலே நெஞ்சம் துணிந்து நின்றார். சமுதாடு என்னும் ஒருவகை ஆயுதம் அவர் கையில் இருந்தது. இரவு மூன்று மணிக்கு இருவரும் ஒருமுகமாய் வெளியேற மூண்டார். வடக்கு வாசல் வழியே வெளியே பாய்ந்தார். கண்ணயர்ந்து நின்ற கும்பினிப் படைகள் கடுத்து விரைந்து கொதித்து வளைந்தார். இவர் சுருட்டுவாள் கொண்டு சுற்றி வீசினார். அடுத்து மூண்டவர் தலைகள் தரையில் உருண்டன. கொலைகள் பல விளைந்து நிலைகள் குலையவே இவர் அயலே பாய்ந்து விரைந்து போனார். தம்பி கால் தடுமாறி அயர்ந்தார். அவரை அனைவரும் மேல்விழுந்து பிடித்துக்கொண்டார். கையில் அகப்பட்ட அவர் யாதும் செய்யமுடியாமல் திகைத்து நின்றார். வெய்ய விதி வேதனையாய் மூண்டு சோதனையா நின்றது.

அவருடைய நிலை அங்கே பரிதாபமாயிருந்தது.

இடங் கொடுத்து இவரை ஆதரித்து வந்த அந்தத் தேவரும் அல்லலடைந்துபட்டார். அவலத் துயரங்கள் அடர்ந்து நின்றன.

விடிந்ததும் கோட்டையைச் சோதனை யிட்டார். யாதொரு ஆயுதமும் காணவில்லை. இரவு நேர்ந்தசண்டையில் இறந்துபட்ட பிணங்களை அயலே எடுத்துப் புதைத்து விட்டு விரைந்து புறப்படத் துணிந்தார். ஊமையன் தப்பிப் போய் விட்டானே! என்று வெள்ளையர் எல்லாரும் உள்ளம் கனன்றனர். தம்பி பிடிபட்டதை எண்ணி மகிழ்ந்தார். கைதியாச் சிறை பிடித்தபடியே மிக்க எச்சரிக்கையுடன் இவரை நடத்திக்கொண்டு போனார். கமுதிக் கோட்டையை அடைந்தார். அங்கே சிறையில் வைக்கப்பட்டிருந்த பாஞ்சையர்களோடு இவரையும் அடைத்துவைத்தார். இவரைக் கண்டதும் அவர் எல்லாரும் அழுதனர். அவர்களுக்கு இவர் ஆறுதல் கூறினார். அப்பொழுது கூறித் தேற்றிய மொழிகள் இவரது சீரிய மனத் திட்பத்தை வெளிப்படுத்தின. "நாம் அரசை இழந்தபோதே ஆருயிரையும் இழந்தோம்; இறந்து போவதையே நாம் துணிந்து நிற்கிறோம்; எப்படியும் இறக்க வேண்டும்; மானம் கெட்டு ஈனமாய் இத்தென்னாட்டில் இருப்பதை விட மரியாதையோடு அப் பொன்னாட்டுக்குப் போய் விடுவது நல்லது; முன்னமே போயுள்ள நம் அண்ணு நம்மைக் கண்டால் பெரு மகிழ்ச்சி யடைவார்; அவரை உவந்து காண நாம் விரைந்து போக வேண்டும்; என்பால் அன்பால் நீங்கள் கண்ணீர்சிந்தி அழுகிறீர்களே அன்றிச் சாவதற்குப் பயந்து அல்ல என்பதை நான் நன்கு அறிவேன்; எது வர வேண்டுமோ அது வரட்டும் என்று உறுதியோடு துணிந்திருப்பதே பாஞ்சை மரபினர் இயல்பு; அத் தன்மை யாண்டும் குன்றுமல் நம்மை அடைந்திருக்க வேண்டும்." என இங்ஙனம் அறிவுரைகள் கூறி அவரை ஆற்றி யருளினார். இவரது உறுதிமொழிகள் அவர்களுக்கு உணர்வு நலங்களை ஊட்டி நின்றன. இறுதி எய்தியது என்று தெரிந்தும் இவ் வீர மகன் உறுதி கூர்ந்து தீரமா வீறுகொண்டிருந்தது வெற்றி நிலையமாய் விளங்கி நின்றது.

## துரைச் சிங்கத்தை தூக்கியது

கமுதிச் சிறையில் இருநாள் இருந்தார். அதன் பின் அங்கிருந்தவர் எல்லாரையும் பாஞ்சாலங்குறிச்சிக்குக் கொண்டு வந்தார். முன்னம் கோட்டையை இடிப்பதற்காக மேல் புறம் போட்டிருந்த பீரங்கி மேட்டிலே தூக்கு மரத்தை நட்டினார்.

துரைச்சிங்கத்தைக் கொல்லப் போகிறார் என்று கேட்டவுடனே நாட்டில் உள்ள சனங்கள் எல்லாரும் உள்ளம் துடித்தார்; உயிர் பதைத்தார். கும்பினி அதிகாரங்களை அஞ்சி ஒன்றும் செய்ய முடியாதவராய் நெஞ்சம் கலங்கி நெடுந்துயரங்களோடு நின்றார்.

சீரும் சிறப்புமாய் வாழ்ந்து வந்த தன் ஊரின் எதிரே நிறுத்தி இக் கோமகனைக் கும்பினியார் கொடுமையாக் கொல்ல மூண்டது படு பாதகமாய் நீண்டு நின்றது. நாட்டு மக்கள் யாவரும் கோட்டையை நோக்கிக் கோவென்று அலறினர். அக் கூட்டத்தை வேட்டுகளை எழுப்பி வெருண்டோடச் செய்தனர். பட்டாளங்களைக் கட்டாகக் காவல் வைத்தனர். கும்பினியாரை எதிர்த்தவர் குடியோடு அழிந்துபடுவர் என இந் நாட்டவர் தெளிந்து தமக்கு அஞ்சி ஒடுங்கி அடங்கி நடக்க வேண்டும் என்ற ஆசையினாலேயே இந்த நீச வேலையை அவர் நெஞ்சம் துணிந்து செய்தனர். நாசச் சூழ்ச்சிகளை நாட்டில் நாட்டினர்.

வீரத் துரைச்சிங்கத்தை வெள்ளைத் துரைகள் கோரக் கொலை புரியக் கொடுஞ் சூழ்ச்சி செய்து அடு படைகளோடு சூர்த்து நின்றாலும் இக் குலமகன் யாதும் கலங்காமல் அதிசய கம்பீரமாய்த் தலை நிமிர்ந்தே நின்றான். இவரது நிலைமையை நேரே பலமுறையும் நோக்கி நேரலரும் நெஞ்சம் வியந்தார்.

வேட்டையில் அகப்பட்ட வேங்கைப் புலிக் குட்டியை வேடர்கள் சூழ்ந்து வியந்து பார்ப்பதுபோல் வெள்ளையர்கள் அன்று இவ் வீர மகனைப் பார்த்து நின்றனர். சிலர் உள்ளம் இரங்கி உரிமை கூர்ந்தனர். சேனைத் தலைவன் மாத்திரம் யாதும் இரங்காமல் ஏதும் கலங்காமல் அடங்கொண்டு நின்றான்.

பிடிபட்ட தம்பி தனைப் பேணலர்கை பேணிப்போய்
முடிபட்ட பாஞ்சைநகர் முன்கொண்டு நிறுத்தினர்;
கடிபட்ட புலிக்குருளை கானவர்கோன் கண்முன்னே
அடிபட்டு நின்றதென அப்பதிமுன் இவனின்றான். (1)

கொல்லவந்த எமன்போலக் கொதித்தடர்ந்து கோபமாய்ப்
பொல்லாத நோக்கொடவன் பொங்கிநின்ற போதுமிந்தச்
செல்லமகன் உள்ளத்தே சிறிதேனும் கலங்காமல்
மெல்லவரு நகையோடு வீறுகொண்டே மீறிநின்றான். (2)

யாரும் அஞ்சி அயர்கின்ற அல்லல் நிலையிலும் யாதும் தளராமல் இவ் வீர மகன் விறலோடு நின்ற நிலை இவனது இயல்பான குல வீர நிலையை உலகம் அறிய உணர்த்தி நின்றது.

கொடிய கொலை புரிய முடிவு செய்து வந்த பகைவர் தம் எண்ணத்தை முனைந்து முடிக்க மூண்டார். பொல்லாத விதி மூண்டு நின்றமையால் எல்லாருடைய மதிகளும் மாண்டு போயின. நாட்டு மக்கள் யாவரும் பரிதபித்து அழ அந்தப் பகைக் கூட்டம் படு நாட்டமாய் விரைந்து பாதக வேலை செய்தது.

நவம்பர் மாதம் முப்பதாம் தேதி (30–11–1801) மாலையில் தூக்கில் இட உறுதி செய்து எல்லாரையும் ஒருங்கே கொண்டு வந்து குறித்த இடத்தில் மருங்கே நிறுத்தினர். முதலில் துரைச் சிங்கமே தூக்கு மேடையில் துணிந்து ஏறி நின்றார். "என்னை நீங்கள் யாரும் தொடக் கூடாது: நானே என் கழுத்தில் கயிற்றை மாட்டிக் கொள்வேன்" என்று கும்பினித் தளபதிகளை நோக்கிக் கூறினர். சாவதைக் குறித்து யாதும் கவலாமல் வீர கம்பீரமாய் நின்று இவர் கூறிய மொழிகள் அங்கு நின்ற யாவருக்கும் ஆச்சரியத்தை விளைத்தன. இவருடைய வேண்டுகோளின்படியே அவர் ஒதுங்கி நின்றனர். இவர் மூண்டு விரைந்தார். இடிந்துபட்டுள்ள பாஞ்சைக் கோட்டையை ஒரு முறை பார்த்தார். அதன் பின் தென் கீழ்த் திசையை நோக்கி முருகா! என்று உருகி மொழிந்து உடனே தூக்கில் தலையை மாட்டினர்; துடித்துச் செத்தார். அதன் பின் அடுத்து நின்ற இருபத்து நாலு பேரையும் தூக்கில் இட்டுக் கொன்றார். அனைவரையும் அயலே புதைத்து ஆவதை அமைத்தார். இந்தக் கொலையெடுப்புகளைக் கும்பினியின் பெரிய தலையெடுப்புகளாக அவர் கருதிப் போனர்.

இளைய தம்பியாகிய இந்தத் துரைச்சிங்கத்தையே ஊமைத் துரை (Dumb brother) என்று சேனைத்தலைவர் சிலர் மாறுகக்குறித்திருக்கின்றனர். பேர்மாறுட்டமும், இனந் தெரியாமையும் அவரை மனந்தடுமாறச் செய்திருக்கின்றன. அந்தத் தடுமாற்றத்தால் அவருடைய குறிப்புகளில் (Records) சில பிழைகள் நேர்ந்துள்ளன. அயல் நாட்டினர் ஆதலால் இந்நாட்டின் இயல் முறைகளையும் மரபு நிலைகளையும் பெயர் ஒலிகளையும் சரியாக அறியாமல் அவர் மயலாய் மயங்கி மாறு மொழிகியிருக்கின்றனர்.

பால் பாண்டியன் என்னும் பேரை ஆங்கில மொழியில் அவர் "Polla Pandian" என இவ்வாறு குறித்து வைத்திருக்கின்றார். அதனை மொழி பெயர்ப்பவர் போல்லாப் பாண்டியன் என எழுதி விடுகின்றனர். பாலுக்கும் பொல்லாமைக்கும் எவ்வளவு வேற்றுமை? இன்னவாறு பல பிழைபாடுகள் கட்ட பொம்மு சரித்திரங்களில் நுழைந்திருக்கின்றன. அவற்றைக் களைந்து வரலாற்று முறைகளை நெறிமுறையே ஒழுங்கு செய்ய வேண்டும்.

பாஞ்சாலங்குறிச்சியின் இந்த வீர சரித்திரம் இந் நாட்டுக்கு உயிர் நிலையமானது. வீரம், மானம், தேச சுதந்திரம், ஆட்சி முறை முதலிய மாட்சிகளைக் காட்சியாகக் காட்டி நிற்பது. இது இத் தென்னாட்டில் விளைந்தது ஆயினும் எந் நாட்டுக்கும் இசைகளை யூட்டித் திசை காட்டியா யுள்ளது. இதைப் புனித நிலையில் போற்றி வருவது மனித சமுதாயத்துக்கு மிகுந்த நன்மையாம்.

அரிய பல சாசனங்களைக்கொண்டு நெடிது ஆராயப்பெற்று பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம் முதல்பாகம் முன்னர் இந்நிலையத்திலிருந்து வெளிவந்துள்ளது. பாஞ்சாலங்குறிச்சி என்னும்பேரை யாரும்வெளியே கூறலாகாதென்று குடிபினியார்குறிக்கொண்டு நின்றார். அரசாங்கக் கணக்குகளிலிருந்து அவ்வூரின் பேரை அடியோடு எடுத்து விடவேண்டும் என்று ஆங்கில ஆட்சியில் விதிக்கப்பட்டிருந்தமையால் அந்தப் பேரால் நூல் வெளியே வந்ததும் எனக்கு அரசாங்கத்தாரால் ஆபத்து வருமோ என்று பலர் எதிர் பார்த்திருந்தனர். உரிமையான சிலரும் என்பால் பரிவுகொண்டு கூறினர். எது வரினும் நல்லதே என்று அவரிடம் பதில்சொல்லி நான் அமைதியா யிருந்தேன். அந்த நூலைப் பல அதிகாரிகள் பிழை காணும் கண்ணோடு ஆர்வப் படித்தனர். படித்தவர் எல்லாரும் உள்ளம் உருகி என்பால் அன்பாய் உரிமை கூர்ந்தனரே யன்றி யாரும் யாதொரு மாறுபாடும் கூறவே யில்லை அந் நூலைப் புகழ்ந்து வந்த கடிதங்கள் பல. பல நூல்களையும் நன்றாகக் கற்றுத்தெளிந்த பெரியவர் ஒருவர் நேரில் கண்டபொழுது என்னை ஆரத் தழுவிக் கொண்டு "உங்கள் வீர சரித்திரத்தைப் படித்தேன்; உள்ளம் கரைந்து பதினாறுமுறை கண்ணீர் விட்டு அழுதேன்" என்று அன்று அவர் வாய் விட்டுச் சொன்னது இன்றும் என் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கின்றது. வேறு

நூல்கள் யாதும் எழுதாது போயினும் இந்த ஒரு நூலே உங்கள் பேரை நிலைநிறுத்த வல்லது என்று ஒருவர் கூறி நின்றார். வசன நடையை வியந்தும், வரலாற்று முறைகளை உவந்தும், யாவரும் மகிழ்ந்திருக்கின்றனர். இன்னவாறு எவரும் புகழ்ந்து போற்றும்படி அந்நூல் முருகன் அருளால் வெளிவந்துள்ளது. அருப்பாடு பட்டு ஆராய்ந்து வெளியிட்ட அந் நூலிலிருந்து பல குறிப்புகளையும், சில பாடல்களையும் களவாகக் கவர்ந்து தம் புத்தகங்களுள் சிலர் பொத்தி வைத்துள்ளனர். கைப் பொருளைக் கள்ளமாகக் கவர்வதைக் காட்டிலும் அறிவுச் செல்வத்தைத் திருடுவது பெரிய பிழை. நேர்மையாய் உழைத்து வருவதே எவ்வழியும் யாருக்கும் நலமாம். பிறருடையதைக் களவாகக் கவர்ந்து கொள்வது கடும் பழி ஆதலால் அது நெடுந்துயராகின்றது "Imitation is suicide" "அயலை அபகரித்து மயலாய் நூல் எழுதுவது தற்கொலையாம்" என அமெரிக்க அறிஞரான எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார். கலைச் சோரம் கொலைச்சோரம் ஆகிறது.

மலைச்சாரல் வனம்முதலாத் தனிவழியே
　　வருவாரை வழி மறித்துப்
புலைச்சோரர் பொருள்கவர்வார் பொல்லாதார்
　　எனப்புகல்வார்; புலக்கண் இன்றிக்
கலைச்சோரம் புகுந்துசிலர் களவாகப்
　　பிறர் நூலுட் பல கவர்ந்து
நிலைச்சோரம் புரிகின்றார் நெடுஞ்சோரர்
　　இவர்க்குநேர் நிலத்தில் யாரே?"

என்றதனால் கலைச்சோரம் எவ்வளவு இழிவு என்பது தெளிவாம்.

சோரம் புரியாமல் நேர்மையோடு வாழ்வதே யாருக்கும் சீர்மையாம். அந்தச் சீரிய வாழ்வைச் செவ்வையாகப் பெறத் தெய்வம் எல்லாருக்கும் யாண்டும் நல்ல அறிவைத்தரவேண்டும்.

தென்னாட்டு மன்னனை வீரபாண்டியக் கட்டபொம்முவுக்கு இராசதானியாய் இருந்தமையாலும், அந்தக் கோட்டையின் அரண் வலியே அவருக்குப் பேராற்றல் அளித்து வந்தமையாலும் பாஞ்சாலங்குறிச்சி என்னும் ஊரின் பேரால் நூல் வெளிவரலாயது. வாழ்ந்து வந்த ஊர் உரிமை ஆழ்ந்த வழிபாடாயது

## பாஞ்சாலன்

பாஞ்சால தேசத்து மன்னனான துருபதன் பாரத வீரர்களுடைய சம்பந்தி. பாஞ்சாலன் எனத் தேசத்தின் பேராலும் பேர் பெற்று நின்றான். அவனுடைய மகளான துரோபதையைப் பாஞ்சாலி என்பர். விதேக தேசத்து வேந்தன் மகளான சீதை வைதேகி என வந்தது போல் துரோபதையும் பாஞ்சாலி என வந்தாள். அவளுடைய பதிகளான பாண்டவர் மரபில் வந்தமையால் இத் தென்னாட்டு மன்னர் பாண்டியர் என வந்தார். பாண்டுவின் வழியில் வந்தவர் என ஈண்டிய காரணம் இசைந்து நின்றது. அவர் ஆண்டமையால் பாண்டி நாடு என இத் தேசமும் பேசப் பெற்றது. அந்தச் சந்திரகுல மன்னரிடமிருந்து அரசுரிமையைப் பெற்றமையாலும், தம்முடைய முன்னோருள் பாஞ்சாலன் என ஒரு தலைவன் தலை சிறந்து இருந்தமையாலும் தாம் புதிதாய் அமைத்த ஊருக்குப் பாஞ்சாலன்குறிச்சி எனப் பழமையின் கிழமை தழுவி வாஞ்சையோடு இவர் பெயர் வைத்தனர். அது பின்பு பாஞ்சாலங்குறிச்சி என வழங்கப்பட்டது. இந்த மரபினருள் தலைமையான பெண் குழந்தைக்குப் பாஞ்சாலி என்று பெயரிடுவது இன்றும் வழக்கமாயுள்ளது. பரம்பரை வழக்கம் வழி முறையே உரம் பெற்றுத் தொடர்ந்து நடந்து வருகிறது.

இத்தகைய பழமையான உரிமையோடு பெருமை பெற்றுள்ளமையால் பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் என அவ்வூரின் பேரை மருவி இவ்வீரர் வரலாறு சீருடன் பாரறிய வந்துள்ளது.

நாட்டு மக்களுக்குக் கட்டபொம்மு மேல் உள்ள வாஞ்சையால் அவர் பெயரால் நாடகங்களும் சரித்திரங்களும் வெளியிட விழைகின்றனர். அவ் விழைவில் பிழைகள் பெருகி வருகின்றன. சிறந்த சீவிய சரித்திரங்கள் திருந்திய முறையில் உண்மையாய் வெளி வர வேண்டும். பாஞ்சாலங்குறிச்சி வீரர்களுடைய வரலாறு இத் தேசத்தின் சிறந்த வீரச் செல்வம் ஆதலால் அது சீர்மை சிதையாமல் நீர்மை குன்றாமல் நேர்மையோடு என்றும் நின்று நிலவ வேண்டும். மான வீரங்களில் தலை சிறந்து நின்று அயல் நாட்டாரோடு ஆனவரையும் போராடி அரசுரிமையை இழந்து போனாலும் இம் மன்னர் சரிதம் என்றும் தலைமையான நிலைமையில் வீர சோதியாய்ப் பாரெங்கும் பேரொளி வீசியுள்ளது.

தம்பி துரைச்சிங்கம் தான் கும்பினியார் கையில் அகப்பட்டு மாண்டார். ஊமைத்துரை எவரிடமும் பிடிபடவே இல்லை. இவரும் எதிரிகளிடம் சிக்கி இறந்தார் என்பது பெருந்தவறு.

இவர் மறைந்திருந்து வந்த திருமயம் கோட்டையும் திண்டுக்கல் மலையும் இவரது சரிதச் சான்றுகளை இன்றும் தெளிவாய்க் காட்டிக் கொண்டிருக்கின்றன. கழுதியில் இவர் தங்கியிருந்த நிலையத்தை ஊமையன் கோட்டை என இன்றும் உரிமையோடு உரைத்துப் பெருமையாகப் பேசி வருகின்றனர்.

இந்த அருமைச் சரித்திரத்தைத் தங்கள் தனியுரிமைச் சொத்தாக இந் நாட்டு மக்கள் யாண்டும் நன்கு பேணி வருகின்றனர். பல பண்பாடுகளை இச் சரிதம் நன்போடு காட்டி வருகின்றது.

## இந்தியரின் கடமை

இமயம் முதல் குமரி வரையும் யாதொரு எதிர்ப்பும் இல்லாமல் இந்தியா முழுவதையும் கவர்ந்து களித்து வந்த ஆங்கிலேயரை இத் தென்னாட்டு வீரனை பாஞ்சாலங்குறிச்சி மன்னன் நேரே எதிர்த்து நின்று, "அந்நிய நாட்டாரை இங்கே அதிகார நிலையில் கால் நாட்ட விடேன்; மேல் நாட்டார் மேல் நாட்டமாக ஈண்டு நுழைவது மால் நாட்டமே; வெள்ளையரே வெளியே போய் விடுங்கள்" என்று மூண்டு பொருது மாண்டு போன அரசின் மகிமைச் சரித்திரம் இது; இந்த வீர சரிதத்தை இந்தியர் எவ்வளவு சொந்த உரிமையோடு பேணி வரவேண்டும்! என்பது சிந்தனை செய்து வந்த வழியும் நன்கு தெளியத் தக்கது.

இந்நாட்டை முன்னாளில் ஆண்டுவந்த
மன்னவர்கள் இகல்மீக் கொண்டு
தந்நாட்டம் தெரியாமல் தவறுபல
புரிந்ததனால் தளர்ந்து நொந்து
மூந்நாட்டு வேந்தர்களும் முடியிழந்து
முடிவானார் முடிவில் நாடு
எந்நாட்டோ இருந்துவந்த அயலவர்தம்
கைவசமா யிசைந்த தம்மா. (1)

பண்டங்கள் எதிர்மாற்றிப் பாடுபட்டுப்
பிழைக்கவே பரிந்து நாடிக்

கண்டங்கள் பலகடந்து காதலுடன்
வந்தவர்கள் காலப் போக்கில்
தண்டங்கள் இடுகின்ற தனி அரசர்
ஆகவே தழைக்க நேர்ந்தார்
(ெ)தண்டங்கள் இட்டுமே தேசமக்கள்
அடிமைகளாய்த் தேர்ந்தார் அம்மா. (2)

வேற்றுமொழி உள்ளேற வெள்ளையர்கள்
மேலேற வீரம் குன்றி
மாற்றுமொழி ஒன்றேனும் வாய்திறந்து
கூறாமல் மானம் கெட்டுப்
போற்றுமொழி யாளராய் எவ்வழியும்
புலைபேசிப் புன்மை மண்டி
ஏற்றுசுமை சுமந்துமே எங்கணுமே
வெங்கயமை ஏற நேர்ந்தார். (3)

பாஞ்சாலங் குறிச்சிமன்னன் ஒருவனே
பணியாமல் பகைத் தெதிர்ந்து
செஞ்சாலி விளைகின்ற திருவுடைய
இந்நாட்டில் தேச ஆட்சி
நாஞ்சாக நேர்ந்தாலும் அயலாரை
அரசிங்கே நாட்ட ஒட்டேன்
போஞ்சாக நேராதீர்! என்றெதிரே
முரசறைந்து பொருதான் அன்றே. (4)

அத்தகைய குலவீரன் இந்நாட்டு
மானத்தை ஆண்மை ஆக
எத்தகைய நிலைகளிலும் எதிர்விளக்கி
முதிர்போரை என்றுசெய்தான்
ஒத்தகுய நலங்கருதி உள்நாட்டில்
சிலகயவர் உளவு கூறி
வைத்தசதி புரியவே வந்தகுழு
வென்றரசாய் வளர்ந்த தம்மா! (5)

புண்ணியத்தின் விளைநிலமாய்ப் போதத்தின்
புகலிடமாய்ப் புனித மான
கண்ணியத்தின் உறைவிடமாய்க் கலைஞான
நிலையமாய்க் கனிந்து எந்நாடும்

எண்ணிஎதிர் தொழுநின்ற இந்தியநாடு
அயலாட்சி இயல்பால் நைந்து
திண்ணியநல் ஒளியிழந்து தேசழிந்து
நின்றுளதே தெளிவதென்றோ! (6)

[இந்தியத்தாய் நிலை]

என்று இன்னவாறு கண்ணீர் மல்கி எண்ணி யுணர வுரிய கண்ணிய சரித்திரமாய் இந் நூல் நண்ணியுள்ளது. பாஞ்சைவீரர் அந்நிய நாட்டாரை அடலாண்மையோடு எதிர்த்து நின்று நெடுங்காலமாய்க் கடும் போர் புரிந்து முடிவில் அரசு முதலிய உரிமைகள் யாவும் இழந்து பரிதாபமாய் அழிந்து போயுள்ளனர். அந்த அழிவில் முன்னவனான மன்னவன் மாண்டு இரண்டு ஆண்டுகள் ஆயின. பின்னவர் இருவருள் இளைய தம்பி இங்கு அழியநேர்ந்தான். வீர இளவல் அழிவு வெய்யபரிவாய் நின்றது.

துரைச்சிங்கம் இறக்கும் பொழுது இவருக்கு வயது இருபத்தொன்று. இருபது முடிந்து இருபத்தோராவது வயதில் நான்கு மாதங்கள் நடந்திருக்கின்றன. 17 வது வயதில் இவருக்குக் கலியாணம் ஆயது. ஒரு பெண்குழந்தை மாத்திரம் பிறந்திருந்தது. ஞானமுத்தம்மாள் என்னும் இவருடைய மனைவி பாஞ்சைக் கோட்டை கும்பினியார் கையில் பிடிபட்டபொழுது அங்கேயே அந்தப் புரத்தில் இறந்து போனாள். இவரது பிறப்பும் இருப்பும் சிறப்பும் அறப் போருக்கே உரிமையாய் நின்றன.

பிறந்தது **12–7–1781.** இறந்தது **30–11–1801.**

இந்த இருபத்தொரு வயதில் பாளையங்கோட்டைச் சிறையிலும், பாஞ்சைப் போரிலும் துரைச்சிங்கம் அடைந்துள்ள அல்லல்கள் அளவிடலரியன. நல்ல தீரர். யாண்டும் அஞ்சா நெஞ்சர். முன்னவர் இருவரிடமும் மன்னிய அன்புடன் மரியாதையாய் ஒழுகி வந்தார். ஊமைத்துரை போல் இவரும் சிறிது கொன்னிப் பேசுவார். வயதில் இளையவராயிருந்தும் வீர பராக்கிரமங்களில் இவர் தலை சிறந்து விளங்கி நின்றது பெரிய அதிசயமாயுள்ளது. எவரும் வியந்து புகழ இவருடைய அருந்திறலாண்மைகள் உயர்ந்திருக்கின்றன. கரணம் யாவும் கலங்கும் மரண வேளையிலும் இவர் மனம் கலங்காமல் இருந்துள்ளார். வீரர்களுடைய மனநிலை யாரையும் பிரமிக்கச் செய்கிறது.

தூக்கில் ஏறி இவர் இறக்கும் பொழுது யாதொரு கவலையுமின்றி அதி கம்பீரமாய் நின்றதை நினைந்து ஆங்கிலேயரும் அதிசயித்து வியந்தனர். அரிய துதிமொழிகள் விளைந்திருக்கின்றன.

## தளபதியின் வாய் மொழி

இவர் மாண்ட நிலைமையைக் குறித்து ஜெனரல் வெல்ஷ் (General Welsh) துரை மறுகி எழுதியுள்ளார். அக் குறிப்பு ஒன்று ஈண்டு அவசியம் அறிய உரியது. அயலே வருகிறது.

**"He was at last doomed to grace a gallows, in reward for the most disinterested and purest partriotism."** **(G. W.)**

"சிறிதும் தன்னலம் கருதாத பரிசுத்தமான தேசாபிமானத்தின் பெரிய வெகுமதியான அரிய மகிமையோடு தூக்கு மரத்தில் அவர் மாண்டு பட்டார்." என இப்படி ஒரு வெள்ளைத் துரை எழுதியிருத்தலால் இவரது உள்ளத்திறலையும் உண்மை நிலைகளையும் நாம் ஓர்ந்து உணர்ந்து உருகி நிற்கிறோம். இந்த ஆங்கில வாசகத்தில் அமைந்துள்ள உண்மையான உயிர் உணர்ச்சிகளை ஊன்றி நோக்கி ஓர்ந்து சிந்திக்க வேண்டும். பகைவர் வாயிலிருந்து வந்துள்ள தகவுரை அரிய பெரிய மகிமையுடையது.

நாட்டின் மானத்தைக் காப்பாற்றிச் சுதந்திரத்தை நிலை நிறுத்தவே தமது பெரிய அரசையும் அரிய உயிர்களையும் பாஞ்சை மன்னர் இழந்திருக்கிறார் என்பதை இந்தச் சீவிய சரித்திரத்தில் இடங்கள் தோறும் தெளிவாக நாம் உணர்ந்து வருகிறோம்.

பிறந்த நாட்டின் பெருமைக்காகவே இந்த அரசு இறந்து போயிருத்தலால் இந் நாட்டு மக்கள் இன்றும் உரிமையோடு இதனைப் புகழ்ந்து போற்றி வருகின்றனர். பாஞ்சை என்றால் யாவரும் வாஞ்சைபுரிவது வழக்கமாயுள்ளது. இவ்வூர் திருநெல்வேலி எல்லையில் இருந்தாலும் எல்லா ஜில்லா வாசிகளிடமும் இந்த அன்புரிமை அதிசயநிலையில் ஓங்கி ஒளி புரிந்து நிற்கின்றது.

## ஊமைத்துரை நிலை

திருமயத்திலிருந்து அன்று தப்பிப் போன ஊமைத்துரை சிறுமலையில் போய்ச் சேர்ந்தார் பின்பு திண்டுக்கல் வந்தார். அங்கே மலை மேலுள்ள குகைகளில் மறைந்திருந்தார் அதன் பின் சுருளிமலைக்குப் போயினார் அப்பொழுது இவருடைய

நிலை பலவகையிலும் அவலமாய் நின்றது. பிரிந்து பட்ட தம்பியை நினைந்து பெருந்துயரமடைந்தார். இளையவனுக்கு என்ன நேர்ந்ததோ? என்று உளம் மிக உளைந்தார். அங்கேயே மூண்டு பொருது தம்பியை மீண்டு வரும்படி செய்யாமலும் அல்லது மாண்டு போகாமலும் ஈண்டு வந்திருப்பது இழிவே என்று எண்ணி வருந்தினர். அழிதுயரங்கள் அவலங்களாய் எழுந்தன. கவலைகள் விளைந்தன. அவல நிலைகளில் அலமந்து உழந்தார்.

## சின்னபொம்மு வந்தது

இவர் மலையில் மறைந்திருக்கும் உளவு நிலை தெரிந்து சின்ன பொம்மு என்பவர் அங்கே வந்தார். இவரைக் கண்டார். நிலைமையை நோக்கி நெஞ்சுருகி அழுதார்; தலைமை அரசு போயதே! என்று தவித்து மறுகினர். அவரைத் தேற்றி விருத்தி யாவும் விசாரித்தார். நிகழ்ந்ததை அவர் நெகிழ்ந்து உரைத்தார். தம்பி இறந்துபட்டான் என்று கேட்டதும் இவர் ஆ! என்று அலறி உள்ளம் அடித்து உயிர் பதைத்து அழுதார். யாதும் அஞ்சாத நெஞ்சரான இவர் தம்பியை நினைந்து தவித்து அழுதது சொல்ல முடியாத சோகமாய் எல்லை மீறி நின்றது. சகோதர வாஞ்சை கொடிய துயரமாய் உயிரைச் சூறையாடியது. துயரைத் தாங்க மாட்டாமல் துடித்துப் புலம்பினர். சோகங்கள் வேகமாநீண்டன.

## உருகி அழுதது

தம்பி மாண்டனன் எனுமொழி செவியினில் விழுமுன்
வெம்பு கண்ணநீர் விரிநிலம் விழுந்தது; விழுந்து
தும்பி பட்டதோர் துடிப்பெனத் துடித்தவன் பதைத்தான்;
நம்பி பட்டதை நாவினல் நவில்திங் கெவனே? [1]

துடித்து நின்றவன் துணிந்துபோய்ப் பகைவரை இன்னே
முடித்தும் என்றெழும்; முடிவினில் முடிந்ததை முன்னும்;
மடித்து வாயிதழ் கடித்திடும்; மருவிய பழியை
அடுத்தடுத் தகத் தழலெழக் கருதினின் றயரும். (2)

தெண்டி ரைப்பெருங் கடலெனத் தெவ்வர்கள் திரண்டு
மண்டி நின்றமர் புரியினும் மறலிவந் துயிரை
உண்டு போவலென் றுருப்பினும் உளங் கலங்காத
திண்டிறற் பெருஞ் சேவகன் ஆவலித் தழுதான். (3)

ஐயனே! என தரும்பெறற் றுணைவனும் அமைந்த
மெய்யனே உனை வெம்பகை யிடங்கொடுத் தந்தோ
வெய்ய னேன்வெளி வந்தது வினையினுல் அன்ருே?
உய்ய வோஇனி உயிருடன் அழுவதிங் குரவோய்! (4)

உற்ற உன்வயது இருபத்தொன் ருகுமுன் உலகை
முற்று நீத்துயிர் முடிந்தனை முடிவிலா தெதிர்ந்த
பற்ற லார்படைக் கடலினை வடவையின் உண்ட
வெற்றி வீரநான் விளிகிலா திருப்பதென் வினையே. (5)

ஆண்டு முப்பது வயதெனும் பருவத்தை அடைந்தேன்;
மூண்ட போர்தொறும் முனைமுகம் புகுந்தடல் புரிந்தும்
மாண்டு போகிலேன்; மாண்டுநீ போனதை அறிந்தும்
ஈண்டு நிற்கின்றேன் இருநிலம் ஆளவோ ஐயா! [6]

(வீர பாண்டியம்)

தம்பி மாண்டு போனன் என்பதைக் கேட்டதும் ஊமைத் துரை இங்ஙனம் உள்ளம் துடித்து உயிர் பதைத்துச் சோகித்து அழுதிருக்கலால் அவர் மேல் இவர் கொண்டுள்ள அன்புரிமை களும் ஆர்வ நிலைகளும் அறியலாகும். எவ்வழியும் கலங்காத நெஞ்சம் இங்கே கலங்கிக் கரைந்திருக்கிறது. உடனிருந்து உடன் உண்டு உடன் உலாவி இளமை தொடங்கி அருகே யிருந்து வந்தவர் ஆகலால் அவரது குண நீர்மைகள் உள்ளத்தை உருக்கியுள்ளன. அவருடைய அருந்திறலாண்மைகளை நினைந்து நினைந்து நெஞ்சம் நெக்குருகினர். ஆற்ருமை மீதூர்ந்து மீண் டும்நீண்ட துயரோடு நிலைகுலைந்து அவலமாய்ப்புலம்ப நேர்ந்தார்.

திக்கெலாம் உறவென்ற திறல்விசயன்
திருமைந்தர் எனத் திகழ்ந்து
மிக்கசீ ருடன்மூவர் மேவிநின்றேம்
மேதக்க முன்னேன் அன்னே
தக்கதுணை மந்திரியொன் றில்லாத
தாழ்வினுல் தாழ்ந்து பட்டான்;
ஒக்கவுனை இன்றிழந்தேன்; ஒருவன் நான்
நின்றிழிந்திங் குழல்கின் றேனே! (1)

அண்ணு! என்று எனை அழைக்கும் ஆர்வச்சொல்
இனிஎங்கே ஆர்ந்து கேட்பேன்?

நண்ணுரெல் லாம்நடுங்க நண்ணுசமர்
பூமியிடை நண்ணி யறி
விண்ணேரும் வியந்திடநீ விளையாடும்
விறலினிவே றெங்கே காண்பேன்?
கண்ணன தம்பியுனைக் கையகன்றும்
மெய்யமர்ந்து கலுழ்கின் றேனே. (2)

வரைச்சிங்கம் மதமேறி வன்கோபத்
துடன்மண்டி வந்த போதும்
நிரைச்சிங்கே மாண்டதென நேர்மூண்டு
பொருதழித்து நிருபர் எல்லாம்
தரைச்சிங்கம் இதுவெனவே தாளரிகொண்
டாளரிபோல் தழைத்திருந்த
துரைச்சிங்கமே! உன்னைத் தொடர்ந்து நான்
வருகின்றேன் துணைவ னன்றே. (3)

நின்றநிலை பிரியாமல் நிலையாகத்
திருநகரில் நிலைத்து நின்றால்
துன்றிவரு பகைவரெலாம் துகள் படவே
தொலைத்தழித்துத் தொலையா தென்றும்
வென்றியுடன் விளங்கிநிற்பேன் விதிமூண்ட
வெம்புகையால் வெளியே வந்து
கன்றுதுய ருடையனுய்க் கழிகின்றேன்
நீயும்ளனைக் கழித்தா யந்தோ! (4)

வாள்வலிபோய் வேல்வலிபோய் வண்பரியா
திகள் வலிபோய் மருவி நின்ற
ஆள்வலிபோய்க் கேள்வலிபோய் அடுபகைவர்
கொடுவிரகால் அல்லற்பட்டு
மாள்வலியாய் நின்றாலும் மன்னியவுன்
துணைநினைந்தே மகிழ்ந்திருந்தேன்
தோள்வலியாய் நின்றஎன்றன் துணையேஇன்
றுனையிழந்தேன் தொலைந்தே னெல்லாம். (5)

வில்லெடுத்து நீ நின்றால் விறல்விசயன்
இவன்என்பார்; வேல்கைக் கொண்டு

மல்லெடுத்து வந்தனையேல் மாமுருக
னே என்பார்; வாள் கை ஏந்தி
வல்லெடுத்த களம்புகுந்தால் வாளபிம
னே என்பார்; வாளா அந்தோ
கல்லெடுத்த மனப் பகைவர் கையகப்பட்
டழிந்தனையே கருமம் என்னே! (6)

பெற்ற துணை யாவுமே பிரிந்திழந்து
வந்த எனைப் பின்தொடர்ந் தின்
சுற்றத்துணை யாவென்றும் ஒருவாமல்
உறுதி செய்துள் ளுதவி நின்ற
கொற்றமுறு குலக் கொழுந்தே! கோமகனே!
மாமதனே! கொடியேன் உன்னை
இற்றிழந்தேன்; இனியிந்த உலகமெலாம்
எய்தினுமென் இழவே அந்தோ? (7)

(வீர பாண்டியம்)

உழுவலன் புடைய தம்பியை நினைந்து இன்னவாறு பன்னிப் புலம்பிப் பரிதபித்து நின்றவர் இறுதியில் தன்னுடைய உயிரை மாய்த்துக் கொள்ளத் துணிந்தார். அடுத்து நின்ற சின்னபொம்மு தடுத்து நிறுத்தி ஆற்றியருளினார். அன்று சிறிது ஆறி யிருந்தார். மறுநாள் இரவு பெரிதும் மறுகினார். நேர்ந்துள்ள நிலைமைகளை நினைந்து நெஞ்சம் குலைந்தார். நெடிது கவன்றார். கொடிய துயரம் அவருடைய உள்ளத்தை உருக்கி உயிரை வாட்டினமையால் அல்லல்களை ஆற்ற மாட்டாமல் மேலும் மேலும் அவலமாய்க் கலுழ்ந்து அலமந்து புலம்பினார்.

நாடிழந்து நகரிழந்து நலமிழந்து குலமிழந்து
பீடிழந்து கிளையிழந்து பேரிழந்து பெருவீரப்
பாடிழந்து பதமிழந்து பற்றிநின்ற துணையிழந்து
மாடிழந்து படுகின்றேன் கதியிழந்து கழிகின்றேன். (1

மண்டிவந்த போர்கள்தொறும் மாற்றலர்மண் ணாகிவிழத்
திண்டிறல்கொண் டடலேறிச் சிங்கமெனத் திசைகளெங்கும்
கொண்டிருந்த கீர்த்தியந்தோ குலைந்திந்த நிலைமையில்
பண்டியா யுறைந்திருக்க ஊழ்வினையொன் றிருந்துளதே. (2

கரியூர்ந்து பரியூர்ந்து காவலர்கள் புடைசூழ
அரியேறென் றிருந்தநான் அரசிழந்து பழியூர்ந்து
நரியாதி யிடைசூழ நண்ணியிங்கே நைந்துள்ளேன்
எரியேறு தீவினையின் இயல்பிருந்த வாறென்னே! (3

என்னேயிவ் வுலகநிலை எனமிகவும் வெறுத்திகழ்ந்து
நன்னேய முடனங்கே நண்ணினவன் தனைநோக்கித்
துன்னுகொலைப் பழிதீரத் தொல்காசிப் பதியடைந்து
மன்னுகங்கை யாடிவர மனந்துணிந்தேன் ஆதலினால்; (4

உன்னுடைய ஊர்க்குநீ யுடனெழுந்து போய்வாழ்க;
என்னுடைய நிலையொன்றும் யார்க்குமே இயம்பற்க;
மன்னுடைய மரபுடையேன் மாதவம்போய்ச் செய்கின்றேன்;
மின்னுடைய வேலனருள் மேவுமென விடைகொடுத்தான்
[வீரபாண்டியம்]

ஊமைத்துரையினுடைய துயர நிலைகளையும் உள்ளக் கொதிப்புகளையும் உரைகள் தோறும் கண்டு உளம் வருந்துகிறோம். தம்பி இறந்தபின்பு எல்லாம் துன்பங்களாய்த் தொடர்ந்து தோன்றின.

காசியை நினைந்தது

உயிரை வெறுத்து நின்ற இவர் உலகத்தை வெறுத்துத் தென்திசை நோக்காமல் வடதிசை நோக்கிக் காசிப் பதிக்குப் போக வேண்டும் என்று கருதித் துணிந்தார். தமது துணிவை உரிமையாளரிடம் உரைத்தார்; அவரும் உடன் வருவதாக மறுகி அழுதார். அழுத அவரை ஆதரித்து ஆற்றி அறிவுரைகள் கூறினார். "இனி என்னோடு யாரேனும் தொடரின் அது பெரிய இன்னலாம்; தனியேதான் நான் போகவேண்டும்; எனக்கு ஆறுமுகத்தெய்வம் துணையுண்டு; வேறொரு துணை வேண்டியதேயில்லை; எனது நிலைமையை யாரிடமும் சொல்லவேண்டாம்; நீங்கள் போயருளுங்கள்" என இவ்வாறு உரிமையோடு தேற்றி அவரைப் போக்கிவிட்டு இவர் காசியை நோக்கி நடந்து போயினார். பல தலங்களிலும் அமர்ந்து உலக நிலைகளை ஓர்ந்து உணர்ந்து முடிவில் காசி நகரை அடைந்தார். ஈசனுடைய இனிய நிலையமாய்த் தேசுமிகுந்திருந்த அந்தத் திவ்விய பதியைக் கண்டதும் உள்ளக் கவலையெல்லாம் ஒழிந்து இவர் உவகை மீக்கூர்ந்தார். பரமனை நினைந்து உரிமையுடன் உருகித்தொழுதார்.

## இமயம் சார்ந்தது

புண்ணியத்தலம் என உலகம் எண்ணிப் போற்றும் காசிப் பதியில் நாளும் கங்கை நீராடி விசுவநாதனைத் தரிசித்து வந்தார். சில நாள் அங்குத் தங்கி இருந்தார்; பின்பு இமயமலையை அடைந்தார். அங்கே தவயோகிகளைக் கண்டார். உவகைமீக் கொண்டார். அவருடைய ஞான போதனைகளைக் கேட்டார். உலக நிலையை மறந்தார். துறவு நெறியை மருவினார்.

அப்பொழுது இவருக்கு வயது முப்பது.

பிறந்தது **10–6–1772.** மறைந்தது **16–12–1801**

இவருக்கு ஒரு புதல்வன் முன்பு பிறந்திருந்தான். கோட்டை அழிந்தபோது தப்பி நின்றான். பின்பு சிறந்த அழகனை அந்தப் பையனும் வஞ்சனையால் மாண்டு மடிந்தான்.

அதிசய வீரனை இவரது சரிதம் இவ்வாறு முடிந்தது.

திருமயம், திண்டுக்கல் முதலிய இடங்கள் ஊமையன் கோட்டை என இவர் பெயரால் வழங்கப்பட்டு வருகின்றன. அங்கே இவர் மறைந்திருந்த குகைகளை சனங்கள் இன்றும் உவந்து பார்த்து வியந்து நோக்கி நயந்து போற்றி வருகின்றனர்.

## சிவத்தையா பிடிபட்டது

ஊமைத்துரை சுருளிமலையில் இருப்பதாக நினைந்து உறவினர் மூவர் மறைவாகக் காண வந்தார். அவருள் சிவத்தையா ஒருவர். இவர்தான் முதல் சண்டையிலிருந்து இறுதி வரையும் உடனிருந்து உதவி புரிந்து வந்தவர். யாண்டும் யாருக்கும் அகப்படாமல் தப்பி நின்ற இவரைப் பிடிக்கவேண்டும் என்று குறிக் கொண்டு திரிந்த கும்பினியார் இங்கே துப்பறிந்து வந்து வழியிடையே பிடித்துக் கொண்டார். ஸ்ரீவில்லிபுத்தூர் அருகே இவர் பிடிபட்ட பொழுது அவர் பெருமகிழ்ச்சி யடைந்தார். மிகுந்த பாதுகாப்புடன் விரைந்து பாளையங்கோட்டைக்குக் கொண்டுபோய் இவரைச் சிறையில் அடைத்து வைத்திருந்தார்.

## சின்ன வீரலக்கன்

பாஞ்சாலங்குறிச்சிப் போரில் மூண்டு பொருது மாண்டு

போனவர் போக உயிர் தப்பி மீண்டு போய் மறைந்துள்ள குறிகாரர்களை யெல்லாம் பிடித்து விட வேண்டும் என்று துப்பர்களை உடன் வைத்துக்கொண்டு கும்பினியார் எங்கும் தேடிப் பிடித்து வந்தார். அவ்வாறு வருங்கால் ஒரு நாள் மாலையில் ஓசனூற்று என்னும் ஊர் அருகே துருப்புகள் வந்தன. அப்பொழுது அங்கே நின்ற சின்னவீரலக்கன் என்பவன் அப் படைகளைக் கண்டதும் அயலே ஒரு புளிய மரத்தில் ஏறி மறைந்தான். அங்ஙனம் ஒளிந்ததை அறிந்து அவர் விரைந்து வந்து அந்த மரத்தை வளைந்தார். "கீழே இறங்கு" என்றார். அவன் இறங்கவில்லை. ஆகவே அப் படைக்குத் தலைவனாய் வந்த வெள்ளைக்காரன் அவனைக் கடுத்துச் சுட்டான். சுடவே அவன் நேரே துள்ளிப் பாய்ந்து அவ் வெள்ளையனுடைய கழுத்தைக் கடித்துக் கொண்டு அடித்து வீழ்ந்தான். ஊட்டியில் பூட்டிய அக்கடியை உயிர் போகும் வரையும் அவன் விடவே இல்லை. இருவரும் ஒருங்கே செத்தார். வெள்ளையன் உதிரத்தை வீரலக்கன் பருகி மாண்டது பெரிய அதிசயமாய் மூண்டு அரிய வீரமா நீண்டது.

அந்த வீர வெறியைப் பார்த்து நின்றவர் எல்லாரும் நெஞ்சம் கலங்கி நெடிது மருண்டு கடிது வெருண்டு ஓடினர். இந்தத் தகவல் பின்பு கும்பினி அதிபதிகளுக்குத் தெரிய வந்தது. பெரிதும் வியந்தார். "யாரையும் வீணே பிடிக்க வேண்டாம்; பாஞ்சை மரபினரோடு யாதும் வாதாட வேண்டாம்" என்ற உத்தரவுகள் மேலிடத்திலிருந்து வந்தன. அதன் பின்பு குழப்பங்கள் அடங்கி நின்றன. கும்பினியின் கொடுமைகளும் ஒடுங்கின.

## நாடு கடத்தியது

இடையே சிறை பிடித்துப் பாளையங்கோட்டையில் கொண்டுபோய் வைத்திருந்த சிவத்தையா, அரசமுத்து, ஆதிராமு, சூரசங்கு, தளவாய்பிள்ளை முதலிய நாற்பத்தெட்டுப்பேர்களை நாடு கடத்தி விட்டனர். வெளி நாட்டிலிருந்து இங்கே பிழைக்க வந்தவர் உள் நாட்டிலுள்ள வீரர்களை அல்லலுறுத்தி அயலே ஓட்டியிருப்பது காலவேற்றுமையைக் காட்டி ஞால நிலைமையை விளக்கி நிற்கிறது. பொருள் வரவு ஒன்றையே கருதி வியாபார நோக்கோடு வந்தவர் அரியவீர மானங்களை இத் தேசத்திலிருந்து பெரிதும் வாரிப்போயுள்ளனர். பீடைகள் மீறியுள்ளன,

## எட்டப்பனுக்கு உதவியது

கும்பினியாருக்கு உடனிருந்து எவ்வழியும் உதவி புரிந்து வந்த எட்டப்பநாயக்கருக்குச் சிறந்த வெகுமதிகளை முன்னரே அவர் செய்திருந்தனர். மேலும் செய்ய நேர்ந்தனர். கும்பினிக்கு நம்பகமாயிருந்து அவர் உழைத்துவந்துள்ளதைக் குறித்துச் சேனைத் தலைவர்களும், லஷிங்டன் துரையும் பலவாறு அவரைப் புகழ்ந்து எழுதி யிருந்தனர் ஆதலால் அதிபதிகள் உடனே அவர்க்கு உதவி செய்ய விரைந்தார். பாஞ்சாலங்குறிச்சி அரசுக்கு உரிமையாயிருந்த பூமிமுழுவதையும் அவருக்கு உரிமையாக்கி அதற்கு உரிய இறைகளை வருடந் தோறும் தவறாது செலுத்தி வரும்படி தீர்ப்புகள் குறித்துக் கும்பினியதிபதிகள் கலெக்ட்டருக்கு நேரே விவரமா உத்தரவு அனுப்பியிருந்தார்.

அந்த உத்தரவுப்படி உரிமை செய்து கலெக்ட்டர் லஷிங்டன் [S. R. Lushington] எட்டப்ப நாயக்கருக்கு அதனை அறிவித்தார். அரிய பெரிய ஊதியங்கள் பெருகி வரலாயின. திருநெல் வேலியிலிருந்து வந்த அந்த உத்தரவைக்கண்டதும் எட்டப்பநாயக்கர் அடைந்த மகிழ்ச்சியை யார் சொல்ல வல்லார்? வெள்ளைக்காரரோடு கூடி நின்று உள் நாட்டிலிருந்த ஒரு வீரமரபைக் கெடுத்ததற்கு நேரான பரிசாகப் பேரரசு கிடைத்தது; அந்தப் பேற்றை நினைந்து அவர் உள்ளம் உவந்து இன்ப வெள்ளத்தில் மூழ்கினார். பின்பு வருடந்தோறும் 3 லட்சத்துக்கு மேலாக வரி செலுத்தி அந்தப் பூமியை அவர் அனுபவித்திருந்தார்; கி. பி 1816ல் அவர் இறந்து போனார். அதன் பின் அவருடைய வழிமரபினர் அனுபவித்து வந்தனர். இப்பொழுது சுதந்திர ஆட்சியில் நேர்ந்த ஜமீன் ஒழிப்பில் அது ஒழியநேர்ந்தது. பழி வழியில் வந்தது ஒழிந்து போயது. பற்றியிருந்த பழி பதிந்து நின்றுள்ளது. வசைகள் திசைகள் தோறும் பரவி வர நசை புரிந்து வந்துள்ளமையை அவ் வழியினரும் விழி திறந்து கண்டு வெட்கி மறுகி உள்ளம் உட்கி உருகி அருகியுள்ளனர்.

## மணியாச்சிக்குத் தந்தது

பாஞ்சைக்கு உரிமையாயிருந்த பேரூரணிவணிதம் என்னும் ஒரு பகுதியை மணியாச்சி ஜமீனுக்குக் கும்பினியார் உதவியருளினார். அது மறவர் பாளையப்பட்டு; கொண்டையங் கோட்டை

யார் என்னும் பிரிவைச் சேர்ந்தது. அந்த ஜமீன்தார் இந்தப் பாஞ்சைப் போரில் யாதும் சேராமல் ஒதுங்கியிருந்தமையால் அவருக்கு உரிமையாக இதனைக் கொடுத்து விட்டார். தூத்துக்குடியிலிருந்து தெற்கேயுள்ள உப்பளம் முதலிய பூமிகள் யாவும் கும்பினி ஆட்சிக்கே சொந்தமாகச் சேர்ந்துக் கொண்டனர். வீரன் பூமி வெள்ளையர்க்கு உரிமையாய் மருவி நின்றது.

பாஞ்சாலங்குறிச்சியாரோடு உதவியாய் நின்ற யாவருக்கும் அல்லலே விளைந்தனர். காடல்குடி, குளத்தூர், முதலிய ஜமீன்கள் யாவும் பறிக்கப்பட்டன. தங்கள் உரிமைகளை இழந்து அந்த ஜமீன்தார்கள் யாவரும் அல்லலடைந்து நொந்தனர். கட்டபொம்மோடு சேர்ந்தவருடைய பாளையங்கள் யாவும் கட்டமண் ஆயின என்று எட்டப்பநாயக்கர் எள்ளி இகழ்ந்து வந்தார். அவருடைய இட்டுகள் எங்கும் செருக்கேறி வந்தன.

கும்பினியாரை ஒட்டியிருந்து அவர் ஊதியம் பெற்றுக் கொண்டமையால் உள்ளக்களிப்பு வெள்ளமாய் ஓங்கி நின்றது. தேசத் துரோகத்தைச் செய்து நீசத்தனத்தை அடைந்திருக்கின்றோமே! என்ற அந்தவுணர்ச்சியே அவர்க்கு இல்லாமல்போயது.

பாஞ்சைப் பூமியோடு வேறு பல வெகுமதிகளும் அவருக்குக் கிடைத்தன. ஒரு தண்டிகை, ஒன்பது குதிரைகள், மரகதம் முதலிய மணிகள் இழைத்த சில அணிகளும் கும்பினியாரிடமிருந்து அவர் பெற்றிருக்கிறார். பல வழிகளிலும் நம்பிக்கையாய் உடன் நின்று உழைத்து வந்தவர் ஆதலால் வெள்ளையர்பால் கொள்ளையான ஊதியங்களை அவர் அடைந்து கொண்டார்.

அடலாண்மை கொண்டு நின்ற பாஞ்சைவீரரைத் தொலைத்தற்கு உள்ளே துப்பாய் உறைந்து அவர் உதவி புரிந்துள்ள நிலையைப் பெரிதும் உவந்து கொண்டமையால் இறுதி வரையும் அவரை உறுதியாக நம்பிக் கும்பினியார் நன்கு ஆதரித்து வந்தார்.

கோளும் வஞ்சமும் உடைய அவரை ஆங்கிலேயர் இவ்வளவு உரிமையோடு ஆதரித்துக் கொண்டது, வாளும் வலியுமுடைய பெரிய போர் வீரரைக் கெடுத்து இந் நாட்டைத் தமக்குக் காட்டிக் கொடுத்த அந்தக் காட்சியையும் ஆட்சியையும் நேரே காட்டி நின்றது. வெள்ளையருடைய உள்ளம் மகிழ உழைத்து

வந்தவரால் கொள்ளை ஊதியங்களை அது கொடுத்தருளியது.

தம்முடைய ஆட்சிக்கு அனுகூலமாய் நின்று ஆதரவு புரிந்தவரை நன்றியறிவோடு கும்பினியார் மாட்சிமைப் படுத்தியுள்ளார். எட்டப்பநாயக்கர் பட்டுவந்த பாட்டுக்குத் தக்க பலனை அடைந்து கொண்டார். பருவம் கண்டு பணிந்து உழைத்தவர் செழித்தார். கருவம்கொண்டு துணிந்து எதிர்த்தவர் இழந்தார்.

மானம் இழந்து வாழ்வதினும் அதனைப் பேணி இறந்து வீழ்வது பெருமகிமையாம் என்பதை இவர் உலகறிய உணர்த்தினர்.

## பாஞ்சைக்கோட்டையை அழித்தது

ஆங்கில ஆட்சிக்கு எங்கும் அதிசய எதிரியாயிருந்த பாஞ்சை அரசு அழிந்த பின்பு அவர்க்கு அரணாய் நின்ற நகரையும் கோட்டையையும் அடியோடு ஒழித்து விட வேண்டும் என்று கும்பினியார் முடிவு செய்தார். வெள்ளையர் பலர் மூண்டு வந்து பொருது மாண்டு போயுள்ளமையால் அந்த இடத்தின் மேல் நீண்ட கொதிப்பு நெடிது ஓங்கி நின்றது. நெஞ்சக் கடுப்பு வஞ்சம் தீர்க்க விரைந்தது. கும்பினியாரோடு எதிர்த்தவரை இருக்க இடமும் தடம் தெரியாமல் அவர் அழித்து விடுவார் என்று உலகம் அஞ்சி நடுங்கும்படி நெஞ்சில் நினைந்து நெடுஞ் சூழ்ச்சியாகக் கொடிய வேலைகளைக் கடிது சூழ்ந்து செய்தார்.

பீரங்கிக் குண்டுகளால் உடைந்து தகர்ந்து சிதைந்து அழிந்தவைபோக மீதம் எஞ்சி நின்றவை யாவும் இடித்துப் பொடித்துத் தரை மட்டமாக்கி உழுது புழுதிசெய்து மேலே கொட்டை முத்துகளை விதைத்து விடும்படி எட்டப்பநாயக்கருக்குக் கலெக்டர் கட்டளை அனுப்பினர். அந்த உத்தரவு கி. பி. 1802 மே மாதம் இருபத் தெட்டாம் தேதி (28–5–1802) வந்தது. அவ்வாறே பலவேலை யாட்களோடு எழுபது ஏர்களைத் திரட்டிக் கொண்டு போய்ப் பாஞ்சாலங்குறிச்சி ஊரைத் தட்டி நொறுக்கி உழுது ஆமணக்கு முத்துகளை அவர் விதைத்து வந்தார். அன்று வீர மாநகராய் விளங்கியிருந்த அந்தப் பெரிய நகரம் இன்று மனைமேடு மண்ணாய் மடிந்து சிதைந்து மண்ணோடு புதைந்து காண்பவர் எவரும் கண்ணோடி இரங்கும்படி கழிந்து கிடக்கின்றது.

விண்ணோடு கொடிகளுடன் விளங்கி நின்ற
மணிமாட கூட மெல்லாம்
மண்ணோடு மண்ணாகி மலர்த் தடங்கள்
மேடாகி வாவி யாவும்
உண்ணீரொன் றில்லாமல் உலர்ந்து போய்
உறறவெல்லாம உருக்குலைந்து
கண்ணாரக் கண்டவர்கள் கண்ணீரங்
குருமாறு கழிந்து நின்ற. [1]

வீரமா நகரென்ன மேதினியில்
மெய்ப்புகழை விளைத்து மன்னர்
பாரமா முடிபுனைந்து பாரான
நிலைத்திருந்த பாஞ்சை இன்று
பூரமாய் நிலைஇரிந்து புல்முளைத்துப்
போயுளதே புவியின் வாழ்வை
யாரம்மா நிலையாக அடைந்திருந்தார்?
அடைந்தவெலாம் அழிவே யன்றோ! [2]

அழியாத பேரின்ப அமலவாழ்
வடையாமல் அதை மறந்தே
இழிவான இவ்வாழ்வை இனிதினிதென்
றேமாந்திங் கிருப்ப தெல்லாம்
கழிவாகிப பொய்யாகக் கனிந்தெதிரே
தோன்றுகின்ற கானல் நீரைப்
பொழிவாக நறுமலர்த்தண் பொய்கையெனப்
போந்ததோர் புன்மை யாமே.

(வீரபாண்டியம்)

உலகில் எவ்வளவு பெரிய வாழ்வினை எய்தி யிருந்தாலும் அது அழிவுபாடுடையது; நிலையில்லாதது என்பதைப் பாஞ்சை அரசால் உணர்ந்து கொள்ளுகிறோம். கீழ் நாட்டு ஜிப்ரால்ட்டர் என்று மேல் நாட்டு வெள்ளையர்களும் வியந்து புகழப் பேராய் விளங்கி யிருந்த பெரு நகரம் ஓரளவும் இல்லாமல் உருவழிந்து போயது. மாட மாளிகைகள் யாவும் மண்ணாய் மறைந்தன. கூட கோபுரங்கள் எல்லாம் குலைந்து ஒழிந்தன.

அழிவு நிலைகள் நேரே விழி தெரிய நின்றன.

''எழுநிலை மாடம் கால்சாய்ந்து உக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்''

எனப் பண்டு ஒரு பாண்டியன் பாடியது இந்த வீர பாண்டியன் நகருக்கு நேரான சான்றாய் நிலைத்து நின்றது. ஊர் இருந்த இடமும் தெரியாதபடி ஏர் உழுது மறைத்து விடுக என்று குமினியார் குறித்தவாறே எட்டப்ப நாயக்கர் குறிப்போடு செய்து போயினும் இன்னும் அங்கே அடையாளங்கள் மின்னி விளங்கி முன்னைய மேன்மைகளை உன்னி யுணரும்படி செய்துள்ளன. அரண்மனைகள் அமைந்திருந்த இடங்கள், அரசமன்றங்களின் அமைதி, தேவி கோவில் இருந்த நிலை, யானை கட்டிய நிலையங்கள் முதலிய தானங்கள் சிறந்த செங்கற்களுடைய தளவரிசைகளோடு அவை பண்டு பாடு பெற்றிருந்த நிலைகளை இன்றும் பீடுடன் விளக்கிக் கொண்டிருக்கின்றன.

"They are of brick and chunam and very fine masonry indeed. These are the only vestiges that now remain of the Fort of Panjalamcourcy." [R. G.]

"செங்கலும் சுண்ணாம்பும் கொண்டு சிறந்த சிற்ப வேலைகள் அமைந்திருந்த பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை இப்பொழுது அவற்றின் அடையாளங்கள் மாத்திரம் இருக்கின்றன" எனக் குமினியாரும் இங்ஙனம் குறித்து வைத்திருக்கின்றனர். ஊரை அழிக்க மூண்டும் அதன் சீரை அழிக்க முடியாமல் அவர் சீரழிந்து போயினார். அந்தப் போக்கை அவரது வாக்கு மூலமே வடித்துக் காட்டி வாழ்வின் நிலையை நீட்டியுள்ளது.

பாஞ்சாலங்குறிச்சி என்னும் பேரை வாயால் கூறினும் குற்றமாம் எனப் பொது சனங்களை அச்சுறுத்தி வந்தனர். பூகோளப் படத்திலிருந்தும், சர்க்கார் பத்திரங்களிலிருந்தும் அதனை விலக்கி விடும்படி விதித்து விரகு புரிந்தனர்.

"Not only was the fort of Panjalamkurichi pulled down and levelled to the ground, but the site was ploughed over and cultivated.

It was ordered also that the name of Panjalamkurichi should be removed from all maps and accounts." (H. O. T.)

"பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைத் தட்டித் தரை மட்ட

மாக்கியதோடு நில்லாமல் அந்த இடத்தை உழுது விதைக்கவும் செய்தனர். அதுவுமன்றி அரசாங்கக் கணக்குகளிலும் தேசப் படங்களிலும் இருந்து பாஞ்சாலங்குறிச்சி என்னும் பேரை நீக்கி விடவும் உத்தரவிட்டனர்" என்னும் இது இங்கே கூர்ந்து சிந்திக்க வுரியது. தங்கள் மானத்தை அழித்து மாட்சி மிகுந்திருந்த தானத்தை அவர் ஊனமாய் அழிக்க நேர்ந்தார். அது ஊழியும் தேயாமல் வாழியாய் ஓங்கி எவ்வழியும் நீள ஒளி புரிந்துள்ளது.

பாஞ்சாலங்குறிச்சி மேல் கும்பினியார் கொண்டுள்ள கோபக் கொதிப்புகளை அவருடைய செயல்கள் தெளிவாக்கியுள்ளன. இவ்வளவு சினமும் சீற்றமும் அவர்க்கு ஏன் நேர்ந்தன? ஊர் என்ன செய்தது? பேர் என்ன புரிந்தது? என்னும் இன்னவாறான வினக்களை இங்கே யாரும் அறியநேர்ந்துள்ளனர்.

வங்காளம், பஞ்சாப்பு, மகதம், மராடம், விராடம், கூர்ச்சரம், பீகார், கலிங்கம், தெலுங்கம் முதல் இந்தியா எங்கனும் யாதொரு தடையுமின்றி ஆங்கில ஆட்சியைப் பரப்பி வந்தவர் இங்கே பாஞ்சை மன்னனால் எதிர்க்கப்பட்டு அல்லல் பல அடைந்தார். அமர் மூண்டது படைகள் பல இழந்தனர். யாண்டும் இரத்தம் சிந்தாமல் தந்திரமாய்த் தேசங்களைப் பிடித்துச் சுவை கண்டவர் ஈண்டு எதிர்ப்பில் நாசத்தைக் காணவே அவர்க்குக் கொடிய துயரமும் நெடிய அவமானமும் நேர்ந்து நின்றன. அதனால் அரசைச் சதி செய்து அழித்தனர்; ஊர் இருந்த இடத்தையும் தடந்தெரியாமல் ஒழித்தனர்; பேரையும் பேசக் கூடாது என்று மறைத்தனர். பகைமையால் அவ்வாறு அவர் மறைத்து வைத்தாலும் இவ்வூரின் பேரை யாரும் உரிமை கொண்டாடி நாளும் நயந்து உவந்து போற்றி வருகின்றனர்.

## ஊரின் உரிமை.

காலம் சென்ற தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை ஆங்கில ஆட்சியை எதிர்த்துப் பேசும் போதெல்லாம் கூட்டத்தில் "நான் யார் தெரியுமா? பாஞ்சாலங்குறிச்சியைச் சேர்ந்தவன்; வெள்ளையர்க்கு எள் அளவும் இங்கே இடம் கொடேன்" என ஆவேசமாய்ப் பேசுவார். இந்த வீர நகரோடு தமக்கும் ஓர் உறவான தொடர்புண்டு என்று சொல்லிக் கொள்வதில் இந் நாட்டிலுள்ளவர் எல்லார்க்கும் உறுதியும் ஊக்கமும் பெருகி

புள்ளனர். அரிய சேனைத்தலைமையை யாரும் பிரியமாய்ப் பேணிக் கொண்டாடுகின்றனர் உரிமை கூர்ந்து பெருமை காணுகின்றனர்.

## வீர விளைவு

இந்தக் கோட்டையிலிருந்து கொஞ்சம் மண்ணை எடுத்துக் கொண்டு போய்க் குழந்தைகளுக்குச் சேனை யூட்டுவதும், அடைகாக்கும் கோழிகளுக்கு இடையே பரப்பி வைப்பதும் இந் நாட்டில் இன்னும் வழக்கமாயுள்ளது. வீர மக்களை வேண்டி நிற்கிற வீரத் தாய்மார்கள் இப் பாண்டியன் பதியை வந்து பார்த்துப் போகின்றார். ஆண் பெண் இருபாலாரும் பாஞ்சை மண்ணின்பால் வாஞ்சை காட்டி வருவதை வையம் இன்றும் நேரே கண்டு வருகிறது. மக்களிடம் மருவி வருகின்ற அன்பின் உரிமைகள் தக்க காரணங்களோடு தழைத்து விளங்குகின்றன.

நாட்டு நலம் கருதி எவ்வழியும் சுதந்திர வுரிமைக்காகவே போராடி இந்த வீர அரசு மாண்டு போயுள்ளமையால் யாவரும் பெரும் பரிவும் பேரபிமானமும் இதன்பால் பேணி வருகின்றனர். உண்மை தெரிந்தவர் இயல்பாகவே உள்ளம் உருகுகின்றார்; தெரியாதவர் அயலே மயலாய் மருகி நிற்கின்றார்.

நேர்ந்துள்ள நிலைமைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்வது தேர்ந்த நன்மையாம். கூரிய சிந்தனைகள் சீரிய உண்மைகளைத் தந்தருளுகின்றன பழமையைப் பாராட்டி உதவி புரிவது கிழமையைச் சீராட்டிக் கேண்மையை விளைத்து மேன்மை தருகிறது.

வீர பாண்டியக் கட்டபொம்முவின் தந்தை பெயர் ஜெகவீரக் கட்டபொம்மு. திக்குவிசயத்துரை என்பது பட்டப் பேர். அவரோடு உடன் பிறந்த தம்பிக்குச் சின்ன பொம்மு என்று பெயர். இவர் மிகவும் நல்லவர். எல்லாரிடமும் அன்புடையராய் யாண்டும் இதமே செய்து வந்தார். இவருடைய வழியில் வந்த கிளை வேடபட்டி என்னும் ஊரில் இருந்து வாழ்ந்து வருகிறது.

வீர பாண்டியனுடைய தாயாதி ஒருவர் பேரூரணி வணிதத்திற்கு உரிமையாயிருந்தார். அவரைப் பேரூரணி ஐயா என்று அழைப்பது வழக்கம். கோட்டை அழிந்து படும் பொழுது அவருடைய மனைவி கருப்பவதியாயிருந்தாள். ஜமீன் உறவினரைச் சிறை பிடித்து வருங்கால் அவளையும் கும்பினியார் பிடித்துக்

கொண்டு போய்ப் பாளையங்கோட்டையில் வைத்திருந்தார். பூரண கருப்பிணியாயிருந்த அவள் வயிற்றில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்தப் பிள்ளையைக் கண்டதும் தளபதியின் மனைவி உளம் மிக இரங்கி உவந்து பேணினள். அவளுடைய வேண்டுகோளால் வெள்ளைத் தலைவர்கள் அப் பிள்ளையை நன்கு பாதுகாத்து வந்தார். திருச்சிராப்பள்ளிக்குக் கொண்டு போய் அவனைப் படிக்க வைத்தார். கும்பினியார் உரிமையுடன் வளர்த்து வந்தமையால் கும்பினிச் செல்லம் என்று அவர் சொல்லப் பட்டார். பருவம் அடைந்தபின் வேண்டிய உதவிகளைச் செய்து அவரை மீண்டும் பாளையங்கோட்டைக்கு அனுப்பித் தளபதிக்கும் இதமாகக் கும்பினித் தலைவர் கடிதம் எழுதி யிருந்தார். கும்பினியார் குறிப்பின்படி அக் குமாரனிடம் விருப்பத்தை வினவி யறிந்து அவருடைய மரபில் கலியாணம் செய்து வைத்துப் பொருளுதவியும் புரிந்து ஊருக்கு அனுப்பி வைத்தார் அவருக்கு உரிமையான உறவினர் அப்பொழுது செக்காரக்குடி என்னும் ஊரில் இருந்தமையால் அங்கே போய் அவர் குடியேறி வாழ்ந்தார் அவருடைய குடி வாழ்வு படிமுறையே படிந்து வந்தது அவருக்கு ஒரு பெண்ணும் இரண்டுபுதல்வரும் பிறந்தனர்.

பெண்ணுக்குப் பாஞ்சாலியம்மாள் என்று பேர்.

புதல்வருள் மூத்தவர் பெயர் ஜெகவீரதளவாய்சாமி.

இளையவர் பெயர் சுப்பிரமணியத்துரை

இந்த இருவருள் முன்னவருக்கு நான்கு புதல்வர்களும், பின்னவருக்கு இருவரும் பிறந்திருக்கின்றனர், அறுவருள் ஐவர் இறந்து போயினர்; இப்பொழுது ஒருவரே யுள்ளார்.

உறவினரும் மரபினரும் பரிதாப நிலையில் வாழ்ந்து வருகின்றனர். அரச இனம் அவலமாய்ப் பரிசு குலைந்துள்ளது.

தென்னாட்டில் உள்ள ஊர்கள் பல பாஞ்சாலங்குறிச்சி உரிமையாளர் பேர்களால் அழைக்கப் படுகின்றன. பாண்டியாபுரம், வீர பாண்டியபுரம், வீர பாண்டியன் பட்டணம், செகவீர பாண்டியபுரம், சிவத்தையாபுரம், தளவாய்புரம், சக்கம்மாள்புரம், மல்லம்மாள்புரம், வெள்ளையம்மாள்புரம், சுப்பம்மாள்புரம், போடம்மாள்புரம், பொம்மையாபுரம், ஜெகவீரபுரம், சின்னையா

புரம் என இன்னவாறு கிராமங்கள் இன்றும் வழங்கி வருகின்றன. இவ்வாறு ஊர்களின் பேர்கள் உயர்வாய் உலாவிவரச் சீரும் சிறப்புமாய்ப் பெருகியிருந்த மரபு இந்நாள் இன்னநிலையில் மறுகி இனிய வகையில் அருகித் தனிமிகுந்துள்ளது.

## நம் ஆட்சி மன்றம் ஆற்ற வுரியது

அரசுரிமை என்றும் மாட்சிமையுடையது. அந்நிலைமையில் தலைமையாய் நிலவியிருந்து "வெள்ளையரே இங்கே உள்ளே புகாதீர்!" என அன்று வீர பாண்டியன் தீரமாய் நின்று கூறினான். கால வேற்றுமையால் அவர் மீறி வந்து உள்ளே புகுந்து கொண்டார். இந் நாட்டை அடிமையாக்கி ஆண்டு வந்தார். நூற்றைம்பது ஆண்டுகள் நடந்து வந்தன. முடிவு நேர்ந்தது. "வெள்ளையனே! வெளியே போ!" என்று காந்தியடிகள் சாந்தமாய்ச் சொன்னார். காலம் மாறியது; திருவருளும் கூடியது; ஆங்கில ஆட்சி எளிதே அகன்று போயது. சுய ஆட்சி இங்கே ஓங்கியெழுந்துள்ளது. வாழ்வின் காட்சிகள் வையம் அறியவந்தன.

முன்னே வழிகாட்டியாய் நின்று அரசையும் உயிரையும் இழந்து மாண்டு போன வீர பாண்டியக் கட்ட பொம்மு என்னும் அந்தச் சுதந்திர வீரனுக்கு இந்தச் சுதந்திர அரசாங்கம் உரிமையுடன் உதவி புரியப் பெரிதும் கடமைப் பட்டிருக்கின்றது.

அந்த நன்றியறிவோடு இப்பொழுது சர்க்கார் வேலை செய்யத் தொடங்கியுள்ளது. கட்ட பொம்மு மாண்ட கயத்தாற்றில் ஞாபகச்சின்னம் முதலியன அமைக்கவேண்டும் என்று ஆலோசித்திருக்கின்றது. அவருடைய நினைவு நாளை நாடு முழுவதும் ஆர்வத்தோடு கொண்டாடி வருகிறது. தகுதியான முறையில் எதையும் ஆராய்ந்து உறுதியான நிலைகளில் உரிமையோடு செய்யவேண்டும். ஆட்சி மன்றம் கருதிச் செய்யவுரிய காரியங்கள் கவனிக்கத்தக்கன. சில குறிப்புகள் அயலே வருகின்றன.

1. பாஞ்சை மரபினரை மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியில் குடியேற்றிப் பண்புபெற வைத்தல்.
2. அயலே பாழாய்க் கிடக்கின்ற தரிசு நிலங்களை உழுது பண்படுத்தி உணவுப் பொருள்களைப் பெருக்கி இனிய வருவாய்களை விளைத்து வரச் செய்தல்.

3. நூல் நூற்றல், நறி நெய்தல் முதலிய கைத்தொழில்களில் பழக்கி எத்தகைய வழிகளிலும் தேர்ச்சியுற்று மாட்சியோடு வாழ்ந்து வரும்படி சூழ்ந்து புரிதல்.

4. புதிய முறைகளில் பயிற்சி தந்து அரிய வீரர்களான இவரை உயர்ந்த இராணுவத்தில் தகுந்தபடி சேர்த்தல்.

5. எவ்வழியும் நாட்டு நலம்கருதி உழைத்துவர உணர்த்தல்.

6. கல்வி அறிவு செல்வம் முதலிய பலநிலைகளிலும் உயர்ந்து சமுதாயத்திற்குச் சேவை புரியுமாறு தெளித்தருளுதல்.

இன்னவாறான வழிகளில் பாஞ்சை மரபினரைப் பழக்கிப் பண்படுத்திவரின் அது நாட்டுக்குப் பெரிய நன்மை செய்தபடியாம். இந்த உண்மைகளை ஒர்ந்து சுதந்திர அரசாங்கம் விரைந்து வினை செய்ய வேண்டும். அவ்வாறு செய்யின் சுதந்திர உரிமைக்காக முன்பு மாண்டு போன வீர பாண்டிய மன்னனுக்கு அன்புரிமையுடன் நன்றி செலுத்தியதாம். செய்யாமல் அயர்ந்திருந்தால் வையம் வையாமல் வைது வரும். கடமை அறிந்து கருமம் புரிந்து எவ்வழியும் ஒப்புரவு செய்து வருவதே யாண்டும் செப்பமுடையதாய்ச் சிறந்து ஒட்பம் மிகுந்து நன்கு உயர்ந்து திகழும்.

## பாஞ்சையர்க்கு உறுதி

அரசு வாழ்வில் உயர்ந்து வாழ்ந்து வந்தவர் கால வேற்றுமையால் இழிந்து வீழ்ந்துள்ளனர். நேர்ந்துள்ள அவல நிலைகளை நினைந்து தெளிந்து நெஞ்சம் துணிந்து விரைந்து முயன்று உயர்ந்து கொள்ள வேண்டும். பழைய நிலைமைகளை எண்ணி வீண் பெருமை பேசி விருதாவாய்ச் சோம்பியிருப்பது பரிதாபமேயாம். பிறரை யாதும் எதிர் பாராமல் தன் கையே தனக்கு உதவி என்று உறுதி பூண்டு கருதி முயல்வதே மனிதனுக்குப் பெரிய ஆண்மையாய்ப் பெருமகிமை தருகின்றது. யாரிடமும் எதையும் கை ஏந்தி வாங்காதே. எடுப்பது இழிவு; கொடுப்பது உயர்வு. எடுத்துப் பழகினவன் ஈனமாய் இழிந்து படுகிறான்; கொடுத்து வந்தவன் மானமாய் உயர்ந்து விளங்குகின்றான்.

"நல்லாறு எனினும் கொளல் தீது; மேலுலகம்
இல்எனினும் ஈதலே நன்று." (தேவர்)

இந்த வேத மந்திரத்தை நாளும் ஓதி உணர்ந்து உரிமையோடு ஒழுகிவரின் உறுதி நலம் பெருகி வரும். வாங்குவதில் பாவம் ஏறுவதால் அது தீது என நேர்ந்தது. புகழ் புண்ணியம் முதலிய எல்லா நன்மைகளும் ஈதலில் மேவியிருத்தலால் அது நன்று என வந்தது. பெரிய செல்வங்களை அடைந்து அரிய போகங்களை அனுபவித்து வருபவனைக் கொடுத்து வைத்த புண்ணியவான் என உலகம் உரைத்து வருகிறது. இந்தப் பழமொழியுள் பதிந்துள்ள குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கவுரியன.

பிறர் வலிந்து வந்து தந்தாலும் வேண்டாம் என்று விலகிச் செல்பவர் உயர்ந்த மேலோராய்ச் சிறந்து விளங்குகின்றார். பெரிய மேன்மைகள் எல்லாம் அரிய யாண்மைகளில் மருவியிருக்கின்றன. இரவாமல் ஈதலே யாண்டும் உயர்வாய் ஒளி செய்துள்ளது. மானமான வாழ்வு என்றும் மகிமை தோய்ந்து வருகிறது. இரவு இழிவான ஈனம்; அதனை ஒழிவதே உயர்வு

"ஈ என இரத்தல் இழிந்தன்று; அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள் எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று."

எனக் கழைதின் யானையார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியுள்ளார். உயர்வு இழிவு என்னும் நிலைகள் விழி தெரிய வந்துள்ளன. யாண்டும் மானம் மரியாதைகளோடு வாழ விரும்புகின்றவர் ஈன நிலைகளில் இழிந்து படலாகாது.

தாமாகவே முயன்று உயர்வது எவ்வழியும் சிறந்ததாம். முயற்சியாளர் செல்வம் சீர்த்தி முதலிய நலங்களையடைந்து உயர்ந்து விளங்குகின்றனர். முயலாது அயர்ந்திருப்பவர் வறுமை இழிவுகளில் அழுந்திச் சிறுமையாய் வருந்தியுழலுகின்றனர்.

வறுமை, சிறுமை, மடமை, மடிமை, கொடுமை என்னும் இந்த ஐந்தும் இச் சமூகத்தாரிடம் குடி கொண்டிருக்கின்றன. அவகேடான இவை அடியோடு அழிந்து ஒழிய வேண்டும்.

செல்வத்தை ஆக்கி வறுமையை நீக்குக.

பெருமையைப் பேணிச் சிறுமையைப் போக்குக.

அறிவை வளர்த்து மடமையை அகற்றுக.

முயற்சியில் உயர்ந்து மடியை மாற்றுக.

இனிமைகளைச் செய்து கொடுமையை ஒழிக்க.

நல்ல நீர்மைகளைப் பழகி வரும் அளவு மனிதன் நல்லவனாய் உயர்ந்து எல்லா வகைகளிலும் எழில் மிகப் பெறுகின்றான். தான் செய்கின்ற இனிய கருமங்களே அரிய மகிமைகளை விளைத்தருளுகின்றன. கருமமும் தருமமும் இம்மை மறுமை என்னும் இருமைகளிலும் உரிமையாய் நின்று உயிர்களுக்கு உறுதி புரிந்து வருகின்றன. இன்ப நிலையங்களான இவற்றை இழந்தவர் துன்பங்களில் உழந்து துடிக்கின்றனர். தாம் செய்து வருகிற கருமங்களின்படியே யாவரும் யாண்டும் பலன்களை அனுபவித்து வருகின்றனர். விதைத்தவன் விளைவை அடைதல் போல் உழைத்தவன் உயர்வை அடைகின்றான். உரிமையாய் மருவிய செயல்களின் அளவே பெருமைகள் பெருகி எழுகின்றன. உரிய தொழில்கள் குறையின் வறிய புலைகள் வளர்ந்து கிளர்ந்து நெடிய துயர்களை யாண்டும் நிலையாக விளைத்து வரும்.

கரும தருமங்கள்.

தருமம் குன்றினர் தம்நிலை அழிகுவர்; சார்ந்த
கருமம் குன்றினர் கடையராய் இழிகுவர்; இந்த
இருமை இல்லவர் இருமையும் இழந்தவர் அன்றே
ஒருமை யேயிதை உணர்ந்துடன் ஒழுகினர் உயர்ந்தார். (1)

திருவும் மேன்மையும் தேசுமற் றுளநலம் எல்லாம்
ஒருவர் மற்றவர்க் குதவுற வருவன அல்ல;
பரம னும்அவை தந்திடான்; பரிந்து நாம செயுநற்
கருமமே அவை உரிமையிற் கொணர்ந்துகைக் கொடுக்கும்.

இன்ன உண்மையை அறிந்துதாம் இழந்துள நிலைமை
உன்னி நாணி உள் ளுருகிநல் வினைகளை உடனே
மன்னி மாண்புற ஒழுகினர் உயர்குவர்; மறந்தார்
பன்னருந் துயர் பழியிடைப் பட்டுளம் பதைப்பார். (3)

மாசு மீப்பட்டு மண்ணிடைப் புதைந்தமா மணிகள்
தேசு போயொளி தெரிகிலா தொழிந்தபோல் உள்ளார்;
ஈசன் இன்னருள் வலியினால் எழுகுவர் ஒளிமேல்
வீசி மேல்வந்து மேன்மையாய் விளங்குவர் கொல்லோ?

நெல்லை எல்லையில் அல்லது வேறெங்கும் நிலையாய்
இல்லை என்னவே இருந்தனர்; இன்றும் அன்றமைந்த
சொல்லை மெய்ப்பித்து நின்றுள்ளார் தொன்முறை மறந்தார்
புல்லை யுண்டுவாழ் புலியெனப் பொலிவிழந் துள்ளார். (5)

எண்ணி நோக்கி ஆருயிரம் எனும்தொகை யுள்ளாய்
நண்ணி நின்றனர் அமரிடை நைந்தொழிந் ததனால்
திண்ணி தாகசர் ஆயிரம் பேரின்று தேர்ந்து
கண்ணும் கையுமாய் உள்ளனர் கருதுங்கால் இல்லார். (6)

இந்த இன்மையும் புன்மையும் ஒழிந்திட எவரும்
சிந்தை யுள்ளுற உணர்ந்துதம் சிறுமைகள் நீங்க
எந்த வேலையும் கருமமும் தருமமும் பேணி
வந்த போதுதான் வளங்களும் நலங்களும் வருமால். (7)

[வீர பாண்டியம்]

இந்தப் பாசுரங்களில் படிந்துள்ள பொருள்களைக் கருதி யோர்ந்து உறுதி நலங்களைத் தேர்ந்து கொள்ளுக. இனிய எண்ணங்களால் மனிதன் புனிதனாய் உயர்கின்றான். நல்ல சிந்தனைகளைச் செய்து நன்கு முயன்று செல்வங்களை அடைந்து பல்லோர்க்கும் இதம் புரிந்து வருபவர் யாண்டும் பாக்கியசாலிகளாய் உயர்ந்து விளங்குகின்றனர். உயர்வுகள் யாவும் உள்ளங்களில் உள்ளன.

எல்லார்க்கும் நல்ல வழிகளைக் காட்டி ஆண்டவன் அருள் புரிய வேண்டும். மனிதனுடைய உள்ளம் நெறி முறைகளோடு தழுவி நேர்மையாய் ஒழுகி வரும் அளவுதான் இறைவன் அருளும் இனிது பெருகி எவ்வழியும் ஒளி புரிந்து வருகிறது.

## முடிவின் முடிவு.

அரசு நிலையில் தலைசிறந்திருந்த பாஞ்சாலங்குறிச்சி ஊரின் உருவம் வெளியே நிலை குலைந்து போனாலும் அதன் பேரின் சீர்மைகள் உள்ளங்களில் மிக்க மகிமையோடு என்றும் நிரந்தரமா நிலைத்திருக்கின்றது. வீரத்திறல் பேரதிசயமுடையது ஆதலால் அதனை யாரும் வியந்து புகழ்ந்து மகிழ்ந்து வருகின்றனர். அதிசயமுடையன துதி செய்யப் படுகின்றன. உயர்ந்த தன்மைகளை எண்ணி வருபவர் சிறந்த நன்மைகளை அடைந்து கொள்ளுகின்றனர். மனிதன் எதனோடு நெருங்கிப் பழகி நினைந்து வருகின்றானோ அதன் மயமாகவே வளர்ந்து வருகிறான் வள்ளல்கள்

வீரர்கள் புலவர்கள் ஞானிகள் என்னும் இவர் மனித உருவில் மருவி யிருப்பினும் தெய்வீக ஒளிகளாய்ச் சிறந்துள்ளனர்.

இத் தகைய மேலோர்களுடைய சரிதங்களை உரிமையோடு உணர்ந்து வரின் உயர் நலங்கள் புணர்ந்து வரும். "சாதாரண மனித நிலைக்கு மேற்பட்ட சத்தி எங்கே தலை சிறந்து நிற்கிற தோ அங்கே தெய்வ அமிசம் உள்ளது" என்று கண்ணன் கீதையில் இவ்வண்ணம் கூறியுள்ளார். எவரும் வியந்து போற் றும்படியான அற்புத வீரங்கள் பாஞ்சையரிடம் குடி புகுந்தி ருந்தமையால் யாரும் இவரை வாஞ்சையோடு உவந்து கொண் டாடி வருகின்றனர். அரசு அழிந்து போனாலும் எங்கும் இவர் இசை மிகுந்துள்ளனர். இவருடைய கீர்த்தி கிளர்ந்து வளர்ந்து வருதற்கு உரிய காரணங்கள் ஓர்ந்து சிந்தித்து உணர வுரியன.

இந்தப் பாஞ்சை அரசுக்குத் துணையாய் உதவி புரிந்திருந்த தாகக் கருதிப் பல ஜமீன்களைக் கும்பினியார் வம்பாகக் கவர்ந்து கொண்டனர். நாட்டுப் பிடிகள் காட்டுப் பறிகளாய் நின்றன.

| | |
|---|---|
| காடல்குடி | 1 |
| குளத்தூர் | 2 |
| கோலார் பட்டி | 3 |
| ஏழாயிரம் பண்ணை | 4 |
| நாகலாபுரம் | 5 |
| பாவாலி | 6 |
| விருப்பாட்சி | 7 |
| சிவகங்கை | 8 |

இந்த எட்டு ஜமீன்களும் பாஞ்சாலங்குறிச்சியாருக்கு உரி மையாய்த் துணை புரிந்தன என்று பிணை மொழிந்து பறித்துத் தமக்கு உரிமையாகக் கும்பினியார் சேர்த்துக் கொண்டனர். பின்பு சிவகங்கையை மாத்திரம் ஒப்புக்கு அயலே விட்டனர்.

பாஞ்சாலங்குறிச்சி முதலாகப் பறித்துக் கொண்ட ஜமீன் களைக் குறித்துப் பாராளும் மன்றத்தில் நான்கு முறை விவாதங் கள் பாங்கோடு தொடர்ந்து நன்கு நடந்திருக்கின்றன.

1821 செப்டம்பர் மாதம் 27-ந் தேதி (27—9—1821) முதல் முறை விவாதிக்கப்பட்டது. தொண்ணூற்றாறு வருடங்கள் கழித்துச் சரியான உடன்படிக்கைகளை எதிரே வாங்கிக்கொண்டு உரிமையான வாரிசுதாரர்களிடம் ஜமீன்களை ஒப்புவித்து விட வேண்டும் எனச் சட்டங்கள் திட்டமாச் செய்யப் பட்டன.

1893 ஜுலை மாதம் 16-ந் தேதி (16—7—1893) வாரிசுகளைக் குறித்து ஆராய நேர்ந்தனர். பரம்பரையாளர் எல்லாரும் நல்ல நடத்தையுடன் இருப்பதாகவே தெரிய வந்தது. தெரிந்தும் சட்டப்படி செய்ய மனமில்லாமல் ஒரே திட்டமாய் விழுங்கி விட்டனர். முதலில் கூடி நியமித்த சட்டம் எப்படியோ தவறிப் போய் விட்டதாகப் பின்னல் நேர்ந்த ஆட்சிக் குழு பேச நேர்ந்தது. எல்லாம் ஆசாரக் களவாய் இராச தந்திரங்கள் என அமைந்து நின்றன. நீதி முறைகள் நாதி முறைகளாயின.

குறித்தபடி 96 ஆண்டுகள் கழிந்ததும் தங்களுக்குப் பூமிகள் கிடைத்து விடும் என்று எதிர்பார்த்து முதிர் பேராவலோடு ஈண்டு ஏங்கி யிருந்தவர் யாவரும் ஏமாந்து போயினர்.

ஆங்கில ஆட்சியும் ஒரேயடியாய் இந் நாட்டை விட்டுக் குடி வாங்கிப் போயது. உலக வாழ்வு எதுவும் நிலையில்லாதது என்பதை நிகழ்ச்சிகள் எல்லாம் நேரே உணர்த்தி யுள்ளன.

"மண்ணுடும் மன்னவரும் அவர் தனமும்
மாண்டன நுண் மணலை ஒக்கும்;
விண்ணுடும் இந்திரரும் அவர் வாழ்வும்
போயின்விண் மீனை ஒக்கும்;
எண்ணுடும் பிரமரும் அண்டமும் பூதங்களும்
இறந்த எல்லை இல்லை;
கண்ணுடும் அவைஎங்கே நின்வாழ்க்கை
நிலைஎன்னே கவலும் நெஞ்சே!" (வாசிட்டம்)

என சனக மன்னன் எண்ணித் தெளிந்து திண்ணமா யிருந்தது போல் உண்மையை உணர்ந்து அமைதியாய் இருப்பதே உலகை நிலையமாம். தத்துவ உணர்வுசித்தசாந்தியை அருளுகிறது.

வாய் பேசா மவுனியாயிருந்து ஊமைத்துரை சாதித்துள்ள வீரப் பாடுகள் உலக சரித்திரங்களில் தலை சிறந்து நிற்கின்றன.

நிலைமைகளைக் கருதி யுணர்கின்றவர் எவரும் நெஞ்சம் பரிந்து உருகி இரங்குகின்றனர். கொடிய கொலைக் கருவிகளையுடைய பெரிய பகைவரோடு நேரே நெடிது எதிர்த்து அரிய வீரப்போர் ஆற்றி இந்நாட்டு மானத்தை இவர் காத்து வந்திருக்கும் காட்சி எவ்வழியும் அதிசய மாட்சியாய் ஒளி மிகுந்துள்ளது. வயதில் இளையவராயினும் பல்வகை நிலைகளிலும் முதியவராய் இவர் உயர்ந்து விளங்குகின்றார். எல்லா வகைகளையும் ஒல்லையில் ஓர்ந்து வல்லாண்மைகளுடன் நல்லாண்மைகள் செய்துள்ளார்.

“சில் செவியன்னே பெருங்கேள்வி யன்னே;
குறுங் கண்ணினனே நெடுங்காட்சி யன்னே;
இளையன் ஆயினும் அறிவின் மூத்தனனே;
மகளிர் ஊடினும் பொய் அறி யலனே;
கீழோர் கீழ்மை செய்யினும் தான் தன்
வாய்மை வழுக்க மறுத்தல் அஞ்சி
மேல்நெறி படரும் பேரா ளனனே.”

இவ் வீர மகன் இன்னவாறு சீராளனாய் இருந்து வந்துள்ளமையை வாழ்க்கை முறை தெரிந்து கொள்ளச் செய்கின்றது. அருந்திறலாண்மைகளோடு வாழ்ந்து வந்த வாழ்வு பெரும் பரிதாபமாய் முடிந்திருக்கிறது. அரச செல்வங்களை அடைந்து எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தாலும் இவ்வுலக வாழ்வு நிலையில்லாதது என்பதை இவரது சரித நிலையால் உறுதியாக அறிந்து கொள்ளுகிறோம். முன்னம் பெருமிதமா யிருந்ததும், பின்னர்ப் பதியிழந்து போய்ப் படுதுயருழந்து முடிவடைந்துள்ளதும் ஒரு துலையில் நேரே நோக்கி நிலைமைகளை நினைந்து பரிவுறுகின்றோம்.

“அரையது துகிலே; மார்பினது ஆரம்;
முடியது முருகுநாறும் தொடையல்; புடையன
பால்வெண் கவரியின் கற்றை; மேலது
மாலை தாழ்ந்த மணிக்கால் தனிக்குடை;
முன்னது முரசு முழங்குதானை; இந்நிலை
இனிய செல்வத்து ஈங்கிவர் யாரே!
தேவர் அல்லர் இமைப்பதும் செய்தனர்
மாந்த ரேயென மயக்கம் நீங்கக்
களிற்றுமிசை வந்தனர் நெருநல்; இன்றுஇவர்
பசிப்பிணி காய்தலின் உணங்கித் துணியுடுத்து
மாசுமீப் போர்த்த யாக்கை யொடு
தாமே ஒருசிறை இருந்தனர் மன்னே.” (ஆசிரியமாலை)

இன்னவாறு இவ்வுலக வாழ்வு மன்னு நிலையில் மன்னியுள்

ளமையால் இம்மன்னன் முடிவை உன்னி உளைந்து ஒருவாறு தேர்ந்து உறுதிமீக் கூர்ந்து நிற்கின்றோம். அரிய வீரம்; பெரிய செல்வம்; இனிய போகம் அனைத் தனி மகிமை வாய்ந்திருந்த அரசு உருவழிந்து போயுளது. வீரமாபுரி என்று யாரும் வியந்து புகழ்ச் சீரோடு சிறந்திருந்த நகரம் சிதைந்து மறைந்துளது.

"Now the only monument of that once dreaded fortress." (M. R.)

"ஆங்கிலேயருக்கு அன்று நெடிய பயங்கர நிலையாய் நிலவி யிருந்த பாஞ்சைக்கோட்டை இன்று வெறும் ஞாபகக் குறியாய் மருவியுளது" என்னும் இது இங்கே கருதி யுணர வுரியது.

அடலாண்மைகளோடு ஆண்டுவந்த அரசர் உடல்பொருள் ஆவி யாவும் நாட்டுக்கே உரிமை செய்திருத்தலால் புலவர் பாடும் பாட்டுக்கு இனிய உரியராய்ப் பெரிய இசை மிகுந்து நிற்கின்றார்.

---

## இந் நூலின் தொகைக் குறிப்பு.

பாஞ்சாலங்குறிச்சி என்பது பாண்டி மண்டலத்தின் தென் பகுதியில் உள்ளது. அதனை இராசதானியாகக் கொண்டு அதிலிருந்து இறுதியாக அரசு புரிந்து வந்தவர் வீர பாண்டியக் கட்டபொம்மு, ஊமைத்துரை என்னும் பேரினர். இவருடைய முன்னோர் ஆந்திர நாட்டிலிருந்து ஈண்டு வந்தவர். பாண்டிய மன்னரிடமிருந்து அரசுரிமை பெற்றவர். வழி முறையே அரசாண்டு வந்தவருள் முடிவில் நின்ற இந்த இருவரும் சிறந்த வீரராய் விளங்கி யிருந்தனர் இவர் ஆண்டு வருங்கால் ஆங்கில வியாபாரிகளான கும்பினியார் இத் தேச உரிமையைப் பெற்றுத் தலைமையாக ஆட்சி புரிய நேர்ந்து வரிகளை விதித்தார். பாளையகாரரெல்லாரும் வரி செலுத்தி வணங்கி வாழ்ந்தார். இவர் வரி தர மறுத்து எதிர்த்து நின்றார். அதனால் கும்பினியாருக்கும் பாஞ்சை அரசுக்கும் பகை நேர்ந்தது. போர் மூண்டது. முதலில் வெற்றியடைந்தும் முடிவில் வீர பாண்டியன் மாண்டு போனார். தம்பியைக் கொண்டுபோய்ப் பாளையங்கோட்டையில் சிறை வைத்திருந்தனர். பதினாறு மாதம் அங்கே இவர் பரிந்திருந்தார். முடிவில் அந்தச் சிறையை உடைத்து மீண்டு வந்து பாஞ்சாலங்குறிச்சியை அடைந்து அரணை கோட்டைகள்

அமைத்து அரசுரிமையுடன் பகைவரை எதிர்பார்த்திருந்தார். கும்பினியார் படை திரட்டி வந்தார்; யாதும் முடியாமல் மீண்டு போனார். மறுபடியும் பெரிய சேனைகளோடு வந்து மூண்டு பொருதார். அதில் அவருடைய படைகள் பல மாண்டு போயின; ஐரோப்பியர்கள் பலர் இறந்து பட்டனர். சேனைத் தலைவர் வருந்தி நின்றார். பின்பு கும்பினியதிபதிகள் கொதித்தெழுந்து யாண்டும் பெரும் படைகளைச் சேர்த்துப் பல ஆங்கிலத் தளபதிகளோடு அக்கினிச்சென்னலைத் தலைமையாக அனுப்பி வைத்தார். அவரும் வந்து போராடி அவலம் அடைந்து நின்றார். முடிவில் சதி புரிந்து கொடிய புகைகளை மூட்டினார். போரும் மூண்டது. இருதிறத்திலும் கொலைகள் பல விழுந்தன; ஆயிரக் கணக்காக மாண்டு மடிந்தனர். புகைகள் எங்கும் மண்டியதால் இறுதியில் கோட்டையில் இருக்க முடியாமல் ஊமைத்துரை உறவினரோடு வெளியேறினார். பாஞ்சைக் கோட்டையைக் கும்பினியார் பிடித்துக் கொண்டார். அதன்பின் நகரைத் தட்டி நொறுக்கித் தரைமட்டம் ஆக்கினார். வெளியேறிப் போன ஊமைத்துரை கமுதியை அடைந்து மருது சேர்வையோடு மருவியிருந்தார். அங்கும் தேடிப் போய்க் கும்பினிப் படை கூடி வளைந்தது; ஆண்டும் போராடி வென்றுமீண்டு வெளியேறித் திருமயம் சேர்ந்திருந்தார். அந்த இடத்தும் வந்து போராடவே தம்பியை இழந்து தனியே தப்பிச் சிறுமலைக்குச் சென்றார். தம்பி துரைச்சிங்கத்தைக் கொண்டு வந்து பாஞ்சைக்கோட்டை எதிரே தூக்கிலிட்டுக் கொன்றார். இளவல் இறந்த செய்தியைக் கேட்டதும் ஊமைத்துரை உள்ளம் உடைந்து உலகத்தை வெறுத்து வடதிசை நோக்கி நடந்து காசிக்குப் போனார். அதன் பின் இமயம் சார்ந்து மறுமை நோக்கோடு மருவியிருந்தார். இந்த நிலையில் இவ் வீர சரிதம் தீரமாய் முடிந்துள்ளது.

செந்தில் வேலனைச் சிந்தனை செய்பவர்
எந்த வேலையும் ஏத்தி மகிழ்பவர்
அந்த வீர அரசின் சரிதையை
இந்த நூல் அமுது இன்பென ஈயுமே.

பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் இரண்டாம் பாகம்

முற்றிற்று



# சரித்திர நிகழ்ச்சிகளின் காலக் குறிப்பு

| | |
|---|---|
| வீர பாண்டியக் கட்டபொம்மன் பிறந்தது. | 3— 1—1760. |
| பட்டத்துக்கு வந்தது. | 2— 2—1790. |
| கும்பினியார் வந்து இவரிடம் திறை கேட்க நேர்ந்தது. | 1793. |
| ஆலன் துரை பாஞ்சைக் கோட்டைக்கு வந்தது. | 1797. |
| ஜாக்சன் சந்திப்பு. | 10— 9—1798. |
| பாஞ்சைப் போர் மூண்டது. | 5— 9—1799. |
| மன்னன் மாண்டது. | 16—10—1799. |
| ஊமைத்துரையின் சிறைவாசம். | 1—11—1799. |
| பாளையங் கோட்டைச் சிறையைக் கடந்து வந்தது. | 2— 2—1801. |
| பாஞ்சைக் கோட்டையைக் கட்டி முடித்தது | 8— 2—1801. |
| கும்பினிப் படை மூண்டு வந்தது. | 9— 2—1801. |
| போர் புரிய மாட்டாமல் மீண்டு போனது. | 10— 2—1801. |
| கும்பினியாரின் ஆயுதசாலைகளை ஊமைத்துரை கைப் பற்றியது. | 21— 2—1801. |
| தூத்துக்குடியைக் கவர்ந்து அங்கிருந்தவெள்ளையர்களை வெளியேற்றி மீன்தோணிகளில் வைத்துச் சீமைக்கு அனுப்பியது. | 29— 2—1801. |
| அங்கே சேனைகளுக்கு அதிபதியாயிருந்த Rogimental Officer (Bagget) பங்கெட் என்னும் ஆங்கிலத் தளபதியைக் கைதியாய்ப் பிடித்துவந்து பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையில் சிறை வைத்தது. | 30— 2—1801. |
| அந்தப் படைத் தலைவன் மனைவி பரிதாபமாய் வந்து ஊமைத்துரையை வணங்கித் தனக்குத் | |

தாலிப்பிச்சை தந்தருளும்படி வேண்டியபோது
சிறையிலிருந்த அந்த வெள்ளைத் தலைவனை
விடுதலை செய்தருளியது. 7— 3—1801.

கும்பினியார் யாண்டும் மூண்டு பெரிய படை
களைத் திரட்டிக் கொடிய பீரங்கிகளுடன் அரிய
ஐரோப்பியத் தளபதிகள் சேர்ந்து வந்து மீண்டும்
பாஞ்சாலங்குறிச்சியில் போராடியது. 31— 3—1801.

அந்தப்போரில் ஆங்கிலப்படைத்தலைவர்களோடு
படைவீரர்கள் பலர் மாண்டனர்; கோட்டை
யைச் சூழ்ந்து மடிந்து கிடந்த பிணங்களை எடுத்து
ராணுவ மரியாதையோடு புதைப்பதற்கு உத்த
ரவு தரும்படி ஊமைத்துரையிடம் சீமைத்தளபதி
சமாதானக் கொடியுடன் (A flog of truce)
சுபேதாரை அனுப்பியது. 1— 4—1801.

சேனைகளை இழந்து தோல்வியடைந்த சேனாதிபதி
மானத்துடிப்புடன் முன்புபோல் மீண்டுபோகா
மல் பாஞ்சைக் கோட்டைக்கு அருகே ஒரு
மைல் தூரத்தில் பாசறை அமைத்திருந்தது. 3— 4—1801.

அடுசமர் சூழ்ந்து ஆயத்தங்கள் ஆய்ந்து கும்பினி
யார் கடுங்கோபமாய் நெடும் படைகளைத் திரட்
டிச் சிறந்த ஆங்கிலப்போர் வீரர்களோடு கர்னல்
(Colonel Peter Agnew) என்னும் உயர்ந்தசேனைத்
தலைவனைப் பாஞ்சைக் கோட்டைக்கு வீறோடு
அனுப்பியது 21— 5—1801.

கொடிய கொலைக் கருவிகளோடு புதிதாய்
மூண்டு வந்த ஆங்கிலப் படைகளைக் கடிது
எவிச்சேனைத் தலைவன் மானவீறோடு போரா
டினான்; கொடியகொலைகள் நெடிது நேர்ந்தன. 23— 5—1801.

கடுமையாய் மூண்ட போரில் இருதிறத்திலும்
பல படை வீரர்கள் மாண்டு மடிந்தனர்;
கொடிய பீரங்கிகள் கோட்டையைக் கடிது
தகர்த்தன; உள்ளே புகைக்குண்டுகளும் புகுந்

தன; பாஞ்சை வீரர்கள் மூவாயிரத்துக்குமேல் அன்று மாண்டனர்; இறுதியில் ஊமைத்துரை வெளியேறிப் போகவே பாஞ்சைப் பதி அடியோடு அழிந்தது. 24— 5—1801.

உயிர்தப்பிப் பிழைத்த ஊமைத்துரை அருகேயிருந்த ஊரில் இருபது நாள் ஆயரோடு தங்கியிருந்து உடல்தேறிய பின் அடலோடு வெளியேறிக் கமுதியை நோக்கிச் சென்றது. 16— 6—1801.

சிவகங்கை ஜமீன் தாராயிருந்த மருதுசேர்வை இவரை உரிமையோடு பேணிப் பெரிதும் ஆதரித்தது. 1— 7—1801.

ஊமைத்துரையின் உறவடைந்த பின் மருது பாண்டியன் பெரிய படைகளைச் சேர்த்து நின்றது. 25— 7—1801.

கோட்டையை விட்டு வெளியேறிய ஊமையன் மருது வீரனோடு சேர்ந்து பொரு படை திரட்டிப் போருக்கு ஊக்கியுள்ளான் என்பதை அறிந்ததும் கும்பினியார் பெரியசேனைகளோடு வந்து இருவரையும் வளைந்தது. 6— 8—1801.

கும்பினிக் கும்பல் வளைந்தபோது ஊமைத்துரை அங்கே உக்கிர வீரமாய்ப் போராடினார்; அவர் படையுள் பலர் மாண்டனர்; மாளவே அவர் ஒதுங்கி மீண்டனர்; மீளவே அங்கிருந்து தப்பித் தம்பியோடு இவர் திருமயம் கோட்டையை அடைந்தார். 16—10—1801.

இவர் மருமமாய் மறைந்துள்ள நிலையை அறிந்து கும்பினிச் சேனைகள் அங்கே கதித்து வந்து கொதித்து வளைந்தன; அதில் நடந்த போரில் தம்பி அகப்பட்டார்; இவர் வெளி ஏறிப் போனர். 10—11—1801.

ஊமைத்துரை தம்பி துரைச்சிங்கம் இறந்தது. 30—11—1801.

இவர் திண்டுக்கல்லில் தங்கிச் சுருளிமலையை
அடைந்து மறுகியிருந்தார்; தம்பி பிரிந்த துய
ரால் பரிந்து வருந்தினர்; முடிவில் உலகநிலையை
வெறுத்து இமயமலையை அடைய விரும்பி வட
திசையை நோக்கி உறுதியுடன் இவர் ஊக்கிப்
போனர். 16—12—1801.

---

## மதிப்புரைகளின் சில குறிப்புகள்.

"குறுநில மன்னராயிருந்தாலும் பெருநில வேந்தரிடமும் காணமுடியாத பெருமேன்மைகள் பாஞ்சை அரசிடம் பெருகியிருந்துள்ளன. ஜெகவீரபாண்டியனருடைய நூல்களைப் படித்து உண்மையான கடமைகளைத் தமிழ் மக்கள் என்று உணர்கின்ருர்களோ அன்று தான் தமிழ் நாடு உயரும்."

(முதல் மந்திரி, ஓ. பி. இராமசாமி ரெட்டியார்)

**"பாஞ்சை வீரர்களின் உக்கிர வீரப் போராட்டப் பகுதிகள் உணர்ச்சிகளைத் தூண்டி விடுகின்றன. பல முறையும் படித்துப் படித்துப் பரவசம் அடைந்து வருகிறேன். இத்தகைய உண்மைச் சரித்திர வரலாறுகளை மாணவ உலகம் ஊன்றிப்படித்திருக்குமானல் இந் நாட்டை அந்நியர் ஆண்டிருக்க முடியுமா? கல்லூரிகளிலும் எல்லாப் பாடசாலைகளிலும் அருமையான இந்த வீர வரலாறு உரிமையோடு போதிக்கப் படுமாயின் நமது நாடு விரைந்து மேன்மை அடைந்து வரும்."**

**(மு. மா. பா. ராயர்)**

**ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள் 10—6—57ல் பாளையங்கோட்டை நகரசபை மைதானத்தில் செய்த பிரசங்கத்தின் போது பேசியது:—**

**"வீர பாண்டியக் கட்டபொம்மனரின் நினைவு நாளை நாம் புனிதமாக உவந்து கொண்டாடுகின்ருேம். இதன் தத்துவம் என்ன? வீர புருஷர்களின் பரம்பரையைச் சேர்ந்து வந்துள்ளோம் என்பதை உரிமையாய் உணர்ந்து கொள்வதால் நம் வாழ்வு உயர்ந்து வருகிறது.**

கன்னன் தான வீரன்.
அரிச்சந்திரன் சத்திய வீரன்.
வீர பாண்டியன் போர் வீரன்.

இத்தகைய லட்சிய புருஷர்களைச் சிந்தித்து வருவது நல்லது."

"இந் நூல் ஆண் பெண் பெரியவர் சிறியவர் ஆகிய அனைவரும் படிப்பதற்கு உரிய வீர வசனகாவியம். இது வரை வெளிவந்துள்ள நூல்கள் எல்லாவற்றிலும் இது மிகவும் சிறந்தது. அரசாங்கம் பாராட்டிப் பரிசு வழங்க உரியது"

(சுதேசமித்திரன்)

"உள்ளத்தைக் கொள்ளை கொள்ளக் கூடிய பல அரிய நிகழ்ச்சிகள் இவ் வீர சரித்திரத்தில் நிகழ்ந்துள்ளன."

(தினமணி)

"இந் நூல் தமிழ்நாட்டில் நடந்த ஆதி சுதந்திரத்தின் அரும் பெரும் வரலாறு. தமிழ் மக்கள் போற்றிப் படித்து வருங்கால சந்ததிகளுக்கு அரிய பொக்கிஷமாகத் தரவேண்டிய புத்தகம்."

(கல்கி)

"இவ் வீர சரித்திரம் எங்கும் வீரம் செறிந்த கம்பீரமான நடை. ஒவ்வொரு தமிழனும் படித்து உணர்ந்து உரிமையோடு பாதுகாத்து வர வேண்டிய அருமை நூல்."

(இராம ராஜ்யம்)

"The story of Oomai Thurai is thrilling. Authentic records of the East India company have been thoroughly cunsulted. The learned author has tried to be more a historian. The language is faultless, simple and moving. It is a worthy book to be placed in every patriot's hands It also deserves to be translated in to other languages of India as the hero of Panchalankurichi was the beginner of the struggle for Indian freedom."

[Hindu]

"இந் நூலை வியந்து அரசாங்கத்தின் ஆதரவில் தமிழ் வளர்ச்சிக் கழகம் ரூபாய் 500 பரிசு வழங்கியுளது."

## தமிழ் நாட்டின் தனிவீரன்.

எல்லா நாடுகளையும் எளிதே அடக்கித் தம் ஆட்சியை இந்தியாவில் நிலை நாட்ட நேர்ந்த ஆங்கிலேயரை வீர பாண்டியன்

என்னும் வீர மன்னன் தீரமாய் எதிர்த்தான். பெரிய பாஞ்சால தேசம் முதலியன யாவும் பேசாது அடங்கின; இந்தச் சிறிய பாஞ்சாலங்குறிச்சி சீறி எதிர்க்கிறதே! என்று வெள்ளையர் எல்லாரும்உள்ளம்கலங்கினர். உறுதியோடு பொருபடைத்திரட்டிப் போராடினர். மூண்டபோர் அவர்க்கு நீண்டநிலையாய் நின்றது.

ஜிப்ரால்ட்டர் (Gibraltar) என்றும், (Dreaded fortress) அதிகபயங்கரமான கோட்டை என்றும் பாஞ்சைப் பதியை ஐரோப்பியர் அஞ்சி வியந்து குறித்திருத்தலால் ஆண்டு மூண்ட போரில் அவர் மாண்டு பட்டுள்ள பாடுகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். வெளிநாட்டு வீரரும் உள்நாட்டுச் சதியும் ஒருங்கு கூடி மாறுபாடான நிலையில் ஊறுபாடுகள் புரிந்தமையால் அரசை இழந்து பாஞ்சைவீரர் அழிய நேர்ந்தனர். சுதந்திரம் தோய்ந்து மான வீரோடு மூண்டு முனைந்து பொருது மாண்டு போயினும் இவருடைய வீரப் புகழ் யாண்டும் நீண்டு நிலவி நிற்கின்றது.

பாஞ்சை வீரர் கீர்த்தி பாரெங்கும் ஓங்கி வருதைக் கண்டு ஒருவர் பொறாமை மண்டிப் புலையாய்ப் புலம்ப நேர்ந்துள்ளார். ஆந்திரர், தெலுங்கர், நாயக்கர் எனக் கட்ட பொம்மைச் சுட்டிக் காட்டித் தமிழரிடையே சிறிது பிணக்கை விளைக்கலாம் என்று பிழையாயிழிந்து உழலுகின்றார். அவர் வாயிலிருந்து வெளிவருகிற பழிமொழிகள் அவருடைய உள்ளத்தின் இழிபுலைகளைத் தெளிவா விளக்கி நிற்கின்றன. அவரது மோசமான நீச வாசகங்களைக் கேட்டுப் பாஞ்சை மரபினர் உள்ளம் கொதித்து உருத்து வருகின்றனர். கொடிய சுடுமொழிகளைப் பொறுப்பது மான வீரமுடைய மரபினர்க்கு அருமையே ஆயினும் பொறுமையே யாண்டும் நல்லது. பொறையுடையார்க்கு இறை அருள் எய்துகிறது.

பொல்லாத பொறாமையினால் புரையோடிப்
புலைநீடிப் புன்மை மண்டிச்
சொல்லாத சுடுமொழிகள் படுபழியாய்ச்
சொன்னாலும் துயர்உறாதே
ஒல்லாத இழிவழியில் ஊனமாய்
ஒழிபவர்க்கும் உறுதி நாடி
எல்லார்க்கும் எவ்வழியும் யாண்டுமே
இதம்புரிதல் இனிமை யாமே.

தனி முதல் தலைவனான ஆண்டவனே யாண்டும் நீதி புரிபவன் ஆகலால் அப்பெருமானை நினைந்து பொறுமையா யிருப்பதே என்றும் நன்மையாய் எவ்வழியும் இன்பம் தரும்.

உண்மை உரிமைகளை ஓர்ந்து உணராமையால் புன்மை புரிகின்றனர். புன்மையாளரது புலை நிலைகளை நினைந்து வருந்தாது விரைந்து மறந்து விடுவதே சிறந்த பெருந்தகைமையாம்.

நமது செந்தமிழ் நாட்டுக்குச் சிறந்த கீர்த்தியை நிரந்தரமா நிலை நிறுத்தி உயர்ந்த வீரனாய் ஒளி செய்து விளங்கும் வீர பாண்டியக்கட்டபொம்மனுடைய உண்மைச் சரித வரலாறுகளை யொன்றி உணர்ந்தவர் எவரும் அவரது தலைமை நிலைமை தகைமை வகைமை மானம் வீரம் முதலிய நிலைகளை வியந்து உவந்து புகழ்ந்து வருகின்றனர் அறியாதவர் அவமே இழிந்து மொழிந்து வெறியராய் விளிந்து ஒழிகின்றார் வீரனை வீரரே அறிவர்; கோழைகள் அறிய முடியாது; பேழைகளே பேசிப் பேதை களாய்த் தாழ்ந்து கழிந்து வீழ்ந்து அழிந்து போவது வெய்ய மடமையே. இழிமூடம் யாண்டும் அழிகேடாகின்றது.

எதிரிகளாய் மூண்டு பொருத வெள்ளையரும் அதிசய வீரன் என்று பாஞ்சை மன்னனைத் துதி செய்திருக்கின்றார். அத்தகைய அந்த வீரனை இகழ்வது எத்தகைய ஈனம்! எவ்வளவு அழிவு! எத்தனை இழிவு! எத்துணை நீசம்? அந்த நீச நிலைகளை எல்லாம் நேரே நிதானமாய் உய்த்து உணர வேண்டும். வீரபாண்டியனைப் பழிப்பது வீரத்தையும் மானத்தையும் தருமத்தையும் நீதியையும் பாண்டி நாட்டையும் பழித்த பாதகமாம். பழிமொழிகள் கூறிப் பாதகராய் இழிந்து கழிந்து ஒழியாமல் தெளிந்து கொள்வது நலமாம்.

## வெள்ளையரின் கல்லறை

பாஞ்சாலங்குறிச்சிப் போரில் வந்து மாண்டு மடிந்து போன கும்பினிப் படைகளின் சவங்களைக் கோட்டைக்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில் புதைத்து வைத்தனர். பின்பு அந்த இடத்தை விரிவாகச் சுற்றி வளைந்து நான்கு புறமும் மதில்கள் வளர்த்திருக்கின்றனர். அங்கே ஆயிரத்துக்கு மேலான சிப்பாய்களின் உடல்கள் புதைக்கப் பட்டுள்ளன. படைத் தலைவர்களாய் வந்த வெள்ளைக்காரர் பலர் இறந்து பட்டனர். அவருள் சிறந்த ஆங்கிலத் தளபதிகளுக்கு மாத்திரம் ஞாபகச்

சின்னங்கள் அமைத்துக் கோரிகள் வளர்த்துள்ளனர். அதன் நடுவே ஒரு கருங்கல்லை மருங்குடன் பதித்திருக்கின்றனர். அந்த நடு கல்லில் எழுதியுள்ள பெயர் விவரங்கள் அடியிலே வருகின்றன.

SACRED

TO

THE MEMORY OF

Captain John Campbell: Lieutenants A. Campbell,
D. Gilchrist and P. Shanck of
H. M. 74th Regiment.

Lieuts. J. Spalding and A. Campbell
H. M. 77th Regiment.

Lieutenant M. Egan I T BT. 3rd Regiment N. I.

Lieuts. W. Fraser and K. Mangnall I T BT.
4th Regiment N. I.

And Lieuts. C. Torrians I T BT.
9th Regiment N. I.

Who bravely fell or died of wounds received
in the assault on the Fort of
PANJALAMCOURCHY.

The 31st March & 24th May.

1801.

பாஞ்சை வீரர்களுடைய போர் நிலைகளை விளக்கிக் கொண்டு கோரிகளும் கல்லறைகளும் இங்ஙனம் விளங்கி நிற்கின்றன.

## முக்கிய குறிப்புகள்.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 331 | 19 | நின்றேன் | நின்றன |

## நூலின் பயன்

பாஞ்சை வீரர்தம் பான்மையைப் பாருளோர்
வாஞ்சை கூர்ந்து வகுத்துணர் வாரெனின்
ஆஞ்சை கூறும் அரசுயர் ஆண்மையைத்
தாம்செயத் தகு தன்மையர் ஆகுவார்.